நன்ருக.



தெய்வப்புலமைத்

# திருவள்ளுவநாயனாரால்

அருளிச்செய்யப்பட்ட

# திருக்குறள்மூலமும்

இதன்பலவுரைகளினுஞ்சிறந்த

பரிமேலழகருரைவாக்கியங்களுள் - பலர்க்கும்

பயன்படற்குரியபலவுந்தழுவிவெளிப்படையாக்கித்

திருத்தணிகைக்

கந்தப்பையர்குமாரர்

**சரவணப்பெருமாளையரால்**

செய்யப்பட்டஉரையாகிய

தெளிபொருள்விளக்கமும்,

திருவள்ளுவமாலையுரையும்,

ஷை ஐயரால்முன்பதிப்பித்தபிரதிக்கிணங்க

**சோமசுந்தரவுபாத்தியாயரால்**

பரிசோதிக்கப்பட்டுச்

சென்னப்பட்டணத்தில்

பாரதிவிலாசஅச்சுக்கூடத்தில்அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

1847

பிலவங்கஸ்ரீ புரட்டாசிமீ

இதன்விலை - ரூ. ௩.

# கடவுள் வணக்கம்

மூச்சகத்திறுமுறை - மூதுணர்வினருணர் ...... ..... ❊
சச்சிதா னந்தத் தனிநிலையதனைத் ... ......... ... ❊
தோன்றுமப்பனரி-பரனெனத்தொழிலொரு.......... . .....❊
மூன்றுமுறைசெய - மூன்றுருவாயொளிர் .... ........ .....❊
ஈசனையன்பொடு - மிறைஞ்சுதும் ........ ............ .... ❊
தேசுயர்புலமையின் - சீர்பெறற்பொருட்டே..... ..........❊

# உரைச்சிறப்புப்பாயிரம்.

நிலைகிளர்விழுமிய - நிகமாதிகளெலாம, அலைகளார்கட
ற்புவி - யடுத்ததேயந்தொறும், வீற்றுவீற்றுக்
கெழூஉ - விளங்குபன் மொழியினும், போற்றுறுதலைமையி
ற - பொதுவதாயெங்கணும், கடவுளர்க்குரித்தா - கவிற்றீர்வா
ணமென், றிடுபெயர்த்தாம்வட - மொழியினுளிருத்தலாற், சில
ர்க்கலதோதலுஞ் - செழும்பொருளுணர்தலும், பலர்க்குமெ
ய்தற்கொணாப் - பரிசுநாடி, மூவருளொருவராய் முதற்றொழி
ல்புரியுமத், தேவர்பேரருளாற் - றிருவள்ளுவராய்த், தற்கலையி
னையெனுந் - தருக்கினியாரியச், சொற்கிலையெனத்தமிழ் - றுதி
கெழத்தோன்றவும், எம்மதத்தவருமிங் - கிதன்கருத் தெமக்
கெலாம்,சம்மதமேயெனுச் - சாற்றினர்நயப்பவும், கரும்பெ
னச்சுவைமுனங் - காட்டியநூல்களும், விரும்பலில்வேம்பெ
ன - வெறுப்புற்றொழியவும், தெருணலத்துறையினர் - செஞ்
சொன்னலத்தொடு, பொருணலங்கூட்டுணாப் - புந்தியுள்விய
ப்பவும், கடவுண்மாப்பலகைசேர் - கவிஞர்தங்கல்வித், திடமி
குசெருக்கவர்த் - தீர்ந்துவிட்டோடவும், சின்னாட்பல்பிணிச் -
சிற்றறிவுடைநரர்க், கின்னுவறுநெறி - யினிலவற்றறமுதன், மு
ப்பொருள்களுஞ்சிறு - முகுரத்தினுள்ளடங், கப்பெருநிழலெ
ன-வடங்குமாண்டிற்பல, நாட்டினுயர்தமிழ் - நாட்டினுள்ளே
பல, முனிவரினுயர்குறு - முனிவனேம்பியபல, மொழியினுயர்
தமிழ் - மொழியினுளுறுபல, பாவினுயர்குறட் - பாவினுள
மைத்திய, னயனெலாஞ்செறித்துமற் - றவரவர்நாடிய பயனெ
லாமெளிதுறும் - படித்திருவள்ளுவர், எனுந்தம்பெயர்நிறீஇ-

யிற்றியநூற்குப், பனுந்திறவுரையொரு - பதின்மர்செய்தன
ரால், அவற்றினுட்பரிமே - லழகர்செய்யுரைமற், றவற்றினு
ஞ்சிறந்தது - மேனுமோர்தருவார், கற்றுவல்லார்சிலர் - கற்று
வல்லார்பலர், பெற்றிலாமையிற்பெறும் - பெற்றியிற்செய்கை
யுஞ், சான்றோருடைத்தெனுந் - தண்டகநாட்டினுள், வான்றோ
ய்பொழிற்சினை - மலிதேத்திருளுகள், இளநீர்வாளையா - விற்
றுகுதேனளாய்க், குளநீர் சுவைமிகுங் - கூவமாநகரோன்,
இவர்சொற்போர்மறை - யவர்சொற்போர்தரும், இவரோர்ப்ப
கட்டின்மன் - னவரோர்ப்பகடுறும், இவர்கூழ்வணிகரா - னவர்
கூழ்க்கேதுவாம், எள்காராளரி - னன்காரிகுலத்தினன், ஒன்றில
ம்பாடுகூர்ந் - துளமலமறந்ததன், மூன்றிவினிடையொரு-மு
றைநனுகாதல, ரிற்கடைச்சூழலி - லெண்ணிலாதுலரிரத், தற்
கடையிற்றிட்டத் - தகுபெருங்கொடையோன், உரியநல்லார்ந
கை - யொடுமெருண்மேவ, அரியணைவாசமுற் - றடர்தளமுற்றுற,
நிலைவருந்தாதக - நிறைமதியான்மலர் - தலையுறுகுவலயந் - தாங்
கிருமொய்ம்பினன், திருமேனிவள்ளலிச் - செம்மலையீன்றோ,
தருமராசன்முதற் - சகதேவன்கடை, அறையுமைவரையுமீன் -
றவனுயினனெனப், பொறையெனும்வென்றிவண் - பொற்புனை
ர்வமைவினன், கருமைகூர்மெய்யனு - யத்நவண்கலைசூழ்ந், த
ருமறைப்போதனை - யையினிற்பெற்றுப், புகலிசைபாடுறு -
புலவரைப்போற்றித், திகழ்திருக்காமிமால் - செப்பினருக, வு
ரியவப்பரிமே - லழகர்செய்யுரையின், விரிவினிற்பலதுறை -
வெளிப்படையாக்கித், தெளிபொருள்விளக்க - மெனப்பெயர்
சேர்த்துக், களிபொருட்சங்கமார் - கவிஞரிற்றோன்றி, மாட்சி
யினொளிர்திரு - வள்ளுவமாலைக், காட்சியுரையு - மணிபெறவகு
த்தனன், பகைபெறுபவத்துயர் - பாற்றிவீடளிக்குந், தகைபெ
றுவீர - சைவசிகாமணி, நல்லனவெனைத்துள - வனைத்தையுந
னுகி - அல்லனவற்பமு - மனுகுருப்புனிதன், இயலிசைநாடக -
மெனுமுத்தமிழும், பயில்வளமாறுப் - பண்டிதர்பெருமா
ன், இருள்காய்சீத்தொளி - ரிலையயில்வேற்கரத், தருள்சால்வி
ழிக்குக - னமர்திருத்தணிகையான், பேர்கொள்வியப்புவிப் -
பேரிடஞ்சிறிதெனுஞ், சீர்கொள்கந்தப்ப - தேசிகன்றவத்தா
ற், பெற்றருள்சரவணப் - பெருமானையனென், றற்றநற்பண்
பமைந் - தோங்குநாவலனே ............... .... ......... ......... இ-ள்.

நிலைபெற்றுத் தழைத்து ஓங்குகின்ற சிறப்புப்பொருந்
திய - வேதமுதலியவையெல்லாம் - அலையெழுகின்ற கடலாற் சூ

டுபபட்ட பூலோகத்திலுள்ள தேசந்தோறும் வேறுவேறுபட
பொருந்திவிளங்காநின்ற பலவகைமொழிகளினும் புகழ்த்த
க்க தலைமைப்பாட்டோடுகூடி அத்தேசங்களனைத்திற்கும்
பொதுவாய்நின்று தேவர்களுக்கு உரித்தாதலாலே கீர்வாண
மென்று இடப்பட்ட பெயருடைத்தாகிய வடமொழியிலுள்ள
இருத்தலால் - அவ்வேதமுதலானவைகளைப் படித்தலும், அ
வைகளினுண்மைப்பொருள்களை அறிதலும், சிலர்க்கேயல்லா
மல்பலர்க்கும் பெறுதற்குக்கூடாத தன்மையைநாடி - அயனா
ரியரென்னும் மூவருள் ஒருவராயிருந்து படைப்புத்தொழி
ல் செய்கின்ற அந்நான்முகக்கடவுளானவர் யாவரிடத்தும் உ
ண்டாகிய நிறைந்த அருளினாலே திருவள்ளுவராய் அவதரித்
து - தனக்கு ஒப்பில்லை என்று இருக்குஞ் செருக்கு இனிமேல்
வடமொழிக்கு இல்லையென்று சொல்லும்படி அதுபோல
வேதமிழ்மொழி துதிபெற்றுவிளங்கவும், எவ்வகைமதத்தோ
ரும் இங்கே இந்நூலின்கருத்து எமக்கெல்லாம்சம்மதமேயா
மென்றுசொல்லி விரும்பவும்; முன்னெல்லாம்கரும்புபோன்
மாதுரியத்தைக் கொடுத்துக்கொண்டுவந்த நூல்களும் விரும்
பப்படாதவேம்புபோல் வெறுக்கப்பட்டு ஒழியவும், தெளிவு
பொருந்திய நலமாகிய புலமைத்துறையுடையவர் செவ்விய
சொற்சுவையோடு பொருட்சுவையையும் கொள்ளைகொண்
டு தம்முள்ளத்துள் வியப்பவும், தெய்வத்தன்மையும் பெரு
மையும் பொருந்திய சங்கப்பலகையில் இருந்த புலவரது க
ல்வியால் உண்டாகிய திடமிகுந்த செருக்கு அவரைவிட்டுவி
ரைந்து நீங்கவும், அற்பவயதையும் அதற்குள்ளே பலநோய்
களையும் சிற்றறிவையும் உடைய மனிதர்களுக்கு விதிவிலக்கு
களைப் பகுத்தறிதலி னருமையால் உண்டாகிய துன்பங்கள்
ஒழிதற்கு ஏதுவாகிய நெறியோடுகூடி அவ்வேத முதலான
வைகளிலே சொல்லப்பட்ட - அறம் - பொருள் - இன்பம் - என
ப்படுகின்ற பெரியமுப்பொருள்களும் சிறிய கண்ணாடிக்குள்
அடங்கித் தோன்றுகிற மலைமுதலானவைகளின் பெரிய சாயை
போல் தம்முள் அடங்கித் தோன்றுகிற அழகுடையதாகப் -
பலநாடுகளினும் உயர்வினதாகிய தமிழ்நாட்டினுள்ளே - பல
முனிவரினும் உயர்வினராகிய அகத்தியமுனிவனாலே பரிபா
லனஞ் செயப்பட்ட - பலமொழிகளினும் உயர்வினதாகிய த
மிழ்மொழியினுள்ளே வழங்குகின்ற - பலபாக்களினும் உயர்
வினவாகிய குறள்வெண்பாக்களுள்ளே அடங்கி இலக்கண ந

யங்களெல்லாம் பொருந்த நிறைத்து - அவரவர் பெறத்தேடிய
எல்லாப்பயன்களையும் எளிதிற் பெறும்படியாகத் திருவள்ளு
வரென்னுந் தம்பெயரையே வைத்துச் செய்தருளிய இந்நூ
லுக்கு - தருமர்முதலாகிய பதின்மர் உரைசெய்தார். அப்பத்
துரைகளுள்ளும் பரிமேலழகராலே செயப்பட்ட உரையான
து மற்றெல்லாவுரைகளினும் சிறந்ததாயிருந்தாலும் அதனை
அறிதற்கு உரியவர் கற்றுவல்லவர் சிலரேயாவர் - மற்றைக் கற்
றுவல்லராகாதவர் பலரும் அவ்வுரையை அறியமாட்டாமையா
ல் யாவரும் அறியுந்தன்மையதாகச் செய்கவென்று, சான்றோ
ரையுடைய தெனப்படுகின்ற தொண்டைநாட்டினுள்ளே மே
கமண்டலத்தை அளாவிய சோலைக்கிளைகளிலே நிறைந்த தே
ன்கூடுகள் தம்மேலேபாய்கின்ற இளமைப்பருவமுடைய வா
ளைமீன்களாலே கிழிய அவற்றிலிருந்து ஒழுகுகின்ற தேனே
டுகலந்த தடாகநீர் சுவையால் மிகாநின்ற பெருமைபொருந்
திய கூவநகரத்தையுடையவன். இவரது நெல்லின்போலொங்கி
ற சொற்போரானது அந்தணரது சாஸ்திரவாதமென்கிற சொ
ற்போரை உண்டாக்குமென்றும், இவரது ஏரிற் கட்டப்பட்ட
எருமைப் போத்தென்கிற ஏர்ப்பகட்டினாலே அரசரது அழ
கிய யானையென்கிற ஏர்ப்பகடு நிலைபெறுமென்றும், இவரது
பயிரென்கிற கூழானது வைசியரது பொன்னென்கிற கூழிற்
கு ஏதுவாமென்றும், சொல்லப்பட்ட நன்மைபொருந்தியவே
ளாளர் குலத்திற்பிறந்தவன். நீங்காதவறுமை மிகுந்து மனச்
சுழற்சியை அடைந்து தன்மனையின் முன்னே ஒருகால்வந்த
யாசகரது மனைவாயிலிடத்து எண்ணிக்கையில்லாத யாசகரை
இரத்தற்குச் சேர்ப்பிக்கத்தக்க பெருங்கொடையுடையவன்.
தனக்கு உரிய பங்கையர் ஆசையோடு மயக்கத்தை அடைய
வண்டுகள் அணைகின்ற பரிமளத்தைப்பொருந்தி நெருங்கிய
இதழ் சூழ்ந்துற நிலையின் வருகின்ற பொடியையுடையஉள்ள
கத்து நிறைந்த சந்திரனால் மலர்தலையுற்ற குவளை மலர்களா
லாகிய மாலையைத் தாங்குகிற இரண்டு தோள்களையுடையவன்.
(அன்றியும் இரட்டுறமொழிதலாலே) உரிமையாகிய நற்குண
முடையோரனைவரும் ஒழுக்கத்துடனே தனது அருளைப்பெ
ற இறைவனுக்குச் சிங்காதனத்தில் வாசமுற்றுப் பகைவரைவெ
ல்லும் சேனைசூழத் தன்னிலையில் வருந்தாதுநின்று தன்னுள்
ளத்து நிறைந்த விவேகத்தைக்கொண்டு பரந்த இடத்தையு
டைய பூமியைக்காத்தருள்கின்ற பெரிதாகிய வல்லமையையு

டையவன், திருமேனிவள்ளலென்கிற இவன் பிதா இவ்வொ ருபுதல்வனைப்பெற்றே - தருமராசன் - வீமசேனன் - அருச்சு னன் - நகுலன்-சகதேவன்-என்று சொல்லப்படுகிற ஐவரையு ம் பெற்றவனுறுமென்று சொல்லும்படி முறையே அவரிட த்துள்ள-பொறுமையும் - வலிமையும் - வெற்றியும்- அழகும்- அறிவும் ஆகிய சிறப்புக்குணங்களைந்தாலும் நிறைந்து விள ங்குகின்றவன் அத்திருக்காமியெனப்படுகிற மால் கருநிறமி க்க வடிவுடையவனுகியும், வளம்பொருந்திய பீதாம்பரத்தை யுடுத்தும், அரியவேதத்தை ஓதுகின்ற பிரமனை அழகாகப் பெற்றும், வெற்றியிசைந்த பெருமைபொருந்திய தேவரை க்காத்தும், விளங்குதலினுலே (சிலேடையால் அவன்போல வே) பெருமைமிகுந்த சத்தியகுணமுடையவனுகியும், பொ ருள்வன்மை பொருந்திய நூல்களை ஆராய்ந்தும், அரியவே த ரகசியோபதேசத்தைக் குருவிடத்துப் பெற்றும், அஞ்சி னோர்க்குப் புகலிடமாகின்ற தன்புகழைப் பாடலுற்ற புலவ ரைப் போற்றிவணங்கியும், விளங்காநின்ற திருக்காமியென் னுமாலானவன் சொல்லினுக - அரிய அப்பரிமேலழகருரை யின் விரிவிலே பலவாக்கியங்களைத் தழுவிக்கொண்டு வெளிப் படையாகச்செய்து - அங்ஙனம் செயப்பட்ட இவ்வுரைக்குத் தெளிபொருள் விளக்கமெனப் பெயர்வைத்து - களிகூர்தற்கு ஏதுவாகிய பொருளோடு கூடிச்சங்கத்துப் பெரியபுலவர்க ளி லிருந்துதோன்றி மாட்சிமையால் விளங்குகின்ற திருவள் ளுவமாலைக்கும் உரியவுரையை அழகுபெறச் செய்தான்.— பகைமை பொருந்திய பிறவித்துயரை ஒழித்துமுத்தியைத் த ருகின்ற குணத்தைப்பொருந்திய வீரமாகேசுவரரிலே சிறந்த வனுகிடம, நல்லனவென்று சொல்லப்பட்டவைகள் எத்தனை யுள அத்தனைடமபொருந்தித் - தீயனவென்று சொல்லப்பட் டவைகளிலே சிறிதும் பொருந்தாத பரிசுத்தனுகியும், இயலி சை நாடகமென்னு முத்தமிழிலும் பழகியகல்விவளத்தின் நீ ங்காத புலவர்தலைவனுகியும, இருளைப்பற்றறக் கெடுத்து விள ங்குகிற இலைபோலுள்ள கூரியவேலை ஏந்திய கையையும் அரு ள் பொழிகின்ற விழிகளையும் உடைய முருகவேள் எழுந்தரு ளியிருக்கின்ற திருத்தணிகைப்பதியுடையவனுகியும், விளங் கிய - பேர்பெற்றபூமியின் பெரியவிடம் சிறிதென்னும்படி விரிந்த கீர்த்தியைக்கொண்ட கந்தப்ப தேசிகன்தவத்தினுலே பெற்றருளிய சரவணப்பெருமாளையன் என்கிற பெயர்கொ

ண்டநற்குணம்பொருந்தி ஓங்கிய நாவலனென்றறிக.※ வேத
முதலியவையாவன - ஆகமபுராணங்களும், அறநூல்களும், பி
றவுமாம். — நிகமாதிகளெலாம் இருத்தலாலெனவும், அந்தே
வர் இயற்றியவெனவும், செய்கெனச் செப்பினனாகவெனவும்,
கூட்டுக. — பன்மொழியென்றது - வைதிகபூமியெனப்பட்ட
இப்பரதகண்டத்தின் வடபங்கிலும் தென்பங்கிலும் பலவேறு
வகைப்பட்டு வழங்குகின்றனவும பிறவுமாகிய மொழிகளை.—
பொதுவாயினும் ஆதியிலே வடதிசையிலிருந்து தென்றிசை
க்கு வந்ததாதலின் வடமொழி யெனப்பட்டது.— மூவரு
ளொருவராமென்றுரைத்ததும் அம்மூவரும் முக்கோணக் கூட்
டுப்போல் ஒன்ற முதற்பொருளாதலறிக. முத்தொழிற்கு மூ
வராய் நிற்றலின். — பலநாட்டினுயர் தமிழ்நாடென்றது -
பெரியபுராணத்தில் - தேசமெல்லாம் விளங்கிய தென்றிசை -
யீசர்தோணிபுரத்துடனெங்கணும் - பூசனைக்குப்பொருந்து
மிடம்பல - பேசினத்திசையொவ்வாபிறதிசை - என்றமையானு
ம், பலமுனிவரினுயர் குறுமுனிவனென்றது - நன்னெறியில் -
முனிக்கரகக்கையான் முகந்துமுழங்கும் - பனிக்கடலுமுண்ண
ப்படும் - என்றமையாலும், பலமொழியினுயர் தமிழ்மொழி
யென்றது - திருவிளையாடலில் - கண்ணுதற்பெருங் கடவுளுங்
கழகமோ டமர்ந்து பண்ணுறத் தெரிந்தாய்ந்த விப்பசுந்த
மிழேனை - மண்ணிடைச்சிலவிலக்கண வரம்பிலாமொழிபோ -
லெண்ணிடைப்படக்கிடந்ததா வெண்ணவும்படுமோ - என்ற
மையானும், பாவினுயர் குறட்பாவென்றது - வள்ளுவமாலையி
ல் - வெண்பாமுதலான்கும் வேதியர் முன்னோர்நால்வ - ரோங்
பாவென்றேகுறளுமந்தணரே - என்றமையாலும், சின்னாட்பல்
பிணிச் சிற்றறிவுடைநரவென்றது - நாலடிநானூற்றில் - கல்வி
கரையிலகற்பவர்நாள்சில - மெல்லநினைப்பிற்பிணிபல - என்ற
மையானும், பிறவற்றானும், அறிக. — இந்நூற்கு உரைசெய்
தார்பதின்மரென்றது - தருமர் மணக்குடையர் - தாமத்தர் நச்ச
ர் - பரிமேலழகர்பரிதி - திருமலையர் - மல்லர் கவிப்பெருமாள்
காளிங்கர் வள்ளுவர்நூற் - கெல்லையுரை செய்தாரிவர். எனவு
ம், பரிமேலழகர் செய்யுரை மற்றெவற்றினுஞ் சிறந்ததென்ற
து பாலெல்லா நல்லாவின் பாலாமோ பாரிலுள, நூலெல்லா
ம் வள்ளுவர்செய் நூலாமோ - நூலிற் - பரித்தவுரையெல்லாம்
பரிமேலழகர் - தெரித்தவுரையாமோதெளி - எனவும், கூறப்ப
ட்டவற்றாற்காண்க. — சான்றோருடைத்தெனுந் தண்டகநா

டென்றது - வேழமுடைத்து மலைநாடுமேதக்க - சோழவளநா டு சோறுடைத்துப் - பூழியர்கோன் - றென்னாடு முத்துடைத் துத் தெண்ணீர் வயற்றொண்டை - நன்னாடு சான்றோருடைத் து. என்ற ஔவைமொழியால் அறிக. ஆசிரியபரிமேலழக ர் செய்யுரையின், விரிவினிற் பலதழீஇயொரீஇ அவற்றுள் ளே புலமையின் மிக்கார்க்கெலாது ஒழிந்தோர்க்கெலாம் உபயோகிப்பன வல்லாத சிலவிடப்பட்டன வெனபதூஉம, ஒ ரோவிடத்துப் பொருளை விளக்குதற்கு வேண்டியன அவற்று தனமாகச் சேர்க்கப்பட்டனவென்பதூஉம் கொள்ளப்படும். ※

# இரு - தி - விசாகபெருமாளையராலே

செயப்பட்டது.

---

# திருவள்ளுவமாலையைக்குறித்துச்

சொல்லப்பட்டபாடல்.

பல்வகைக்கலையிற் பற்பலபொருளும் பகவனார்புதல்வர் தாமெழுதப், பன்மொழிமறையி னெளிதுறவமைத்தார் பரவருந் தன்பற்பலசிறப்பும, தொல்வகைச் சங்கப் புலவரங் கவிமேற் றொடுத்தபாமலையிற் றெரித்தார், தொகுத்துளவதன்கட் பற் பலகருத்துந் தோன்றுற வுரைசெயூவிரித்தார், சொல்வகை க டங்காப் பல்புகழுலகிற்சூழ்த்தகந்தப்பதேசிகர்தந், தூயநோ ன்பென்னே யெனத்திருத்தணியிற் றோன்றிநல் வகையிலவயி லைநன், கல்வகையென்றே குசைநுனியிறுங் கூரறிவிருற்ப ந த்துணைமாட்சி, யமைந்திலிதோங்குஞ் சரவணப்பெருமாளை யரொன்றிசைக்குநாவலரோ ........ .. . ... . . .... . .... .. இ-ள்.

வைதிகலௌகிகங்களில் எற்றபெற்றிப்பயன்படுதற்பொ ருட்டு வேறுவேறு வகையினுளவாகிய நூல்கள் பலவாதலி ன - பல்வகைக்கலையென்றும், அவற்றுள் ஒவ்வொன்றிலும் பொதுவகையாலும் சிறப்புவகையாலும் கொள்ளக்கிடக்கின் ற விடயங்கள் பலவாதலின் - பற்பலபொருளென்றும, சொல்ல ப்பட்டன.—வடமொழிவேதமபோலாது இஃது எழுதப்படு தலின் எழுதப்படு மொருமறையெனப்பட்டது . — அவை த்தானே அவையெல்லாம் இதன்கண்ணேசெம்பொருள் ஆக்கப்பொருள் குறிப்புப்பொருள் என்பவற்றுள் ஒன்றாகக்

கொள்ளப்படுவனவன்றிக் குறைபடுவதியாது மின்றென்பதா
யிற்று.—பரவுதல் - விரிதல் — அதன்பற்பல சிறப்பாவன -
சொன்முடிபு பொருண்முடிபுகளில் அமைந்துகிடந்த நானு
விதவிசேடங்கள். — தொல்லைகையென்றது - ஒன்றற்கொன்
றுமலைவாகப் பிற்காலத்தாராலே கற்பிக்கப்பட்டனவன்றித்
தொன்றுதொட்டுவந்த உலகவழக்கையும் செய்யுள் வழக்கை
யும. — பாமாலையிற் றெரித்தானெனவே - அவ்விசேடங்களை
யெல்லாம் யாவரும் உய்த்துணரச் சங்கத்துப் புலவர் பலரும்
சித்சம்பாடலின் வேறுவேறெடுத்துக் காட்டினா னென்றதாயி
ற்று.— தொகுத்துள வென்றமையின் அங்ஙனங்காட்டப்பட்
ட கருத்துகளெல்லாம் சுருங்கச்சொல்லாய் நிற்றல்குறிப்பி
க்கப்பட்டது. — தொகுத்தென்னுஞ் செய்வினை செயப்பாட்டு
வினைப்பொருளில்வந்தது. — இருவள்ளுவமாலைக்கு இதுகா
றும் ஒருவாற்றேனுரை இல்லையாகவும் இவர் பலவகைப்பட்டஅ
க்கருத்துக்களெலாம் யாவர்க்கும் விளங்குமாறு அதற்கு
உரையெழுதி விரித்தாராதலின் - தோன்றுறவுரைசெய்துவிரித்
தானென்றதெனக்கொள்க. — பல்புகழென்றது - புலமையா
ணையன்றிக் குடிமை ஒழுக்கமுதலியவற்றானும் வந்தவற்றை.
—சூழ்ந்தவெனவே - தோன்றிற்புகழொடு தோன்றுகவென்ற
வாற்ற அனித்தியமாகிய பூதவுடம்பினும் நித்தியமாகிய புக
ழுடம்பே சிறந்ததெனக் கொண்டமை காட்டப்பட்டது. —
தாயர்தான்பெண்ணே யெனத்தோன்றுதலே தந்தைக்குச்செ
ய்யுமுதவியாமெனக - மகன்றந்தைக் காற்றுமுதவி யிவன்றந்
தை யென்னோற்றான் கொல்லென்னுஞ்சொல் என்றுராதலின்-
நல்வகை இம்மைமறுமை வீடென்பவற்றிற்கு ஏதுவாவனப
லவும். நல்கல்வகை அவற்றிற்குமாறுவன - பலவும். அவையெ
ல்லாம் பலவாற்றான் மயங்கிப் பகுத்துணர்தற் கரியவாய் நிற்
பனவேனும் முசைநுனியினுங் கூரறிவென்றமையின் அது
கொண்டு பகுத்துணரப்பட்டனவென்க. வளரிளந்தருப்பை
நுனியினிற் கூர்த்த மதியினர் என்றார்பிறரும்........ ❋

இஃது-தன்னொடுகற்றோராகிய
காஞ்சீபுரம்
குமாரசுவாமிதேசிகராலே
செயப்பட்டது.

உ

சிவமயம்

# திருவள்ளுவர்சரித்திரம்

உலகத்துள் மஹா சிறப்புப்பொருந்திய கைலாசகிரியிலே அரசிருக்கைமண்டபத்தில் பிர்மாதி முப்பத்துமுக்கோடி தேவர்கள் நாற்பத்தெண்ணாயிரமுனிவர் - கின்னரர்-கிம்புருடர்-கருடர்காந்தர்வர் - சித்தர் - வித்தியாதரர் - முதலானவர்கள் - வணங்கிச் சூழும்படி பார்வதிசமேதராய்ப் பரமசிவன் திருவோலக்கமாக எழுந்தருளி யிருந்தார். அப்போது தேவியானவர் எழுந்து வணங்கி நின்று ஸ்வாமீ திரிலோகத்திலே இல்லறம் வழுவாது நடந்து கதியடைந்தவ ருண்டோவென்று வினவ, ஸ்வாமி திருவுளம்பற்றுகிறார். உமையவளே தெய்வலோகத்தில் வசிஷ்டர்-அகஸ்தியர் - அயன் - புயங்கன் - சம்பு - என்னுமைந்து பேருண்டு. பூலோகத்தில், திருவள்ளுவரென் றொருவருண்டு. இவர்கள் தென்புலத்தார்கடன்-தேவர்கடன் - விருந்தோம்பல்-சுற்றந்தழுவல் - கபிலைபூசைசெய்தல் - முதலிய இல்லறத்தில் கற்பின் வழுவாத நற்குண நற்செய்கையுள்ள மனைவியோடிருந்து இல்லறக்கடன் நடத்திக் கதியடைந்தாரென்று திருவாய்மலர்ந்தருளப் பூலோகத்திலே திருவள்ளுவரென்பவர் யாரென்றுகேட்க பூர்வத்திலே ஒரு பிரளயம் வந்தது அதுவருமென்று பிர்மா முன்னமேதெரிந்து அதிலே யிறவாது பிழைக்கும்படி வேற்றுவடிவமாய் ஒரு சுரைக்கூட்டைத் தனக்கிடமாகக்கொண்டு அதிற்புகுந்து அவ்வெள்ளத்தின்மேல் மிதந்துவந்தான். அதுகண்டு நாம் அறியாதவர்போல் இதற்குளிருப்பவன் யாரென்றுகேட்டோம், தான் வருங்காலமறிந்து செய்ததற்கேற்ப வள்ளுவனென்றார். இப்பிரளயத்தில் நீர் எப்படிபிழைத்திருந்தீரெனக்கேட்க ஸ்வாமியென்றுந்தெரிந்து மிகுந்தபேரானந்தத்தையடைந்து பரமசிவனே - உமது திருவருளினால் பிழைத்திருந்தேன். ஆயினும், இந்தப்பிரளயத்தை நீக்கியருளவேண்டுமென்று வேண்டிக்கொள்ள, நாம் அந்த அதிகாரம் உமக்கே கொடுத்தோமென்று அவராலே முன்புபோல் உலகத்தைச்செய்வித்தோம். அத்தன்மையுடைய அவர் பூமியில் பிறந்தகாரணமுஞ்சொல்லுகிறோம்.

ஆதிகாலத்தில் பூமியிலே பாண்டிநாட்டில் மதுரைமாநகரத்திலிருந்த சங்கப்புலவர்கள் நம்மை அவமதிப்புச்செய்ததின்பொருட்டு அவர்கள் கர்வ பங்கமாகும்படி பிரமஸ்வரூபராகிய திருவள்ளுவரையும் மஹாவிஷ்ணுவையும் சரஸ்வதியையும் பூமியில் அவதரிக்கும்படி அனுப்பினோம். அவருள் மஹாவிஷ்ணு இடைக்காடராய்ப் பிறந்தார், சரஸ்வதியும் திருவள்ளுவருடனே வந்த மரபுங்கேள்.

ஆதியிலே பிர்ம புத்திரர்களாகிய காசிபர்முதலிய நவப்பிர்மாக்களில் காசிபர் ஊர்வசியைச்சேர்ந்து வசிஷ்டரைப்பெற்றார். அவர் அருந்ததியைச்சேர்ந்து சத்தியரைப்பெற்றார். அவர் புங்கனூர்ப் புலைச்சியைச்சேர்ந்து பராசரரைப்பெற்றார். அவர் மச்சகந்தியைச்சேர்ந்து வியாசரைப்பெற்றார். இவர்கள் நால்வரும் வேதங்களுக் குரியவரானார்கள்.

பின்பு பிர்மாவானவன் இன்னுஞ் சிலபுத்திரரால் வடமொழியையுந் தென்மொழியையும் விளங்கச்செய்ய வேண்டுமென் றெண்ணி வேதவிதிப்படி ஒரு யாகஞ்செய்ய அதன்கண்வைத்திருந்த கும்பத்திலிருந்து கலைமகள் அவதரித்தனள் அவளைப் பிரமன் விவாகஞ் செய்துகொண்டான் பின்பு அகஸ்தியர் குறியவடிவோடு அக்கும்பத்துதித்தனர். அவர் சமுத்திர கன்னிகையைமணந்து பெருஞ்சாகரனென்பவரைப் பெற்றார் அவர் திருவாரூர்ப் புலைச்சியைச்சேர்ந்து பகவனென்பவரைப் பெற்று அவருக்குச் சகலசாஸ்திரங்களையுங் கற்பித்தார். அந்நாளில் பிர்மவம்சத்தில் தவமுனியென்பவர் அருணமங்கையென்னும் பிராமணமாதைச் சேர்ந்து ஒருபுத்திரியைப் பெற்றுவைத்து விராலிமலையில் தவஞ்செய்யச் சென்றனர். அக்குழந்தையை உறையூர்ப் பெரும்பறையன் கண்டெடுத்துச் சிலகாலம் வளர்த்து வருகையில் மேல் நடக்கப்போகிற காரணத்தினால் இந்தப்பெண்தவிர மற்றவர்கள் யாவரும் இறக்கும்படி அந்தச்சேரியில் யாதுகாரணமோ மண்மாரிபெய்தது பின்பு அந்தப்பெண் அதற்கடுத்தமேலூர் அகரத்திலே நீதியையன்வீட்டில் வளர்ந்திருந்தனள்.

அப்போது பகவனென்பவர் சகலசாஸ்திர பண்டிதராய்க் கண்டவர் யாரும் மரியாதைபண்ணும்படி பிராமணவிர்த்தியத்தில் வழுவாதவராயிருக்கையில் யாத்திரைபண்ணும்படியிச்சைகொண்டு காசிக்குப் போகும்போது இவ்வகரத்துக்கடுத்த ஒரு சத்திரத்திலிறங்கி நித்திய கர்மங்களை முடித்துக்கொண்டு

சமையல்செய்திருந்தாள் அவ்விடத்தில் அந்தப்பெண்வர அவளைக்கண்டு நீயார் புலைச்சியோ வலைச்சியோ இங்கேவந்தாயென்று அதட்டி மிகுந்த கோபங்கொண்டு சட்டுவத்தால் அவளது தலையிலே உதிரஞ்சோர அடித்தோட்டினார். அவள் அழுதுகொண்டு தன்னிடத்துக்குப் போய்விட்டாள்.

மறுபடியும் பகவனென்பவர் ஸ்நானஞ்செய்து போசனம்பண்ணி அதிசீக்கிரத்தில் வழிக்கொண்டு சிலநாளிற் காசிக்குப்போய்க் கங்காஸ்நானஞ்செய்து பிரயாகையிலிருந்து தீர்த்தக்காவடி கட்டிக்கொண்டு வரும்போது அந்தச்சத்திரத்தில் வந்திறங்கினார். மேற்சொல்லிய பெண்ணானவள் அப்போது மகாலக்ஷ்மியைப்போலும் அழகும் எவ்வர்ண பருவமும உடையவளாய் அங்கேவந்தாள். பகவனென்பவர் இவளுடைய சௌந்தரிய முதலிய குணங்களைப் பார்த்து மோகங்கொண்டார். அச்சத்திரத்துக்கு அதிபராகிய நீதியையனென்பவர் அக்குறிப்பினைக் கண்டு எம்பெண்ணை விவாகம் பண்ணிக்கொண்டு இங்கேயிருமென்றுசொல்ல அதற்கவர் நான்கொண்டுவந்த காவடியை இராமேசுரத்திற் செலுத்தி வந்து அப்படியே செய்கிறேனென்று அவரிடத்திலே செலவு பெற்றுக்கொண்டுபோய் இராமலிங்கத்துக்கு அபிஷேகம்பண்ணித் திருப்பிவந்தார், அப்போது நீதியையர் விவாக எத்தனம்பண்ணிப் பந்துக்களோடிருந்து விசேஷமாய் நாலுநாளைய சடங்குகளும் செய்து ஐந்தாநாள் மங்கள ஸ்நானஞ் செய்விக்கும்போது பகவனென்பவர் அந்தப் பெண்ணினுடைய தலையில் எண்ணெயைப் பெய்யும்படி மயிரை வகிர்ந்தார் அப்போது தான் முன்பு சட்டுவத்தாலடித்த வடுவைக்கண்டு அநுமானித்து இந்தப் பெண்ணினது வரலாற்றையும் விசாரித்து வியசனங்கொண்டு நீ ஆதியளல்லளாவென்று சொல்லிவிட்டு ஓடினார். அதுவே அவளுக்கு ஆதியென்று காரணப் பெயராயிற்று

அப்படியோடிய பகவனென்பவர் பொழுதுபோகையால் எதிரேகண்ட பாணர்சேரியிலிருந்த ஒரு மண்டபத்திலேதங்கினார். ஆதியென்பவளும் அவர்பின்னே தொடர்ந்து அவரைக்கண்டு தெய்வச்செயலால் உமக்கும் எனக்கும் இந்தக்காரியம் நடந்திருக்க நீர் என்னைவிட்டுப் போகுதல் உமக்குத்தகுமோ அல்லது தருமமோவென்றும் உம்மை நீங்கினால் உயிர்வாழேனென்றும் மிகவும இரக்கத்துடன்சொல்லப் பிரார்த்தித்ததால் இவர் புத்தியிலும் அதுசரியென்று பட்டுப் பெண்ணே என்

னிடத்தில் உனக்கு அனேபருக்குமாறு யாவை மசாலை படிகே ட்கவேண்டும். அதென்னெனில் உனக்குப் பிள்ளைகள் எங்கெங் கே பிறக்கிறதோ அங்கங்கே அதுகளை அப்பொழுதே விட்டு வருவையானால் யான் உன்னைக்கூடச் சம்மதிப்பே னென்று சொல்ல அவளதற்கு உடன்பட்டபடியால் அன்றிரவில் அம்ம ண்டபத்திலிருவருங் கூடினார்கள்.

## ஔவை.

அப்போது பரமசிவன் உத்தரவின்படி சரஸ்வதி யானவரா னும் புகழ்ப்பட்ட ஔவையாகப் பிறந்தாள். இந்தக் குழந்தை யை யாவர் காப்பாற்றுவாரென்று விட்டுநீங்கத் தாய்வருந்தும் போது அது சொல்லியது.

(வெண்பா.)

இட்டமுடனென்றலையி லின்னபடியென்றெழுதி .... ....*
விட்டசிவனுஞ் செத்துவிட்டானோ-முட்டமுட்டப் .... *
பஞ்சமேயானாலும் பாரமவனுக்கன்றோ ........ ...... *
நெஞ்சமேயஞ்சாதே நீ .... ........ .... .... .... . ........*

அதுகேட்டு மனந்துணிந்துபோயினள். பின்பு அக்குழ ந்தையை அச்சேரியிலுள்ள பாணர்களெடுத்து வளர்க்க வளர்ந் து சரஸ்வதியாகையால இயல்பாகவேகலைமுழுவதும் அறிந்து சீதக்களபமென்னும் கணபதி அகவல்பாடி அவரை உபாசித்து லோகோபகாரமாக - ஆத்திசூடி - கொன்றைவேந்தன்- மூது ரை - நல்வழி - குறள் - அசதிக்கோவை - நன்னூற்கோவை- நா லெமாலிக்கோவை - பந்தனந்தாதி - அருந்தமிழ்மாலை - தரிசனப் பத்து. முதலியவுஞ்செய்து ஒவ்வோர் காரியத்தின்பொருட்டு த் தனிக்கவிதைகளனேகமும் பாடி. அனேக அற்புதங்களெல் லாஞ்செய்துமுடித்துவருநாளில் ஒருநாள் கணபதிபூசைவினா யகஞ்செய்தாள். அவர்வழக்கப்படியன்றி விரைந்துசெய்வது ஏனென்றுகேட்கச் சுவாமிசுந்தரமூர்த்தியாருஞ்சேரமான் பெ ருமாளும் கைலாசத்துக்குப்போகின்றார்கள், என்னையும் அழை த்தார்களென்ன அவர்களுக்குமுன்னே உன்னை அங்கேவிடுவே ன், நீ பூசையை வழக்கப்படி முடியென்றார் தன் பூசையைக் கிரமப்படி முடித்தாள் உடனே கணபதி துதிக்கையாலெடுத் துவிடக் கைலாசமலையடைந்தாள். பின்புபோன அவ்விருவரு ம் அவ்வையைக்கண்டு அதிசயப்பட்டார்கள்.

## உப்பை

இதுநிற்க முன்பு போன இருவர்களும் தொண்டைநாட்டில் ஊற்றுக்காடென்னும் ஊரினுள்ளதோர்மடத்திற்சென்று கூடினார்கள். அப்பொழுது உப்பையென்பவள் பிறந்தாள், இந்தக் குழந்தையை யாவர்காப்பாற்றுவாரென்று அதைவிட்டு நீங்கத் தாய் வருந்தும்போது அது சொல்லியது.

(வெண்பா.)

அத்திமுதலெறும்பீ றானவுயிரத்தனைக்குஞ்...... .. ......
சித்தமகிழ்ந்தளிக்குந் தேசிகன் - முற்றவே ... ... ... ✻
கற்பித்தான்போனானோ காக்கக்கடனிலையோ.... .... ....✻
வற்பமோ வன்னையரனே... ........ .... ......... ... ....... ... ✻

அதுகேட்டு மனந்துணிந்துபோயினள். அவ்வுப்பைமுற்பிறப்பில் யாரெனில், பிருகுவின் பத்தினியாகிய நாகவல்லியென்பவள் திரிமூர்த்திகளும் அவள் அழகின் மிக்கவளென்று கேள்விப்பட்டு பார்க்க மாறுவேஷங்கொண்டுபோய் நிர்வாண பிக்ஷைகேட்டார்கள் அவள் மஹாபதிவிரதையானதால் இவர்களைப் பாலராக்கி அப்படியே பால்கொடுத்து தன்னைப் பரிசோதித்ததற்குக் கோபங்கொண்டு அவர்களை மூன்றுசனனம் எடுக்கும்படி சொன்னாள். அதுகண்ட திரிமூர்த்திகளும் தங்களை அவள்மதிக்காமல் பாலராக்கி மூன்றுசனனம் பண்ணும்படி சொன்னதற்காகச் சினங்கொண்டு நீ அழகின்றி மாறுவடிவாகக்கடவையென்றுசபித்துப்போயினர். பின்பு பிருகுவானவர் இவள் வேற்றுவடிவைக்கண்டு நீ பூமியிற் பிறக்கக்கடவையென்றனர். அவள் கணவனுத்தரவின்படி உப்பையென்ன வந்தவதரித்து வண்ணார் வளர்க்கவளர்ந்து மாரியம்மையாய் உலகமெல்லாந் தன்னைப்போற்ற இப்பொழுதும் அவ்வூரில் தெய்வமாயிருக்கின்றனள்.

## அதிகமான்.

இதுநிற்க முன்புபோன அவ்விருவருஞ் சோழதேசத்திற கருவூரிலடைந்து ஒரு சோலையிற்கூட அதிகமானென்பவர் பிறந்தார். இந்தக் குழந்தையை யாவர்காப்பாற்றுவாரென்று அதைவிட்டு நீங்கத் தாய்வருந்தும்போது அதுசொல்லியது.

(வெண்பா.)

கருப்பைக்குண்முட்டைக்குங் கல்லினுட்டேரைக்கும்..
விருப்புற்றமுதளிக்கு மெய்ய-னுருப்பெற்று. ... ......

நமக்கும்படியளப்பா நாரியோர்பாகர்........ ... .... *
தமக்குத்தொழிலென்ன தான் .... .. ....... .... ........ *

அதுகேட்டு மனந்துணிந்துபோயினர். அக்குழந்தையைத் தனக்குப்பிள்ளையில்லாதபாப்பையனென்னும் ஒருபிராமணனெடுத்துவளர்த்து ஏழுவயதில் உபநயனஞ்செய்யத்தொடங்குகையில் பிராமணர்கள் ஒத்துக்கொள்ளமாட்டோமென்றுசொல்ல அதைக்கண்ட கபிலர் அவர்களைப்பார்த்து நான்முகத்தோனென்றோர் அகவல்சொல்லிக் கிரமத்தினால் சாதியன்றிச் சென்மத்தால் யில்லையென்றுசாதிக்க அதற்குப் பிரதியுத்தரஞ்சொல்லமாட்டாமல் இதுவேவிதியென்றுயாவரும் ஒத்துக்கொண்டு அச்சடங்கு முதலானவை முடித்தார்கள். அக்கபிலர் இன்னும் பாதாளவுலகத்தில் தவம்பண்ணிக்கொண்டிருக்கின்றனர்.

வள்ளியம்மை.

இந்நிற்க முன்புபோன அவ்விருவரும் வேளிமலைச்சாரலில் வந்துகூட அப்பொழுது வள்ளியம்மை பிறந்தனள். இந்தக்குழந்தையை யாவர்காப்பாற்றுவாரென்று வருந்தியதாய்க்கு அதுசொல்லியது.

( வெண்பா. )

அன்னைவயிற்றி லிருந்திவளர்த்தவன்று ........ ........ *
மின்றும்வளர்க்காதோ வென்றுயே-மின்னரவஞ்......*
சூடிப்பெருமான் சுடுகாட்டினின்றுவிளை ........ ......... *
யாடும்பெருமா னவன் ... ......... ......... ........ .. *

அதுகேட்டு மனந்துணிந்துபோயினள். பின்பு அக்குழந்தையை மலைக்குறவர்வளர்த்தார்கள் அவள் முற்பிறப்பில் யாரெனில், மஹாவிஷ்ணுவினால் மோகிக்கப்பட்ட விபுலதேவியென்பவளிடத்திற் பிறந்த குமரியென்பவள் குமாரக்கடவுளைக்குறித்துத் தவஞ்செய்தபோது அவர் வரப்படி தொண்டைமண்டலத்தில் வள்ளிமலையிலிருந்தக் கடவுளுக்கு நாயகியானள்.

(திருவள்ளுவர்.)

முன்புபோன அவ்விருவரும் மயிலாப்பூரில் இலுப்பைத்தோப்பிற் கூடினார்கள். அப்பொழுது திருவள்ளுவர் பிறந்தனர். இந்தக்குழந்தையை யாவர்காப்பாற்றுவாரென்று அதைவிட்டுநீங்கத் தாய்வருந்தும்போது அதுசொல்லியது.

( வெண்பா. )

எவ்வுயிருங்காக்கவொரு வீசனுண்டோ வில்லையோ.... *
வவ்வுயிரில்யானொருவ னல்லவோ-வவ்வி..... ........ ....*

பருகுவதுகொண்டிங் கலைவதேனன்னே .... .... .... ....*
வருருவதுதானே வரும்..... ........ ............... ........*

அதுகண்டு மனந்துணிந்து அவ்விருவருந் தீர்த்தயாத்தி
ரைக்குப் போயினர். பின்பு சிவாலயத்தின் அருகேயுள்ள இலு
ப்பைமரத்தின் கீழிருந்த குழந்தை அவ்விலுப்பைமலரிற்றுளி
க்குந்தேனையுண்டுபூர்வம்பிரமாவாதலால் சிகை யஞ்ஞோபவீதம்
சதுர்வேத புஸ்தகமுங்கொண்டு வளர்கையில் கங்காகுலசிரேஷ்
டனாகிய ஒருவேளாளன் மனைவிபுத்திரனைக்குறித்து அச்சிவால
ய சந்நிதியில் தவஞ்செய்திருந்தாள் அப்பொழுது உமாதேவி
அவளுடைய தவத்துக்கிரங்கி தெய்வச்செயலாலுண்டாகிய இக்
குழந்தையை நீ எடுத்துக்கொள்ளென் றருள்செய்து திருவள்
ளுவரென்று பூர்வநாமகரணமுஞ்செய்தாள். அவளும அந்தக்
குழந்தையையெடுத்து மகிழ்ச்சியடைந்து கொண்டுபோய்தன்
புருஷன் கையிற்கொடுத்தாள். அவனுந் தன்கையில்வாங்கிப்
பேரானந்தமபெற்று அதுவந்த வரலாறுங்கேட்டு இப்படி இரு
வரும அந்தப்பிள்ளையை நாளொருமேனியாக வளர்க்குங்கா
லத்தில் அவர் சுற்றத்தார்கள் எதோ ஒருபிள்ளையை வளர்க்
கிறார்களென்று இவர்களை இகழ்ச்சிபண்ண அதற்கு அவர்கள
ஞ்சிப் புறத்திலுள்ள தோர்தொழுவத்திலே தொட்டிலிட்டு அதி
ல் அக்குழந்தையைக் கிடத்திப் பண்ணைக்காரனாக காவல்வை
த்து வளர்த்தார்கள் பின்பு திருவள்ளுவரும் ஐந்துவயதானகா
லத்துத் தன்பொருட்டு தாயுந் தகப்பனும் சுற்றத்தார்களால்
நிந்தைசெய்யப்படுகிறார்களென்று அவர்களைப்பார்த்து என்னா
ல் உங்களுக்கு வருத்தம்வேண்டுவதில்லை நான்வேறிடத்திலிருக்
கின்றேன், நீங்கள் வருந்தாதிருங்களென்று சொல்ல அவர்கள்
அப்பா உன்னைப் பிள்ளைக்கலிதீர்க்கவந்த பெருமானென்றெ
ண்ணியிருந்தோமே நீ இப்படி சொல்லலாமாவென்ன நாயனா
ர் நீங்கள் என்னை நினைக்கும்போது வந்துங்களுக்கு வேண்டி
யதைச் செய்வேனென்று சொல்லிப் புறப்பட்டு அவ்வூர்க்கரு
கே ஒருபனைமரத்தி னிழலிலேயிருந்தார், அப்பனைமரம் தன்
னடிவிட்டு நிழல் சாயாதிருக்கக்கண்டவர்கள் இப்பிள்ளை தேவ
ரோ முனிவரோ கடவுளோ இவ்வுருவோடுவந்ததென்று துதிக்
க அவர்களைப்பார்த்து நாயனார் இங்கே தவமேது மகிமையே
து யாதொன்றும் என்னிடத்திலில்லை போமென்று தாம் அவ்
விடத்தைவிட்டுநீங்கித்திருமூலர் போகர் முதலாகியசித்தர்களு
ம் மாதவர்களும் வாசஞ்செய்கின்ற மலைக்கெழுந்தருளித் தவஞ்

செய்வாரோடு கூடியிருந்தார் அங்கிருந்த திருமூல சிவனைக்கண்
டு வள்ளுவரே பூர்வத்தில் நந்தி எனக்கனுக்கிரகம் பண்ணும்
போ தங்கேயிருந்தீரோ - உலகத்தாருக்குச் சித்தி முத்தியருளு
ம்படிக்கும அறமபொருளின்பமென்னு முப்பாலையுந் தமி
ழில் அருளிச்செய்யும்படிக்கும் இங்குவந் தவதரித்தீரோவென்
று துதிக்க நாயனாரு மகிழ்ந்து அங்கே தவஞ்செய்வோரில் ஒரு
வராயிருந்து சகலசாஸ்திர பண்டிதராஞர் அக்காலத்தில் தொ
ண்டைமண்டலத்திலொரு வேதாளமானது பயிர்களை அழித்து
ம் உயிர்களை வதைத்தும் அனேகந் துன்பஞ் செய்துவந்தது-
அப்பொழுது காவேரிபாக்கமென்னும் ஒரூரில் ஆயிரம் ஏர்
கொண்டுழுது பயிர்செய்கின்ற மார்க்கசகாயனென்னும் ஒரு
வேளாளன் இந்தவேதாளத்தை அடக்கினவருக்கு அளவற்ற திர
வியமும ஒருநும் வேண்டியவைகளையுந் தருகிறேனென்று பிர
சித்தம்பண்ணினுன் - அது ஒருவராலும்ஆகாமலிருந்தது, பின்
பு அவ்வேளாளன் திருமூலர் தியர் வாசஞ்செய்யும் மலையிலே
யிருக்கும் பெரியோர்களை அடுத்துச்சொல்ல அவர்கள் திருவள்
ளுவரோடு சொல்லென்றுர்கள் அவனை வணங்கிச்சொன்னன்
அப்போது சிவகாருணியராகிய திருவள்ளுவர் அவ்வேளாளன்
வேண்டிக்கொள்வதை நிறைவேற்றும்பொருட்டு அவ்வேதாளத்
தை விபூதிபஞ்சாக்ஷரத்தால் வென்று யாவரையும் ரக்ஷித்தார்
பின்பு அவ்வேளாளன் ஒருநும் அளவற்றதிரவியமுமல்லாமலு
ம் நாயனார் யோக்கியத்தையும் மகத்துவத்தையும் பார்த்து
வாசுகியென்னும் தன்பெண்ணையுங் கொடுக்கும்படி நிச்சயித்து
நாயனாரிடத்துவந்து என்பெண்ணைத் தேவரீருக்குக் கொடுக்க
நினைத்திருக்கிறேன் - அப்படியே அங்கீகரிக்கவேண்டுமென்று
சொன்னன் நாயனார் உலகத்தாருக் கில்லறநடத்திக் காட்டவே
ண்டுங்காரணத்தை யோசித்து அந்தப்பெண் நான்கொடுக்கும
ணலை அன்னமாக்கி எனக்கிடுமானுல்விவாகஞ்செய்துகொள்வே
னென்றார் அந்தப்பெண் அப்படியே சம்மதித்து சமைத்துப்
படைத்தனள். நாயனாரும் அங்கீகரித்து விதிப்படி வாசுகியை
விவாகஞ்செய்து சிலநாளங்கிருந்து பின்பு மனைவியுடன் மயிலை
யில்வந்தோரில்லாக்கிக்கொண்டு இல்லறஞ்செய்து நெய்தற்றொ
ழில் பாபமில்லாததென்று ஏலேலசிங்கனென்னும் வர்த்தகனி
டத்தில் நூல்வாங்கி ஆடைநெய்து அக்கூலியால் சீவனஞ்செய்தி
ருந்தனர், பின்பொருகாலத்தில் திருவாலங்காட்டில் சபாநாயக
ர் மயிடசங்காரஞ்செய்து கெர்வித்திருந்த பத்திரகாளி கெ

வயாவயாடை பலவித நடனஞ்செய்ய அவளுந் தோல்வியடை
யாமலாடிவந்தாள் பின்பு ஸ்வாமி குண்டலங்கழன்றதைக் காதி
லேதானே சேரும்படி ஊர்த்துவ பாதமாக நடனஞ்செய்தார்
அவளுமப்படியாட நாணித்தோற்றுள். அப்பொழுதுதேவர்க
ள் சுவாமி தேவரீ ரூர்த்துவதாண்டவம் பண்ணிய தென்னகார
ணமோ தெரியவில்லையென்றுகேட்க நீர் திருமயிலையிலிருக்கு
ந் திருவள்ளுவனைக் கேட்டீர்களானால் தெரியுமென்றுசொல்ல
தேவர்களங்கேபோ யவனைக்கேட்க அவர்சொல்லியது.

( வெண்பா. )

பூவிலயனும் புரந்தரனும்பூவுலகைத்.... .... ......... ... *
தாவியளந்தோனுந் தாமிருக்க-நாவி .... ............... ... *
விழைதங்கினாளென்றுமேழையதீவேறு ..... ...... ... *
குழைதக்கும் பிஞ்ஞகன்றன் கூத்து .... .................... *

அதிலே தெரிந்து தங்கள் சந்தேகந் தெளிந்தார்கள் ஒரு
நாள் நூல்வாங்கும்பொருட்டு ஏலேலசிங்கன் வீட்டுக்குப்போ
ய் செட்டியார் எங்கேயென்றுகேட்க அவர் சிவபூசைசெய்கிறு
ரென்றுர்கள் அவர் சிவபூசை இங்குசெய்கிறுரோ குப்பையிற்
செய்கிறுரோவென்ன அதை அவர்பத்தினி உள்ளேபோய் அவ
ருக்குச்சொல்ல அவர்கேட்டுச் சிவபூசையைவிட்டுத் திக்கிட்
டோடிவந்து நாயனருடைய உபயபாதங்களில வணங்கி ஸ்வா
மீ என்னைப் பந்தசாகரத்தினின்று மெடுத்துக் கரையேற்றவே
ண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய நாயனர் அவரதுபக்குவத்
தையும் இன்னுஞ் சில மாணக்கர்பக்குவத்தையு மோசித்துமெ
ண்ணி, ஒருநாள் அவர்களை யழைத்துக்கொண்டு ஒருவனத்திற்
சென்று அங்கு வெள்ளம் பெருகவரச்செய்தனர் அவர்கள்பயந்
து மனேதிடமின்றி யிக்கரையிலிருந்துடன் போகமாட்டாமல்
விழிக்க ஏலேலசிங்கர்மாத்திரம் தமமைத் தொடர்ந்துவர அவ்
வெள்ளம் வழிவிட்டது. பின்பு உயர்ந்த ஒரு மரத்தினுனியி
லேறென்றுசொல்ல ஏலேலசிங்கரேறினர் பின்பு பிடித்தகொம்
பையும் நின்றகொம்பையும் விட்டுவிடென்றருள யோசியாமல்
விட்டனர். விட்டும் ஒரு அபாயமில்லாதிருந்த ஏலேலசிங்கரை
த் தமது மடியின்மேல வைத்து ஞானேபதேசம்பண்ணி எப்
படிப்பட்ட சவுந்தரியமுள்ள மங்கையர்கள்மயக்கினு மயங்கா
த திடசித்தத்தையும் அனுக்கிரகித்தார். பின்பு தம்மிடத்துக்கு
வந்துவிட்டார்கள். அப்படியிருக்குநாளில் அந்நாட்டுக் காச

னாகிய அசசுதராஜனை ஒருநாள் ஏலேலசிங்கரோடு பேசிக்கொண்
டிருக்கும்போது உமக்குப் புத்திரப்பேறில்லையே உம்முடை
ய ஞானாசிரியனை அப்பேறுண்டாகக் கேட்கலாகாதாவென்ன
அவர் நல்லதென்றுபோய் மற்றொருநாள் நாயனாரைக்கண்டு வி
ண்ணப்பஞ்செய்ய அவர் ஸ்வாமி கடாக்ஷிப்பாரென்று அனுக்
கிரகம்பண்ணினார். பின்பு ஒருநாள் பரமசிவமே சிறுகுழவியா
ய் ஏலேலசிங்கரும் அவர்மனைவியும் நித்தியார்ச்சிக்கும் பசுவி
ன்வாலின் புறத்திற்கிடந் தழுவதைக்கண்டு அவ்விருவரும் இக்
குழந்தை ஏதெனவெடுத்தார்கள். உடனே அந்தஅம்மாள் ஸ்த
னங்களிலே பால்சுரந்துபெருக அக்குழந்தைக்குப் பால்கொடு
த்து ஞானகுருவாகிய நாயனார் சந்நிதானத்திற் கொண்டுபோ
னார்கள். அவர் அக்குழந்தைக்கு அழகானந்தனென நாமகரண
மபண்ணினார். உடனே ஏலேலசிங்கர் அச்சுதராஜனென்னும்
அரசனிடத்திற்சென்று எனக்குத் தைவிகத்தினால் குழந்தையு
ண்டாயிற்றென்று சொல்ல அவன் அப்படி தைவிகமானாலென்
னிடத்திலும் அது வரவேணுமென்றான். அவ்விருவரும் இப்ப
டி பேசிக்கொண்டிருக்கும்போது அக்குழந்தை அரசனுடைமடி
யில் வந்திருந்தது. அதை அவன் கண்டு இது அழகானந்தமே
வென்று ஆனந்தமடைந்து அணைத்துக்கொண்டு தன் மனைவி
கையிற்கொடுக்க அவள் வாங்கினவுடனே ஸ்தனங்களினின்று
பால்பெருக அதனைக் குழந்தைக்குப்புகட்டினாள். இப்படியற்
புதமாய்வளர்ந்து பின்பு அனேகருக்கு ஞானோபதேசஞ்செய்
து மகிமையோடிருந்தனர். மற்றொருதினத்தில் ஏலேலசிங்க
ரது கப்பல் கரைதட்டிப்போக அதைக்கேள்விப்பட்டு அவர்
தம்மரசனுடனே சொல்ல அவன் நம்மாலாவதென்ன உம்மு
டைய ஆசாரியருடனே சொல்லுமென்ன, அவர்போய் விண்
ணப்பம பண்ணிக்கொள்ளுவதற்கு முன்னமே நாயனாரிருந்து
ஏலேலசிங்கனை அழைப்பித்துக் கூட்டிக்கொண்டுபோய்க் கப்
பலிற் கயிறுபூட்டி அனேகம படவுகார ரிழுத்திழுத் தெய்வ
ளவும் அசையாமற் பதிந்திருப்பதனால் அவர்களெல்லாஞ்சோர்
ந்துகிடப்பதைக்கண்டு நாயனார் அதனருகிற்சென்று தமது திரு
க்கையாற்றொட்டு ஏலேலாவென் றிழுங்களென்று கட்டளையிட,
அப்படியே யிழுத்தார்கள் உடனே நிற்கவேண்டியபடி கப்ப
ல் நின்றது. பின்பொருகாலம் மழையில்லாமையால் உலகத்தி
ற் றானியங் கொள்ளக்கிடையாமல் அனேகரிறந்துபோவதைக்
கண்டு நாயனார் தமக்கு அன்புள்ள மாணாக்கராகிய ஏலேலசிங்க

ளாபமாறுது நாயனாருடைய பழுசையால்மாறுகிறவனைக்கும் வாங்
கிக் கட்டிவைத்திருக்கிற நெல்லையெல்லாம் வாங்கினவிலைக்குக்
குறைவில்லாதபடி விற்கக்கடவையென்றருள, அவரதுசொல்
லை ஆகமமாகக்கொண்டு விற்றார். பொருள் அதிவிர்த்தியாய்
மலைபோலுங்குவிந்தன. அவர்கட்டிவைத்திருந்த நெல்லுமெழு
வருஷங்குறைந்ததில்லை. பின்பு மழைபெய்து உலகக்ஷேமம
டைந்தது, மறுபடி அவனையழைத்துக் குறைவிலையில்லை
என்றார். அப்படியேவிற்றார் அவரிடத்திருந்த நெல்லெல்லாம்
மறுநாள் அஸ்தமயத்துக்குள்ளே செலவாய்ப்போய்விட்டன.
பின்பு நாயனார் தீர்நெல்லுவிற்று விர்த்தியான பொருளையெல்
லாம் உருக்கித்திரட்டிக் கடலிற்போட்டுவிடுமென, அவர் அப்ப
டிச்செய்தார். அதை யொருபெருமீன் விழுங்கிற்று. சிலநாளு
க்குப்பின்பு அம்மீன் வலைகாரர்கையிலகப்பட்டது. அதனை அவ
ர்சேதிக்கும்போது அதன்வயிற்றில் மலினமும பாசியும்படர்ந்த
தொருஸ்தம்பமிருக்க, அதனை ஏலேலசிங்கருக்குக் கொடுத்தா
ர்கள். அவர் கருங்கல்லென்றெண்ணி ஸ்நானம்பண்ணுமிடத்திற்
போட்டுவித்தார். அதன்மேல் நடத்தல் முதலிய பயிற்சியால் மலி
னைநீங்கி பிரகாசித்தது. அதில தமதுபேர் வெட்டியிருந்தலா
ல் தம்பொருளென்றறிந்து குருவருளென்று அற்புதமடைந்தா
ர். இப்படியிருக்குங்காலத்தில் அளவில்லாத மகிமைசெய்து
லோகப்பிரசித்தமாயிருக்கிறவரும் ஏலேலசிங்கருடைய புத்திர
திர்ப்பாக்கியத்தை நீக்கினவருமாகிய அழகானந்தரும் சிலபெரி
யோர்களும திருவள்ளுவரைப்பார்த்து கற்றற்கெளிதாயிம்
மைபாலுமும்மைக்குமுதவியாய் லோகோபகாரமாய் உமது
பெயரால ஒருநூல் செய்யவேண்டுமென்று சொல்ல, நாயனார்
வேதாகமசாரங்களைத்திரட்டி அறம்-பொருள்- இன்பமென்மு
ப்பாலாக்கி - ஆகாரம் - குறள் - வெண்பாவாற்பாடியருளினார்
பின்பு அழகானந்தர் முதலாயினோர்நாயனாரேயிதைக்கொண்
டுசங்கத்தாரைச்செயிக்கலாம் போமென்ன, அப்போதே நாய
னார் புறப்பட்டுத் தமதுமனைவியை யில்லின்கணிருத்தித் தாம்
வழிக்கொண்டுநடந்து இடைக்காடர்வசிக்கிற இடைச்சுழிநாட்டை
அணுகச்சேர்கையில் ஒளவைநேர்பட அவளோடும இடைக்கா
டரைக்கண்டு தாஞ்செல்லும்வகையைச்சொல்ல இடைக்காடரு
ம் நாயனாரை நோக்கி இடையாலுங் கடையாலு மழிக்கடவ
தென்று ஸ்வாமி தம்மைநிராகரித்த நக்கீராதிசங்கத்தாரைச்
சபித்திருக்கிறார். ஆதலா லென்னாலு மும்மாலு மழிவுபடப்

போகிறதாகையால் நாமும் வருகிறோம் வாருமென்று இடைக்காடரும் ஔவையுங் கூடவரப்பெற்று மதுரையையடைந்து சொக்கலிங்க ஸ்வாமியினுடைய ஆலயத்தைப்பிரதக்ஷணம்பண்ணி ஸ்வாமியையும் அம்மனையுந் தரிசனஞ்செய்து ஸ்வாமிசந்நிதானத்தில் பாண்டியராசா மந்திரிபிரதானிகள் மற்றச்சனங்கள் ஔவை இடைக்காடர்முதலான பெரியோர்களிருந்து கேட்கும்படி தாமருளிச்செய்த திருக்குறள் முப்பாலையும் சங்கத்தார் நெஞ்சிற் றிகிலுறவும் ஏனையர்நெஞ்சிற் களிப்பேறவும் அரங்கேற்றி முடித்தனர். அதனைக்கேட்டோர்கள் யாவரும் மிகுந்த சந்தோஷமடைந்து ஆனந்தமாகி நாயனாரைப்புகழ்ந்து துதித்தனர்.

பின்பு நாயனார் இடைக்காடரும் ஔவையும் மற்றவர்களுஞ் சூழ்ந் தவர பொற்றாமரைத் தீர்த்தத்தின்கணுள்ள சங்கப்பலகையின்கண் தமிழ்க்கரசராக வீற்றிருக்கின்றவர்களும் நயத்திலும் ஞானத்திலுஞ் செந்தமிழ்வாக்கிலும் அமைந்த பெரியோராகிய திருவாதவூரரொன்றும் மாணிக்கவாசக ஸ்வாமிகள் அருளிச்செய்த திருக்கோவையார் நானூற்றுக்கும் நூறுகுற்றங் கூறினவர்களும — சொக்கலிங்கஸ்வாமி தமதன்பனாகிய தருமியென்னும் பிராமணனுக்குப் பொற்கிழிகொடுத்தற்பொருட்டு அருளிச்செய்த கொங்குதேரொன்றும் பாடலைக் குற்றங்கூறச் சோமசுந்தரனே வித்வானாயெழுந்தருளிவர நெற்றிக்கண்காட்டினுங் குற்றங்குற்றமேயென்று கூறினவர்களும் மற்றப்புலவர்கள் பாடியபாடலையெல்லாங் கொள்ளையிட்டு அகஸ்தியனையும் வெற்றிகொள்ளத்தக்க விலக்கண விலக்கிய ஆராச்சியுள்ளவர்களுமாகிய நக்கீராதிப் புலவர்களுடைய தைரியமும் செருக்கும் புத்தியுங்கலங்கிச் சோர்வடையும்படி ஆட்டுக்கூட்டத்தில் புலிபுகுந்தாற்போலவும், அராக்கூட்டத்தில்கருடனடைந்தாற்போலவும், யானைக்கூட்டத்திற் சிங்கவேறுசென்றாற்போலவும், மூங்கில்வனத்திற் றீப்பற்றியதுபோலவும், அவர்களிடத்திற்சென்று அவர்கள்தமமைவினாவின அசதிவினாவிற்கெல்லாஞ் செந்தமிழ்ப்பாவா லுத்தரங்கொடுத்தார்,

பின்பு சங்கத்தார் நாயனாரைநோக்கி வள்ளுவரே நீர்பாடியகுறளை நாங்களொப்புக்கொள்ளுவதற்கு ஐயமொன்றுளது- அஃதியாதெனின், நாங்களிருக்கு மிந்தப்பலகை தெள்ளியசெந்தமிழ்நூலைக்கண்டா லிடங்கொடுக்குமாதலால் அது ஒப்புக்கொள்ளுமாகில் எங்களுக்கெல்லாம் சம்மதியென்று சொல்ல,

தீபமாகவருவதை அப்பதியாரும் எல்லசிங்களுஞ் சேர்விட்டு எதிர்கொண்டுபோய் அழைத்துவந்தார்கள். அவரும்வந்து தமதில்லறத்தில் வாசுகிமாதினோடிருந்தார்.

இப்படியிருக்கையில் ஒருபெரியவர் அவரில்லின்கட்சென்று ஸ்வாமீ இல்லறம்பெரிதோ துறவறம்பெரிதோ அடியேனுக் கனுக்கிரகிக்கவேண்டுமென்று பலநாள்பணிசெய்து காத்திருக்க, நாயனார் அவருக்குத்தரமொன்றுஞ்சொல்லாமல் அவரோ டிருந்துபோம்படி ஒருநாள் தமது வாசுகியென்னுமனைவியாள் கிணற்றில் சலத்தூக்கிக்கொண்டிருக்கையில் அழைக்க, அந்த அம்மாள் பாதிக்கிணற்றளவினில் தூக்கினகுடத்தை அப்படியே நிற்கவிட்டு வந்ததையும், மற்றொருநாள் அந்த அம்மாள் நாயனாருக்குப் பழையது பரிமாறிநிற்கையில், நாயனார் எனக்குச்சாதஞ் சுடுகின்றதென, அந்த அம்மாள் சீக்கிரம் விசிறிகொண்டு வீசியதையு மற்றொருநாள் நல்லமத்தியானத்தில் சிறிதுமிருளணுகாவிடத்தில் தாம் நெய்யும்போது கையிலிருந்த குழல்தவறி விழுந்ததையெடுக்க மனையாளை நோக்கித் தீபங்கொண்டுவாவெனக் கொண்டுவந்ததையும் வந்திருந்தவர்கண்டு, இப்படிப்பட்ட மனையாளோடிருக்கில் இல்லறமேபெரிதென்றும், இல்லையேல் துறவறமே பெரிதென்று மெண்ணிக்கொண்டுஒன்றுங்கேளாமற்போய்விட்டார்.

இப்படி நாயனாருந் திருமனைவியும் இல்லறம்நடத்திவருங்காலத்தில் வாசுகியம்மாள் மோக்ஷமடையும்போது நாயனார் திருமுகத்தைப்பார்க்க நாயனாருமென்னென்றார். என்னைமணஞ்செய்தவன்று தேவரீருக்கு யானன்னம் பரிமாறும்போது ஒருசிறுபாத்திரத்தில் சலமும் ஊசியும் வையெனக்கட்டளையிட்ட தின்னகாரணமெனத் தெரியவில்லையென்று விண்ணப்பஞ் செய்ய அதற்கு நாயனார் அன்னம் புறத்திற்சிதறில் எடுத்துப் பரிசுத்தஞ்செய்வதற்கென்று சொல்ல, வுடனே மோக்ஷமடைந்தனள்.

(அப்போது நாயனார்சொல்லியது.)

(வெண்பா.)

அடிசிற்கினியாளே யன்புடையாளே ... ... ... ... ... ※
படிசொற்றவறாத பாவா-யடிவருடிப் ... ... ... ... ※
பின்றூங்கிமுன்னெழுந்த பேதையேபோதியோ..... .. ... ※
வென்றூங்குமென்கணிரா ... ... ... ... ... ※

என்றருளி அந்தஅம்மாள் திருமேனியைச்சமாதிபண்ணி
னார். நாயனார் பின்னும் அநேகநாளிருந்து அநேகமகிமைக
ள்செய்து எலேலசிங்கர்முதலாகிய சிஷிர்களுக்குப் பூரண அநு
க்கிரகமபண்ணிப் பின்பு எலேலசிங்கரை யழைத்து நமக்குப்
பரிபூரணதிசை நேரிட்டிருக்கின்றதால் நாம்பரிபூரணமானபி
ன்பு நமதுதேகத்தைப் புரிகட்டியிழுத்து ஊர்க்குப் புறத்தில்
புதரிற்போட்டுவிடுமென் றனுக்கிரகஞ்செய்து நிஷ்டைகூடிப்
பரிபூரணமானவர்போ லிருக்கக்கண்டு எலேலசிங்கர்பொற்பெ
ட்டியில் வைத்தடக்கம்பண்ண வெத்தனித்ததை அறிந்துடனே
நாயனார்விழித்துப்பார்த்து அப்பா நான்சொன்னசொல்லைக்க
டவாதேயென்று அனுக்கிரகித்து உடனே பரிபூரணமானார்.
எலேலசிங்கரும நாயனார்கட்டளைப்படிசெய்யுமளவில் திருமே
னியிற் சிதறியதசைகளைக்காகமுதலானதுகளருந்திப் பொன்ம
யமானதைக்கண்டு, பெரிதான ஆச்சரியமடைந்து, அவர்திருமே
னியிருந்தவிடத் தாலயமெடுப்பித்துப் பூசித்துவந்தார்கள்.

திருவள்ளுவநாயனார்சரித்திரம்

முற்றிற்று.

ஷ சரித்திரத்திலுட்பட்ட பாட்டுகள்.

---

சொக்கநாதர்
தருமியென்னும் பிராமணனுக்கு அருளிச்செய்த
திருமுகப்பாசுரம் - அகவல்.

கொங்குதேர்வாழ்க்கையஞ்சிறைத்தும்பி.... ...... ...... .........*
காமஞ்செப்பாதுகண்டதுமொழிமோ ........ .... ..............*
பயிலியதுகெழீஇய்நட்பின ........ ..... ........ .... .... .........*
மயிலியற்செறியெயிற்றருவைகூந்தலி ........ ........... .... ....*
னறியவுமுளவோநீயறியும்பூவே ............................ . ......... *

சொக்கநாதர் நக்கீரரைப்பார்த்துச்சொல்லியது.
(வெண்பா.)

அங்கங்குலையவரிவாளினெய்பூசிப் . .. .... ..... . .................. *
பங்கம்படவிரண்டுகால்பரப்பிச்-சங்கதனைக் .... .... ......... ....*
கீர்கீரெனவறுக்குங்கீரனோவென்கவியை... .... ......... .........*
யாராயுமுள்ளத்தவன் .... ... .......... ........ ............. .........*

சொக்கநாதனைப்பார்த்து நக்கீரர்சொல்லியது.
(வெண்பா.)

சங்கறுப்பதெங்கள்குலஞ் சங்கரனார்க்கேதுகுலம் ............. *
பங்கமறச்சொன்னாற்பழுதாமே-சங்கை ........................ .......*
யரிந்துண்டுவாழ்வோமரனேநின்போல.... ........ .... .........*
விரந்துண்டுவாழ்வதில்லை .... ............... ... .... ....................*

சங்கத்தாரைவெல்லவேண்டி ஔவை ஞானக்
குறியாற் கைச்சைகைகள்பண்ணி இவையென்
னென்று கேட்கச் சங்கத்தார் சொல்லியது.

(வெண்பா.)

இவ்வளவுகண்ணிரு ளிவ்வளவுசிற்றிடையா............... ......... *
ளிவ்வளவுபோன்ற விளமுலையா-ளிவ்வளவாய்க் .... ......... ....*
காமத்தலைவனையுங் காணாதுகன்றிரு.......... ..... .................*
ளூமத்தைகாட்டுகுறி நன்கு ..............................................*

இவைந்து தகுதியான உத்தரவன்றென்று
அக்குறிகளுக்கு ஔவை சொல்லியது

(வெண்பா.)

ஐயமிடுமினறநெறியைக்கைப்பிடிமி ........................ *
னிவ்வளவேனும்மானத்தைவிட்டுண்மின்-றெய்வ ................ *
மொருவனேயென்ன வுணரவல்லீரோ ......................... *
லருவினைகளோந்து மறும் ................................ *

இப்படியென்று ஔவைசொல்லச் சங்கத்தார்நாண
முற்று இவளைவெல்லப்படாதென்றுதிருவள்ளுவரை
ப்பார்த்துநீரொந்தவூரென்றதற்கு அவர்சொல்லியது

(வெண்பா.)

எந்தவூரென்றீ ரிருந்தவூர் நீர்கேளீ ........................ *
ரந்தவூர்செய்தியறியீரோ-வந்தவூர் ........................ *
முப்பாழும்பாழாய் முடிவிலொருசூனியமா .................... *
யப்பாலும்பாழா யறும் ................................... *

என்றிதுமுதலான ஞானார்த்தமான செய்யுட்க
ளாலவர் வினவியவைகளுக் கெல்லாம் உத்தர
வு சொல்ல இவரையும் வெல்வ தரிதென்று,
இடைக்காடருடனே பேச அவர் சொல்லியது.

(வெண்பா.)

ஆற்றங்கரையினருகிருந்தமாமரத்திற் ........................ *
காக்கையிருந்து கலைருகலைகெனக்-காக்கைதனை ................ *
யெய்யக்கோலில்லாம லிச்சிச்செனவெய்தான் ................... *
வையக்கோனார்தன் மகன் .................................. *

இதுபோன்ற அநேகஞ் செய்யுட்களை அவர்களா
லெழுதப்படாமலும் கற்றுக்கொள்ளப் படாம
லுஞ் சொல்ல நாணித் தோற்படைந்தார்கள்.

இத்திருக்குறளுக்குத் திருவள்ளுவமாலையே சிறப்புப்பா
யிரமாதலின் ஆக்கியோன்பெயரே வழியேயெல்லை நூற்பெ
யர்யாப்பே நுதலியபொருளே கேட்போர் பயனொடாயெ
ண்பொருளும் வாய்ப்பக்காட்டல் பாயிரத்தியல்பே - காலங்
களனேகாரணமென் றிம்மூவகை யேற்றிமொழிநரு முளரே.
என்று கூறப்பட்ட ஆக்கியோன் பெயர் முதலியனவெல்லாம்
அப்பாயிரத்திற்காண்க........................................................❊

இந்நூலுரை வாசகங்கள் கற்றோர்மற்றோர் யாவர்க்கு
ம் பொதுப்படப் பயன்படுதற்பொருட்டுப் பெரும்பாலும்
புணர்ச்சி விகாரங்களை நீக்கிப் பதம்பதமாகப் பிரித்துக்காட்
டப்பட்டன. தெளிவுக்காக ஒரோவிடத்து வடசொற்களுக்கு
வடசிறப்பெழுத்துகளும் கூட்டப்பட்டன. மூலத்தில் வெளி
ப்படைப் பதங்களுக்கு உரைகள் எழுதப்படவில்லை ............ ❊

### இந்நூலுரையிலேவைக்கப்பட்டகுறிகள்.

- இச்சிறுகீற்றுப் பதத்துக்குப்பின்னும்...........................*

— இப்பெருங்கீற்று அதனுரைக்குப்பின்னும்.........................*

( ) இவ்விருதலைப்பிறை - வருவிக்கப்பட்டசொற்களுக்கும்.....*

| இவ்வம்பு-வினைமுதலுக்குப்பின்னும்...............................*

} இப்புட்சிறை-செயப்படுபொருளுக்குப்பின்னும்.................*

. இக்குத்து - முற்றுச்சொல்லுக்குப்பின்னும் ......................*

❊ இவ்வுடு-பதவுரைக்கும்விசேஷவுரைக்கும்இடையினும் .....*

[ ] இவ்விருதலைப்பகரம்- கருத்துரையினிருபுறத்தும்...........*

, இம்முளை - கூட்டிச்சொன்முதலியவற்றின்பின்னும்..........*

+ இப்புள்ளடிமுதலியன அடியிற் காட்டப்பட்டவற்றுக்கும்
வைக்கப்பட்டன...........................................................❊

# பாலியல் அதிகாரவகராதிகள்


பால். பக்கம்.

அறத்துப்பால் ... ௧
காமத்துப்பால் ... ௩௯௭
பொருட்பால் ... ௱௪௫

இயல் ... பக்கம்.

அங்கவியல் ... ௨௬௭
அரசியல் ... ௱௪௬
ஒழிபியல் ... ௬௫௨
இல்லறவியல் ... ௯
களவியல் ... ௬௱௯௭
கற்பியல் ... ௪௨௪
துறவறவியல் ... ௮௪

அதிகாரம். பக்கம்.

அடக்கமுடைமை ... ௪௫
அமைச்சு ... ௨௬௭
அரண் ... ௨௭௭
அருளுடைமை ... ௮௪
அலரறிவுறுத்தல் ... ௪௨௰
அவர்வயின்விதும்பல் ... ௪௬௬
அவாவறுத்தல் ... ௱௬௬
அவையஞ்சாமை ... ௨௭௩
அவையறிதல் ... ௨௬௭
அழுக்காறாமை ... ௫௮
அறன்வலியுறுத்தல் ... ௰௬
அறிவுடைமை ... ௱௫௯
அன்புடைமை ... ௨௮
ஆள்வினையுடைமை ... ௨௬௰
இகல் ... ௬௱௰௬
இடனறிதல் ... ௱௮௬
இடுக்கணழியாமை ... ௨௬௪
இரவச்சம் ... ௬௮௯
இரவு ... ௬௮௫
இல்வாழ்க்கை ... ௰௭
இறைமாட்சி ... ௱௪௬
இனியவைகூறல் ... ௬௫
இன்னாசெய்யாமை ... ௱௰௧
ஈகை ... ௭௭
உட்பகை ... ௬௨௭
உழவு ... ௬௭௮
உறுப்புநலனழிதல் ... ௪௫௬
ஊக்கமுடைமை ... ௨௨௬
ஊடலுவகை ... ௪௮௯
ஊழ் ... ௱௬௮
ஒப்புரவறிதல் ... ௭௬
ஒழுக்கமுடைமை ... ௪௮
ஒற்றாடல் ... ௨௱௰௯
கடவுள்வாழ்த்து ... ௨
கண்ணோட்டம் ... ௨௱௰௬
கண்விதுப்பழிதல் ... ௪௬௨
கயமை ... ௬௯௨
கல்லாமை ... ௱௫௨
கல்வி ... ௱௪௭
கள்ளாமை ... ௯௯
கள்ளுண்ணாமை ... ௬௪௩
கனவுநிலையுரைத்தல் ... ௪௪௬
காதற்சிறப்புரைத்தல் ... ௪௱௰௬
காலமறிதல் ... ௱௮௨
குடிசெயல்வகை ... ௬௭௫
குடிமை ... ௬௫௨
குறிப்பறிதல் ... ௨௬௪
குறிப்பறிதல் ... ௪௱௩
குறிப்பறிவுறுத்தல் ... ௪௬௬
குற்றங்கடிதல் ... ௱௬௨
கூடாநட்பு ... ௬௱௬
கூடாவொழுக்கம் ... ௯௫
கேள்வி ... ௱௫௫
கொடுங்கோன்மை ... ௨௱௯
கொல்லாமை ... ௱௰௫
சான்றாண்மை ... ௬௱௬௨

| அதிகாரம். | பக்கம். | அதிகாரம். | பக்கம் |
| --- | --- | --- | --- |
| சிற்றினஞ்சேராமை | ௱எ௰ | படர்மெலிந்திரங்கல் | ௪௨௮ |
| சுற்றந்தழால் | ௱கூ௮ | படைச்செருக்கு | ௨௮கூ |
| சூது | ௱௪௪ | படைமாட்சி | ௨௮ரு |
| செங்கோன்மை | ௨௱ரு | பண்புடைமை | ௱௪௱ரு |
| செவிநலிபயறிதல் | ௱கூ | பயனிலசொல்லாமை | ௬௭ |
| சொல்வன்மை | ௨௪௪ | பழமை | ௨கூகூ |
| தகையணங்குறுத்தல் | ௱கூஎ | பிரிவாற்றாமை | ௪௨௪ |
| தவம் | கூ௨ | பிறனில்விழையாமை | ரு௨ |
| தனிப்படர்மிகுதி | ௪௱கூ | புகழ் | ௮௰ |
| திநட்பு | ௱௱௨ | புணர்ச்சிமகிழ்தல் | ௪௱ரு |
| தீவினையச்சம் | எ௰ | புணர்ச்சிவிதும்பல் | ௪எ௰ |
| துறவு | ௱௨௪ | புதல்வரைப்பெறுதல் | ௨ரு |
| தூது | ௨ருகூ | புலவி | ௪௱எ |
| தெரிந்துசெயல்வகை | ௱எ௪ | புலவிநுணுக்கம் | ௪௮௰ |
| தெரிந்துதெளிதல் | ௱கூ௰ | புலான்மறுத்தல் | எ௮ |
| தெரிந்துவினையாடல் | ௱கூ௪ | புல்லறிவாண்மை | ௱௱௰௨ |
| நடுவுநிலைமை | ௪௨ | புறங்கூறாமை | ௬௪ |
| நட்பாராய்தல் | ௨கூரு | பெண்வழிச்சேறல் | ௱௱௱ |
| நட்பு | ௨கூ௨ | பெரியாரைத்துணைக்கோடல் | ௱௬௬ |
| நலம்புனைந்துரைத்தல் | ௪௱கூ | பெரியாரைப்பிழையாமை | ௱௱௰ |
| நல்குரவு | ௱௮௨ | பெருமை | ௱௱ருகூ |
| நன்றியில்செல்வம் | ௱௬கூ | பேதைமை | ௱௱கூ |
| நாடு | ௨எ௱ | பொச்சாவாமை | ௨௱௪ |
| நாணுடைமை | ௱எ௨ | பொருள்செயல்வகை | ௨௮௪ |
| நாணுத்துறவுரைத்தல் | ௪௰௬ | பொழுதுகண்டிரங்கல் | ௪௪கூ |
| நிலையாமை | ௱௰கூ | பொறையுடைமை | ருரு |
| நிறையழிதல் | ௪ருகூ | மடியின்மை | ௨௱௨எ |
| நினைந்தவர்புலம்பல் | ௪௪௨ | மருந்து | ௱௱௪௮ |
| நீத்தார்பெருமை | கூ | மன்னரைச்சேர்ந்தொழுகல் | ௨௬௰ |
| நெஞ்சொடுகிளத்தல் | ௪ரு௬ | மானம் | ௱ரு௬ |
| நெஞ்சொடுபுலத்தல் | ௪எ௱ | மெய்யுணர்தல் | ௱௨௮ |
| பகைத்திறந்தெரிதல் | ௱௨௱ | | |
| பகைமாட்சி | ௱௱௰கூ | | |
| பசப்புறுபருவரல் | ௪௱ரு | | |

பால். பக்கம். அதிகாரம். பக்கம்

வரைவின்மகளிர் ........ ௩௩௭
வலியறிதல் ........ ௱௭௮
வாய்மை ........ ௱௩
வாழ்க்கைத்துணைநலம் ........ ௨௧
வான்சிறப்பு ........ ௬
விருந்தோம்பல் ........ ௩௨
வினைசெயல்வகை ........ ௨௫௨
வினைத்திட்பம் ........ ௨௪௮
வினைத்தூய்மை ........ ௨௪௫
வெகுளாமை ........ ௱௭
வெஃகாமை ........ ௬௧
வெருவந்தசெய்யாமை ௨௱௰௨

முற்றியது.

அறப்பாலில். அதி.

பாயிரம் ........ ௪
இல்லறவியல் ........ ௨௰
துறவறவியல் ........ ௰௩
ஊழ் ........ ௧
ஆகவகை-௪-க்குக்குறள் ௩௮௰.

பொருட்பாலில். அதி.

அரசியல் ........ ௨௫
அங்கவியல் ........ ௩௨

இதனுட்பிரிவு.

அமைச்சு ........ ௰
நாடு ........ ௧
அரண் ........ ௧
பொருள் ........ ௧
படை ........ ௨
நட்பு ........ ௰௭
ஒழிபியல் ........ ௰௩
ஆகவகை(௩)க்குக்குறள்-௭௱

காமத்துப்பாலில். அதி.

களவியல் ........ ௭
கற்பியல் ........ ௰௮

இவற்றினுட்பிரிவு.

தலைவனுரைப்பது ........ ௭
தலைவியுரைப்பது ........ ௰௨
அவ்விருவருமுரைப்பது ௬
ஆகவகை(௨)க்குக்குறள் ௨௫௰
ஆக-அதிகாரம் ........ ௱௩௩
திருக்குறள் ........ ௲௩௱௰

# திருக்குறளுரை.

## அறத்துப்பால்.

### முகவுரை.

இந்திரன்முதலாகிய தலைவர்களுடைய பதங்களையும், முடிவில்லாத இன்பத்தையுடைய அழிவில்லாத வீட்டையும், வழியறிந்து அடைதற்கு உரிய மனிதர்க்கு உறுதியென உயர்ந்தோராலே எடுக்கப்பட்ட பொருள்கள் நான்கு. அவையாவன - அறம், பொருள், இன்பம், வீடு, என்பனவாம்.—அவைகளுள் - வீடெனப்படுவது - இப்படிப்பட்டதென்று நினைக்கவும், சொல்லவும், கூடாத நிலைமையை உடையதாகலால் - துறவறமாகிய காரணவகையாலே யல்லாமல் இலக்கண வகையினாலே சொல்லப்படாமையால் - நூல்களாலே சொல்லப்படுவன - மற்றைமூன்றுமே ஆம்.—அவைகளுள் - அறமாவது - மனு முதலாகிய நூல்களில் விதிக்கப்பட்டவைகளைச் செய்தலும், விலக்கப்பட்டவைகளை ஒழிதலும். ஆம்.—அஃது - ஒழுக்கம், வழக்கு, தண்டம், எனமூன்றுவகைப்படும்.— அவைகளுள் - ஒழுக்கமாவது - பிராமணர் முதலாகிய வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரியமுதலாகிய நிலைகளிலே நின்று அந்நிலைகளுக்குச் சொல்லப்பட்ட அறங்களின் வழுவாமல் நடத்தலாம்.— வழக்காவது - ஒருபொருளைத் தனித்தனியே எனது எனது என்று இருப்பவர் - அதுகாரணமாகத் தம்முள்ளே மாறுபட்டு அப்பொருளின்மேலே செல்லுவது. அது - கடன்கோடல் முதலாகிய பதினெட்டுப் பதங்களையுடையதாம்.—தண்டமாவது - அவ்வொழுக்க வழியினும், வழக்குவழியினும், தப்பினவரை அவ்வழியிலே நிறுத்துதற்பொருட்டு ஒப்பநாடி அக்குற்றத்திற்குத் தகுதியாகத் தண்டித்தலாம்.—இவைகளுள் - வழக்கும், தண்டமும், உலகவழியிலே நிறுத்துமேயல்லாமல் ஒழுக்கம்போல் மக்களுயிர்க்கு உறுதியைத் தருவனவல்ல ஆகையாலும், அவைதாம் நூலாலேயல்லாமல் அறிவுமிகுதியாலும் தேசவியற்கையாலும் அறியப்படுதலாலும், அவ்விரண்டையும் ஒழித்து இங்கே தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனாராலே சிறப்புடைய ஒழுக்கமே அறமென எடுத்துக்கொள்ளப்பட்டது.—அவ்வறந்தான் - நால்வகைநிலைகளை உடையதாய் வருணந்தோறும் வேறுபாடு உடைமையால் சிறுபான்மையாகிய அச்சிறப்பியல்புகளை ஒழித்து, எல்லார்க்கும் ஒத்திருத்தலால் பெரும்பான்மையாகிய பொ

துவியல்புபற்றி - இல்லறம், துறவறம், எனவிருவகை நிலைகளாலே சொல்லப்பட்டது — அவற்றுள் இல்லறத்தை முதலிலே சொல்லத்தொடங்கி எடுத்துக்கொள்ளப்பட்ட இலக்கியம் இனிது முடிதற்பொருட்டுக் கடவுள்வாழ்த்துக் கூறினார்.....

# தற்சிறப்புப்பாயிரம்

## முதலதிகாரம் - கடவுள்வாழ்த்து.

அஃதாவது - கவிதான் வழிபடுகடவுளை யாயினும், எடுத்துக் கொள்ளப்பட்ட பொருளுக்கு ஏற்புடைக்கடவுளையாயினும், வாழ்த்துதலாம். அவைகளுள் - இவ்வாழ்த்து ஏற்புடைக்கடவுளையென்றறிக. எப்படி என்றால் - சத்துவமுதலாகிய முக்குணங்களாலே அறமுதல் மூன்றாகிய உறுதிப்பொருளுக்கு அக்குணங்களாலே மூவராகிய முதற்கடவுளோடு சம்பந்தமுண்டாயிருக்கையால் அம்மூன்று பொருள்களையும் சொல்லத்தொடங்கிய இவர்க்கு அம்மூவரையும் வாழ்த்துதல் முறைமையாதலின். இவ்வாழ்த்து அம்மூவர்க்கும் பொதுப்படச்சொல்லினமையொன்று அறிக,..... .... ....,....... ... ..... .... .... ... ❁

அகரமுதல வெழுத்தெல்லா மாதி , .... ......... ....*
பகவன் முதற்றே யுலகு .... .... ..... ..... ........க.

(இதனது பதப்பொருள்) எழுத்தெல்லாம் - எழுத்துகளெல்லாம்| — அகரமுதல - அகரமாகிய முதலையுடையன.— (அதுபோல.) — உலகு| — ஆதிபகவன்முதற்று- ஆதிபகவனாகிய முதலையுடைத்து. எ - று. ❁ ஏகாரம் - தேற்றத்தில்வந்தது.— தமிழெழுத்துகளுக்கு மாத்திரமல்லாமல் வடவெழுத்துகளுக்கும் முதலாதலைநோக்கி - எழுத்தெல்லாமென்றார் — ஆதிபகவனென்னும் இருபெயரொட்டுப் பண்புத்தொகைவடநூன்முடிபாதலின் இயல்பாயிற்று.—உலகென்றது - இங்கே உயிர்களின்மேலேநின்றது.—காணப்பட்ட உலகத்தைக் கொண்டு காணப்படாத கடவுளுக்கு இருப்பைச்சொல்லவேண்டுதலின் ஆதிபகவன் முதற்றேயென்று உலகின்மேல் வைத்துச் சொல்லினார், அப்படிசொல்லினாராயினும் உலகிற்குமுதல் ஆதிபகவனென்பது கருத்தாகக் கொள்க.— + நாதமாத்திரையாகி இயல்பாற் பிறத்தலால் அகரத்திற்குத் தலைமையும், செயற்கையறிவாலன்றி இயற்கையறிவால் முழுதும் அறிதலால் ஆதிபகவனுக்குத்தலைமையும், கொள்க.— தலைமைபற்றிவந்த அகரத்திற்கும், ஆதிபகவனுக்கும், *பிம்பப்பிரதிபிம்பபாவம்சொல்

+ நாதம் உயிர்முயற்சியால் எழுகிற உதானவாயுவால் ஆவது. * பிம்பப்பிரதிபிம்பபாவம் - ஒப்புமையால் பிம்பமும் பிரதிபிம்பமுமெனத்தோன்றல்

ல்லுதலால் எடுத்துக்காட்டுவமையணி ) [இப்பாட்டால் முதற் கடவுளினிருப்புச்சொல்லப்பட்டது. ] (௧)

கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவ *
னற்றாடொழா அரெனின். - - ௨.

இ-ள். கற்றதனால்- (எல்லா நூல்களையுங்கற்றவர்க்கு )அக்கல்வியறிவினால்—ஆய-உண்டாகிய—பயன் - பிரயோசனம் | —என் - யாது.—வாலறிவன் - மெய்யறிவினையுடையவனது—நற்றாள் - நல்லவடிகளை—தொழாஅரெனின் - வணங்காராயின்.எ-று.* என்னென்னும்வினாப்பெயர் என்னென்றாய் இல்லையென்னும்பொருளைக் குறிப்பித்துநின்றது. கொல்- அசைநிலை. பிறவிப்பிணிக்கு மருந்தாகலின் நற்றாளென்றார். [ஆகமவறிவுக்குப் பயன் அவனடிகளைவணங்கிப்பிறவியை அறுத்தலென்பது இதனாற்சொல்லப்பட்டது.] (௨)

மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார் - *
நிலமிசைநீடுவாழ்வார் - - - உ.

இ-ள்.மலர்மிசை-( அன்பரது நெஞ்சமாகிய )தாமரைமலரிடத்து—ஏகினான் - சென்றவனது—மாணடி- பெருமைபொருந்தியவடிகளை—சேர்ந்தார் - சேர்ந்தவர் | —நிலமிசை- எல்லாவுலகங்களுக்கு மேலாகிய வுலகத்திலே—நீடுவாழ்வார்- அழிவில்லாமல் வாழ்வார்.எ-று. ※ மலர்போலுநெஞ்சை மலரென்றது உவமையாகுபெயர். அன்பினாலே நினைப்பவரது நெஞ்சில் அவர் நினைத்தவடிவோடு விரைந்து செல்லுதலினாலே - ஏகினானென இறந்தகாலத்தாற்சொல்லினார் . இதுவிரைவுபற்றி வந்தகாலவழுவமைதி. சேர்தல்-இடைவிடாது நினைத்தல். (௩)

வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில - - (ச)

இ.ள். வேண்டுதல்-( யாதொருபொருளையும் ) விரும்புதலும்—வேண்டாமை-வெறுத்தலும்—இலான்- இல்லாதவனது—அடி - அடிகளை—சேர்ந்தார்க்கு -சேர்ந்தவர்க்கு—யாண்டும் - எக்காலத்திலும்—இடும்பை-பிறவித்துன்பங்கள்| —இல -உண்டாவனவல்ல.எ-று. ※ பிறவித்துன்பங்களாவன - தன்னைப்பற்றி வருவதும், பிறவுயிரைப்பற்றிவருவதும், தெய்வத்தைப்பற்றிவருவதும், எனமூவகையால் வருகிறதுன்பங்களாம். அடிசேர்ந்தார்க்கு அவ்விருப்புவெறுப்புகள் இல்லாமையால் அவை

காரணமாக வருகிற மூவகைத் துன்பங்களும் இல்லையாயின

இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு. ௫

இ-ள். இருள்சேர் - மயக்கத்தைப் பற்றி வருகிற—இருவினையும் (நல்வினை தீவினையென்று )இரண்டுவினைகளும்|—சேரா- உண்டாகாவாம.—இறைவன்- தலைவனது— பொருள்சேர்- மெய்மைசேர்ந்த — புகழ் - கீர்த்தியை— புரிந்தார் மாட்டு-விரும்பினவரிடத்து-எ-று. ❊ இப்படிப்பட்டதென்று ஒருவராலும் சொல்லப்படாமையால் அஞ்ஞானத்தை இருளென்றும், நல்வினையும் பிறத்தற்கு ஏதுவாகலால் இருவினையும் சேராவென்றும்,சொல்லினார். தலைமைக்குணங்க ளில்லாதவரை உடையரென்று நினைத்து அறிவிலார் சொல்லுகிறபுகழ் பொருள் சேராதாகலின் அவைமுழுதுமுடையதலைவனது புகழ்பொருள்சேர் புகழெனப்பட்டது . புரிதல் - எப்பொழுதும் சொல்லுதல்.௫

பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க ❊
நெறிநின்றார் நீடுவாழ் வார். - ௬.

இ-ள். பொறிவாயில் - (மெய்வாய்கண்மூக்குச் செவியென்னும் )ஐம்பொறிகளைவழிகளாகவுடைய —ஐந்து- ஐந்தாசைகளையும்—அவித்தான் - அறுத்தவனது—பொய்தீர் - மெய்யான—ஒழுக்கநெறி - ஒழுக்கவழியிலே—நின்றார் - ( வழுவாது)நின்றவர் | —நீடுவாழ்வார்-பிறப்பில்லாமலெக்காலத்திலும் ஒருதன்மையராய்வாழ்வார், எ-று. ❊ ஊறு - சுவை- ஒளி-நாற்றம்- ஓசை-எனப்புலன்கள்ஐந்தாகலின் அவற்றிலேசெல்லுகிற ஆசையும் ஐந்தாயிற்று. ஐந்தவித்தானது ஒழுக்கவழிஅவனாற்சொல்லப்பட்ட வேதமார்க்கம். [ இவைநான்கு பாட்டாலும்-கடவுளை நினைத்தோரும், வாழ்த்தினோரும், அவன்வழிநின்றோரும், மோக்ஷத்தைப் பெறுவரென்பது சொல்லப்பட்டது.௬

தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான் ❊
மனக்கவலைமாற்றலரிது. - - - - - ௭.

இ-ள். தனக்கு—உவமையில்லாதான்- (ஒருவிதத்தினாலும்) நிகரில்லாதவனது—தாள் - அடிகளை—சேர்ந்தார்க் கல்லால்- சேர்ந்தவர்க்கல்லது—மனக்கவலை - நெஞ்சிலே தோன்றுகின்ற துன்பங்களை—மாற்றல் - நீக்குதல்|—அரிது - உண்டாகாது.

எ-று. ❊ இங்கே அரிது இல்லையென்னும் பொருளில் வந்தது. அடிகளைச் சேராதவர் பிறவிக்கு ஏதுவாகிய காமவெகுளி மயக்கங்களை நீக்கமாட்டாமையினாலே பிறந்தும் இறந்தும் அவற்றால் வருகிற துன்பங்களுள் அழுந்துவாரென்பதாம். (எ)

அறவாழியந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற் ❊
பிறவாழி நீந்த லரிது. - - - அ.

இ-ள். அறவாழியந்தணன் - தருமக்கடலாகிய கடவுளது — தாள் - அடியாகிய (மரக்கலத்தை) — சேர்ந்தார்க்கல்லால் - சேர்ந்தவர்க்கல்லாமல் — பிறவாழி - (அதனின்) வேறாகிய கடல்களை — நீந்தல் - கடத்தல் | — அரிது - கூடாது. எ-று. ❊ அறம்பொருளின்பமெனவுடனெண்ணப்பட்ட மூன்றுள் அறத்தைமுன் பிரித்ததனால் மற்றைப்பொருளும் இன்பமும் பிற வெனப்பட்டன. பல்வேறுவகைப்பட்ட அறங்களெல்லாம் கடவுளுக்குவடிவாகலின் அறவாழியந்தணனென்றார். அம்மரக்கலத்தைச்சேராதவர்கரைகாணாது அவற்றுள்ளே அழுந்துவாராகலின் நீந்தலரிதென்றார். தாட்புணையென்னாமையாலேகதேசவுருவகம். (அ)

கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை. - - கூ.

இ-ள். கோளில் - (தத்தமக்கேற்றபுலன்களைக்) கொள்ளுதலில்லாத — பொறியின் - பொறிகள்போல் — எண்குணத்தான் - எண்வகைப்பட்ட குணங்களை யுடையவனது — தாளை - அடிகளை — வணங்காத்தலை - தொழாத தலைகள் | — குணமிலவே - பயன்படுதலுடையனவல்லவேயாம். எ-று. ❊ எண்குணங்களாவன - தன்வயத்தனாதல் - தூயவுடம்பினனாதல் - இயற்கையுணர்வினனாதல் - முற்றுமுணர்தல் - இயல்பாகவேபாசங்களினீங்குதல் - பேரருளுடைமை - முடிவிலாற்றலுடைமை - வரம்பிலின்பமுடைமை-என்பனவாம். இவைசைவாகமத்திற்சொல்லப்பட்டன. காணாதகண்முதலானவைபோல் வணங்காததலைகள்பயனிலவெனத்தலை மேல்வைத்துச்சொல்லினும் இனம்பற்றி வாழ்த்தாதநாக்களும் அப்படியே பயனிலவாமென்பதுங் கொள்க. [இவைமூன்றுபாட்டாலும் அவனை நினைத்தலும் வாழ்த்தலும் வணங்கலும் செய்யாவிடத்தே உண்டாகிற குற்றம் சொல்லப்பட்டது. (கூ)

௧-ம் அதி-கடவுள்வாழ்த்து.

பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா ✻
ரிறைவ னடிசேரா தார். - - ௰.

இ-ள். இறைவன்-தலைவனது—அடி - பாதமாகிய (மரக்கலத்தை)—(சேர்ந்தவர்|)—பிறவிப்பெருங்கடல் - பிறவியாகிய பெரியகடலை}—நீந்துவர்-கடப்பார்.—சேராதார்- (அதனைச்) சேராதவர்|—நீந்தார்-கடக்கமாட்டார். எ-று. ✻ சேர்ந்தவரொன்பது வருவிக்கப்படுதலாற் சொல்லெச்சம். பிறவி ஒன்றுக்கொன்றுகாரணகாரியசம்பந்தப்பட்டுக் கரையில்லாமல் வருதலால்-பிறவிப்பெருங்கட லென்றார். [கடவுளடிகளையே நினைப்பவர்க்குப்பிறவி நீங்குதலும், உலகியல்பை நினைப்பவர்க்கு அது நீங்காமையுமாகியவிரண்டும் இதனால்நியமிக்கப் பட்டன.] ௰

✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻

உ-ஆம்-அதி—வான்சிறப்பு,

அஃதாவது கடவுளது ஆணையால் உலகமும், அதற்கு உறுதியாகிய அறம்பொருளின்பங்களும், நடத்தற்கு ஏதுவாகியமழையினது சிறப்பைச்சொல்லுதலாம். —அதிகார முறைமையும் இதனால்விளங்கும்.

வானின் றுலகம் வழங்கி வருதலாற் ✻
றானமிழ்தமென் றுணரற்பாற்று. ௧.

இ-ள். வான்-மழையானது—நின்று-(நடுவேநீங்காது)நிற்க—உலகம் - உயிர்களானவை—வழங்கிவருதலான் - நிலைபெற்றுவருகையினாலே—தான்-(அம்மழை)தான்|—+அமிழ்தமென்று- (உயிர்களுக்கு) அமிர்தமென்று—உணரற்பாற்று- அறியப்படுந்தன்மையையுடைத்தாம். எ-று. ✻ நிற்கவென்பது நின்றெனத்திரிந்தது. உயிர்கள்நிலை பெற்றுவருதலாவது - பிறப்பு நடுவேநீங்காமையால் - அவைஎந்நாளும் உடம்போடு காணப்பட்டுவருதல். அமிர்தமுண்டார் சாவாது நிலைபெறுதலின் உயிர்களை நிலைபெறச்செய்கிறமழையை அமிழ்தமென்றார். (௧)

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை. - - ௨

இ-ள். துப்பார்க்கு - உண்பவர்க்கு—துப்பாய - தன்மையா

+ அமிழ்தமென்பதற்கு மரணத்தை [illegible] அது அமிர்தமென்னும் வடமொழித்திரிபு.

இய — துப்பாக்கி - உணவுகளையுண்டாக்கி — துப்பாக்கு - (அவ்வுணவுகளை)உண்பவருக்கு— துப்பாயதூஉம் -( தானும்) உணவாய்நிற்பதும்—மழை|. எ-று ※ தானும் உணவாதலாவது - தண்ணீராயுண்ணப்படுதல். — சிறப்புடைய மனிதர்மேல்வைத்துச் சொல்லுதலால் மற்றையுயிர்களுக்கும் இஃது ஒக்கும் —இப்படி உயிர்களது பசிதாகங்களை நீக்குதலால் அவ்வுயிர்கள் வழங்கி வருதலும உடையவாயின வென்பதாம். (௨)

விண்ணின்றுபொய்ப்பின் விரிநீர் வியனுலகத் - - ※
துண்ணின் றுடற்றும் பசி - - - - - ௩.

இ-ள். விண் - மழையானது — நின்று- (பெய்யவேண்டுங் காலத்தில்) பெய்யாமல் — பொய்ப்பின்-பொய்க்குமாயின்— விரிநீர்-கடலாலேசூழப்பட்ட—வியனுலகத்துள் - பரந்தவுலகத்தினுள்—பசி|— நின்று - நிலைபெற்று—உடற்றும்- (உயிர்களை) வருத்தும். எ-று ※கடலுடைத்தாயினும் அதனாலே பயனில்லையென்றற்கு விரிநீர் வியனுலகத் தென்றார். —உணவில்லாமையினாலே பசியால் உயிர்கள் இறக்குமென்பதாம் (௩)

ஏரினுழா அருழவர்புயலென்னும் - - - - ※
வாரிவளங்குன் றிக்கால் - - - - - ௪

இ-ள். உழவர்|—ஏரின் - ஏரினால்—உழார் — புயலென்னும்வாரி-மழையென்கிறவருவாய்—வளங்குன்றிக்கால் - (தன்) பயன்குறையின் எ-று ※ குன்றியக்காலென்பது - குறைந்து நின்றது.—உணவில்லாமைக்குக் காரணஞ் சொல்லியபடி. (௪)

கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே※
யெடுப்பதூஉ மெல்லா மழை - - - ௫.

இ-ள். கெடுப்பதூஉம் - பூமியினிடத்து வாழ்வாரைப்பெய்யாதுநின்று)கெடுப்பதும்—கெட்டார்க்கு - (அவ்வாறு) கெட்டவர்க்கு—சார்வாய் - துணையாய்ப் (பெய்து) —மற்றாங்கே- முன்கெடுத்ததுபோல் — எடுப்பதூஉம் - எடுப்பதும் — எல்லாம் - (இவை) யெல்லாம்(வல்லது|)—மழை. எ-று ※ மற்று- வினைமாற்றில் வந்தது. கேடும்பெருக்கமும் பெறுதற்குரியவர் மனிதராதலால் - கெட்டார்க்கென்றார்.— எல்லாமென்றது- அம்மனிதர் முயற்சி வேறுபாடுகளால் கெடுத்தலெடுத்தல்கள் பலவாகுதலைநோக்கி — வல்லதென்பது- + அவாய்நிலையால் வந்தது.—மழையினது வல்லமையைச் சொல்லியபடி. (௫)

+ அவாய்நிலை ஒருசொல்மற்றொருசொல்லைக்கொள்ளுதற்கு அவாவிநிற்றல்.

விசும்பிற்றுளிவீழினல்லான்மற்றாங்கே ✻
பசும்புற்றலைகாண்பரிது. - - - - சா

இ-ள். விசும்பின் - மேகத்தினின்றும்—துளி - துளிகள்—வீழினல்லால் - விழிற்காண்பதல்லது—மற்றாங்கே - வீழாதாயின் அப்பொழுதே — பசும்புற்றலை-பசம்புல்லினது தலையையும்—காண்பு - காணுதல்|—அரிது. எ-று. ❊ விசும்பு - ஆகுபெயர்.—மற்று - வீழாதாயினென்னும் வினைமாற்றில் வந்தது.—தலையுமென்னும இழிவுசிறப்பும்மை - விகாரத்தால் தொக்கது.—ஓரறிவுயிருமில்லாமற் போமென்பதாம். (சா)

நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி ✻
தானல்கா தாகிவிடின். - - - - - எ

இ-ள். நெடுங்கடலும் - நெடியகடலும்|— தன்னீர்மைகுன்றும் - தன்னியல்புகுறையும் — எழிலிதான் - மேகந்தான் — தடிந்து - (அதனைக்)குறைத்து— நல்காதாகிவிடின் - (அதனிடத்துப்) பெய்யாதாகிவிடின். எ-று. ❊ உம்மை - உயர்வுசிறப்பு. தன்னியல்பு குறைதலாவது - நீர்வாழுமுயிர்கள் பிறவாமையும், மணிமுதலானவை உண்டாகாமையும, ஆம்.—இங்கேகுறைத்தலென்றது - முகத்தலை.— மழைக்குமுதலாகிய கடலுக்கும் - மழைவேண்டுமென்பதாம். [இவை எழு பாட்டாலும் உலகம் நடத்தற்கு மழை எதுவாதல் சொல்லப்பட்டது] (எ)

சிறப்பொடு பூசனை செல்லாது வானம் - - ✻
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு. - - - அ

இ-ள். வானோர்க்கும் - தேவர்களுக்கும்—ஈண்டு - இவ்வுலகத்திலே—சிறப்பொடு - (மக்களாலே செய்யப்படுகிற) திருவிழாவுடனே—பூசனை - பூசையானது|—செல்லாது - நடவாது.—வானம்வறக்குமேல் - மழைபெய்யாதாயின். எ-று. ❊ உம்மை - உயர்வுசிறப்பு. —விழாவோடு கூடிய பூசையெனலால் - செல்லாதென்று ஒருமையாகச் சொன்னார்.— பூசையிலேதாழ்வு தீரச்செயப்படுவது விழாவாதலின் இதனை முன்வைத்தார்.

தானந்தவமிரண்டுந் தங்காவியனுலகம் - - ✻
வானம்வழங்கா தெனின். - - - - கூ

இ-ள் வியனுலகம் - விரிந்தவுலகத்திலே— தானந்தவமிரண்டும்|—தங்கா - உளவாகாவாம்.— வானம் - மழை—வழங்காதெனின் - பெய்யாதாயின் எ-று. ❊ தானமாவது - தருமவழியால்வந்தபொருள்களைப் பெரியோர்க்கு மகிழ்ச்சியோடு கொடுப்பது.

தவமாவது மனம் பொறிவழிபோகாமல் நிற்கும் பொருட்டு விரதங்களால் உண்டிசுருக்கல்முதலானவை. மிகுதிபெற்றி -தானம்இல்லறத்தின்மேலும், தவம்- துறவறத்தின்மேலும், நின்றன. (௯)

நீரின்றமையா துலகெனின்யார்யார்க்கும் *
வானின்றமையா தொழுக்கு..... .... .....௰

இ- ள். யார்யார்க்கும் - எவ்வகைமேம்பாட் டோர்க்கும்—நீர் - நீரை—இன்று - இல்லாமல்—உலகு-உலகியலானது—அமையாதெனின் - பொருந்தாதாயின் —ஒழுக்கு-( அந்நீரின துநடுவேநீங்காத ) வொழுக்கமும்|— வான்-மழையை—இன்று- இல்லாமல்—அமையாது - பொருந்தாது.எ-று. ❀ இம்மையிலே அனுபவிக்கப்படுவன வாதலிற் பொருளின்பங்களை யுலகியலென்றார். நடுவேநீங்காத வொழுக்கமாவது - எக்காலங்களிலும், எவ்விடங்களிலும், நீருண்டா யிருத்தல். நீரினாலே பொருளின்பங்கள் பொருந்துதல்போல் - மழையினாலே அந்நீரொழுக்கம் பொருந்துதல்எல்லாராலும் தெளியப்படுமென்பதைக்காட்டுதற்குநீரின் றமையா துலகெனி னென்றார். [இவை மூன்றுபாட்டாலும் அறம்பொருளின்பங்கள் நடத்தற்கு மழை ஏதுவாதல் சொல்லப்பட்டது.] (௰)

❀**************************❀

௩-ஆம், அதி.—நீத்தார்பெருமை.

அஃதாவது முற்றத்துறந்த முனிவரது பெருமையைச் சொல்லுதலாம். அவ்வறமுதலாகிய பொருள்களை உலகத்துக்கு உள்ளவாறு அறிவிப்பவர் அவராதலால் இது வான்சிறப்பின் பின் வைக்கப்பட்டது.

ஒழுக்கத்து நீத்தார்பெருமை விழுப்பத்து *
வேண்டும்பனுவற்றுணிவு..... ......... ......க

இ- ள். பனுவல் - நூல்களது — துணிவு-நிச்சயமானது|—ஒழுக்கத்து - (தமக்குரிய) வொழுக்கத்திலேநின்று—நீத்தார்-துறந்தவரது —பெருமை - மகிமையை—விழுப்பத்து-மேலானபலபொருள்களுள்ளும் —வேண்டும் - ( இதுவேமேலானதென்று )விரும்பும்.எ-று. ❀ தமக்குரிய வொழுக்கத்திலே நின்

றுதுறத்தலாவது - தங்கள்தங்கள் வருணாசிரமங்களுக்கு உரிய ஒழுக்கங்கள் தப்பாமல் நடக்கப்புண்ணியம் வளரும், அது வளரப் பாபம் தேயும், அதுதேய அறியாமைநீங்கும், அது நீங்க இது நித்தியம் இது அநித்தியம் என்கிறபகுத்தறிவும்- நிலையில்லாத இம்மைமறுமை யின்பங்களில் வெறுப்பும்- பிறவித் துன்பங்களும்- தோன்றும், அவைதோன்ற மோக்ஷத்தில் ஆசை உண்டாம். அது உண்டாகப் பிறவிக்குக் காரணமாகிய வீண்முயற்சிகளெல்லாம் நீங்கி மோக்ஷத்துக்குக் காரணமாகிய யோகமுயற்சி உண்டாம், அது உண்டாகத் தத்துவஞானம் பிறந்து எனதென்பதாகிய மமகாரமும்-தானென்பதாகிய அகங்காரமும்-விடும், ஆதலின் இவ்விரண்டு பற்றுகளையும் இம்முறையே வெறுத்து விடுதலாம். நூல்செய்தவரது துணிவு நூலின்மேல் ஏற்றப்பட்டது. (௧)

**து**றந்தார் பெருமை துணைக்கூறின் வையத் *
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று ....௨.

இ-ள். துறந்தார்- (அகங்காரமமகாரங்களை)விட்டவரது— பெருமை - மகிமையை — துணைக்கூறின் - எண்ணிக்கையிலேவைசொல்லிஅறியப்புகுந்தால் — (அளவுபடாமையால்) — வையத்து - இவ்வுலகத்திலே — இறந்தாரை - (பிறந்) திறந்தவனை — எண்ணிக்கொண்டற்று - எண்ணி (யித்தனைபேர்களென்று அறியப்புகுந்தாற்போலும். எ- று. ❋ முடியாதென்பதாம், கொண்டாலென்பது கொண்டெனத்திரிந்து நின்றது. (௨)

**இ**ருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார் *
பெருமை பிறங்கிற் றுலகு................ ....௩.

இ-ள். இருமை- (பிறப்புவீடென்று) யிரண்டனது — வகை - (துன்பவின்பக்) கூறுபாடுகளை — தெரிந்து - ஆராய்ந்து — (அப்பிறப்பைநீக்குதற்கு) — ஈண்டு - இப்பிறப்பிலே — அறம் - துறவறத்தை — பூண்டார் - கொண்டவரது — பெருமை - மகிமையே — உலகு - உலகத்தில் — பிறங்கிற்று - உயர்ந்தது. எ- று. ❋ பெருமையே யென்பதினேகாரம்விகாரத்தால் தொக்கது. அது உலகமுழுதாண்டவரசர் முதலானவருடைய பெருமையைப் பிரித்தலாற் பிரிநிலையேகாரம். [ இவை மூன்றுபாட்டாலும் துறந்தவரது பெருமையே எல்லாப் பெருமைகளினும் உயர்ந்ததென்பது சொல்லப்பட்டது.] (௩)

**உ**ரனென்னுந் தோட்டியா னோரைந்துங்காப்பான் *
வரனென்னும்வைப்புக்கோர்வித்து ............ .....௪

இ-ள். உரனென்னுந்தோட்டியான் - அறிவென்னுமங்குசத்தினாலே—ஓரைந்தும் - (பொறிகளாகிய யானைக)ளைந்தையும்— காப்பான் -(தன்தன்புலன்களின்மேல் செல்லாமற்) காப்பவன்|— வரனென்னும்வைப்புக்கு - (எல்லா நிலங்களினும்) மேலானதென்றுசொல்லப்படுகிறமோக்ஷ நிலத்துக்கு — ஓர்வித்து - ஒருவித்தாவான். எ-று. * அந்நிலத்திலே போய் முளைத்தலின் வித்தென்றார். இங்கே பிறந்தும் இறந்தும் வருகிறமனிதனல்லனென்பதாம். [ஏகதேசவுருவகவணி] (௪)

**ஐ**ந்தவித்தா னாற்றலகல்விசும்பு ளார்கோமா*
னிந்திரனே சாலுங் கரி .......... ..........௫.

இ-ள் ஐந்தவித்தான் - (புலன்களிற்செல்லுகின்ற) ஐந்தாசைகளையுமொழித்தவனது— ஆற்றல் - வல்லமைக்கு— அகல்விசும்பளார் - அகன்றபொன்னுலகத்துள்ள தேவர்க்கு—கோமான் - தலைவனாகிய—இந்திரனே - தேவேந்திரனே|— சாலுங்கரி - போதுமானசாக்ஷியாம். எ-று. * ஐந்தாசைகளையும் நீக்காமல் சாபத்தைஅடைந்து நின்று அவ்வாசைகளை நீக்கினவனாகிய கௌதமமுனிவனது வல்லமையைத் தெரிவித்தானாதலின் இந்திரனே சாலுங்கரியென்றார். (௫)

**செ**யற்கரியசெய்வார் பெரியர் சிறியர் .... *
செயற்கரிய செய்கலா தார்...... .... ௬.

இ-ள் (ஒத்தபிறப்பினராகியமனிதர்களிலே) — பெரியர் - பெரியோர்|— செயற்கரிய - செய்தற்கரியவைகளை}— செய்வார் — சிறியர் - சிறியோர்|— செயற்கரிய - அச்செய்தற்கரியவைகளை—செய்கலாதார் - செய்யமாட்டாதார் எ- று * எனவே - பெரியோர் செய்தற்கெளியவைகளைச் செய்யாரென்பதும், சிறியோர்அவைகளைச் செய்வாரென்பதும், தோன்றுதல் அறிக. செய்தற்கெளியவை - மனத்தை வேண்டியபடியே போகவிடுதல் - ஆசைகொள்ளுதல் - கோபித்தல் - இவைமுதலானவையாம். செய்தற்கரியவை - இயமம் - நியமம் - இவைமுதலான எண்வகையோகாங்கங்களாம். (௬)

சுவையொளி யூறோசை நாற்றமென்றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு ........ ........௭

இ-ள்.உலகு - உலகமானது|—சுவையொளியூறோசைநாற்றம்- சுவையும்ஒளியும்ஊறும்ஓசையும் நாற்றமும்—என்று-என்றுசொல்லப்பட்ட — ஐந்தின்- பஞ்சதன்மாத்திரைகளது—வகை- கூறுபாட்டை — தெரிவான்கட்டே- ஆராய்பவனறிவினிடத்ததே.எ-று ❁ சுவை-ரசமும்,ஒளி - ரூபமும்,ஊறு-ஸ்பரிசமும், ஆம் —ஐந்தின்வகையாவன - அவைஐந்தும்,அவற்றிலேதோன்றிய பூதங்களைந்தும், அவற்றின்கூறாகிய ஞானேந்திரியங்களைந்தும், கன்மேந்திரியங்களைந்தும், ஆக இருபதாம். வகைதெரிவானென்றதனால் தெரிகின்றபுருடனும், அவன்தெரிதற்குக்காரணமாகிய- மான்-அகங்காரம் - மனம்-எனப்பட்டவையும், அவற்றுக்குமுதலாகிய மூலப்பகுதியும்,கொள்ளப்படும் இவ்விருபத்தைந்து தத்துவக்கூட்டமல்லது உலகென வேறில்லையென்று உலகினது இருப்பைஅறிதலால் அறிவினிடத்ததாயிற்று.பூதமைந்து-நிலம்-நீர்-தீ-காற்று - வான். ஞானேந்திரியமைந்து - மெய்-வாய்-கண்-மூக்கு - செவி.கன்மேந்திரியமைந்து - வாக்கு - பாதம்-பாணி- பாயு-உபஸ்தம். மூலப்பகுதி - மாயை. [இவைநான்குபாட்டாலும்பெருமைக்குக் காரணங்கள் - ஐம்பொறியடக்கலும், யோகப்பயிற்சியும், தத்துவஞானமும்-ஆமென்பது சொல்லப்பட்டது. (௭)

நிறைமொழி மாந்தர் பெருமைநிலத்து
மறைமொழிகாட்டிவிடும்..... .... .....௮.

இ-ள். நிறைமொழி- (பய)னிறைந்தசொல்லை யுடைய—மாந்தர்-முனிவரது—பெருமை - மகிமையை}—நிலத்து-நிலவுலகத்தில்—மறைமொழி- (அவராணையாகச்சொல்லிய) மந்திரங்களே|—காட்டிவிடும்-( பிரத்தியக்ஷமாகக் )காட்டிவிடும் எ-று. ❁ பயனிறைந்தமொழியாவது அவர் அருளினாலே சொன்னாலும், கோபத்தினாலே சொன்னாலும் அதனதன்பிரயோசனத்தைக் கொடுத்தே விடுகிற சொல். காட்டுதல்- பிரயோசனப்பட்டு அம்மகிமையைஅறிவித்தல். (௮)

குணமென்னுங் குன்றேறிநின்றார் வெகுளி ❁
கணமேயுங் காத்த லரிது. .... .... .... ௯.

இ-ள். குணமென்னுங்குன்று - (துறவுமெய்யறிவு ஆசையி

ல்லாமைமுதலான) நற்குணங்களாகிய மலையின்மேல் — ஏறிநி ன்றார் - ஏறிநின்றமுனிவரது — வெகுளி - கோபமானது — கணமேயும் - (தானுள்ளவளவு) க்ஷணகாலமேயாயினும் — காத்தல் — (கோபிக்கப்பட்டவராலே) தடுத்தல் | — அரிது - அரிதாம். எ-று. ❁ அசையாமையும் பெருமையும் பற்றிக் கு ணங்களை மலையாக உருவகம் செய்தார். அனாதியான பழக்க த்தினாலே ஒரோவிடத்துக் கோபம்தோன்றிய போதே அத னை மெய்யுணர்வு அழிக்கும் ஆகலால் கணமேயென்றும் நிறைமொழி மாந்தராகலால் காத்தலரிதென்றும் சொல்லினார். [இவை இரண்டுபாட்டாலும் அவராணைசொல்லப் பட்டது]கூ

அந்தண ரென்போ ரறவோர்மற்றெவ்வுயிர்க்குஞ் ❋
செந்தண்மை பூண்டொழுக லான். ..... ....ம.

இ-ள். எவ்வுயிர்க்கும் - எல்லா வுயிர்களின்மேலும் — செந் தண்மை-செவ்வையானவருளை — பூண்டு - விரதமாகக்கொண் டு — ஒழுகலான் - நடக்கையினாலே — அந்தணரென்போர் - அந்தணரென்று சொல்லப்படுவோர் | — அறவோர் - துறவற த்தினின்றவர். எ-று. ❁ மற்று-அசைநிலை. அந்தணரென்பது அழகிய தண்மையை யுடையவரென்னுங் காரணப்பெயராக லின் அவ்வருளுடையார்க்கல்லது மற்றவர்க்காகா தென்பது கருத்து. [அப்படி ஆணையுடையவராயினும் உயிர்களிடத்தே அருளுடையரென்பது இதனாற் சொல்லப்பட்டது.] (ம)

சு-ஆம், அதி — அறன்வலியுறுத்தல்.

அஃதாவது அம்முனிவரால் அறிவிக்கப்பட்டமூன்றுள் அற மானது மற்றைப் பொருளின்பங்கள் போலாகாமல் இம்மை மறுமைவீடு என்கிறமூன்றையும் தருதலால் அவற்றினும் உறு தியுடைத்தென்பதுசொல்லுதலாம் — அதிகார முறைமையும் இதனாலே விளங்கும்.

சிறப்பீனுஞ்செல்வமுமீனுமறத்தினூஉங் ❋
காக்கமெவனோவுயிர்க்கு .... .... .... .....க

இ-ள். சிறப்பு - மோக்ஷத்தையும் } — ஈனும் - கொடுக்கும். —

செல்வமும் - ( சுவர்க்கமுதலாகிய )செல்வத்தையும்} —ஈனும் - கொடுக்கும்.— ( ஆதலால் ) — உயிர்க்கு - ( மனித)ருயிர்க்கு —அறத்தினூங்கு - தருமத்தின்மேற்பட்ட — ஆக்கம் - பெருக்கத்தைத்தருவது| — எவன் -யாது. எ - று ❄ ஒ - அசைநிலை - எல்லாப்பேறுகளினும் சிறந்ததாகலின் மோக்ஷத்தைச் சிறப்பென்றார், ஆக்கம் - மேன்மேலுயர்தல் [ இதனால்அறத்தினும் அதிகமாகிய உறுதி இல்லையென்பதுசொல்லப் பட்டது. (௧)

அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை .... *
மறத்தலி னூங்கில்லை கேடு.... ..... .... ௨.

இ-ள் (ஒருவனுக்கு)—அறத்தினூங்கு - தருமஞ் (செய்தலின்)மேற்பட்ட — ஆக்கமும் - பெருக்கத்தைத் (தருவதும்|) — இல்லை. — அதனை - அத்தருமத்தை — மறத்தலினூங்கு - ( மயக்கத்தால் ) மறந்துவிடுதலின்மேற் பட்ட—கேடு- கேட்டைத்( தருவதும்)—இல்லை. எ - று ❄ அறத்தினூங்காக்கமுமில்லையெனமுன்சொல்லப்பட்டதையே†அனுவதித்தார் - அதனாலே கேடுவருதலைச் சொல்லுதலாகிய பயனோக்கி [இதனால் அதுசெய்யாதபோது கேடுவருதல் சொல்லப்பட்டது ] (௨)

ஒல்லும்வகையாலறவினை யோவாதே..... .....*
செல்லும்வாயெல்லாஞ்செயல் ... .... .... ௩.

இ-ள் ஒல்லும்வகையால்-(தமக்குத்தமக்குக்கூடும்) வகையால்—அறவினை - தருமமாகிய நல்வினையை — ஓவாதே-இடைவிடாமல் — செல்லும்வாயெல்லாம்- (அது)செல்லுமிடங்களிலெல்லாம் — செயல்- செய்யக்கடவர்.எ-று. ❄ கூடும் வகையாவது - இல்லறம் பொருளளவுக்கு ஏற்கவும்,துறவறம் சரீரநிலைக்கு ஏற்கவும், செய்தலாம். செல்லுமிடங்களாவன- மனமும், வாக்கும், காயமும், ஆம். அவற்றினாலே செய்யப்படுகிற அறங்களாவன- நற்சிந்தையும், நற்சொல்லும் நற்செயலும், ஆம் [இதனால்அறஞ்செய்யுமாறு சொல்லப்பட்டது௩,

மனத்துக்கண் மாசில னாதலனைத்தற *
னாகுல நீர பிற..... ........ .... .......... .....௪.

இ-ள்.(அப்படியறஞ்செய்பவன்!) — (தனது)நெஞ்சினிட

† அனுவாதமாவது முன்சொல்லப்பட்டதையேமற்றொன்றைவிதித்தற்பொருட்டுப்பின்னுஞ்சொல்லுதல.

த்து — மாசிலனாதல் - குற்றமில்லாதவனாகக்கடவன், — அறன் - தருமமாவது! — அனைத்து - அவ்வளவே. — பிற - அது ஒழிந்தசொல்லும்வேடமும் | — ஆகுலநீர - (அறமெனப்படுவனவல்ல) - ஆரவாரகுணத்தையுடையனவாம்.எ-று. ❁ குற்றம் - தீயவை நினைத்தல். பிறர் அறியவேண்டிச் செயப்படுதலால் ஆகுலநீரபிறவென்றார்.மனதிலே குற்றமுடையவனாகிய போது அதன்வழிப்பட்ட வாக்கினாலும் காயத்தினாலும் செயப்படுகிற அறங்களிலே பயன் இல்லையென்பதும் பெறப்பட்டது. (௪)

அழுக்காறவாவெகுளியின்னாச்சொன்னான்கு*
மிழுக்கா வியன்ற தறம்.... ..... ......,(௫)

இ-ள். அழுக்காறு - (பிறருயர்ச்சி)பொறாமையும் — அவா - (ஐம்புல) வாசையும் — வெகுளி - (அவைகாரணமாகப் பிறர் மேல்உண்டாகிற) கோபமும் — இன்னாச்சொல் (அதுபற்றி வருகிற )கடுஞ்சொல்லும் — நான்கும் ஆகியவிந்நான்கினையும் — இழுக்கா - கடிந்து — இயன்றது - (ஒழிவில்லாமல்) நடந்தது | — அறம் - அறமாவது.எ-று. ❁ இதனால் இந்நான்கோடு கலந்து நடந்தது அறமெனப்படாதென்பதுங்கொள்க. [இவை இரண்டுபாட்டாலும் அறத்தினியல்புசொல்லப்பட்டது. (௫)

அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது*
பொன்றுங்காற் பொன்றாத் துணை,.....௬.

இ-ள். (நாம்இப்போதுஇளையேமாகலின்) — அன்று - இறக்குநாளில் — அறிவாமென்னாது - செய்வோமென்று நினையாமல் — அறம் - தருமத்தை} — செய்க - (தினந்தோறுஞ்)செய்யக்கடவர். — அது - அப்படிச்செய்யப்பட்டதருமமானது | — பொன்றுங்கால் - உடபினின்றுமுயிர் போங்காலத்து — பொன்றாத்துணை - (அவ்வுயிர்க்கு) அழியாததுணையாம், எ-று. ❁ மற்று - அசைநிலை.செய்தவுடம் பழியவும்உயிரோடுகூடி மற்றையுடம்பிலும்செல்லுதலால் அழியாததுணையாயிற்று. [ இதனால் அப்படிப்பட்ட தருமத்தை நிலையில்லாத வுடம்பு இருக்கிறபோதே செய்கவென்பதுசொல்லப்பட்டது.] (௬)

அறத்தா றிதுவென [ வேண்டா சிவிகை .....*
பொறுத்தானோ டூர்ந்தானிடை .... .....எ.

இ-ள். அறத்தாறு - தருமத்தின்பயன் — இதுவென - இது

வென்று (ஆகமவளவையால்) அறிவிக்க—வேண்டா • வேண்டுவதில்லை—சிவிகை • தண்டிகையை — பொறுத்தானோடு - சுமப்பவனோடு — ஊர்ந்தானிடை - செலுத்துவோனிடத்துக்(காட்சியளவையினாலேயே அறியப்படும்.) எ-று. ❋ எனவென்றதனால் சொல்லளவையாகிய ஆகமபிரமாணமும், பொறுத்தானோடூர்ந்தா னிடையென்றதனால் - காட்சியளவையாகிய. பிரத்தியக்ஷபிரமாணமும், கொள்ளப்பட்டன. அறியப்படுமென்பதுகுறைந்து நின்றதனால்-சொல்லெச்சம். [இதனால் அறியாததுணையாதல் தெளிவிக்கப்பட்டது.] (எ)

வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன் ❋
வாழ்நாள் வழியடைக்குங் கல்................ அ

இ-ள். ஒருவன்—வீழ்நாள்- (செய்யாமற்) கழியுநாள் — படாமை - உண்டாகாமல்—நன்று - தருமத்தை— ஆற்றின்- செய்வானாயின் —அஃது - அச்செய்கையானது| —வாழ்நாள்- (அவன்சரீரத்தோடுகூடி) வாழுநாளது—வழி - (வரு)வழியை —அடைக்குங்கல் - (வாராம)லடைக்குங்கல்லாம். எ-று. ❋ அஞ்ஞானம் • அகங்காரம்- அவா-விருப்பு - வெறுப்பு - என்கிற - ஐவகைக்குற்றங்களால் வருகிற - நல்வினை - தீவினை - என்கிற இருவகைவினைகளும் உள்ளவரைக்கும் உயிர் உடம்போடு கூடிநின்று அவற்றின் பயன்களாகிய சுகதுக்கங்களை அனுபவிக்கும் ஆதலால் அக்காலமுழுதும் வாழ்நாளெனப்பட்டது.] (அ)

அறத்தான் வருவதே யின்பமற்றெல்லாம் ❋
புறத்தபுகழுமில. ........................ கூ

இ-ள் அறத்தான் - இல்லறத்தோடுபொருந்தி— வருவதே- வருமின்பமே| —இன்பம் - இன்பமாகும் —மற்றெல்லாம்- அதனோடுபொருந்தாதுவருவனவெல்லாம்| — (இன்பமாயினும்)—புறத்த- துன்பத்துட்சேர்வனவாம் — (அதுவுமல்லாமல்)—புகழும் - புகழையும்}—இல - உடையனவல்ல. எ-று. ❋ இன்பம்-காமத்தினனுபவம். இன்பத்திற் புறமெனவே துன்பமாயிற்று. பாவத்தால் வரும்பிறனில் விழைவுமுதலானவை அப்போது இன்பமாய்த்தோன்றுமாயினும் பின்பு துன்பமாய் விளைதலாற் புறத்தவென்றார். புகழுமிலவெனவே - அறத்தோடு வருவதாகியவின்பம் புகழுமுடைத்தாமென்பது பெறும்.[இதனால் அறஞ்செய்வார்க்கே இம்மையின்பமும், புகழு

ம், பெறுவாரென்பது சொல்லப்பட்டது.] (கூ)

செயற்பால தோரு மறனே யொருவற்கு *
உயற்பால தோரும் பழி. ........ .... ம.

இ-ள். ஒருவற்கு - ஒருவனுக்கு — செயற்பாலது - செய்தற்றன்மையது | — அறனே - நல்வினையே — உயற்பாலது - ஒழிதற்றன்மையது | — பழி(யே) - தீவினையே. எ-று. ❋ தேற்றேகாரம் பின்னுங் கூட்டப்பட்டது. ஒரும் இரண்டும் - அசைநிலைகள். பழிக்கப்படுவதாகிய தீவினையைப் பழியென்றார். இதனாற் செய்வதும், ஒழிவதும், நியமிக்கப்பட்டன.] (ம)

பாயிர முற்றிற்று.

# இல்லறம்

இல்லறமாவது - இல்வாழ்க்கை நிலைக்குச் சொல்லப்படுகிற வழியிலே நின்று அதற்குத் துணையாகிய கற்புடைய மனைவியோடு கூடிச் செயப்படுவதாம். ஆதலின் அதனை முதலிலே சொல்லத்தொடங்கினார்.

## ரு-ஆம், அதி. — இல்வாழ்க்கை.

அஃதாவது மனையாளோடு கூடிவாழ்தலினது சிறப்பாம். இல்வாழ்க்கைநிலையானது அறஞ்செய்தற்குரிய இருவகைநிலைகளுள்ளே முதலாதலின் இது அறன்வலியுறுத்தலின் பின் வைக்கப்பட்டது.

இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு ❋
நல்லாற்றி னின்ற துணை. ......... ... .... ..... ...க.

இ-ள். இல்வாழ்வானென்பான் - இல்லறத்தோடு கூடிவாழ்பவனென்று சொல்லப்படுவோன் | — இயல்புடைய - (துறவறத்) தன்மையையுடைய — மூவர்க்கும் - (மற்றை) மூவர்க்கும் — நல்லாற்றில் - (அவரது) நல் (லொழுக்க) வழிகளில் — நின்ற - நிலைபெற்ற — துணை - துணையாவான். எ-று. ❋ இல்லென்பது அதனறத்தை உணர்த்தலால் ஆகுபெயர். மற்றைமூவராவார் - ஆசாரியனிடத்தே ஓதுகின்றவனும் விரதங்காக்கின்றவனும் ஆகியபிரமசாரியும், காட்டினிடத்தேபோய் மனைவி

யோடு தவஞ்செய்கிறவனாகிய வானப்பிரஸ்தனும், எல்லாப் பற்றுகளையும் விட்டவனாகிய சன்னியாசியும், என்றறிக. இல்வாழ்வான் - பசி - நோய் - குளிர் - முதலானவற்றால் அவரொழுக்கங்களுக்கு இடையூறுவாராமல் உண்டிமருந்து முதலானவை கொடுத்து அவரவரொழுக்கவழிகளிலே தப்பாமல் நடத்துகையினாலே நல்லாற்றினின்ற துணையென்றார் (க)

துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கு மில்வாழ்வா னென்பான் றுணை. ..... ...... உ.

இ-ள். துறந்தார்க்கும் - (ஆதாரமானவராலே) விடப்பட்டோர்க்கும — துவ்வாதவர்க்கும - வறுமைப்பட்டவர்க்கும் — இறந்தார்க்கும - (ஒருவருமில்லாமல் வந்து) இறந்தவர்க்கும் — இல்வாழ்வானென்பான் - இல்வாழ்வானென்றுசொல்லப்படுவோனே | — துணை - துணையாவான். எ - று. ஆதாரமானவராலே விடப்பட்டவர்க்குப் பாவமொழிய அவர்க்கு ஆதாரமாய்நின்று வேண்டுவனசெய்தலாலும், வறுமைப் பட்டவர்க்கு உணவுமுதலானவை கொடுத்தலாலும்; இறந்தவர்க்கு நீர்க்கடன்முதலானவைசெய்து நல்லகதியை அடைவித்தலாலும், துணையென்றார். [இவையிரண்டு பாட்டாலும் இல்வாழ்க்கை எல்லா வுபகாரங்களுக்கும் உரித்தாதல் சொல்லப்பட்டது.உ

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க றானென்றாங் கைம்புலத்தா றோம்ப றலை. ..... .... .... ....ங.

இ-ள். தென்புலத்தார் - பிதிரரும் — தெய்வம் - தேவரும் - விருந்து - அதிதியரும் — ஒக்கல் - சுற்றத்தாரும் — தான் - தானும — என்று - என்றுசொல்லப்பட்ட — ஐம்புலத்து - ஐந்திடத்துஞ் செயப்படுகின்ற — ஆறு - (அற) வழியை — ஓம்பல் - வழுவாமற்செய்தல் | — தலை - (இல்வாழ்வானுக்குச்) சிறப்புடையவறமாம். எ - று. ஆங்கு - அசைநிலை. பிதிரர் - ஓர் தேவசாதியார், அவர்க்கு இடம் தெற்காதலின் - தென்புலத்தாரென்றார். தெய்வம் - சாதியொருமை. விருந்து - புதுமை. அது இங்கே புதியவராய்வந்தவரை உணர்த்தலினாலே ஆகுபெயர். தான்செவ்வையாயிருந்துகொண்டு எல்லாவறங்களையும் செய்யவேண்டுதலின் தன்னைக்காப்பாற்றுதலும் அறமாயிற்று. இவ்வைந்துவகையும் தருமஞ் செய்தற்கு இடங்களாகையால் ஐம்புலமென்றார். இவ்வைந்திடங்களுக்கும் ஐந்துபங்கு வேண்டுத

லால் அரசனுக்கு ஆறில் ஒருபங்காயிற்று. (௩)

பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின்வாழ்க்கை ❋
வழியெஞ்ச லெஞ்ஞான்று மில். - - ௪

இ-ள். (பொருள்சம்பாதிக்கும்போது)—பழி - பாபத்து க்கு—அஞ்சி - பயப்பட்டுச் (சம்பாதித்து)—பாத்து - (அப் பொருளை முன்சொல்லப்பட்ட பதின்மர்களுக்கும்) பங்கிட்டு —ஊண் - (தான்) உண்ணுதலை—வாழ்க்கை - (ஒருவனது) இவ் வாழ்க்கையானது—உடைத்தாயின் - உடையதானால்—வழி - (அவனது) சந்ததியானது—எஞ்சல் - குறைதல்|—எஞ்ஞான் றும - எந்நாளும—இல் - இல்லை, எ-று ❋ பாவத்தால்வந்த பி றன்பொருளைப் பங்கிட்டுண்டால் அறமானது பொருளுடை யானையும், பாவமானது தன்னையும்,அடைந்து சந்ததி அழியு மாதலால் பழியஞ்சியென்றார். வாழ்பவனது உடைமைவாழ் க்கைமேல் ஏற்றப்பட்டது. (௪)

அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை ❋
பண்பும் பயனு மது. - - ௫.

இ-ள். இல்வாழ்க்கை - (ஒருவனது) இல்வாழ்க்கையானது —அன்பும்- (தன்மனையாளிடத்துச்செய்யத்தகு) மனை பினையு ம்—அறனும் - (பிறர்க்குப்பகுத்துண்ணுதலாகிய) அறத்தி னையும்—உடைத்தாயின் - உடைத்தானால்—அது - அவ்வுடை மையானது|— (அவ்வில்வாழ்க்கைக்கு)—பண்பும் - குணமு ம்—பயனும் - பிரயோசனமும் ஆம். எ - று ❋ மனையாளு க்கும் கணவனுக்கும் மனவொருமை இல்லாதபோது இல்ல றம் முடிவுபெறாதாகையால் அன்புடைமை பண்பும், அறமு டைமை பயனும், ஆயின. அன்பையும், அறத்தையும், முன்வைத் த ஒழுங்கின்படி அவற்றோடு சம்பந்தமுள்ள பண்பையும், ப யனையும், வைத்தலால் நிரனிறையணி. [இவைமூன்றுபாட்டா லும் இல்வாழ்வோன் அறஞ்செய்யுமாறு சொல்லப்பட்டது.

அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன். - - ௬.

இ - ள். (ஒருவன்)—இல்வாழ்க்கை - இல்வாழ்க்கையை— அறத்தாற்றின் - தருமத்தின்வழியில்—ஆற்றின் - செலுத்துவா னாயின்—புறத்தாற்றில் - (அவன் அதற்குப்) புறமாகிய வழியி

லே—போய் - சென்று—பெறுவது - பெறும்பயன் | —எவ
ன்-யாது. எ-று ❋ தருமத்தின்வழி - பழியஞ்சிப்பகுத் துண்
ணுதலும் அன்புடைமையுமெனமுன் சொல்லப்பட்டவழியா
ம். புறத்தாறு-மனையை விட்டு வனத்திலே செல்லுநிலை. அந்நி
லை தரும்பயனை இது தருமென்னும் பொருள் தோன்றற்குப்
போய்ப்பெறுவதெவனென்றார். (௬)

இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான் ❋
முயல்வாரு ளெல்லாந் தலை. - - ௭.

இ-ள். இல்வாழ்க்கை - இல்வாழ்க்கையிலே நின்று—இயல்பி
னான் - (அதற்குரிய) வியல்போடுகூடி—வாழ்பவனென்பான் -
வாழ்பவனென்றுசொல்லப்படுவோன் | —முயல்வாருளெல்
லாம் - (ஐம்புலங்களைவிட) முயற்சிசெய்வாரெல்லாருள்ளும்
—தலை - மேற்பட்டவனாவான். எ-று ❋ முற்றத்துறந்தவ
ராகியசன்னியாசிகள் ஐம்புலங்களை விட்டமையால், முயல்வா
ரென்றது - வனத்திலே தவஞ் செய்வோராகிய வானப்பிரஸ்த
ரை. இல்வாழ்வோன் அம்முயற்சிசெய்யாமலே பயனைப்பெ
றுதலினாலே தலையென்றார். (௭)

ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை
நோற்பாரி னோன்மை யுடைத்து. - ௮.

இ-ள். (தவஞ்செய்வோரையும்)—ஆற்றின் - (தமது) வழியி
லே—ஒழுக்கி - நடத்தி—அறன் - (தானுந்தன்) னறத்தினின்
றும்—இழுக்கா-தவறாத—இல்வாழ்க்கை - இல்வாழ்க்கையான
து | —நோற்பாரின் - அத்தவஞ்செய்வாரது நிலையினும்—
நோன்மை - பொறுமையை—உடைத்து உடையதாம். எ-று.
❋ பசிமுதலான இடையூறு தீர்த்தலால் ஆற்றினொழுக்கியென்
றார். நோற்பாரென்பது அவரது நிலையை உணர்த்தலால் ஆகு
பெயர் தவஞ்செய்வோரது நிலை அவருக்கு வந்த நோயை அ
ல்லது இல்வாழ்வானது நிலைபோல் பிறருக்கு வந்தநோயையு
ம் பொறுத்தலில்லாமையால் நோற்பாரி னோன்மையுடைத்
தென்றார். (௮)

அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்
பிறன்பழிப்ப தில்லாயி னன்று. - ௯.

இ-ள். (இருவகையறங்களுள்)—அறனெனப்பட்டது

(நூல்களால்) அறனென்று சிறப்பித்துச் சொல்லப்பட்டது|—இல்வாழ்க்கையே. — (மற்றைத் துறவறமோவென்றால்)—அஃதும் - அதுவும்|—பிறன்பழிப்பது - பிறனாற் பழிக்கப்படுவதை|—இல்லாயின் - இல்லாதிருந்தால்— நன்று - (அவ்வில்வாழ்க்கையோடு ஒருதன்மையதாக) நன்றாம். எ-று. ✲ ஏகாரத்தினாலே இல்லறத்தினின்றும்பிரிக்கப்பட்ட துறவறத்தை அஃதென்பது சுட்டிநின்றது. பிறன்பழிப்பதென்றது கூடாவொழுக்கத்தை. துறவறத்தில் மனத்தையும் பொறிகளையும் அடக்கவேண்டியவருத்தம் உண்டாயிருத்தலால் அது நிறைவேறுவது அரிது, இல்லறத்திலே அவ்வருத்தம் இல்லாமையால் இது நிறைவேறுவது எளிது, ஆதலால் அப்படிப்பட்ட துறவறம் பழுதுபடாமல் நடந்துவரும் போது இல்லறத்தோடு சேர்த்து எண்ணப்படுவதாயிற்று. [இவைநான்குபாட்டாலும் இல்லறமே பயனுடையதென்று அதன்சிறப்புச் சொல்லப்பட்டது.] (௯)

**வை**யத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும் - ௰.

இ-ள். வாழ்வாங்கு - இல்லறந்தோடு கூடிவாழுமியல்பினால்—வையத்துள் - மண்ணுலகத்துள்—வாழ்பவன்|—(மண்ணுலகத்தானேயாயினும்) —வானுறையும் - விண்ணுலகத்திலிருக்கின்ற—தெய்வத்துள் - தேவருள்—வைக்கப்படும் - (ஒருவனாக) வைத்து நன்றாகமதிக்கப்படுவான். எ-று. ✲ பின்னே தேவனாய்ப்பிறந்து அவ்வறப்பயனை அனுபவித்தல் நிச்சயமாயிருக்கையால் தெய்வத்துள்வைக்கப்படுமென்றார். [இதனால் இல்லறத்தின் மறுமைப்பயன்சொல்லப்பட்டது] இம்மைப் பயன் புகழ். அதை இறுதியிலே சொல்லுகிறார். (௰)

✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲

## சு - ஆம். அதி.—வாழ்க்கைத் துணைநலம்.

அஃதாவது அவ்வில்வாழ்க்கைக்குத் துணையாகிய மனையாளது நன்மையாம். இதனாலேயே அதிகாரமுறைமையும் விளங்கும்.

**ம**னைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை. - க.

இ-ள். மனைத்தக்க - இல்லறத்துக்குத்தக்க—மாண்புடைய

ளாகி - நற்குண நற்செய்கைகளையுடையவளாகி—தற்கொண் டான் - தன்னைக்கொண்டவனது—வளத்தக்காள் வாழ்க்கை- வரவுக்குத்தகுந்தவாழ்க்கையையுடையவள் | —துணை-(அவ்வி ல்லறத்துக்குத்) துணையாவாள். எ-று. ❋ நற்குணங்களாவன- துறந்தவரையுபசரித்தலும், விருந்தாராய்தலும், வறியவரிடத் தே யருளுடைமையும், முதலானவையாம். நற்செய்கைகளா வன - வாழ்க்கைக்குவேண்டும் பொருள்களறிந்து காப்பாற்றி வைத்தலும், உண்டிசமைத்தல்வல்லமையும், உபகாரஞ்செய் தலும், முதலானவையாம். வருவாய்க்குத் தக்க வாழ்க்கையாவ து - முதலுக்குத்தக்கபடி செலவுசெய்தல். [இதனால் இவ்விர ண்டு நன்மைகளும் சிறந்தனவென்பது சொல்லப்பட்டது(௧)

மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை ❋
யெனைமாட்சித் தாயினு மில். - - - ௨.

இ-ள். மனைமாட்சி - இல்லறத்துக்குத்தகுந்த நற்குண நற் செய்கைகள்—இல்லாள்கண் - (ஒருவனது) மனையாளிடத்தே —இல்லாயின் - இல்லையாயின்—வாழ்க்கை - அவ்வில்வாழ்க்கை யானது | —எனைமாட்சித்தாயினும் - (செல்வத்தால்) எவ்வள வுபெருமையை உடையதாயினும்—இல் - அப்பெருமையை உடையதன்று, எ-று. ❋ பயன்படாமையால் இல்லையென்றார்.

இல்லதெ னில்லவண் மாண்பானா லுள்ளதெ ❋
னில்லவண் மாணாக் கடை. - .. - ௩.

இ-ள். (ஒருவனுக்கு)—இல்லவள் - மனையாள்—மாண்பா னால் - நற்குண நற்செய்கையளாயிருந்தால்—இல்லது - இல் லாதது | —என்-யாது,—இல்லவள் - அம்மனையாள்—மாணாக் கடை - அப்படிப்பட்டவளாகாதிருந்தால்—உள்ளது | —என் யாது. எ-று. ❋ மாண்பென்னுங் குணப்பெயர் இங்கே அத னை உடையவளுக்கு ஆயிற்று.] இவ்விரண்டுபாட்டாலும் இல் வாழ்க்கைக்கு வேண்டுவது மனையாளது நற்குண நற்செய் கையே மற்றவை யல்லவென்பது. சொல்லப்பட்டது. (௩)

பெண்ணிற் பெருந்தக்க யாவுளகற்பென்னுந் ❋
திண்மையுண் டாகப் பெறின். - - ௪.

இ-ள் (ஒருவன் பெறுதற்குரிய பொருள்களுள்)—பெண் ணின் - மனையாளினும்—பெருந்தக்க - உயர்வாகியபொருள்க

ளீ—யா - எவை|—உள - இருக்கின்றன. — கற்பென்னுந்தி ண்மை - கற்பென்னுங்கலங்காநிலைமை—உண்டாகப்பெறின் - (அவளிடத்தே) உண்டாயிருக்கப்பெற்றால்- எ - று. ❊ கற்பு டையாள்போல் அறமுதலாகிய மூன்றுக்கும் ஏதுவாம்பொ ருள்கள் வேறில்லாமையால் - யாவுளவென்றார். [இதனால் கற்பு நலத்தது சிறப்புச் சொல்லப்பட்டது. (௪)

தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை. - - - ௫.

இ-ள். தெய்வம் - (பிற) தெய்வத்தை—தொழாள் - வணங்கா ளாகி—கொழுநன் - (தனதுதெய்வமாகிய) கணவனை—தொ ழுது - வணங்காநின்று—எழுவாள்-(நித்திரைவிட்)டெழுந்திரு ப்பவள்—பெய்யென- பெய்யென்றுசொல்ல - மழை - மழை யானது|—பெய்யும். எ - று. ❊ தெய்வந்தொழுதற்கு மனம் தெளிவது துயிலெழுங்காலத்தாகலின் - தொழுதெழுவாளெ ன்றார். தொழாநின்றெழுதலென்பது - தொழுதெனத்திரிந்துநின்றது. தெய்வமும் ஏவல்செய்யுமென்பதாம். [இதனால் கற்புடையவ ளது வல்லமை சொல்லப்பட்டது ] (௫)

தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண். - - ௬.

இ-ள். தற்காத்து - (கற்பினின்றும்வழுவாமல்) தன்னைக்கா ப்பாற்றிக்கொண்டு — தற்கொண்டாற்பேணி - தன்னைக்கொ ண்டவனையும் (உண்டிமுதலானவற்றால்) உபசரித்து—தகை சான்ற - (தம்மிருவரிடத்தும்) நன்மையமைந்த—சொற்கா த்து - புகழை (நீங்காமற்) காப்பாற்றி—சோர்விலாள் - (முன் சொல்லப்பட்ட நற்குண நற்செய்கைகளினும் (மறவி)யில்லா தவளே|—பெண் - பெண்ணாவாள். எ - று. ❊ தன்னிடத்துப்பு கழாவது - ஊரார்கற்பினாலே தன்னைப்புகழ்வது. [இதனால் த ன்னைப் புகழ்தற் சிறப்புச் சொல்லப்பட்டது. (௬)

சிறைகாக்குங் காப்பெவன் செய்யுமகளிர் ❊
நிறைகாக்குங் காப்பே தலை. - - - - எ.

இ-ள். மகளிர்- பெண்களை—சிறை - சிறையினாலே—காக் கும்-(தலைவர்) காக்கும்—காப்பு - காவலானது|—எவன் - என் னபிரயோசனத்தை}—செய்யும்.—நிறை - (தமது) நிறையா

ல்—காக்கும் - (அவர்) காக்கும்—காப்பே-காவலே|—தலை-
முதன்மையானகாவல்.எ-று- ※ சிறை-மதிற்காவல் வாயிற்கா
வல் முதலானவை. நிறை-மனத்தைக்கற்பின்வழியிலே நிறுத்தல்
காவலிரண்டிலும் நிறைக்காவல் இல்லாதவிடத்துச் சிறைக்கா
வலாலே பயன் இல்லை என்றற்கு நிறைகாக்குங் காப்பே தலை
யென்றார். [இதனால் தன்னைக் காத்தலினது சிறப்புச்சொல்ல
ப்பட்டது.] (எ)

பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழு முலகு. - - - - - - (அ)

இ-ள். பெண்டிர்|—பெற்றான்-(தம்மைக்)-கொண்டகணவ
னை—பெறின்-(பூசித்தல்)பெறுவாராயின்—புத்தேளிர் - தேவ
ர்—வாழும்-வாழ்தற்கிடமாகிய—உலகு - உலகத்தில்—பெரு
ஞ்சிறப்பு-(அவராற்செய்யப்படும்) பெரியசிறப்பினை—பெ
றுவர்.எ-று. ※ பூசித்தல்-வருவிக்கப்படுதலாற்சொல்லெச்சம்.
[இதனால் தன்னைக் கொண்டவனைப் பூசித்தபெண்டிர் தேவர்
களாலே பூசிக்கப்படுவரென்பது சொல்லப்பட்டது.] (அ)

புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன் ※
னேறுபோற் பீடு நடை. - - - - - ௯.

இ-ள். புகழ்-சீர்த்தியை—புரிந்த-விரும்பிய—இல்-மனை
யாளை—இலோர்க்கு - இல்லாதவர்க்கு—இகழ்வார்முன்-(தம்
மை)யிகழ்ந்துபேசும்பகைவர்முன்—ஏறுபோல் - ஆண்சிங்க
ம்போலும்—பீடுநடை -பெருமிதநடை|—இல்லை. எ-று. ※
புரிந்தவென்பதனீறு விகாரத்தால் தொக்கது. பெருமிதநடை
யாளுக்குச் சிங்கவேறு நடையினால் உபமானமாதலால் ஏறு
போலென்றார். [இதனால்புகழைக்காப்பாற்றாதவிடத்தே உண்
டாகும் குற்றம் சொல்லப்பட்டது.] - - (௯)

மங்கல மென்ப மனைமாட்சி மற்றத ※
னன்கல னன்மக்கட் பேறு. - ௰

இ-ள் (அறிந்தோர்|)—மனை-மனையாளது—மாட்சி-நற்கு
ண நற்செய்கைகளை—மங்கலம்-(ஒருவனுக்கு) நன்மையாம்
—என்ப-என்றுசொல்லுவார்.—நன்மக்கட்பேறு- நல்லபுதல்
வரைப்பெறுதலை—அதன்-அவற்றுக்கு—நன்கலன்-நல்லவா
பரணம்—(என்ப)-என்றுசொல்லுவார்.எ-று. ※ அறிந்தோ
ரென்பது வருவிக்கப்பட்டது. மற்று - அசை. [இதனால்வா

புகலைக் துணைக்காவதோரணிகலம்சொல்லி அதனுல்பின்வருவதாகிய அதிகாரத்துக்குத் தோற்றுவாய் செயப்பட்டது.] (ய)

எ-ஆம், அதி—புதல்வரைப்பெறுதல்.

அஃதாவது-முனிவர்கடன் கேள்வியாலும், தேவர்கடன் வேள்வியாலும், தென்புலத்தார்கடன் புதல்வரைப்பெறுதலாலும். அல்லது செலுத்தக்கூடாமையால்- அக்கடன் செலுத்தற்பொருட்டு நல்லமக்களைப் பெறுதலாம். அதிகாரமுறைமை முன்பெறப்பட்டது.

பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த ※
மக்கட்பே றல்ல பிற. - - - - க.

இ-ள். பெறுமவற்றுள்-(ஒருவன்) பெறும் பேறுகளுள்— அறிவறிந்த - அறியவேண்டுமவைகளை அறிதற்குரிய—மக்கட்பேறல்ல - புதல்வரைப்பெறுதலையல்லது — பிற - மற்றைப்பேறுகளை —யாம்|—அறிவதில்லை - மதிப்பதில்லை.எ-று. ※ அறிதற்குக் காரணமாகிய வுரிமை அவ்வறிதலைஉண்டாக்கியே விடுமாதலின் அத்துணிவுபற்றி அறிந்தவென இறந்தகாலத்தாற்சொல்லினர். அறிவறிந்தவென்றதனால் மக்களென்னும்பெயர்பெண்பாலை ஒழித்துநின்றது. [இதனுலே புதல்வரைப்பெறுதலினது சிறப்புச்சொல்லப்பட்டது. (க)

எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்※
பண்புடை மக்கட் பெறின். - - - உ

இ-ள்.எழுபிறப்பும் - (வினைவசத்தினுலே உண்டாகிற) எழுவகைப்பட்ட பிறப்பிலும்—தீயவை - துன்பங்கள்|—தீண்டா - (சென்று ஒருவனை)யடையாவாம்.—பழிபிறங்கா - (பிறரால்) பழிக்கப்படாத—பண்புடை - நற்குணங்களையுடைய—மக்கட்பெறின் - புதல்வரைப் பெறுவானுயின். எ - று.※ தந்தைதாய்கள துதீவினை தேய்தற்பொருட்டு அவரைக்குறித்துப் புதல்வராலேசெய்யப்படும் தானதருமங்களுக்கு அவரது நற்குணம் காரணமாகலின் பண்புடைமக்களென்றார். எழுபிறப்பு - எழுதலைமுறையுமாம். எழுபிறப்பாவன - தேவர் - மனிதர் - விலங்கு-பறவை - ஊர்வன - நீர்வாழ்வன - தாவரம் - என்பன.] (உ)

தம்பொரு ளென்பதம் மக்க ளவர்பொரு *
டந்தம் வினையான் வரும். - - - ௩.

இ-ள். தம்மக்கள் - தம்முடைய புதல்வரை—தம்பொருள் - தம்முடைய பொருள்கள் - என்ப - என்று சொல்லுவார். (அறிந்தோர்) - அவர்பொருள் - அப்புதல்வர் சம்பாதித்த பொருள்கள்|—தந்தம்வினையான் - தம்மைக்குறித்து அவர் செய்யும் நல்வினையிலேயே—வரும் - (தம்மிடத்து) வரும். (ஆதலால்) எ-று. ※ பொருள் சம்பாதித்த புதல்வரைப் பொருளெனவுபசரித்தார். [இவை இரண்டு பாட்டாலும் நல்ல புதல்வரைப் பெற்றோர் அடையும் மறுமைப்பயன் சொல்லப்பட்டது (௩)

அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள் *
சிறுகை யளாவிய கூழ். - - - ௪.

இ-ள். தம்மக்கள் - தம்முடைய மக்களது—சிறுகை - சிறிய கைகளால் - அளாவிய - துளையப்பட்ட—கூழ் - சோறானது|—அமிழ்தினும் - (சுவையிலேமேலிருந்த) அமிர்தத்தினும்—ஆற்ற இனிது - மிகவுமினிமையையுடைத்தாயிருக்கும் எ-று. ※ சிறுகையளாவல் - தாய் தந்தையரோடு உடனிருந்து உண்ணும் போது சோற்றைத் துழாவுகைமுதலாயின.] (௪)

மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர் *
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு. - - ௫

இ-ள். உடற்கு (ஒருவனது) உடம்புக்கு - இன்பம் - இன்பமாவது|—மக்கள் - மக்களது—மெய் - உடம்பை—தீண்டல் - தொடுதல்.—செவிக்கு - (அவனது) காதுக்கு — இன்பம் - இன்பமாவது — அவர் - அவரது — சொல் - சொற்களை — கேட்டல். கேட்குதல். — எ-று. ※ மற்று - அசைநிலை. பிள்ளைகளது மழலைச் சொல்லேயன்றி அவர்கற்றறிந்து பேசுஞ்சொல்லும் இன்பமாகலின் - அவையிரண்டுக்கும் பொதுப்படச்சொல்லென்றார். தீண்டல் கேட்டல்களினாலுண்டாகும் இன்பங்களைத் தீண்டல் கேட்டலெனலால் ஆகுபெயர்கள்.] (௫)

குழலினி தியாழினி தென்பதம் மக்கண் *
மழலைச்சொற் கேளா தவர். - - - ௬.

இ-ள். தம்மக்கள் - தம்முடைய புதல்வரது — மழலைச்சொல் - குதலைச்சொற்களை — கேளாதவர்|—குழல் - குழலினிசை}—

இனிது—யாழ்-வீணையினிசை-இனிது—என்ப - என்றுசொல்லுவார்.எ-று. ※குழல்-யாழ் - அவற்றினிசையைக்காட்டுதலால் ஆகுபெயர்கள். கேட்டவர் அவற்றினும் மழலைச்சொல் இனிதென்றுசொல்லுவாரென்றதாயிற்று. இனிமை மிகுதிபற்றி மழலைச்சொல்லைச் சிறப்புவகையாற்சொல்லினார். [இவை மூன்றுபாட்டாலும் இம்மைப்பயன் சொல்லப்பட்டது. (சு)

தந்தை மகற்காற்று நன்றி யவையத்து ※
முந்தி யிருப்பச் செயல். - - - எ.

இ-ள்.தந்தை-தகப்பனானவன்—மகற்கு - புதல்வனுக்கு—ஆற்றும்-செய்யத்தகும்—நன்றி - நன்மையாவது|—அவையத்து-(கற்றவரது) சபையினிடத்து—முந்தியிருப்ப - (அவரினு)மேற்பட்டிருக்க—செயல் - (கல்வியையுடையவ) னாக்குதலாம். எ-று.※பொருளுடையவனாக்கல்முதலானவைபின்னை துன்பத்தைத்தருதலுந் தரும் ஆதலால் அவை நன்மையாகாவென்பதுகருத்து. [இதனால் தந்தைகடன்சொல்லப்பட்டது.] எ)

தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து ※
மன்னுயிர்க் கெல்லா மினிது. - - - அ.

இ-ள்.தம்மக்கள் - தம்மக்களது—அறிவுடைமை - அறிவுடையராயிருக்கையானது|—மாநிலத்து - பெரியநிலத்தில்—மன் - நிலைபெற்ற—உயிர்க்கெல்லாம்—தம்மின் - தமக்கு (இனியதாதலினும்)—இனிது - இனிதாயிருக்கும். எ-று. ※இங்கே அறிவென்றது இயற்கை யறிவோடுகூடிய கல்வியறிவை அறிவுடைமை கண்டுமகிழ்தற்குரியவர் அறிவுடையோராதலால் இங்கே மன்னுயிரென்றது அவர்மேல்நின்றது. [இதனால் தந்தையினும் உலகத்தார்மகிழ்வரென்பது சொல்லப்பட்டது.அ)

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச் ※
சான்றோ னெனக்கேட்ட தாய் - - கூ

இ-ள். தன்மகனை—சான்றோனென - (கல்விகேள்விகளினாலே) நிறைந்தோனென்று (அறிவுடையோர்) சொல்ல—கேட்டதாய்|—ஈன்றபொழுதின் - பெற்றகாலத்தினும்—பெரிதுவக்கும்-மிகமகிழ்வாள்.எ-று. ※ மடியின்மேலேகண்டதனால் உண்டாகியபொதுவான மகிழ்ச்சியினும் நிறைந்தகல்விகேள்விகளையுடையவனெனக் கேட்டதனால் உண்டாகிற சிறப்பான மகிழ்ச்சி பெரிதாகலின் பெரிதுவக்குமென்றும், பெண்மைக்

குணத்தினால் தானாக அறியமாட்டாமையால கேட்டதாயெனவும், சொல்லினார். அறிவுடையோனென்பது வருவிக்கப்பட்டது-சான்றோரென்று அறிந்துசொல்லுதற்கு உரியவர் அவராகையால்.[தாய்மகிழ்ச்சிக்கு அளவில்லாமையால் அது இதனால் வேறெடுத்துச்சொல்லப்பட்டது ] (௯)

மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை *
யென்னோற்றான் கொல்லெனுஞ் சொல். ௰.

இ-ள். தந்தைக்கு (தன்னைக்கல்வியுடையவனாக்கிய) தகப்பனுக்கு—மகன்—ஆற்றும்-செய்யும்—உதவி-எதிர்நன்றியானது|—(தன்னறிவையும்ஒழுக்கத்தையும்கண்டவர்)---இவன்-இவனது—தந்தை-தகப்பன்—(இவனைப்பெறுதற்கு)—என்னதவத்தை—நோற்றான்கொல்-செய்தானோ—என்னும்-என்கிற—சொல்-சொல்லை (உண்டாக்குதலாம்.)எ-று. ☼ சொல்லென்பது உண்டாக்குதலாகிய தன்காரணத்தைக்குறிப்பித்துநின்றது. உண்டாக்குதல்-அப்படிசொல்லநடத்தல். [இதனால் புதல்வனது கடன்சொல்லப்பட்டது.] (௰)

*-*-*-*-*-*-*-*-*-*-*-**-*-* -*-*-*-*-*-*-*-*-*

அ,ஆம்-அதி—அன்புடைமை.

அஃதாவது-அம்மனைவி புதல்வர் முதலாகிய சம்பந்தமுடையவரிடத்து ஆசையையுடையவனாயிருக்கை. அதிகாரமுறைமையும் இதனால் விளங்கும், இல்லறமினிதுநடத்தலும் பிறவுயிர்களின்மேல் அருள்பிறத்தலும் அன்பின் பயனாதலால் இது வேண்டப்பட்டது.

அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர் *
புன்கணீர் பூச றரும். - - - - - - க

இ-ள். அன்பிற்கும்-அன்பினுக்கும்—அடைக்கும்-(பிறரறியாமல்) அடைத்துவைக்கும்—தாழ்-தாழும்|—உண்டோ.—(தம்மால் அன்புசெய்யப்பெற்றவரது துன்பங்கண்டவிடத்தே பொழிகின்ற)—ஆர்வலர்-அன்புடையாரது—புன்கணீர்-புல்லியகண்ணீரே|—பூசறரும்-(உள்ளேயிருக்கின்ற அன்பினை)எல்லாரும் அறியத்) தூற்றும். (ஆதலால்)எ-று. ☼ உம்மை அன்பைச் சிறப்பித்து நின்றது. காட்சியளவையால் அறியப்படாதாயினும் அனுமானவளவையால் வெளிப்படுமென்

பதாம். [இதனால் அன்பினது உண்மை உணர்த்தப்பட்டது.

அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா*
ரென்பு முரியர் பிறர்க்கு. - - - உ.

இ-ள். அன்பிலார் | —(பிறர்க்குட்பயன்படாமையால்)—எல்லாம் - எல்லாப்பொருள்களாலும்—தமக்கு - தமக்கே - உரியர். —அன்புடையார் | —(அவைகளாலே மாத்திரமல்லாமல்) —என்பும் - (தம்) முடம்பாலும்—பிறர்க்கு—உரியர். எ - று. ❋ தமக்கேயென்றபிரிநிலையேகாரம்வருவிக்கப்பட்டது. என்பு - உடம்பிற்காதலால் ஆகுபெயர். என்புமுரியராகுகைக்கு புறவுக்காகத் தலையறியசிபியும் தன்முதுகெலும்பை இந்திரனுக்குக்கொடுத்தததீசியு முதலாயினோரிடத்தேகாண்க.] (உ)

அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க் *
கென்போ டியைந்த தொடர்பு. - - ௩.

இ - ள்.—ஆருயிர்க்கு - பெறுதற்கரியமனிதருயிர்க்கு—என்போடு - உடம்போடு—இயைந்த - உண்டாகிய—தொடர்பு - சம்பந்தத்தை—அன்போடு—இயைந்த - பொருந்துதற்குவந்த - வழக்கு - வழியின்பயனென்கும்—என்ப - என்று (அறிந்தோர் |) சொல்லுவர். எ - று. ❋ மனிதப்பிறப்பினருமை அதனையடைந்த உயிர்களின்மேல் ஏற்றப்பட்டது. வழக்கென்பது அதன்பயனையுணர்த்தலால் ஆகுபெயர். உடம்போடுகூடியல்லாமல் அன்புசெய்யக்கூடாமையால் அதுசெய்தற்பொருட்டு இந்தொடர்ச்சியுண்டாயிற் றென்பதாம். ஆகவே இந்தொடர்ச்சிக்குப் பயன் அன்புடைமையென்றாயிற்று.] (௩)

அன்பீனு மார்வ முடைமை யதுவீனு *
நண்பென்னு நாடாச் சிறப்பு. - ச.

இ - ள். அன்பு-(சம்பந்தமுடையவரிடத்தே செய்யப்பட்ட) அன்பானது | —(அத்தன்மையிலே) - ஆர்வமுடைமை - (பிறரிடத்தே) ஆசையையுடையனாயிருக்கையை} —ஈனும் - (ஒருவனுக்குத்) தரும். —அது - அவ்விருக்கையானது | —நண்பென்னும் - (இவனுக்குயாவரும்) நட்பினரென்று சொல்லப்படுகிற —நாடாச்சிறப்பு - அளவிறந்தசிறப்பை} —ஈனும - தரும். எ - று. ❋ எல்லாரும நட்பினராதல் எல்லாப்பொருளையும் அடைதற்குக் காரணமாதலின் அதனை நாடாச்சிறப்பென்றார்.] (ச)

அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத் *
தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு. - ரு.

இ-ள். அன்பு-அன்பை—உற்று-உடையவராகி—அமர்ந்த (இல்லறத்தோடு) பொருந்திய—வழக்கு-வழியின்பயனாகும்—என்ப-என்று (அறிந்தோர்) சொல்லுவர்.—வையகத்து-இவ்வுலகத்தில்—இன்புற்றார்-(இல்வாழ்க்கையிலேநின்று) இன்பத்தையனுபவித்தவராகி — எய்தும் - (அதன்பின்னே விண்ணுலகத்திற்சென்று) அடையும்—சிறப்பு - பேரின்பத்தினை எ-று. * இல்வாழ்க்கையிலே நின்று மனைவியோடும், மக்களோடும், சுற்றத்தோடும், கூடி இன்பமுற்றவர் தம்மாலேசெயப்பட்ட வேள்வித்தொழிலினாலே தேவராய்ப் பிறந்து அங்கேயும் இன்பத்தை அனுபவிப்பாராகலின் இன்புற்றாரெய்துஞ் சிறப்பென்றார். தவத்தினாலே துன்பமுற்று அடையப்படுவதாகிய விண்ணுலகவின்பத்தை இங்கேயும் இன்பமுற்று அடைதல் அன்பாலன்றி இல்லையென்பதாம். (ரு)

அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார் *
மறத்திற்கு மஃதே துணை. - - - சு.

இ-ள். அறியார்-அறியாதவர் (சிலர்)—அன்பு - அன்பானது—சார்பு-துணையாவது—அறத்திற்கே - தருமத்துக்கே—என்ப-என்றுசொல்லுவார்.—மறத்திற்கும் - பாவத்தை நீக்குதற்கும்—அஃதே - அவ்வன்பே—துணை - துணையாவது. எ-று. *ஒருவனாலே செயப்பட்ட பகைமைபற்றி உள்ளத்திலே மறத்தை யறியவிடத்தே அவனை நட்பாகநினைத்து அவன்மேல் அன்புசெய்ய அதுநீங்குமாதலின் மறத்தைநீக்குதற்குந் துணையாமென்றற்கு மறத்திற்கு மஃதேதுணையென்றார். மறத்திற்குமஃதே துணையென்றதற்குப்பெண்டிர் புதல்வர் முதலாயினோரை நல்வழிப்படுத்தும்பொருட்டு அவரைக் குற்றத்துக் செய்யப்படும்கோபத்துக்கும் அன்பேதுணையாமெனப் பொருளுரைப்பினும் ஆம். [இவையிரண்டுபாட்டாலும் அன்பினது சிறப்புச்சொல்லப்பட்டது. (சு)

என்பி லதனை வெயிற்போலக் காயுமே *
யன்பி லதனை யறம். - - - எ.

இ-ள். என்பிலதனை - எலும்பில்லாத உடம்பை—வெயிற்போல - வெயிலானதுபோல—அன்பிலதனை - அன்பில்லாதவு

யினை} — அறம் - அறக்கடவுள் | — காயும் - சுடுவான். எ-று. ❋ ஏ: அசைநிலை. என்பிலதென்றதனால் உடம்பென்றும், அன்பிலதென்றதனால் உயிரென்றும், கொள்ளப்பட்டன. வெறுப்பில்லாமல் எங்கும் ஒருதன்மைத்தாகிய வெயிலின் முன்னே புழுமுதலானவைபோல் அப்படிப்பட்ட அறத்தின்முன்னே அன்பில்லாதவுயிர் தன்னியல்பாற் சென்றுகெடுமென்பதாம். (எ)

அன்பகத் தில்லா வுயிர் வாழ்க்கை வன்பாற்கண் *
வற்றன் மரந்தளிர்த் தற்று. - - - - அ.

இ-ள். அன்பகத்தில்லாவுயிர் - மனதிலன்பில்லாதவுயிரானது — வாழ்க்கை - (இல்லறத்தோடுகூடி) வாழ்தலானது | — வன்பாற்கண் - வன்பாலென்னுநிலத்திலே — வற்றன்மரம் - உலர்ந்தமரமானது — தளிர்த்தற்று — தளிர்த்தாற்போலும். எ-று. ❋ கூடாதென்பதாம் - வன்பால் - கடினநிலம். (அ)

புறத் துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை *
யகத் துறுப் பன்பி லவர்க்கு. - - - - (௯)

இ-ள். யாக்கையகத்து - உடம்பினகத்திலேநின்று - உறுப்பு - (இல்லறத்துக்கு) அங்கமாகிய — அன்பிலவர்க்கு - அன்பில்லாதவர்க்கு — புறத்து - மற்றைப்புறத்திலேநின்று — உறுப்பெல்லாம் - அங்கமாவனவெல்லாம் — எவன் - (அவ்வறஞ்செய்தலிலே) என்னவுதவியை} — செய்யும். எ-று. ❋ புறத்துறுப்பாவன - இடம்பொருளேவலாதிகளாம். அன்பாகிய துணையோடு கூடாதவிடத்தே அவைகளாற்பயனில்லாமையால் எவன்செய்யுமென்றார். உறுப்புப் போலுதலால் உறுப்பெனப்பட்டது.

அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க் *
கென்பு தோல் போர்த்த வுடம்பு. - ௰.

இ-ள். அன்பின்வழியது - அன்புமுதலாக அதன்வழிநின்ற உடம்பே | — உயிர்நிலை - உயிர்நின்றவுடம்பாகும். — அஃதிலார்க்கு - அவ்வன்பில்லாதாரிக்குள்ள — உடம்பு - உடம்புகளானவை | — என்பு - எலும்பை — தோல் - தோலினாலே - போர்த்த - போர்க்கப்பட்டனவாம். — (உயிர்நின்றவுடம்பாகா.) எ-று. ❋ இல்லறம்பயன்படாமையால் அப்படிப்பட்டவுடம்புகளாயின. [இவை நான்குபாட்டாலும் அன்பில்லாதவிடத்தே உண்டாகும் குற்றம் சொல்லப்பட்டது. (௰)

அஃதாவது விருந்தினரையுபசரித்தல். தென்புலத்தார்- தெய்வம்- விருந்தினர் - சுற்றத்தார்-தான் - என்கிற ஐவகையோரை உபசரித்தல்களில் முன்னவை இரண்டும் கண்ணுற் காணப்படாதவரை நினைத்துச் செயப்படுவன வாதலாலும். பின்னவை இரண்டும் பிறர்க்குக்கொடுத்த லல்லாமையாலும், நடுநின்றவிருந்தோம்பல் சிறப்பை யுடையதாகி அவ்வில்லறங்களுக்கு முதலாயிற்று. வேறு பாடில்லாத அன்பையுடைய கணவனு மனையாளுங்கூடி யல்லது செய்யக்கூடாமையால் இது அன்புடைமையி ன் பின்வைக்கப்பட்டது.

இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி *
வேளாண்மை செய்தற் பொருட்டு. - - - (௧)

இ-ள். (மனைவியோடுங்காட்டினிடத்தேசெல்லாமல்) — இல்- இல்லினிடத்தே — இருந்து — ஓம்பி - (பொருள்களைக்) காப்பாற்றி — வாழ்வதெல்லாம் - வாழுஞ்செய்கையெல்லாம் — விருந்து - விருந்தினரை — ஓம்பி - உபசரித்து — வேளாண்மை - உபகாரத்தை — செய்தற்பொருட்டு - (அவருக்குச்) செய்தற்பொருட்டாம். எ-று. ❊ எனவே - உபகாரஞ்செய்யாதவிடத்தே இல்லிலிருத்தலாலும, பொருள் காப்பாற்றலாலும், உண்டாகிறதுன்பச் செயல்களுக்கெல்லாம் பயனில்லையென்பதாம். (௧)

விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா *
மருந் தெனினும் வேண்டற்பாற் றன்று. ௨.

இ-ள். (உண்ணப்படும்பொருள்) — சாவாமருந்தெனினும் - அமிர்தமாயினும் — விருந்து - (தன்னை நோக்கிவந்த) விருந்தினர் — புறத்ததா - (தன்வீட்டின்) புறத்திருக்க — தானுண்டல் - தானேயுண்ணுதல் — வேண்டற்பாற்றன்று - விரும்பப்படுமுறைமையையுடையதன்றும் எ-று. ❊ சாவாமருந்து - சாவாமைக்குக் காரணமாகிய மருந்து. [இவையிரண்டுபாட்டாலும் விருந்தோம்பலின் சிறப்புச் சொல்லப்பட்டது. (௨)

வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை *
பருவந்து பாழ்படுத லின்று - - - - (௩)

இ-ள். வருவிருந்து - (தன்னைநோக்கி) வந்தவிருந்தை — வைகலும் - நாளுநாளும் — ஓம்புவான் - உபசரித்து வருபவன

து — வாழ்க்கை - இல்வாழ்க்கையானது | — பருவந்து - (வறு மையால்) வருந்தி — பாழ்படுதலின்று — கெடுதலில்லை. எ - று.
❊ தினந்தோறும் விருந்தோம்புவானுக்கு அதனாலே பொரு ள் குறையாமல் மேலுமேலும் வளருமென்பதாம். (௩)

அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து ❊
நல்விருந் தோம்புவா னில். - - - - - (௪)

இ - ள். செய்யாள் - திருமாதானவள் | — முகனமர்ந்து - முக மினியனாய் — நல்விருந்து — தகுந்தவிருந்தினனை — ஓம்புவா ன் - காப்பவனது — இல் - வீட்டினிடத்தே — அகனமர்ந்து - மனமகிழ்ந்து — உறையும் - வாழ்ந்துகொண்டிருப்பாள். எ - று.
❊ மனமகிழ்தற்குக் காரணம் தன்செல்வம் நல்வழிப்படுத லாம். தகுதியாவது - ஞானத்தினாலும், ஆசாரத்தினாலும், உயர் தல். பொருள்வளர்தற்குக் காரணம் சொல்லியபடி. (௪)

வித்து மிடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி ❊
மிச்சின் மிசைவான் புலம். - - - - (௫)

இ-ள். விருந்தோம்பி - (முன்னே) விருந்தினரையுண்பித்து — மிச்சில் - மிகுதியை — மிசைவான் - (பின்) உண்பவனது — புலம் - விளைநிலத்துக்கு — வித்தும் - விதையும் — இடல் - இடுத லும் | — வேண்டுங்கொல் - வேண்டுமோ: வேண்டுவதில்லை. எ - று.
❊ ஓ - அசைநிலை. எனவே தானேவிளையுமென்பதாயிற்று. [இ வை மூன்றுபாட்டாலும் விருந்தோம்புவார் இம்மையிலே அடையும் பயன் சொல்லப்பட்டது.] (௫)

செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பா ❊
னல்விருந்து வானத் தவர்க்கு. - - - (௬)

இ - ள். செல்விருந்து - (தன்னிடத்தே) வந்தவிருந்தை — ஓம்பி - உபசரித்து — வருவிருந்து - (பின்) வரும்விருந்தை — பார்த்து - எதிர்நோக்கி — இருப்பான் - (தான் அதனையே) விரும்பவன் | — (மறுபிறப்பிலே தேவனாய்) — வானத்தவர்க் கு - வானிலுள்ளவருக்கு - நல்விருந்து — நல்லவிருந்தாவான். எ- று. ❊ நல்விருந்து - கிடைத்தற்கரியவிருந்து. [இதனாலே மறு மையில் அடையும் பயன் சொல்லப்பட்டது.] (௬)

இனைத் துணைத் தென்பதொன் றில்லை விருந்தின் *
றுணைத் துணை வேள்விப் பயன். - - - - (௭)

இ-ள். வேள்விப்பயன்-(விருந்தினரையுபசரித்தலாகிய)வேள்வியினது பயன்|—இனைத்துணைத்தென்பது - இன்னவளவினதென்பதாகிய—ஒன்றில்லை - ஓரளவினையுடையதன்று.—விருந்தின்-அவ்விருந்தினரது—துணை-(தகுதி)யளவே|—துணை-(அதற்கு) அளவாம்.எ-று. ❊ தேவயாகம்-பிதிருயாகம்-மனிதயாகம்-பூதயாகம்-பிரமயாகம்-என்கிற ஐம்பெருவேள்வியில் மனிதயாகம் எனப்பட்ட விருந்தோம்பலொன்றாகலின் வேள்வியென்றும், பொருளளவுசிறிதாயினும் சற்பாத்திரத்திலே சேர்ந்ததாயின் மிகப்பெரிதாமாதலின் இனைத் துணைத்தென்பதொன்றில்லையென்றும், சொல்லினார். [இதனால் இருமையும் பயத்தற்குக் காரணம் சொல்லப்பட்டது.] (௭)

பரிந்தோம்பிப் பற்றற்றேமென்பர் விருந்தோம்பி *
வேள்வி தலைப்படா தார். - - - - - (௮)

இ-ள். விருந்து - விருந்தினரை—ஓம்பி - (நிலையாப்பொருளைக்கொண்டு)உபசரித்து—வேள்வி - அவ்வேள்விப்பயனை—தலைப்படாதார் - அடையும் அறிவிலாதவர்|—பரிந்தோம்பி-(அப்பொருளை) வருந்திக்காத்து—(பின்பு அதனையிழந்து)—பற்றற்றேம்-(இப்போது) பற்றுக்கோடிலமாயினேம்—என்பர்-என்றிரங்குவார்.எ-று. ❊ சம்பாதிக்கப்பட்டபொருளைக் காத்தலும் கடுந்துன்பமாதலால் பரிந்தோம்பியென்றார். வேள்வி அதன்பயனை உணர்த்தலால் ஆகுபெயர். (௮)

உடைமையு ளின்மை விருந்தோம்ப லோம்பா *
மடமை மடவார்க ணுண்டு. - - - - (௯)

இ-ள். உடைமையுள் -(பொரு)ளுடையராயிருக்குங்காலத்து—இன்மை - வறுமையாவது|—விருந்தோம்பல் -விருந்தினரையுபசரித்தலை—ஓம்பா - இகழும்—மடமை - பேதைமையாகும்.—(அது| அறந்தோரிடத்திராது.)—மடவார்கண் - அறிவிலாதவரிடத்து—உண்டு.எ-று. ❊ மடமையானது - பொருளாலே கொள்ளும்பயனை இழப்பித்து உடைமையையில்லாமையாக்கலால் அதைவறுமையாகவுபசரித்தார். பேதைமையால் விருந்தோம்பலை இகழ்ந்தால் பொருளிருந்தவிடத்தும் அ

தலைல்பயனில்லையென்பதாம். [இவை யிரண்டுபாட்டாலும் விருந்தோம்பாவிடத்து உண்டாம் குற்றஞ்சொல்லப்பட்டது.]

மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து - *
நோக்கக் குழையும் விருந்து. - - (௰)

இ-ள். அனிச்சம்-அனிச்சப்பூவானது|—மோப்ப-மோந்தவிடத்தே—குழையும்-வாடும்.—விருந்து-விருந்தினரானவர்|—முகந்திரிந்து முகம்வேறுபட்டு—நோக்க-பார்க்க—குழையும்-வாடுவர்-எ-று. ※ தூரத்திலே கண்டவிடத்து முகமலர்ச்சிகாட்டலும், அதுகண்டு சமீபத்திலே வந்தவிடத்து இன்சொற்சொல்லுதலும், அதுகேட்டு உடன்பட்டபோது உபசாரஞ்செய்தலும், ஆகிய-விருந்தோம்புவார்க்கு அவசியமிருக்கவேண்டிய மூன்றனுள் - முதலாகிய முகமலர்ச்சியில்லாதபோது தூரத்திலிருந்தே வாடிநீங்குதலால் தீண்டியவிடத்தல்லது வாடாத அனிச்சப்பூவினும் விருந்தினர் மெல்லியராயிருப்பரென்பதாம். [இதனால் விருந்தோம்புவார்க்கு முதலிலேமுகமலர்ச்சிவேண்டுமென்பது சொல்லப்பட்டது.](௰)

## ௰-ஆம், அதி.—இனியவைகூறல்.

அஃதாவது-மனத்திலுள்ளமகிழ்ச்சியை வெளிப்படுத்துகிற இனியசொல்லுகளைச் சொல்லுதலாம். இதுவும்விருந்தோம்புவார்க்கு அவசியம் வேண்டியதாகலின் அதன் பின்வைக்கப்பட்டது.

இன்சொலா லீர மளைஇப் படிறிலவாஞ் - - *
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல். - - (௧)

இ-ள். இன்சொல்-இனியசொற்களாவன | — ஈரமளைஇ-அன்போடுகலந்து—படிறிலவாம் - வஞ்சனையில்லனவாயிருக்கின்ற—செம்பொருள் - அறத்தினை—கண்டார் - அறிந்தவரது—வாய்ச்சொல் - வாய்ச்சொற்களாகும். எ-று. ※ ஆல்-அசை. அன்போடுகலத்தல் - அன்புடைமையை வெளிப்படுத்தல். வஞ்சனையில்லாமை - மெய்ம்மை. மெய்யுணர்ந்தவர் கருத்துக்கெல்லாம் செம்மையுடையதாய்த் தோன்றலாலே செம்பொருளெனப்பட்டது. இலவாஞ்சொல்லெனக்கூட்டுக. [இத

ளால்இனியசொல்லுக்கு இலக்கணம் சொல்லப்பட்டது-] (௧)

அகனமர்ந் தீதலி னன்றே முகனமர்ந் *
தின்சொல னாகப் பெறின். - - - - - (௨)

இ-ள். முகனமர்ந்து - (கண்டபொழுதே) முகமலர்ந்து— இன்சொலனாக - (அதனோடு) இன்சொல்லையுமுடையவனாக— பெறின்-பெற்றால்—(அது)—அகனமர்ந்து - மனமகிழ்ந்து— ஈதலின் - (ஒருவருக்கு வேண்டியபொருளைக்) கொடுத்தலினும்— நன்றே - நல்லதாம். எ - று. ❋ முகமலர்ச்சியோடுகூடிய வின்சொல் - கொடுத்தல்போல் பொருள்வசத்ததாகாமல் தன்வசத்ததாயிருந்தாலும் தருமத்தையுடையவர்க்கல்லது சுபாவமாக இராதாகையால் அதனினும் அரிதென்னுங்கருத்தால் இன்சொலனாகப் பெறினென்றார். (௨)

முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானா - *
மின்சொ லினதே யறம். - - - - - - (௩)

இ-ள். அறம் - தருமமானது— முகத்தானமர்ந்து - (கண்டபோதே) முகத்தால்விரும்பி— இனிதுநோக்கி - இனிதாகப் பார்த்து—(பின்சேர்ந்தவிடத்து)—அகத்தானாம் - மனத்துடனாகிய—இன்சொலினதே - இனியசொற்களைச் சொல்லுதலினிடத்ததே. எ - று. ❋ அறமானது ஈகையினிடத்தே உள்ளதல்லவென்பதாம். [இவ்விரண்டுபாட்டாலும் முகமலர்ச்சியோடுகூடிய இன்சொல் முன்னாகவே பற்றிக்கொள்ளுதலால் விருந்தோம்பலிலே சிறந்ததெனபது சொல்லப்பட்டது. (௩)

துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டு *
மின்புறூஉ மின்சொ லவர்க்கு. - - - (௪)

இ-ள். யார்மாட்டும் - எல்லாரிடத்தும்— இன்புறூஉம் - இன்பத்தைமிகுவிக்கும்— இன்சொலவர்க்கு - இனியசொற்களையுடையவர்க்கு— துன்புறூஉம் - துன்பத்தைமிகுவிக்கும்— துவ்வாமை-வறுமையானது—இல்லாகும் - இல்லை. எ - று. ❋ அப்படிப்பட்ட இன்சொல்லையுடையவர்க்கு யாவரும் நட்பினராதலால் எல்லாச்செல்வமும் பெறுவரென்பதுகருத்து. (௪)

பணிவுடைய னின்சொ லனாத லொருவற் *
கணியல்ல மற்றுப் பிற. (௫)

இ-ள். ஒருவற்கு-ஒருவனுக்கு—அணி- ஆபரணமாவது|—பணிவுடையன் - (பெரியோரிடத்தே) வணக்கமுடையவனாகி—இன்சொலனாதல் - (எல்லாரிடத்தும்) இனியசொல்லையுடையவனாயிருக்கையாம்—பிற- இவ்விரண்டுமல்லாமல் உடம்பில் அணியுமற்றை யாபரணங்கள் | — அல்ல - ஆபரணங்களாகாவாம்.எ-று. ❊ வணக்கமும் இன்சொல்லுக்குஇனமாதலால் உடன்கூறினார். மற்று அசை. — தன்னின் வேறாயிருக்கையால் அணியும் ஆபரணங்களைப் பிறவென்றும், இவைபோல் பேரழகு செய்யாமையால் அல்லவென்றும், சொல்லினார். [இவை இரண்டுபாட்டாலும் இன்சொல்லுகளைச் சொல்லுவார்களுக்கு இம்மைப்பயன் சொல்லப்பட்டது.] (௫)

அல்லவை தேய வறம்பெருகு நல்லவை *
நாடி யினிய சொலின். (௬)

இ-ள். நல்லவை- (பொருளினாலே பிறர்க்கு) நன்மையைத் தருஞ்சொற்களை—நாடி- (மனத்தால்) ஆராய்ந்து—இனிய- இனிமையுள்ளனவாக—சொலின் (ஒருவன்) சொல்லுவானாயின் —(அவனுக்கு)—அல்லவை-பாவங்கள்—தேய—அறம் - தருமமானது|—பெருகும் - வளரும்.எ-று. ❊ தேய்தலாவது-பாவம் தன்பகையாகிய அறம் வளர்தலால் தனக்கு இடமில்லாமல் குறைதல். நல்லசொற்களை ஒருவன் நாடிச்சொல்லுமிடத்தும் கடினமாகச் சொல்லின் அறமாகாதென்பதாம். [இதனால் மறுமைப்பயன் சொல்லப்பட்டது.] (௬)

நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று *
பண்பிற் றலைப்பிரியாச் சொல் (௭)

இ-ள் பயனீன்று-(பொருளினாலேபிறருக்கு) நன்மையைக்கொடுத்து—பண்பின் - (இனிமைக்) குணத்தினின்றும்—தலைப்பிரியா - நீங்காத—சொல் - சொற்களானவை|—(ஒருவனுக்கு)—நயனீன்று - (இம்மைக்கு) நீதியையும் உண்டாக்கி—நன்றிபயக்கும் - (மறுமைக்கு) அறத்தையுந் தரும். எ-று. ❊ நீதி - உலகத்தோடு பொருந்துதல். (௭)

## ௰-ஆம், அதி — இனியவைகூறல்.

சிறுமையு ணீங்கிய வின்சொன் மறுமையு - - *
மிம்மையு மின்பந் தரும். - - - - - - (அ)

இ-ள். சிறுமையுணீங்கிய - (பொருளினாலே பிறர்க்கு) வருத்தஞ்செய்யாத — இன்சொல் - இனியசொற்களானவை |— (ஒருவனுக்கு) — மறுமையுமிம்மையும் - வருபிறப்பிலுமிப்பிறப்பிலும — இன்பம்-இன்பத்தை} — தரும். எ-று. ☼மறுமையின்பம் பெரிதாகலின் முன்சொல்லப்பட்டது. இம்மை இன்பமாவது - உலகம் தனக்கு வசப்படுதலால் நற்பொருள்களை அடைந்து இன்புறுதல்-[இவையிரண்டு பாட்டாலும் இருமைப் பயன்களும் ஒருசேர அடைதல் உறுதிசெய்யப்பட்டது ](அ)

இன்சொலினி தீன்றல் காண்பா னெவன்கொலோ *
வன்சொல் வழங்கு வது. - - - - - (கூ)

இ-ள். இன்சொல்-(பிறருடைய) இனியசொற்களானவை— இனிதீன்றல் - (தனக்கு) இன்பந்தருதலை—காண்பான் - அனுபவித்தறிகின்றவன் | —(அதுநிற்க) - வன்சொல்-கடுஞ்சொற்களை — வழங்குவது-(பிறரிடத்தே)சொல்லுவது | —எவன் - என்னபயனைக்குறித்து. எ-று. ☼ கடுஞ்சொல் - பிறருக்கும் இனிதன்றாகையால் அது சொல்லலாகா தென்பது கருத்து. (கூ)

இனிய வுளவாக வின்னாத கூறல் - - - - *
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. - - - (ய)

இ-ள். இனிய - (அறமுண்டாகும்) இன்சொற்களும்—உளவாக - (தன்னிடத்தே) யுண்டாயிருக்க — (அவற்றைச்சொல்லாமல்)—இன்னாத - (பாவமுண்டாகும்) கடுஞ்சொற்களை—கூறல்-(ஒருவன்)சொல்லுதல்| —கனி - (இனிய) கனிகளும்—இருப்ப- (தன்னிடத்தே) யுண்டாயிருக்க— (அவற்றைத்தின்னாமல்) —காய் - (இனிமையில்லாத) காய்களை— கவர்ந்தற்று - தின்பதனோடொக்கும். எ-று.☼ உபமேயத்துக்குச்சொல்லப்பட்ட இனிமையும் இன்னாமையும் உபமானத்துக்கும் கொள்ளப்பட்டன இனியகனிகள் - ஔவையுண்ட நெல்லிக்கனிபோல் அமிர்தானவை. இன்னாதகாய்கள்-எட்டிக்காய்போல் நஞ்சானவை. கடுஞ்சொற்சொல்லுதல் - முடிவிலே தனக்கே இனிதாகாதென்பதாம். [இவையிரண்டுபாட்டாலும் கடுஞ்சொற்சொல்லுதலின் குற்றஞ் சொல்லப்பட்டது.] (ய)

அஃதாவது-தனக்குப் பிறர்செய்த நன்றியைமறவாமை. இனிய சொற்களைச்சொல்லி இல்லறத்தின் வழுவாதவர்க்கு நன்றிமறத்தல் தீராக் குற்றமாதலின் இதனை நீக்குதற் பொருட்டு அதன்பின்வைக்கப்பட்டது.

செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும் - ✻
வானகமு மாற்ற லரிது. - - - - (௧)

இ-ள். செய்யாமல் - (தனக்குமுன்னொருதவியும்) செய்யாதிருக்க—செய்த - (ஒருவன்பிறனுக்குச்) செய்த—உதவிக்கு—வையகமும்-மண்ணுலகத்தையும்—வானகமும் - விண்ணுலகத்தையும்—மாற்றல் - ஈடாகக்கொடுத்தலும்—(ஒத்தல்|)—அரிது. எ-று.✻பிரதியுபகாரங்களுக்கெல்லாம் காரணமிருக்கையால் காரணமில்லாத இவ்வுபகாரத்திற்கு அவைபோதாவாயின.

காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினு - - ✻
ஞாலத்தின் மாணப் பெரிது. - - - (௨)

இ-ள். காலத்தினால் (ஒருவனுக்கு) முடிவுவந்தவளவிலே—செய்த-(ஒருவன்) செய்த—நன்றி - உபகாரமானது|—சிறிதெனினும் - (தன்னைநோக்கச்) சிறிதாயிருந்ததாயினும்—(அக்காலத்தைநோக்க) ஞாலத்தின் - நிலவுலகத்தினும் — மாணப்பெரிது-மிகப்பெரிதாயிருக்கும். எ-று.✻அக்காலத்தைநோக்கவேண்டுமேயல்லாமல் பொருட்சிறுமை நோக்கலாகாதென்பதாம். காலத்தினாலென்பது - வேற்றுமைமயக்கம். (௨)

பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கி - - ✻
னன்மை கடலிற் பெரிது. - - - - - (௩)

இ-ள். பயன்-(தாம்செய்யும் உதவியைப் பெறுவோராலே நமக்குப்பின்வரும்) பயனை—தூக்கார் - ஆராய்தலிலராய்—செய்த— உதவி - உதவியாகிய — நயன் - நயத்தை — தூக்கின்- ஆராயின்—நன்மை - (அத) னன்மையானது|—கடலின்-கடலினும்—பெரிது- எ - று. ✻ [இவை மூன்றுபாட்டாலும் முறையே செய்யாமற்செய்ததும், ஆபத்துவேளையிற் செய்ததும், பிரயோசனத்தை ஆராயாமற்செய்ததும், அளவில்லாதவையாகுதல் சொல்லப்பட்டது.] (௩)

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக் ❊
கொள்வர் பயன்றெரி வார். (௪)

இ-ள். தினைத்துணை நன்றி-(தடக்குத்) தினையளவதாகிய உபகாரத்தை—செயினும்-(ஒருவன்) செய்தானாயினும்—(அதனை அவ்வளவதாக நினையாமல்)—பனைத்துணையா - பனையளவதாக—கொள்வர்-நினைப்பார்.—பயன் - (அந்நினைப்பின்) பயனை—தெரிவார்-அறிபவர்|. எ - று. ❊ தினைபனையென்பன சிறுமைபெருமைகளுக்குக் காட்டும் அளவைகள். அந்நினைப்பின்பயனாவது அப்படி நினைப்போர்க்கு வரும்பிரயோசனம்.௪

உதவி வரைத்தன் றுதவி யுதவி ❊
செயப்பட்டார் சால்பின் வரைத்து. (௫)

இ-ள். உதவி - எதிர்செய்யும் உதவியானது|—உதவிவரைத்தன்று-(காரணமும்பொருளுங்காலமுமாகிய மூவகையானும் முன்செய்த) உதவியளவினதன்று.— உதவிசெயப்பட்டார் - அவ்வுதவிசெயப்பெற்றுக்கொண்டவரது — சால்பின்வரைத்து - தகுதியளவினதாம். எ-று.❊ சால்பு எவ்வளவு பெரிதாயுள்ளது உதவியும் அவ்வளவுபெரிதாமென்றற்குச் சால்பின் வரைத்தென்றார். [இவை யிரண்டுபாட்டாலும் செய்யாமற்செய்வது முதலான மூன்றுமல்லாத உதவியும் அறிவோர்க்குச்செய்தவிடத்துப் பெரிதாமென்பது சொல்லப்பட்டது (௫)

மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க ❊
துன்பத்துட் டுப்பாயார் நட்பு. (௬)

இ-ள். துன்பத்துள் - துக்ககாலத்தில்—துப்பாயார்-(தனக்கு)உதவியானவரது—நட்பு-சிநேகத்தை}—துறவற்க - விடாதிருக்கக்கடவன்.—மாசற்றார்- (அறிவொழுக்கங்களிற்) குற்றமற்றவரது—கேண்மை - உறவாந்தன்மையை}—மறவற்க-மறவாதிருக்கக்கடவன். எ - று. ❊ இம்மைக்கு உறுதிசொல்லவந்தவர் மறுமைக்கும் உறுதி உடன்சொல்லினார். (௬)

எழுமை யெழுபிறப்பு முள்ளுவர் தங்கண் ❊
விழுமந் துடைத்தவர் நட்பு. (௭)

இ-ள். தங்கண்-தம்மிடத்துஉண்டாகிய—விழுமம் - துன்பத்தை—துடைத்தவர் - நீக்கினவரது—நட்பு-நட்பினை}—எழு

மை- (வினைப்பயன்றொடரு) மெழுமையினையுடைய—எழுபி
றப்பும் (தம்) மெழுவகைப்பிறப்பினும்—உள்ளுவர்-(நல்லோ
ர்|) நினைப்பார். எ-று. ❋ வினாவுதோன்றத் துடைத்தலொன்
றார். எழுமையெழுபிறப்பு மென்றதற்கு - ஏழேழு தலைமு
றையு மெனினுமாம். [இவையிரண்டுபாட்டாலும் நன்றிசெய்
தவரது நட்பைவிடலாகாதென்பது சொல்லப்பட்டது.] (எ)

நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல - - - ❋
தன்றே மறப்பது நன்று. - - - - - (அ)

இ-ள். நன்றி- (ஒருவன்முன்செய்த) நன்மையை—மறப்ப
து| — நன்றன்று - (ஒருவனுக்கு) அறனல்ல.— நன்றல்லது-
(அவன்செய்த) தீமையை— அன்றே - செய்தபொழுதே—ம
றப்பது|—நன்று-அறமாம். எ-று. ❋ [இதனால் நன்மையும்
தீமையும் ஒருவனாலே செய்யப்பட்டவிடத்து அவ்விரண்டி
லே மறப்பதும்மறவாததும்வகுத்துச்சொல்லியவாறு.] (அ)

கொன்றன்ன வின்னா செயினு மவர்செய்த - - ❋
வொன்றுநன் றுள்ளக் கெடும். - - - (௯)

இ-ள். (தமக்குமுன்னொரு நன்மைசெய்தவர்)—கொன்ற
ன்ன - (பின்)கொன்றாற்போலும்— இன்னா-வெறுக்கப்படு
மவைகளை—செயினும் - செய்தாராயினும்— அவர்செய்த—
ஒன்றுநன்று - அந்நன்மையொன்றையும் - உள்ள - நினைக்க—
கெடும்- (அவையெல்லாம்|) இல்லையாம். எ-று. ❋ தினையளவு
பனையளவாகக் கொள்ளப்படுதலினாலே அவ்வொன்றுமே அ
வைகளையெல்லாம் கெடுக்குமென்பதாம். [இதனால் நன்றல்
லதை அன்றேமறக்கும் விதம் சொல்லப்பட்டது.] - - (௯)

எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை - ❋
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. - - - -(௰)

இ-ள். எந்நன்றி - எந்தவறங்களை [பெரியவறங்களையெ
ன்றபடி]—கொன்றார்க்கும் - கெடுத்தவர்க்கும் — உய்வு-பா
வத்தினீங்கும்வழி|—உண்டாம்.— செய்ந்நன்றி - (ஒருவன்)
செய்தவுபகாரத்தை — கொன்றமகற்கு - கெடுத்தமனிதனுக்
கு—உய்வு - அப்பாவத்தினீங்கும்வழி|—இல்லை.எ-று.❋பெ
ரிய அறங்களைச் சிதைத்தலாவது-மகளிர்கருவையழிக்கை முத
லாகிய பாதகங்களைச்செய்தல். [இதனாலே செய்த நன்றியைக்

கெடுத்தலின் கொடுமை சொல்லப்பட்டது.] (௰)

## ௰௨-ஆம், அதி—நடுவுநிலைமை.

அஃதாவது-பகைவர் அயலோர் நட்பினர்-இம்மூவகையோரிடத்தும் அறத்தின்வழுவாமல் ஒப்பநிற்குநிலைமை. இது நன்றிசெய்தவரிடத்து அந்நன்றியை நினைத்தவிடத்தே கெடுமன்றே அவ்விடத்தும் கெடலாகாதென்றற்குச் செய்நன்றியறிதலின்பின் வைக்கப்பட்டது.

தகுதி யெனவொன்று நன்றே பகுதியாற் - - *
பாற்பட் டொழுகப் பெறின். - - - - - (௧)

இ - ள். தகுதியெனவொன்றே - நடுவுநிலைமையென்றுசொல்லப்படும் ஓரறமுமே|—நன்று.—பகுதியால்-(பகைவர் அயலோர் நட்பினரென்னும்) பிரிவுதோறும் - பாற்பட்டு (தன்) முறைமையைவிடாது—ஒழுகப்பெறின் - நடக்கப்பெறின்.எ-று. ஏகாரம் - ஒன்று என்பதனோடுகூட்டப்பட்டது. பெறினென்பது அவ்வொழுக்கத்தி னருமைதோன்றநின்றது. [இதனால் நடுவு நிலைமையது சிறப்புச் சொல்லப்பட்டது.] (௧)

செப்ப முடையவ னாக்கஞ் சிதைவின்றி - - *
யெச்சத்திற் கேமாப் புடைத்து. - - (௨)

இ-ள். செப்பமுடையவன் - நடுவுநிலைமையை யுடையவனது—ஆக்கம்- செல்வமானது|—சிதைவின்றி - (பிறர்செல்வம்போல்)அழிதலின்றி—எச்சத்திற்(கும்)- (அவன்) சந்ததியார்க்கும்—ஏமாப்பு - உறுதியாதலை—உடைத்து - உடையதாம். எ-று. ஏகாரத்தினாலே தொக்கு நின்று வருவிக்கப்பட்ட வெச்சவும்மையால் சாமளவும் அவனுக்கும் உறுதியாதல்பெறப்படும். அறத்தோடுவருதலால் அப்படிப்பட்டதாயிற்று. (௨)

நன்றே தரினு நடுவிகந்தா மாக்கத்தை - - *
யன்றே யொழிய விடல். - - - - - (௩)

இ-ள், நன்றேதரினும் - (தீங்கன்றி)நன்மையேதரினும்—நடுவிகந்து-நடுவுநிலை நீங்கலால்—ஆம் - உண்டாகின்ற—ஆக்கத்தை - செல்வத்தை—அன்றே - அப்போதே—ஒழிய—விடல்-விடக்கடவன். எ - று. நன்மை தாராமையால் நன்றே

தரினு மென்றார். [இவை யிரண்டு பாட்டாலும் முறையே-நடுவுநிலைமையால் வந்த செல்வம்-நன்மையைத் தருதலும், மற்றைச்செல்வம்- தீமையைத்தருதலும், சொல்லப்பட்டன. (௩)

தக்கார் தகவில ரென்ப தவரவ - - - - - - ❋
ரெச்சத்தாற் காணப் படும். - - - - - - (௪)

இ-ள். தக்கார் - (இவர்) நடுவுநிலைமையை யுடையவர்—தகவிலர்-(இவர்) நடுவுநிலைமையையில்லாதவர் — என்பது - என்னும்விசேஷம் — அவரவர். அவரவருடைய — எச்சத்தால்-நல்லபுதல்வரது இருப்பினாலும் இல்லாமையாலும்—காணப்படும்-அறியப்படும். எ - று. ❋ நடுவுநிலைமையை உடையவருக்குச்சந்ததிஉண்டாதலும், இல்லாதவர்க்கு அது இல்லாமற்போதலும், நிச்சயமாதலின் அவ்விருவகையோர்களையும் அறிதற்கு அவை அடையாளங்களாயின. [இதனால் நடுவுநிலையோரையும், அல்லாதோரையும், அறியுமாறு சொல்லப்பட்டது.] (௪)

கேடும் பெருக்கமு மில்லல்ல நெஞ்சத்துக் - ❋
கோடாமை சான்றோர்க் கணி. - - - (௫)

இ-ள், கேடும்- (தீவினையினாலே) கேடும்|—பெருக்கமும்-(நல்வினையினாலே) பெருக்கமும்|—இல்லல்ல (யாவருக்கும்) இல்லாதவையல்ல. [முன்னமே அமைந்துகிடந்தனவென்றபடி]—(அவ்வழியை அறிந்து)—நெஞ்சத்து - மனதிலே—கோடாமை - (அவைகாரணமாகச்) சாய்தலில்லாமையே | — சான்றோர்க்கு- (அறிவால்) நிறைந்தோர்க்கு — அணி - அழகாம். எ - று. ❋ அவைகாரணமாகச்) சாய்தலாவது - கேடும், பெருக்கமும், பழவினையினாலே வந்துகொண் டிருக்க இப்போதை முயற்சியால் வருமவையாக நினைத்துக் கேடுவாராமையைக் குறித்தும், பெருக்கம்வருதலைக்குறித்தும், ஒரு பக்கத்திலே சாய்தலாம். — அவற்றுக்குக் காரணம் பழவினையே இச்சாய்தலல்ல என உண்மையுணர்ந்து நடுவுநிலையராயிருக்கை அறிவுடைமைக்கு அழகுசேய்தலாலே சான்றோர்க்கணியென்றார். (௫)

கெடுவல்யா னென்ப தறிகதன் னெஞ்ச - - ❋
நடுவொரீஇ யல்ல செயின். - - - - (௬)

இ-ள். (ஒருவன் |)—தன்னெஞ்சம் - தனதுமனம்—நடுவு-நீ

டுவு நிலைமையிலிருந்து — ஒரீஇ - நீங்கி — அல்ல - பக்ஷபாதங்களை — செயின் - செய்ய நினைக்குமாயின் — (அந்நினைவை) — யான் - நான் — கெடுவல் - கெடக்கடவேன் — என்பது - என்று ணருமுற்பாதமாக — அறிக - அறியக்கடவன். எ - று. ✲ உற்பாதம் - பின் வரும் நன்மை தீமைகளை முன்னறிவிக்குங்குறி. நினைத்தலும் - செய்தலோடொக்குமாதலின் செயினென்றார். (சு)

**கெ**டுவாக வையா துலக நடுவாக - - - ✲
நன்றிக்கட் டங்கியான் றாழ்வு - - - (எ)

இ-ள். உலகம் - உயர்ந்தோர் | — நடுவாக - நடுவாக (நின்று) — நன்றிக்கண் - அறத்தின் கண்ணே — தங்கியான் - தங்கினவனது — தாழ்வு - வறுமையை — கெடுவாக - வறுமையாக — வையா து - வையார். [வினையாலென்றபடி.] எ - று. ✲ கெடுதலென்பது விருத்திகெட்டு நிற்றது. செல்வமென்று கொள்ளுவாரென்பதாம். [இவை மூன்றுபாட்டாலும் முறையே - கேடும் - பெருக்கமும் பக்ஷபாதத்தால் வருவனவல்லவென்பதும், இதனுலே கேடுண்டாமென்பதும், இது செய்யாதவனது தாழ்வு கேடாகாதென்பதும், சொல்லப்பட்டன ] (எ)

**ச**மன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி - - - - (அ)

இ-ள். சமன்செய்து - (முன்னே தன்னைச்) சமனாகச்செய்து — சீர்தூக்கும் - (பின்னே தன்னிடத்து வைக்கப்பட்டபாரத்தை) அளவுசெய்வதாகிய — கோல்போல் - துலாம்போல் — அமைந்து - (இலக்கணங்களாலே) நிறைந்து — ஒருபால் - ஒருபக்கத்திலே — கோடாமை - சாயாமையானது | — சான்றோர்க்கு - (அறிவால்) நிறைந்தோருக்கு — அணி - அழகாம். எ - று. ✲ கோலுக்குச் சொல்லப்பட்ட - சமன்செய்தலும் - சீர்தூக்கலும் சான்றோருக்கும், சான்றோருக்குச் சொல்லப்பட்ட - அமைதலும் - ஒருபாற்கோடாமையும் - கோலுக்கும், கூட்டுக. சான்றோர் சீர்தூக்கலாவது - வாதிபிரதிவாதிகளாலே அறிவிக்கப்பட்டவற்றை முறையாலுள்ளபடியறிதல். ஒருபாற்கோடாமையாவது - அவ்வுள்ளவற்றைமறைக்காமல் - பகைவர் - அயலோர் - நட்பினர் - இம்மூவகையோருக்கும், ஒப்பச்சொல்லுதல். (அ)

செப்பக் கோட்ட மில்லது செப்ப மொருதலையா ※
வுட்கோட்ட மின்மை பெறின். - - (௯)

இ-ள். செப்பம் - நடுவுநிலைமையாவது|—சொல் - சொல்லினிடத்தே—கோட்டமில்லது - கோணுதலில்லாததாகும்.—(அதுஅறமாவது|)—உள் - மனத்தினிடத்தே — கோட்டமின்மை - கோணுதலில்லாமையை—ஒருதலையா - உறுதியாக—பெறின்-பெற்றால்.எ-று. ❋ [சபையாரைநோக்கி இவையிரண்டுபாட்டாலும் வாயினாலே தருமத்தின்படியே சொல்லினும் மனது ஒருபக்கத்திலே சாய்ந்திருக்குமாயின் அச்சொல் நடுவு நிலைமையாகாதென்பது சொல்லப்பட்டது.] [௯]

வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப் ※
பிறவுந் தமபோற் செயின். - - - (௰)

இ-ள்.பிறவும் - பிறர்பொருள்களையும்— தமபோல் - தம்பொருள்களைப்போல்—பேணி- காத்து—செயின் - (அச்செய்கையானது|)—வாணிகஞ்செய்வார்க்கு— வாணிகம் - நல்லவாணிகமாம்.எ-று. ❋ பிறவுந்தமபோற்செய்தலாவது - கொள்வது அதிகமும், கொடுப்பதுகுறைவும், ஆகாமல் - ஒப்பநாடிச்செய்தல். [வணிகரைநோக்கி இதனால் பிறர்பொருள்களையும் தம்பொருள்களைப்போற்செய்யும நடுவு நிலைமையுடையவர்க்கு வாணிகம் நன்றாமென்பது சொல்லப்பட்டது. (௰)

௱௩-ஆம்,அதி—அடக்கமுடைமை.

அஃதாவது - காயமும், வாக்கும், மனமும், தீயவழியிலேசெல்லாமல் அடங்குதலுடையனாயிருத்தலாம். இது - பிறர்குற்றம்போல் தங்குற்றம் காணும் நடுவுநிலைமையுடையவனுக்கு உரித்தாதலால் அந்நடுவு நிலைமையின் பின்வைக்கப்பட்டது.

அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை - - ※
யாரிரு ளுய்த்து விடும். - - - - - (௧)

இ-ள். (ஒருவனை)—அடக்கம் - அடக்கமாகிய அறமானது|—அமரருள்-தேவருலகத்தில்—உய்க்கும் - கொண்டுபோய்விடும்.—அடங்காமை-அடங்காமையாகிய பாவமானது|—ஆரிருள் - பொறுத்தற்கரிய நரகத்தில் — உய்த்துவிடும் - செ

துத்திவிடும்.எ-று. ❊இருளென்பது-நரகவகையிலொன்று(௧

காக்க பொருளா வடக்கத்தை யாக்க - - ❊
மதனினூஉங் கில்லை யுயிர்க்கு. - - - (௨)

இ-ள், அடக்கத்தை—பொருளா-(உறுதிப்) பொருளா க—காக்க- காக்கக்கடவன்.—உயிர்க்கு — அதனினூங்கு - அதனின்மேற்பட்ட—ஆக்கம் - செல்வமானது|—இல் - இல்லை (ஆதலால்) .எ-று. ❊ உயிர் இங்கே மனிதருயிரைக்காட்டிநின் றது.அறிந்து அடங்கிப்பயன்கொள்வது அதுவேயாகலின். (௨)

செறிவறிந் து சீர்மை பயக்கு மறிவறிந் - - - ❊
தாற்றி னடங்கப் பெறின். - - - - (௩)

இ-ள். அறிவறிந்து- (அடங்குதலேநடிக்கு) அறிவாவதென் றுஅறிந்து—ஆற்றின்- நல்லவழியால்—(ஒருவன்)—அடங்கப் பெறின்—செறிவு- அவ்வடக்கமானது|—அறிந்து-(நல்லோ ரால்)அறியப்பட்டு- சீர்மை- மேம்பாட்டை —பயக்கும்-(அ வனுக்குத்)தரும்.எ- று. ❊ இல்வாழ்வானுக்கு அடங்கும்வழி யாவது-காயமும் வாக்குமனமும் அவன்வசப்படுதல். -(௩)

நிலையிற் றிரியா தடங்கியான் றோற்ற - - - ❊
மலையினு மாணப் பெரிது. - - - - (௪)

இ - ள். நிலையின் - (இல்வாழ்க்கையாகியதன்) வழியில்— திரியாது-வேறுபடாது(நின்று)—அடங்கியான்- அடங்கினவ னது—தோற்றம்-உயர்ச்சியானது— மலையினும் - மலையுயர் ச்சியினும்—மாணப்பெரிது-மிகப்பெரிதாம்.எ- று. ❊ வே றுபடாது நின்று அடங்குதல்-ஐம்பொறிகளாலும், ஐம்புலங் களையும் அநுபவித்துக்கொண்டிருந்தே அடங்குதல். மலை அதனுயர்ச்சியை உணர்த்தலால் ஆகுபெயர். (௪)

எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளுஞ் - - ❊
செல்வர்க்கே செல்வந் தகைத்து. - - - (௫)

இ-ள். பணிதல்- (பெருமைப்பாடில்லா)தடங்குதல்| —எல் லார்க்கும்—நன்றாம்-(ஒப்ப)நன்றாகும்-(ஆயினும்) - அவரு ள்ளும்—செல்வர்க்கே—செல்வந்தகைத்து - வேறொருசெல்வ மாய்த்தோன்றுஞ் சிறப்பினையுடையதாம்.எ-று. ❊ பெருமை ப்பாட்டையுண்டாக்கும்- கல்வியும், குடிப்பிறப்பும், உடைய

வர்- அது இல்லாமல் அவைகளாலே அடங்கியவிடத்து - அவ்வ டக்கம் சிறந்து தோன்றாதலின் - செல்வர்க்கே செல்வந்த கைத்தென்றார். செல்வத்தகைத்தென்றது - விகாரப்பட்டுநின் றது. [இவையைந்து பாட்டாலும் பொதுவகையால் அடக்கத் தினது சிறப்புச் சொல்லப்பட்டது. (௫)

ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி - - - *
னெழுமையு மேமாப் புடைத்து. - - - (௬)

இ-ள். (ஒருவன்) — ஒருமையுள் - ஒருபிறப்பின்கண்ணே — ஆமைபோல் — ஐந்து - ஐந்தை — அடக்கலாற்றின் - அடக்கவு ல்லவனாகில் — (அவ்வல்லமை அவனுக்கு) — எழுமையும் - எழு பிறப்பின்கண்ணும் — ஏமாப்புடைத்து - காவலாதலையுடையு தாம். எ-று. ஆமை அடக்குமைந்து - கால்கள் நான்கும், த லையொன்றும், ஆகியவுறுப்புகள். அவ்வடக்கம் - துன்பம்சே ராதிருத்தற்கு ஒருவன் அடக்கவேண்டுமைந்து - மெய்வாய் கண்மூக்குச் செவியென்னும் பொறிகள். இவ்வடக்கம் பாப ம் சேராதிருத்தற்கு. ஒருபிறப்பிலே செய்யப்பட்ட வினைப்ப யன் - எழுபிறப்புந் தொடருமென்பது - இதனாலறிக. [இதனா லே காயத்தினடக்கம் சொல்லப்பட்டது.] (௬)

யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற் - - - *
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. - - (௭)

இ-ள். யா - (காக்கவேண்டுமவை) யாவையும் — காவாராயி னும் - காக்கமாட்டாராயினும் — நா - நாவொன்றையும் — கா க்க - காக்கக்கடவன், — காவாக்கால் - (அதனைக்) காக்கமாட்டா ராயின் — சொல்லிழுக்குப்பட்டு - சொற்குற்றத்திலே அகப்ப ட்டு — சோகாப்பர் - (தாமே) துன்பப்படுவார். எ-று. யா வென்பது - எவையென்னும் பொருளைத் தருகிற அஃறிணைப் பன்மைவினைப்பெயர். சொற்குற்றம் - சொல்லிடத்தே தோன் றுங்குற்றம். சோகாப்பரென்பது ஒருசொல். (௭)

ஒன்றானுந் தீச்சொற் பொருட்பய னுண்டாயி - *
னன்றாகா தாகி விடும். - - - - - - (௮)

இ-ள். தீச்சொல் - தீயசொற்களது — பொருட்பயன் - பொ ருள்களாலே (பிறருக்குவரும்) பயனனது — ஒன்றானும் - ஒன் றாயினும் — உண்டாயின் - (ஒருவனிடத்திலே) உண்டாவதாயி

ன் — நன்று. (அவனுக்குப்பிறவறங்களாலுண்டாகிய) நன்மையானது — ஆகாதாகிவிடும் - தீதாய்விடும். எ-று. ❋ தீய சொல் - பொய். குறளை - கடுஞ்சொல் - ஆம். பயன் - துன்பம். (அ)

தீயினாற் சுட்டபு ணுள்ளாறுமாறாதே ❋
நாவினாற் சுட்ட வடு. (௯)

இ-ள். (ஒருவனையொருவன்) — தீயினால் - சுட்ட - புண் - புண்ணானது | — (உடம்பினிடத்தேயிருந்தாலும்) — உள் - மனத்தினிடத்தே — ஆறும் - (அப்போதே) ஆறும். — (அப்படியல்லாமல்) — நாவினால் - (தீயசொற்களையுடைய) நாவினாலே — சுட்ட — வடு - வடுவானது | — (அதனிடத்துமெப்போதும்) ஆறாது. எ-று. ❋ ஆறிப்போதலால் தீயினாற்சுட்டதனைப்புண்ணென்றும், ஆறாமையால் நாவினாலே சுட்டதனை வடுவென்றும், சொல்லினார். [தீயாகிய உபமானத்தினும் தீயசொல்லாகிய உபமேயத்திலே ஆறாமையை அதிகமாகச் சொல்லுதலாலே வேற்றுமையணியாகும். [இவைமூன்றுபாட்டாலும் வாக்கின் அடக்கம் சொல்லப்பட்டது.] (௯)

கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி ❋
யறம்பார்க்கு மாற்றி னுழைந்து. (௰)

இ-ள். கதம் - கோபத்தை — காத்து - (மனத்திலேதோன்றாமல்) காத்து — கற்று - கல்வியுடையவனாகி — அடங்கல் - அடங்குதலில் — ஆற்றுவான் - வல்லவனாயிருப்பவனது — செவ்வி - சமயத்தை — அறம் - அறக்கடவுளானவன் | — பார்க்கும் - பாரா நிற்பான் — ஆற்றில் - (அவனைச்சேரும்) வழியிலே — நுழைந்து. எ-று. ❋ அடங்குதல். மனம் புறத்திலே பரவாமல் அறத்திலே நிற்றல். செவ்வி - தன்குறைசொல்லுதற்கேற்றகாலம். இப்படிப்பட்டவனை அறக்கடவுள் தானே சென்று அடைவானென்பதாம். [இதனாலேமனவடக்கஞ்சொல்லப்பட்டது.] (௰)

௱௪-ஆம், அதி — ஒழுக்கமுடைமை.

அஃதாவது - தங்கள்தங்கள் வருணாசிரமங்களுக்குச் சொல்லப்பட்ட ஆசாரத்தையுடையவனாயிருக்கையாம். இது காயமுதலானவை அடங்கினவர்க்கல்லது முடியாதாகலின் அதன்பின்வைக்கப்பட்டது.

ஒழுக்கம் விழுப்பந் தரலானொழுக்க - - - - *
முயிரினு மோம்பப் படும். - - - - (௧)

இ-ள். ஒழுக்கம்-ஆசாரமானது—விழுப்பம்- சிறப்பை—தரலான்- (எல்லாருக்கும்) கொடுத்தலால் — ஒழுக்கம் - அவ்வாசாரமானது—உயிரினும்—ஓம்பப்படும்-காப்பாற்றப்படும். எ-று. ❊உயர்ந்தோர்க்கும், இழிந்தோர்க்கும் - சமமாகச் சிறப்பினைத் தருதலால் - விழுப்பந்தரலானெனப் பொதுப்படச்சொல்லினார். சுட்டுப்பெயர் - வருவிக்கப்பட்டது. உயிர்-எல்லாப்பொருளினுஞ் சிறந்ததாயினும் ஒழுக்கம்போற் சிறப்பைத் தாராமையால் உயிரினு மோம்பப்படுமென்றார். (௧)

பரிந்தோம்பிக் காக்க வொழுக்கந் தெரிந்தோம்பித் *
தேரினு மஃதே துணை. - - - - - - (௨)

இ-ள். ஒழுக்கம்-ஆசாரத்தை—ஓம்பி-(ஒன்றாலும் அழிவுபடாமற்)பேணி—பரிந்து-வருந்தியும்—காக்க- காக்கக்கடவன்.—தெரிந்து. (பலவறங்களையும்) ஆராய்ந்து—(இவற்றுள் இருமைக்குந் துணையாவது எதுவென்று)-ஓம்பி- (மனத்தை) அடக்கி—தேரினும்-அறிந்தாலும்—துணை- துணையாய்முடிவது—அஃதே-அவ்வாசாரமே. (ஆதலால்).எ-று. ❊ பரிந்துமென்னும்மை-விகாரத்தால் தொக்கது. [இவை இரண்டு பாட்டாலும் ஒழுக்கத்தினது சிறப்புச் சொல்லப்பட்டது.] (௨)

ஒழுக்க முடைமை குடிமை யிழுக்க - - - *
மிழிந்த பிறப்பாய் விடும். - - - - (௩)

இ-ள். (எல்லார்க்கும்)—ஒழுக்கமுடைமை- (தத்தம் வருணத்துக்குஏற்ற)ஆசாரமுடைமையானது—குடிமை - குலமுடைமையாம்.—இழுக்கம்- (அவ்வாசாரத்தினின்றுந்) தவறுதலானது—இழிந்தபிறப்பாய்விடும் - தாழ்ந்த வருணமாய்விடும்.எ-று.❊ஒழுக்கத்திலிருந்து தவறுதல் இழிந்தபிறப்பாய்விடுமெனவே ஒழுக்கத்தினுயர்தல் உயர்ந்தபிறப்பாய் விடுமென்பதும் கொள்ளப்படும். குலம்-குடிச்சிறப்பு. (௩)

மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான் *
பிறப்பொழுக்குங் குன்றக் கெடும். - - - (௪)

இ-ள். ஓத்து-(கற்ற) வேதத்தை—மறப்பினும் - மறந்தால்

னாயினும—கொளலாகும் - (வருணங்கெடாமையினாலே பின் னும்) ஓதிக்கொள்ளலாம்.—பார்ப்பான் - பிராமணனது—பி றப்பு - உயர்ந்தவருணமானது|—ஒழுக்கங்குன்ற - ஆசாரங்கு றைய—கெடும்.எ-று. ❊ மறந்தவிடத்தே இழிகுலத்தாரும் ஆதலால் மறக்கலாகாதென்னுங்கருத்தால் மறப்பினுமென் றார். சிறப்புடையமுதல் வருணத்துக்குச் சொல்லுதலினாலே இது மற்றைவருணங்களுக்கும் கொள்ளப்படும். (௪)

அழுக்கா றுடையான்க ணாக்கம்போன் றில்லை - ❊
யொழுக்க மிலான்க ணுயர்வு. - - - (௫)

இ - ள். அழுக்காறுடையான்கண் - பொறாமையுடையவனி டத்தே—ஆக்கம்போன்று - செல்வமானதுபோன்று—ஒழுக் கமில்லான்கண் - ஆசாரமில்லாதவனிடத்தே—உயர்வு - உயர்ச்சி யானது|—இல்லை.எ-று. ❊ கொடுப்ப தழுக்கறுப்பா னென் னுங் குறளிற்சொன்னபடியே இவ்வுபமானத்தினால் - ஒழுக்க மில்லாதவனது சுற்றத்தாருக்கும் உயர்ச்சியில்லை யென்பது கொள்ளப்படும். உயர்வு-உயர்குலமாதல். (௫)

ஒழுக்கத்தி னொல்கா ருரவோ ரிழுக்கத்தி - - ❊
னேதம் படுபாக் கறிந்து. - - - - - (௬)

இ-ள். உரவோர் - மனவலிமையையுடையோர்|—(செய்த ற்கருமைநோக்கி)—ஒழுக்கத்தின் - ஆசாரத்தில்—ஒல்கார் - சு ருங்கார்.—இழுக்கத்தின்- அத்தவறுதலால்— ஏதம் - (இழிகுல மாதலாகிய) குற்றம்—படுபாக்கு - உண்டாதலை—அறிந்து.எ- று. ❊ ஒழுக்கத்தின்சுருக்கம் அதனை உடையார் மேலேற்றப் பட்டது. கொண்ட விரதம் விடாமைபற்றி உரவோரென்றார்.

ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தி - ❊
னெய்துவ ரெய்தாப் பழி. - - - - - - (௭)

இ-ள்.(எல்லாரும்|)—ஒழுக்கத்தின்-ஆசாரத்தினாலே—மே ன்மை-மேம்பாட்டை—எய்துவர் - அடைவார்.— இழுக்கத் தின்-(அதிலிருந்து) தவறுதலாலே—எய்தாப்பழி - (தாம்) அ டைதற்கு உரித்தல்லாதபழியை—எய்துவர்-அடைவார்-எ-று. ❊பகைமையால் அடாதபழியைச் சொல்லியவிடத்து அதனை யும் அத்தவறுபற்றி அடுக்குமென்று உலகம் கொள்ளுமாகலி ன் எய்தாப்பழி எய்துவரென்றார். [இவை ஐந்துபாட்டாலு

ம் ஒழுக்கமுள்ளவிடத்து உண்டாகும் குணமும் இல்லாதவி
டத்து உண்டாகும் குற்றமும் சொல்லப்பட்டன.] (எ)

நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்க *
மென்று மிடும்பை தரும். - - - - - (அ)

இ-ள். (ஒருவனுக்கு)— நல்லொழுக்கம் - நல்லவாசாரமா
னது|— நன்றிக்கு - அறத்துக்கு— வித்தாகும் - காரணமாகு
ம்.—தீயொழுக்கம் - தீயவாசாரமானது|—என்றும் - இருமை
களிலும்—இடும்பை - துன்பத்தை}—தரும். எ-று. ❋ நல்
லொழுக்கம் அறத்துக்குக் காரணமாமென்றதனால் - தீயவொ
ழுக்கம் பாவத்திற்குக் காரணமாமென்பதும், தீயொழுக்கம்
இருமைகளிலும் துன்பம் தருமென்றதனால் - நல்லொழுக்கம
இருமைகளிலும் இன்பம் தருமென்பதும், கொள்ளப்படும்.
இதனாலே பின்விளைவு சொல்லப்பட்டது.] (அ)

ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய - - *
வழுக்கியும் வாயாற் சொலல். - - (௯)

இ-ள் - வழுக்கியும் - மறந்தும்—தீய - தீயசொல்லுகளை—
வாயாற்சொலல்|—ஒழுக்கமுடையவர்க்கு— ஒல்லா - முடியா
வாம். எ-று. ❋ தீயசொல்லுகளாவன - பிறருக்குத் தீங்கைத்தரு
ம் பொய்முதலானவையும், வருணத்துக்கு உரியனவல்லாதவை
யும், ஆம். நல்லசொற்களிலே பழகியதென்னும் பொருள்ப
டுதற்குச் சொலலென்னாது வாயாற்சொலவென்றார். - (௯)

உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங் - *
கல்லா ரறிவிலா தார். - - - - - - (௰)

இ-ள். உலகத்தோடு - உயர்ந்தோரோடு—ஒட்ட - பொருந்
த—ஒழுகல் - நடத்தலை—கல்லார் - கற்றிலாதவர்|—பல - பல
நூல்களையும் — கற்றும் - கற்றாராயினும்—அறிவிலாதார். எ-
று. ❋ உயர்ந்தோரோடு பொருந்தநடத்தலாவது - அவரெப்ப
டி நடந்தாரோ அப்படி நடத்தல் அறநூலிலேசொல்லப்பட்
டவைகளில் - இக்காலத்துக்கு ஏற்காதவைகளை விட்டு - அதிலே
சொல்லப்படாதவைகளில் ஏற்குமவைகளைத் தழுவி வருதலா
ல் அவையும் அடங்குதற்கு - உலகத்தோ டொட்டவொழுகலெ
ன்றும், கல்விக்குப் பயன் அறிவும், அறிவுக்குப் பயன் ஒழுக்க
மும் - ஆதலின் அவ்வொழுக்கத்தைக் கல்லாதார் பலகற்றும் அ

றிவிலாதாரொன்றும், சொல்லினார். [இவை யிரண்டுபாட்டாலும் சொல்லாலும், செயலாலும்,வரும் ஒழுக்கங்க ளெல்லாம் ஒருவிதத்தினாலே தொகுத்துச் சொல்லப்பட்டன.] (௰)

***** *******—***—************

## ௱௫-ஆம்,அதி—பிறனில்விழையாமை.

அஃதாவது - காமமயக்கத்தினாலே பிறனது மனையாளை விரும்பாமையாம். இது - ஒழுக்கமுடையவரிடத்தே உண்டாவதாகலின் அதன்பின் வைக்கப்பட்டது.

பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்
தறம்பொருள் கண்டார்க ணில். - - - (௧)

இ-ள். பிறன்-பிறனுக்கு—பொருளாள் - உடைமையாந்தன்மையவளை—பெட்டு - இச்சித்து—ஒழுகும் - நடக்கின்ற—பேதைமை - அறியாமையானது—ஞாலத்து - பூமியின்கண்—அறம்-அறநூலையும்—பொருள் - பொருணூலையும்—கண்டார்கண் - ஆராய்ந்தறிந்தவரிடத்தே—இல்-இல்லை.எ - று. அறமும் பொருளும் அவற்றினூல்களைக் காட்டலால் ஆகுபெயர்கள். இன்பமொன்றையே நோக்கும் காமநூலுடையார் இப்பொல்லாதவொழுக்கத்தையும் சொல்லுவாராதலின் அறம் பொருள் கண்டார்கணில்லென்றார். எனவே இப்பேதைமை யுடையவரிடத்தே அறமும்பொருளும் இல்லையென்பது பெறப்பட்டது. (௧)

அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை *
நின்றாரிற் பேதையா ரில். - - - - (உ)

இ-ள். (காமங்காரணமாக)—அறன்கடை - பாவத்திலே—நின்றாருளெல்லாம் - நின்றவரெல்லாருள்ளும்—பிறன்கடை - பிறனதுவாயிலினிடத்தே—நின்றாரின் - (அவன்மனையாளை யிச்சித்து) நின்றவரிபோல்—பேதையார்- மூடர்—இல் - இல்லை. எ - று. பாவச்செயலிலே நின்ற பெண்வழி நடப்பவரும்,பரத்தையரையும் இழிகுலமகளிரையும் அநுபவிப்பவரும்,போல் அறம்பொருள்களைமாத்திரம் அல்லாமல் பிறன்மனையாளிடத்துச் செல்வோர் அச்சத்தினாலே இன்பத்தையும் இழப்பாராதலின் பேதையாரில்லென்றார். எனவே இன்பமுமில்லையென்பது பெறப்பட்டது. (உ)

விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரிற் ※
தீமை புரிந்தொழுகு வார். - - - - - - (௩)

இ-ள். மன்ற-ஐயமில்லாமல்—தெளிந்தார் - (தம்மைநல்லவரென்று) தெளிந்தவரது - இல் - மனையாளிடத்தே—தீமை-பாவஞ்செய்தலை—புரிந்து-விரும்பி — ஒழுகுவார் - நடப்பவர் | —(உயிருடையவராயிருந்தாலும்) — விளிந்தாரின்-செத்தவரின் —வேறல்லர்-வேறாகார்.எ-று. ※ உயிரிருப்பினும் அவ்வுயிர் அறம்பொருளின்பங்களாகிய பயன்களை அடையாமையால் விளிந்தாரின் வேறல்லரென்றும், அவர் அப்பாவஞ்செய்வது மனையாளையுடையவரது தெளிவு பற்றியாதலின் - தெளிந்தாரில்லென்றும், சொல்லினர். (௩)

எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந் ※
தேரான் பிறனில் புகல். - - - - - - - (௪)

இ-ள். (காமமயக்கத்தினாலே)— தினைத்துணையும் - தினையளவும்[சிறிதாயினுமென்றபடி]— தேரான் - (தம்பிழையை) நினையாமல்—பிறனில் - பிறனுடையமனையாளிடத்தே — புகல் -செல்லுதல் | — எனைத்துணையராயினும் - எவ்வளவுபெருமையையுடையவராயிருக்கினும்—என்னாம்- (ஒருவருக்கு) யாதாய்முடியும்.எ - று. ※ இந்திரன்போல் எல்லாப்பெருமைகளையும் இழந்து சிறுமையை அடைவானென்பது குறித்து என்னாமென்றார். இழிவு செய்தலில் எனைத்துணையரென்னும் பன்மை தேரானென்னும் ஒருமையோடு மயங்கிற்று. (௪)

எளிதென வில்லிறப்பா னெய்து மெஞ்ஞான்றும் ※
விளியாது நிற்கும் பழி. - - - - - (௫)

இ-ள். எளிதென-(இவளைச்சேர்தல்) எளிதென்று நினைத்து —(பின்விளைவைநினையாமல்)—இல் - (பிறன்) மனைவியிடத்தே—இறப்பான் - செல்லுவோன் | —விளியாது - அழியாமல் —எஞ்ஞான்றும்-எக்காலமும்—நிற்கும் - நிலைநிற்பதாகிய— பழி-(குடிப்)பழியை — எய்தும்- அடைவான்.எ-று. ※ இல்லிறத்தல் - இல்லாளிடத்துவரம்புகடந்து செல்லுதல். (௫)

பகைபாவ மச்சம் பழியென நான்கு - . - - ※
மிகவாவா மில்லிறப்பான் கண். - - - - - (௬)

இ - ள்.இல்-(பிறன்) மனைவியினிடத்தே—இறப்பான்கண்-

செல்லுவோனிடத்து — பகைபாவமச்சம் பழியெனநான்கு ம்-பகையும் பாவமும் அச்சமும் குடிப்பழியும் என்னும்இந் நான்குகுற்றங்களும்|—இகவாவாம்-(ஒருபோதும்) நீங்காவா ம்,எ-று. ☼ எனவே இருமைப் பயன்களையும் இழப்பானென் றதாயிற்று.[இவை ஆறுபாட்டாலும் பிறன்மனையாளைவிரும் புவோனிடத்துக் குற்றம் சொல்லப்பட்டது.] (௬)

அறனியலா னில்வாழ்வா னென்பான் பிறனியலாள் *
பெண்மை நயவா தவன். - - - - (எ)

இ-ள். பிறனியலாள் - பிறனுடையவியல்பிலே (அவனுக்கு உரிமைபூண்டு) நிற்பவளது—பெண்மை - பெண்தன்மையை —நயவாதவன் - விரும்பாதவன்|— அறனியலான் - அறமாகி யவியல்போடுகூடி — இல்வாழ்வானென்பான் - இல்வாழ்வா னென்றுசொல்லுப்படுவான். எ - று. ☼ இல்லறம்செய்வானெ னப்படுவான் அவனே யாவன் என்பதாம். (எ)

பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க் *
கறனொன்றோ வான்ற வொழுக்கு. - - (அ)

இ - ள். பிறன்மனை - பிறனதுமனையாளை—நோக்காத - உ ட்கொள்ளாத— பேராண்மை - பெரிய ஆண்தன்மையானது| —சான்றோர்க்கு - (அறிவால்) நிறைந்தோர்க்கு—அறனொன் றோ-தருமமாவதொன்றோ—ஆன்றவொழுக்கு - நிறைந்தவொ ழுக்கமுமாம். எ-று. ☼ புறப்பகைகளை அடக்கும் ஆண்மையு டையோர்க்கும் உட்பகையாகிய காமத்தை அடக்குதல் அ ருமையாகலால் அதனை அடக்கிய ஆண்மையைப் பேராண் மையென்றார். செய்தற்கரிய - அறமும், ஒழுக்கமும், இதனை ச்செய்யாமையினாலேயே உண்டாகுமென்பதாம். (அ)

நலக்குரியார் யாரெனி னாமநீர் வைப்பிற் - - *
பிறற்குரியா டோடோயா தார். - - - (௯)

இ - ள். நாமநீர் - அச்சந்தங்குங்கடலாற்சூழப்பட்ட—வை ப்பில் - பூமியினிடத்தே—நலக்கு - (எல்லா) நன்மைகளையும் பெறுதற்கு—உரியார் | — யாரெனின்—பிறற்கு - பிறனுக்கு —உரியாள்-உரிமையானவளது—தோள் - தோள்களை—தோ யாதார்-சேராதவர்.எ-று.☼நலத்துக்கென்பது - நலக்கெனவி காரப்பட்டது. இம்மையிலும் நன்மை அடைவாரென்பதாம்.

அறன்வரையா னல்ல செயினும் பிறன்வரையாள் *
பெண்மை நயவாமை நன்று. - - - (ய)

இ-ள். (ஒருவன்)—அறம்-அறத்தை—வரையான்-(தனக்குஉரியதாகக்)கொள்ளாதவனாகி—அல்ல-பாவங்களை—செயினும்—(அவனுக்கு)—பிறன்வரையாள்-பிறனெல்லையிலே நிற்பவளது—பெண்மை-பெண்தன்மையை—நயவாமை-விரும்பாமை(உண்டாயின்)—நன்று-(அது) நன்று. எ-று. * அக்குற்றங்களினும் இக்குணமே மேற்பட்டுத் தோன்றுமென்பதாம். [இவைநான்குபாட்டாலும் பிறன்மனையாளை விரும்பாதவனுடைத் தூய குணம்சொல்லப்பட்டது.] (ய)

---

ருரு-ஆம், அதி—பொறையுடைமை.

அஃதாவது-காரணம்பற்றியாவது அறியாமையாலாவது ஒருவன் தம்மிடத்துக்குத் தீங்குசெய்தவிடத்துத் தாமும் அதனை அவனிடத்துச் செய்யாது பொறுத்தலுடையராதல். இது பிறனில் விழையாமைபோல் அவசியம் வேண்டுவதா யிருக்கையால் அதன்பின் வைக்கப்பட்டது.

அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை - *
யிகழ்வார்ப் பொறுத்த றலை. - - - (க)

இ-ள். அகழ்வாரை-(தன்னை) வெட்டுவோரை—தாங்கும்-(வீழாமற்) சுமப்பதாகிய — நிலம்போல—தம்மை— இகழ்வார்-நிந்திப்பவரை—பொறுத்தல்|—தலை - முதலான அறமாம். எ-று. * இகழ்தல்-தீங்குசெய்தலும்சொல்லுமாம். (க)

பொறுத்த லிறப்பினை யென்று மதனை - - *
மறத்த லதனினு நன்று. - - - (உ)

இ-ள். இறப்பினை-(ஒருவன்செய்த) மிகையை—என்றும்-தன்னாலொறுத்தற்குக்கூடியகாலத்திலேயும் — பொறுத்தல்-பொறுக்கக்கடவன்.—மறத்தல்-(அதனை நினையாமல் அப்பொழுதே) மறத்தல்(பெறின்.)—அதனினும்-அப்பொறுமையினும்—நன்று-மிகநல்லது.எ-று.*மிகை-முன்சொல்லப்பட்டவிரண்டு குற்றங்களும். பொறுக்கும் போதும் அக்குற்றம் உட்கொள்ளப்படுதலால் மறத்தலை அதனினும் நன்றென்றார். (உ)

இன்மையு ளின்மை விருந்தொரால் வன்மையுள் *
வன்மை மடவார்ப் பொறை. - - - - (௫)

இ-ள். (ஒருவனுக்கு)—இன்மையுளின்மை— வறுமையுள்வறுமையாவது|—விருந்தொரால்-விருந்தினரை (ஏற்றுக்கொள்ளாமல்) நீக்குதலாம்.—(அதுபோல்)—வன்மையுள்வன்மை-வல்லமையுள்வல்லமையாவது | — மடவார் - அறியாமையினுலே தீங்குசெய்தவரை—பொறை - பொறுத்தல்.எ - று. ❊ உடைமையுளின்மையென்னுங்குறளின்படி - எப்படிவிருந்தினரையுபசரியாமைபொருளுடைமை ஆகாதோ அப்படியே அறிவிலாரைப் பொறுத்தல் இளைத்தலாகாதென்பது கருத்து. (எடுத்துக்காட்டுவமையணி.) (௫)

நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை
போற்றி யொழுகப் படும். - - - - - - (௬)

இ - ள். (ஒருவன்)—நிறையுடைமை-நிறைவையுடையனுயிருக்கை—நீங்காமை - (தன்னைவிட்டு) நீங்காமையை—வேண்டின்-வேண்டுவானாயின்—(அவனுல்!)—பொறையுடைமை—பொறுமையுடையனுயிருக்கை}— போற்றி - அழியாமற்) காத்து—ஒழுகப்படும்-நடக்கப்படும்.எ- று. ❊ பொறுமையிலார்க்கு நிறைவில்லை யென்பதாயிற்று. [இவை நான்குபாட்டாலும் பொறையுடைமையின் சிறப்புச்சொல்லப்பட்டது.] (௬)

ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர் - *
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து. - (௭)

இ-ள். (பிறன் தமக்குத் தீங்குசெய்தவிடத்து) — ஒறுத்தாரை- (பொறாமல்அவனை) ஒறுத்தவரை}—(அறிவுடையோர்|) —ஒன்றாக-ஒருபொருளாக—வையார்- மனத்துட்கொள்ளார். —பொறுத்தாரை-(அதனைப்)பொறுத்தவரை}— பொன்போல்-பொன்னைப்போல்—பொதிந்து - இடைவிடாது — வைப்பர்-மனத்துட்கொள்வார். எ - று. ❊ ஒறுத்தவர் அத்தீங்குசெய்தவர்க்குச் சமானமாதலின் ஒன்றாகவையாரென்றார்.

ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்*
பொன்றுந் துணையும் புகழ். - - - - (௮)

இ-ள். ஒறுத்தார்க்கு - (தமக்குத்தீங்குசெய்தவனை) ஒறுத்தவர்க்கு(உண்டாவது|)—ஒருநாளையின்பம் - அவ்வொருநாளை

யின்பமே.—பொறுத்தார்க்கு - (அதனைப்) பொறுத்தவர்க்கு —பொன்றுந்துணையும் - (உலக) மழியுமளவும்—புகழ்|—உண்டாம்.எ-று. ❋ ஒருநாளையின்பம் - அந்நாளொன்றிலும்தினைத்தது முடித்தோமே யென்றுசெருக்கியிருக்கும்பொய்யின்பமாம்.தனக்கிடமாகியஉலகம் அழியப் புகழும்அழியுமாதலின் ஏற்புடையஉலகமென்னுஞ்சொல்வருவிக்கப்பட்டது.(௬)

திறனல்ல தற்பிறர் செய்யினு நோநொந் - - ❋
தறனல்ல செய்யாமை நன்று. - - - - - (௭)

இ-ள். திறனல்ல - செய்யத்தகாதகொடியவைகளை—தன்-தன்னிடத்து—பிறர்—செய்யினும் — நோ -(அவருக்குஅதனால்வருவதாகிய)துன்பத்துக்காக—நொந்து - வருந்தி—அறனல்ல- அறமல்லாதசெயல்களை—செய்யாமை - செய்யாதிருத்தல்|—நன்று-(ஒருவனுக்கு)நல்லதாம். எ-று.❋ துன்பத்துக்காக வருந்துதலாவது - இப்பாவத்தினாலே இவர் வரும்பிறப்பிலே எரிவாய் நரகத்திலே வீழ்வாரோவென்று பரிதல். (௭)

மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந் - ❋
தகுதியான் வென்று விடல். - - - - - (௮)

இ-ள். மிகுதியால் - மனச்செருக்கினாலே—. (தம்மிடத்து) —மிக்கவை - தீயவைகளை—செய்தாரை}—தாம்|—தந்தகுதியால்—தமதுபொறுமையினாலே — வென்றுவிடல் - வென்றுவிடக்கடவர். எ-று. ❋ தாமும் அவரிடத்தே தீயவைகளைச்செய்து தோற்றுப்போகாமல் பொறுமையால் அவரின் மேற்பட்டு வெல்லுகவென்பதாம். [இவை நான்குபாட்டாலும் பிறர்செய்த குற்றங்களைப் பொறுத்தல் சொல்லப்பட்டது.] (௮)

துறந்தாரிற் றூய்மை யுடைய ரிறந்தார்வா - ❋
யின்னாச்சொ னோற்கிற் பவர். - - - (௯)

இ-ள். இறந்தார்-(நல்வழியைக்) கடந்தவரது—வாய் - வாயிலுண்டாகும் — இன்னாச்சொல் - வெறுக்கப்படுஞ்சொற்களை—நோற்கிறபவர்-பொறுப்பவர் | — (இல்வாழ்க்கையிலேயிருந்தும்) — துறந்தாரின் - துறந்தார்போல்—தூய்மை-பரிசுத்தகுணத்தை — உடையர் . உடையவராவார். எ - று. ❋ தூய்மை - மனவழுக்கில்லாமை, வாயென்பதை அதிகமாகச் சொல்லினார் அதனிழிவு தோன்றுதற்கு. (௯)

உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லு - ※
மின்னாச்சொ னோற்பாரிற் பின். - - - - (௰)

இ-ள்- உண்ணாது-(விரதங்களினாலே) உணவைவிட்டு—நோற்பார் (தம்மைஅடைந்தநோயைப்) பொறுப்பவர் | —பெரியர் - (எல்லாரினும்) பெரியவராவார்.—(அவர்பெரியவராவது)—பிறர்—சொல்லும் - (தம்மைச்)சொல்லும்—இன்னாச்சொல் - வெறுக்கப்படுஞ்சொற்களை—நோற்பாரின் - பொறுப்பவரின்—பின். எ-று. ※பிறர் - இங்கே அறிவில்லாதவர். பொறுக்கக் கூடாமைக்கு ஏதுவாகிய இருவகைப் பற்றுகளோடிருந்தே பொறுத்தலால் - தவஞ்செய்வாரினும் பெரியராகச்சொல்லலாயிற்று. [இவை இரண்டுபாட்டாலும் பிறர் சொல்லிய குற்றங்களைப் பொறுத்தல் சொல்லப்பட்டது.] (௰)

௧௭-ஆம், அதி—அழுக்காறாமை.

அஃதாவது - பிறர் செல்வமுதலானவை கண்டவிடத்துப் பொறாமைப்படாமை. இப்பொறாமையும்பொறுமைக்கு எதிரியதாதலின் இதனைவிலக்குதற்கு இது பொறையுடைமையின் பின்னே வைக்கப்பட்டது.

ஒழுக்காறாக் கொள்க வொருவன்றன் னெஞ்சத் ※
தழுக்கா றிலாத வியல்பு. - - - - (௧)

இ-ள். ஒருவன் |—தன்னெஞ்சத்து—தனது மனதில்கண்ணே—அழுக்காறு - பொறாமையாகியகுற்றம்—இலாத - இல்லாத—இயல்பு - தன்மையை}—ஒழுக்கு - (தனக்குச்சொல்லப்பட்ட)ஒழுக்கத்தினது—ஆறு - வழியாக—கொள்க - கொள்ளக்கடவன். எ - று. ※ இயல்பு - அறிவோடு கூடியதன்மை. அத்தன்மையும் நன்மையைத் தருதலால் - ஒழுக்கம்விழுப்பமென்னுங் குறளிலே சொல்லப்பட்டபடியே ஒழுக்கவழிபோல் உயிரினும் சிறந்ததாகக் காப்பாற்றுக வென்பதாம். (௧)

விழுப்பேற்றி னஃதொப்ப தில்லையார் மாட்டு ※
மழுக்காற்றி னன்மை பெறின். - - - (௨)

இ - ள், யார்மாட்டும் - யாவரிடத்தும்—அழுக்காற்றின் - பொறாமையினின்றும்—அன்மை - வேறுதலை—பெறின் -(ஒருவன்)பெறுவானாயின்—விழுப்பேற்றின் - (மற்றவன்பெறு

ம்) மேலானபேறுகளுள்—அஃது-அப்பேற்றினை-ஒப்பது|—இல்லை. எ-று. ❋ பொறாமைபகைவரிடத்தும் ஆகாதென்றற்கு யார்மாட்டுமென்றார். [இவை யிரண்டுபாட்டாலும் பொறாமை யில்லாமையினது குணம் சொல்லப்பட்டது.] (உ)

அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம் ❋
பேணா தழுக்கறுப் பான். - - (௩)

இ-ள். அறன் - (மறுமைக்கு) அறத்தையும்—ஆக்கம்-(இம்மைக்குச்) செல்வத்தையும்—வேண்டாதானென்பான் - (தனக்கு) வேண்டாதவனென்று சொல்லப்படுவோன்|—பிறன் - பிறனது—ஆக்கம்-செல்வத்தை—பேணாது - (கண்டவிடத்து) மகிழாமல்—அழுக்கறுப்பான் - பொறாமைப்படுவான். எ-று. ❋ பொறாமைப்படின் தனக்கே துன்பமாம்-என்றபடி. (௩)

அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றி ❋
னேதம் படுபாக் கறிந்து. - - (௪)

இ-ள். (அறிவுடையோர்|)—அழுக்காற்றின் - பொறாமையினாலே—அல்லவை - அறமல்லாதவைகளை}—செய்யார்.—இழுக்காற்றின் - அநீதியவழியால் - ஏதம் - துன்பமானது - படுபாக்கு - (தமக்குஇருமையிலும்) உண்டாதலை—அறிந்து. எ-று. ❋ அறமல்லாதவையாவன - செல்வங்கல்வி முதலானவையுடையாரிடத்தே தீங்கைநினைத்தலும், சொல்லலும்; செய்தலும். (௪)

அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார் ❋
வழுக்கியுங் கேடீன் பது. - - - - (௫)

இ-ள். அழுக்காறு-பொறாமையானது|—ஒன்னார் - பகைவரின்—வழுக்கியும் - ஒழிந்திருந்தும்—கேடீன்பது - கேட்டைத்தருவது.—(ஆதலால்)—உடையார்க்கு - (அப்பொறாமையை) உடையவர்க்கு—(கேட்டைத்தருதற்குப் பகைவர் வேண்டாம்)—அது-அதுவே|—சாலும் - போதும். எ-று. ❋ அதுவே யென்னும் ஏகாரம் வருவிக்கப்பட்டது, (௫)

கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉ ❋
முண்பதூஉ மின்றிக் கெடும். - - (௬)

இ-ள். கொடுப்பது - (ஒருவனாற்) பிறர்க்குக்கொடுக்கப்படு பொருளைக்குறித்து—அழுக்கறுப்பான் - பொறாமைப்படுமவனது - சுற்றம் - உறவானது|—உடுப்பதூஉம் - உடுக்கப்படுவ

தும்—உண்பதூஉம்-உண்ணப்படுவதும்—இன்றி - இல்லாம ல்—கெடும். எ - று. ❋ சுற்றம் கெடுமெனவே அவன்கெடுதல் சொல்லவேண்டியதில்லையாயிற்று. பிறர்பேறுகண்டு பொறாமைப்படுதல் - தன்பேறுமாத்திரமேயல்லாமல் தன சுற்றத்தின் பேறுகளையும் இழக்கச்செய்யுமென்பதாம். (சு)

அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவ ❋
டவ்வையைக் காட்டி விடும். - - - (எ)

இ- ள். அழுக்காறுடையானை - (பிறர்செல்வங்கண்டவிடத்தே) பொறாமையுடையவனை —செய்யவள் - திருவானவள் | — அவ்வித்து - (தானும) பொறாமைப்பட்டு—தவ்வையை - (தனது) தமக்கைக்கு — காட்டி —விடும - நீங்குவாள். எ-று. ❋ தவ்வையையென்பது உருபுமயக்கம். தவ்வை - மூதேவி. (எ)

அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத் ❋
தீயுழி யுய்த்து விடும். - - - - (அ)

இ-ள். அழுக்கா றெனவொரு பாவி - பொறாமையென்று சொல்லப்பட்ட ஒப்பில்லாத பாவியானவன் | — (தன்னையுடையவனை)—திருச்செற்று - (இம்மையிலே அவனது) செல்வத்தைக்கெடுத்து—தீயுழியுய்த்துவிடும் - (மறுமையிலே) நரகத்திணிடத்துச் செலுத்திவிடுவான். எ - று. ❋ இருமைப்பயன்களையும் கெடுக்கின்ற கொடுமைபற்றிப் பொறாமையைப் பாவியென்றார். [இவை ஆறுபாட்டானும் பொறாமையுடைமையினது குற்றம் சொல்லப்பட்டது.] (அ)

அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான் ❋
கேடு நினைக்கப் படும. - - - - - (கூ)

இ - ள். அவ்வியநெஞ்சத்தான் பொறாமையுள்ளமனத்தையுடையவனது—ஆக்கமும் - செல்வமும் | — செவ்வியான் - பொறாமையில்லாத மனத்தையுடையவனது — கேடும் - வறுமையும் | —(உண்டானால்)—நினைக்கப்படும் - (அவை) ஆராயப்படும். எ - று. ❋ பொறாமையினாலே செல்வமும், பொறாமையில்லாமையினாலே கேடும் உண்டாகுதல் - கூடாமையால் அறிவுடையார் இவை உண்டாதற்கு ஏதுவாகியபழவினை யாதென்று ஆராய் வாராதலின் நினைக்கப்படுமென்றார். (கூ)

அழுக்கற் றகன்றாரு மில்லை யஃதிலார்
பெருக்கத்திற் றீர்ந்தாரு மில். (௰)

இ-ள். அழுக்கற்று - பொறாமைப்பட்டு — அகன்றாரும் - பெருகினவரும் — இல்லை. — அஃதிலார் - அச்செயலில்லாதவருள் — பெருக்கத்தின் - பெருக்கத்திலிருந்து — தீர்ந்தாரும் - நீங்கினவரும் — இல் - இல்லை. எ-று. கேடும்பெருக்கமும்வருதற்கு ஏதுசொல்லியது. [இவை யிரண்டுபாட்டாலும் அக்குற்றமும் குணமும் சேர்த்துச்சொல்லப்பட்டன.] (௰)

## ௧௮-ஆம், அதி—வெஃகாமை.

அஃதாவது - பிறர்பொருளை வௌவுதற்கு நினையாமையாம். பிறருடைமை கண்டவிடத்தே பொறாமைப்படுதலே யல்லாமல் அதனைத்தான் வௌவுதற்கு நினைத்தலும் குற்றமென்றற்கு இது அதன்பின் வைக்கப்பட்டது.

நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமு மாங்கே தரும். (க)

இ-ள் நடுவின்றி - (பிறர்க்குரிய பொருளைக்கொள்ளுதல் நமக்கு அறமல்லவென்னும்) நடுவுநிலைமையில்லாமல்—நன்பொருள்-(அவரது) நல்லபொருளை—வெஃகின் - (அபகரித்தற்கு) விரும்பின்—(அவ்விருப்பு)—குடிபொன்றி - (அவன்) குடியைக்கெடுத்து—குற்றமும் பலகுற்றங்களையும்—ஆங்கே - அப்போதே—தரும்-(அவனுக்குக்)கொடுக்கும். எ-று. குடியைவளரச்செய்து பலநன்மைகளையும் உண்டாக்குந்தன்மையால் நன்பொருளென்றார். பொன்றியென்னுந் தன்வினை பொன்றுவித்தென்னும் பிறவினைப்பொருளில்வந்தது. (க)

படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர். (உ)

இ-ள். நடுவன்மை- (ஒருவன்பொருளுக்கு பிறன் உரியவனல்லவென்னும) நடுவுநிலையல்லாமைக்கு—நாணுபவர் - அஞ்சுகிறவர்—(பிறர்பொருளைவௌவுதலினாலே)—படுபயன் - (தமக்கு)வரும்பயனை—வெஃகி - விரும்பி—பழிப்படுவ - பழியிடத்திற்செலுத்துஞ்செயல்களை—செய்யார். எ-று. (உ)

சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யாரே ❋
மற்றின்பம் வேண்டு பவர். - - - - - (௩)

இ-ள். மற்றின்பம் - நிலையுடையவின்பத்தை — வேண்டுபவர் | — சிற்றின்பம் (பிறரிடத்தே அபகரிக்கப்பட்டபொருளினாலே தாம் அடைவதாகிய) நிலையில்லாதவின்பத்தை — வெஃகி - விரும்பி — அறனல்ல - அறமல்லாதசெயல்களை — செய்யார் - (அவரிடத்தே) செய்யார். எ-று. ❋ பாவத்தால் வருதலால் அப்பொழுதே அழியுமென்றற்குச் சிற்றின்பமென்றார். (௩)

இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற ❋
புன்மையில் காட்சி யவர். - - - - (௪)

இ-ள். புலம்வென்ற - ஐம்புலன்களையும்வென்ற — புன்மையில் - குற்றமில்லாத — காட்சியவர் - அறிவையுடையவர் | — இலமென்று - வறியேமென்று நினைத்து — வெஃகுதல்செய்யார் - (அதுதீர்தற்பொருட்டுப் பிறர்பொருளை) விரும்புதல் செய்யார். எ-று. ❋ ஐம்புலன்களைவெல்லுதல் - பாவவழிகளிலே செல்லவிடாமை. குற்றமில்லாதவறிவு - பொருளை உள்ளபடியறிந்தவறிவாம். அப்படிப்பட்டவர்க்கு வறுமை உண்டாகாமையால் பிறர்பொருளைவிரும்புதலும் இலதாயிற்று. (௪)

அஃகி யகன்ற வறிவென்னாம் யார்மாட்டும் ❋
வெஃகி வெறிய செயின். - - - - (௫)

இ-ள். அஃகி - நுட்பமானதாகி — அகன்ற - (எல்லாநூல்களிலும்) சென்ற — அறிவு - அறிவானது | — என்னாம் - என்னபயனையுடையதாம். — வெஃகி - (பொருளை) விரும்பி — யார்மாட்டும் - யாவரிடத்தும் — வெறிய - அறிவோடுபொருந்தாத செயல்களை — செயின் - (அறிவுடையோர்) செய்வாராயின். எ-று. ❋ யாவரிடத்தும் அறிவோடுபொருந்தாத செயல்களைச் செய்தலாவது - யோக்கியரிடத்தும், அயோக்கியரிடத்தும், இழிந்தவையும் கடியவையும் முதலானவைசெய்தல். அறிவுக்குப் பயன் அவை செய்யாமையாகலின் அறிவென்னாமென்றார். (௫)

அருள்வெஃகி யாற்றின் கணின்றான் பொருள்வெஃகிப் ❋
பொல்லாத சூழக் கெடும். - - - - (௬)

இ-ள். அருள்வெஃகி - அருளாகியஅறத்தைவிரும்பி — ஆற்றின்கண் - (இல்லறமாகிய) அதன்வழியிலே — நின்றான் - தங்கின

வன்—பொருள்வெஃகி - (பிறர்) பொருளைவிரும்பி—பொல்லாத - (அதனைவருவிக்கும்) குற்றவழிகளை—சூழ - எண்ண—கெடும் - கெடுவான். எ - று. ※ இல்லறவழியால் அறிவுமுதிர்ந்த விடத்தே யல்லது துறக்கக்கூடாமையால் அது துறவறத்துக்கு வழியெனப்பட்டது. கெடுதல் - இரண்டறங்களையும் ஒருசேரவிழத்தல். எண்ணியவளவிலே கெடுமெனவே அபகரித்தாற் கெடுதல் சொல்லவேண்டிய தில்லையாயிற்று. (௬)

வேண்டற்க வெஃகியா மாக்கம் விளைவயின் ※
மாண்டற் கரிதாம் பயன். - (௭)

இ-ள். வெஃகி - (பிறர்பொருளை) விரும்பிக் கொண்டு—ஆம் - (அதனால்) உண்டாகின்ற—ஆக்கம் - பெருக்கத்தை}—வேண்டற்க - வேண்டாதிருக்கக்கடவன்.—விளைவயின் - (பின்) அநுபவிக்கப்படும்போது—பயன் - (அப்பெருக்கத்தின்) பயன்—மாண்டற்கரிதாம் - நன்றாகுதலில்லை. (ஆதலால் எ - று. ※ விளை - முதனிலைத்தொழிற்பெயர். [இவ்வேழுபாட்டாலும் பிறர்பொருளை விரும்புதலின் குற்றஞ் சொல்லப்பட்டது.] (௭)

அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை ※
வேண்டும் பிறன்கைப் பொருள். (அ)

இ-ள். செல்வத்திற்கு - (குறைந்துபோந்தன்மையையுடைய) செல்வத்துக்கு—அஃகாமை - குறையாதிருத்தற்காரணம்—யாதெனின் எதுவென் (றொருவ) னராயின்—(அது)—பிறன்—வேண்டும் — கைப்பொருள் - கைப்பொருளை—வெஃகாமை-(தான்) வேண்டாமையாம் எ - று. ※ அஃகாமைஅதன்காரணத்தை உணர்த்தலாய் ஆகுபெயர். பிறன் பொருளை விரும்பாதவனது செல்வம் குறையாதென்பதாயிற்று. (அ)

அறனறிந்து வெஃகா வறிவுடையார்ச் சேருந் - ※
திறனறிந் தாங்கே திரு. - - - - (௯)

இ-ள்: அறனறிந்து- (இது) அறமென்றறிந்து—வெஃகா—(பிறர்பொருளை) விரும்பாத— அறிவுடையார் - அறிவுடையாரை}—திரு - திருவானவள் |—திறனறிந்து - (தான்சேர்தற்காந்) திறத்தைஅறிந்து— ஆங்கே - அத்திறத்தினால் — சேரும் - சேருவாள். எ- று. ※அடைதற்காந்திறம்- காலமும், இடமும், செவ்வியும், முதலாயின. [இவை யிரண்டு பாட்டாலும் பிறர் பொருளை விரும்பாமையின் குணம் சொல்லப்பட்டது.] (௯)

இறலீனு மெண்ணாது வெஃகின் விறலீனும் *
வேண்டாமை யென்னுஞ் செருக்கு. - (௰)

இ-ள். (ஒருவன்)—எண்ணாது - (பின்விளைவதை) யெண்ணாமல்—வெஃகின் - (பிறன்பொருளை) விரும்புவானாயின்—(அவ்விருப்பம்) — இறல் - அழிவை — ஈனும் - (அவனுக்குத்) தரும். —வேண்டாமையென்னுஞ்செருக்கு— (அப்பொருளை) விரும்பாமையென்னுஞ்செல்வமானது—விறல் - வெற்றியை — ஈனும் - தரும். எ-று. ❊பகையும் பாவமும் வளர்த்தலால் இறலீனுமென்றும், பொருளாசைகொண்டலேவோர்கள் யாவரையும் [illegible]த்தலால் விறலீனுமென்றும், சொல்லினர். செருக்கு அதைத் தருஞ் செல்வத்தைக் காட்டலால் ஆகுபெயர். [இதனால் அக்குணமும் குற்றமும் சேர்த்துச்சொல்லப்பட்டன ]௰

## ௰௯-ஆம், அதி—புறங்கூறாமை.

அஃதாவது - காணாதவிடத்தே பிறரை இகழ்ந்துபேசாமையாம். வாக்கின்குற்றம் மனக்குற்றத்தின் வழியாகத் தோன்றலால் இது அழுக்காறாமைவெஃகாமைகளின் பின்வைக்கப்பட்டது.

அறங்கூறா னல்ல செயினு மொருவன் *
புறங்கூறா னென்ற லினிது. - (௧)

இ-ள். ஒருவன்—அறங்கூறான் - அறமென்றுசொல்லுவதுஞ்செய்யானாகி—அல்ல - பாவங்களை—செயினும் - செய்தாலும்—புறங்கூறான் - (பிறனைக்) காணாதவிடத்தே இகழ்ந்துபேசான்—என்றல் - என்று (உலகத்தோராலே) சொல்லப்படுதல்—இனிது - நல்லது. எ-று. ❊புறங்கூறாமை - அக்குற்றங்களால் தாழ்த்தப்படாமல் மேற்படுத்தோன்றுமென்பதாம். [இதனால் அவ்வறத்தினது நன்மைசொல்லப்பட்டது.] (௧)

அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே *
புறனழீஇப் பொய்த்து நகை. - (௨)

இ-ள். அறனழீஇ - அறமென்ப தொன்றில்லையென அழித்துச்சொல்லி—அல்லவைசெய்தலின் - (அதன்மேற்) பாவங்களைச்செய்தலினும்—தீதே - தீமையையுடையதேயாம். — புறனழீஇ - ஒருவனைக்காணாதவிடத்தே இகழ்ந்துபேசி—பொ

ய்த்து நகை - (கண்டவிடத்தே அவனோடு) பொய்த்து மகிழ்த ல். எ-று. ❋ அறத்தையழித்தலினும் புறங்கூறுதலும், பாவங் களைச்செய்தலினும், பொய்த்துநகுதலும், தீயனவாம் - என் றறிக. புறனழித்தல்-புறங்கூறி ஒளியைக்கெடுத்தல். (௨)

புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாத - - ❋
லறங்கூறு மாக்கந் தரும். - - - - - - (௩)

இ-ள். புறங்கூறி - பிறனைக்காணாதவிடத்தே இகழ்ந்து — பொய்த்து - கண்டவிடத்தே அவனைப் புகழ்ந்து — உயிர் வாழ்தலின் - (ஒருவன்) உயிர்வாழ்தலினும் — சாதல் - (அது செய்யாமல்) உயிர்விடுதல் — (அவனுக்கு) — அறங்கூறும் த ருமநூல்களிலேசொல்லப்பட்ட — ஆக்கம் - பயனை — தரு ம். எ-று. ❋ உயிர்விட்டபின் புறங் கூறிப்பொய்த்தலாகியபா வம் நீங்கலால்-சாதல் ஆக்கந்தருமென்றார். ஆக்கம் - அப்பாவ ஞ்செய்யாதவராலே - மறுமையில் அடையப்படும் பயன். அ றம் - அதைச்சொல்லு நூலையுணர்த்தலால் ஆகுபெயர். (௩)

கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க ❋
முன்னின்று பின்னோக்காச் சொல் - - - (௪)

இ-ள். (ஒருவனை) — கண்ணின்று - எதிரேநின்று — கண்ணற கண்ணோட்டமற — சொல்லினும் — முன்னின்று - (அவன்) எதி ரில்லாமல் — பின்னோக்காச்சொல் - பின்வருங் குற்றத்தைநோ க்காதசொல்லை — சொல்லற்க - சொல்லா திருக்கக்கடவன். எ- று. ❋ பின் அதில்வருங்குற்றத்தைக் காட்டாமல் ஆகுபெயர். சொல்வானது நோக்குதற்றொழில் - சொல்லின்மேல் ஏற்றப்ப ட்டது. கண்ணோட்டம் - தாக்ஷிண்யம். [இவை மூன்றுபாட் டாலும் புறங்கூறலின் கொடுமைசொல்லப்பட்டது.] (௪)

அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை புறஞ்சொல்லும் ❋
புன்மையாற் காணப் படும். - - - - (௫)

இ-ள். (புறங்கூறுவோனொருவன் அறம் நன்றென்று வாயி னாலேசொல்லினும்) — அறஞ்சொல்லும் - அறத்தை அப்படி சொல்லுதற்கு ஏற்ற — நெஞ்சத்தானன்மை - மனத்தையுடை யவனல்லாதவனாயிருக்கையானது — புறஞ்சொல்லும் - அப்பு றங்கூறுதற்குக்காரணமாகிய — புன்மையால் - (மனப்) புன் மையாலே — காணப்படும் - (அறிவுடையோரால்) அறியப்ப

டும். எ-று. ※ மனம் - தீதாயிருக்கையால் அறம் நன்றென்று சொல்லுகிறசொல் அங்கிகரிக்கப்படாதென்பதாம். (ரு)

பிறன்பழி கூறுவான் றன்பழியுள்ளுந் - - ※
திறன்றெரிந்து கூறப் படும். - - - - - (சா)

இ-ள். பிறன்பழி - பிறனொருவனதுபழியை—கூறுவான் - (அவனைக்காணாதவிடத்தே) சொல்லுவோன் — தன்பழியுள்ளும் - தனது (பல) பழிகளுள்ளும்— திறன் (வருந்தும்) விதமுடையவைகளை—தெரிந்து - ஆராய்ந்து—கூறப்படும்-(அவனாலே) சொல்லப்படுவான். எ - று. ※ திறமுடையவைகளைத்திறனென்றலால் ஆகுபெயர். காணாதவிடத்தே தன்னைக்குறித்துப்பிறனாலே சொல்லப்பட்டபழியைக் கேட்டவன் அவன் மிகவும் வருந்தும்படி அதிகமாகியபழிகளை ஆராய்ந்து எதிரே சொல்லுவானாதலால் திறன்றெரிந்து கூறப்படுமென்றார். (சா)

பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி - ※
நட்பாட றேற்றா தவர். - - - - - - - (எ)

இ-ள். நகச்சொல்லி - (கூடி) மகிழும்படி (இனியசொற்களைச்) சொல்லி—நட்பாடல் - (அயலாரோடு) சிநேகஞ்செய்தலை—தேற்றாதவர் - (தமக்குஉறுதியென்று) அறியாதவர்|—பகச்சொல்லி - (தம்மைவிட்டு) நீங்கும்படிபுறங்கூறி — கேளிர் - (தமது) சுற்றத்தாரையும்—பிரிப்பர். எ-று. ※ உம்மைவிகாரத்தால்-தொக்கது. கேளிரையும் பிரிப்பரென்றகருத்தால் அயலாரோடென்பது வருவிக்கப்பட்டது. தேற்றாதவரென்னும் பிறவினை - தேறாதவ ரென்னுந்தன்வினைப்பொருளில் வந்தது - புறங்கூறுவாரிக்கு யாவரும் பகையாவரென்பது கருத்து. (எ)

துன்னியார் குற்றமுந் தூற்று மரபினா - ※
ரென்னைகொ லேதிலார் மாட்டு. - - (அ)

இ-ள். துன்னியார் - (தம்மோடு) நெருங்கினவரது—குற்றமும் - குற்றத்தையும் —தூற்றும் - (அவரைக்காணாதவிடத்தே) தூற்றும் — மரபினார் - இயல்பையுடையவர்— ஏதிலார்மாட்டு - அயலாரிடத்துச் (செய்வது|)—என்னைகொல் - யாதோ. எ - று. ※ தூற்றுதல் - பலரும் அறியப்பரப்புதல். அத்தூற்றுதலினும்கொடிய செயல்வேறொன்றுங் காணாமையால் என்னைகொலென்றார் செய்வதென்பது - சொல்லெச்சம். (அ)

## ௰௯-ஆம், அதி — புறங்கூறாமை.

அறனழீஇ யாற்றுங்கொல் வையம் புறநோக்கிப் - *
புன்சொ லுரைப்பான் பொறை. - - - (௧)

இ-ள். புறநோக்கி - பிறர்நீங்கினவளவுபார்த்து — புன்சொல் - (அவரது) பழிப்புச்சொல்லை — உரைப்பான் - சொல்லுவோனது—பொறை - (உடற்)பாரத்தை - வையம்-பூமியானது — அறனோக்கி - (இக்கொடியதைச் சுமந்தலே எனக்கு)அறமாவதென்றுநினைத்து — ஆற்றுங்கொல் - சுமக்கின்றதுபோலும் - எ-று. ❋ பூமிக்கு எல்லாப்பொருள்களையுஞ்சுமத்தல்சுபாவமாயினும் புறங் கூறுவானைச் சுமப்பதுதகாதென் னுங்கருத்தால் அறனோக்கி யாற்றுங்கொல் வையமென்றார். [இவை யைந்துபாட்டாலும் புறங்கூறுவாருக்கு உண்டாகும் குற்றம் சொல்லப்பட்டது.] (௧)

ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பிற் - ❋
றீதுண்டோ மன்னு முயிர்க்கு. - - (௰)

இ-ள். (புறங்கூறுவோர் | அதுசெய்தற்கு) —ஏதிலார்குற்றம்போல் — அயலோரதுகுற்றத்தைப் போல் — தங்குற்றம்- (அப்புறங்கூறுதலாகிய) தமது குற்றத்தையும் — காண்கிற்பின் - காணமாட்டுவாராயின்—மன்னுமுயிர்க்கு - (அவரது)நிலைபெற்றஉயிர்க்கு—தீது - (வருவது) ஒருதுன்பம்|—உண்டோ. எ-று. ❋நடுவுநிலையாயிருந்து ஒப்பக்காணுதலருமையாகலின் காண்கிற்பினென்றும், கண்டவிடத்தே புறங்கூறாமையால் வருபிறவிகளிலும் துன்பப்படா ரென்பதைக் குறித்து உயிர்க்குத் தீதுண்டோ வென்றும், சொல்லினர். [இதனால் புறங்கூறுதலை விடுதற்கு உபாயம் சொல்லப்பட்டது.] (௰)

## ௨௰-ஆம், அதி — பயனிலசொல்லாமை.

அஃதாவது - தமக்கும் பிறர்க்கும் அறம்பொரு ளின்பங்களுள் ஒன்றையும் தாராத சொற்களைச் சொல்லாமையாம். பொய், குறளை - கடுஞ்சொல்-பயனில்சொல் - எனவாக்கினிடத்தே உண்டாம் பாவம் நான்கினுள்-பொய் - துறந்தோர்க்கு அல்லதுபற்றறவிடக்கூடாமையால் அதனை ஒழித்து இல்வாழ்வாரால் விடக்கூடுமவையாகிய மற்றை

மூன்றினுள் - கடுஞ்சொல் - இனியவைகூறலாலும், குறளை புறங்கூறாமையாலும், விலக்கி - நின்றபயனில் சொல்லை இதனால் விலக்குகின்றாராகலால் இதுபுறங்கூறாமையின் பின்வைக்கப்பட்டது.

பல்லார் முனியப் பயனில சொல்லுவா *
னெல்லாரு மெள்ளப் படும். - - - (க)

இ-ள். பல்லார் - (அறிவுடையோர்) பலரும்—முனிய-(கேட்டு)வெறுக்க—பயனில - பயனில்லாதசொற்களை— சொல்லுவான்—எல்லாரும் - எல்லாராலும்.—எள்ளப்படும் - இகழப்படுவான். எ- று. அறிவுடையோர்பலரும் வெறுக்கவே மற்றோரும் இகழ்வாராகலால் எல்லாருமெள்ளப்படுமென்றார்.(க)

பயனில பல்லார்முற் சொல்ல னயனில *
நட்டார்கட் செய்தலிற் றீது. - - - (உ)

இ-ள். பல்லார்முன் - (அறிவுடையோர்) பலர்முன்னே—பயனில - பயனிலாதசொற்களை— சொல்லல்- (ஒருவன்) சொல்லுதலானது—நட்டார்கண் - (தன்) னட்பாளரிடத்தே—நயனில-விருப்ப மில்லாதசெயல்களை —செய்தலின் - செய்தலினும்—தீது. எ - று. விருப்பமில்லாதசெயல்கள் - வெறுக்கப்படுசெயலாம். இச்சொல் அச்செயலைக் காட்டிலும் மிகவும்இகழப்படுதலை உண்டாக்குமென்பதாம். (உ)

நயனிலனென்பது சொல்லும் பயனில *
பாரித் துரைக்கு முரை. - - - (ஙு)

இ-ள்.பயனில- பயனில்லாத பொருள்களை— பாரித்து-விரித்து—உரைக்குமுரை - (ஒருவன்) உரைக்குமுரையானது—நயனிலனென்பது -(இவன்) நீதியில்லாதவனென்பதனை—சொல்லும்-அறிவிக்கும். எ- று. இப்படிப்பட்ட உரையினாலே இவன் நீதியில்லாதவனென்பதை அறியலாமென்றற்கு அதனை உரைமேலேற்றி உரைசொல்லுமென்றார். (ஙு)

நயன்சாரா நன்மையி னீக்கும் பயன் சாராப் *
பண்பில்சொற் பல்லா ரகத்து. - (ச)

இ-ள்.பயன்சாரா-பயனோடு பொருந்தாத— பண்பில்சொல்- குணமில்லாத சொற்களை—பல்லாரகத்து - பலரிடத்தே—

(ஒருவன்சொல்லுவானாயின்)—(அவை | அவரிடத்தே)—நயன் சாரா - நீதியோடுபொருந்ாதவையாகி—நன்மையின் - நற்குணங்களிலிருந்து—நீக்கும் - (அவனை) நீக்கும். எ - று. ※ பண்பு - இனிமைமெய்ம்மைமுதலாகிய சொற்குணங்கள். சொல்லுவானாயின் - அவரிடத்தே - என்பவை - சொல்லெச்சங்கள். (௪)

சீர்மை சிறப்பொடு நீங்கும்பயனில . . . . ※
நீர்மை யுடையார் சொலின். . . . . (௫)

இ - ள். பயனில - பயனில்லாதசொற்களை—நீர்மையுடையார் - குணத்தன்மையையுடையவர் — சொலின் - சொல்லுவாராயின் —சீர்மை - (அவரது) மேம்பாடானது | —சிறப்பொடு - (அதனால்வரும்) நன்குமதிக்கப்படுதலுடனே—நீங்கும் - (அவரிடத்திருந்து) நீங்கும். எ - று. ※ சொலினென்பது - அவரது சொல்லாமையைக் காட்டிநின்றது. (௫)

பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல் . . ※
மக்கட் பதடி யெனல். . . . . . . (௬)

இ - ள். பயனில்சொல் - பயனில்லாதசொற்களை—பாராட்டுவானை - (பலதரமும்) சொல்லுவோனை} —மகனெனல் - மனிதனென்றுசொல்லாதே. — மக்கட்பதடியெனல் — மனிதருக்குள்ளேபதரொன்றுசொல்லக்கடவாய் எ - று. ※ எப்படிபதருக்கு அரிசியாகிய உள்ளீடு இல்லையோ அப்படியே அவருக்கு அறிவாகிய உள்ளீடு இல்லாமையால் மக்கட்பதடியென்றார். [இவை யாறுபாட்டாலும் பயனில்லாத சொற்களைச் சொல்லுதலின் குற்றம் சொல்லப்பட்டது.] (௬)

நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர் . ※
பயனில சொல்லாமை நன்று. . . . (௭)

இ - ள். சான்றோர் - அறிவுடையோர் | —நயனில - நீதியோடு பொருந்ாதசொற்களை—சொல்லினும்—சொல்லுக - சொல்லக்கடவர். — பயனில - பயனில்லாதசொற்களை — சொல்லாமை - சொல்லாமை (பெறின்)—நன்று - (அது |) நன்று. எ - று. ※ சொல்லினுமெனவே சொல்லாமைபெறப்பட்டது. நயனில்லாத சொல்லினும் பயனில்லாதசொல் தீதென்பதாம். (௭)

அரும்பய னாயு மறிவினார் சொல்லார் - - *
பெரும்பய னில்லாத சொல். - - - - (அ)

இ - ள். அரும்பயன் - அறிதற்கரியபயன்களை—ஆயும் - ஆராய்கின்ற—அறிவினார் - அறிவையுடையார்—பெரும்பயனில்லாதசொல் - மிகுந்தபயனில்லாதசொற்களை — சொல்லார். எ - று. * அறிதற்கரியபயன்களாவன- முத்திப்பேறு-மேற்கதியடைவு - முதலானவை. பெரும் பயனில்லாதசொல்லென்றதனால் சிறிதுபயனுடையசொல்லும் தள்ளப்பட்டது. (அ)

பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருடீர்ந்த
மாசறு காட்சி யவர். - - - - (௯)

இ - ள். மருடீர்ந்த- மயக்கத்தினீங்கிய—மாசறு - மாசற்ற [பரிசுத்தமாகியவென்றபடி.] — காட்சியவர் - அறிவினையுடையோர்—பொருடீர்ந்த - பயனினீங்கியசொற்களை — பொச்சாந்தும்-மறந்தும்—சொல்லார். எ - று * பரிசுத்தமாகியவறிவு - மெய்யறிவு. [இவை மூன்றுபாட்டானும் பயனில்லாதவை சொல்லாமையின் குணம் சொல்லப்பட்டது.] (௯)

சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க *
சொல்லிற் பயனிலாச் சொல். - - (௰)

இ-ள். சொல்லில் சொற்களிலே—பயனுடைய - பிரயோசனமுடையசொற்களை—சொல்லுக - சொல்லக்கடவர்—சொல்லில்-சொற்களிலே—பயனிலாசசொல் • பிரயோசனமில்லாதசொற்களை—சொல்லற்க - சொல்லாதிருக்கக்கடவர். [இதனாலேசொல்லத்தகுவனவுமதகாதனவும் நியமிக்கப்பட்டன. (௰)

**********************************

## உக - ஆம், அதி—தீவினையச்சம்.

அஃதாவது - பாவங்களாயுள்ளவைகளைச் செய்தற்கு அஞ்சுதலாம். இதனால் காயத்தினிடத்தே விளைகின்ற பாவங்களையெல்லாம தொகுத்து விலக்குகின்றாராகலின் இது பயனில சொல்லாமையின் பின்வைக்கப்பட்டது.

தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர் - - *
தீவினை யென்னுஞ் செருக்கு. - - - (க)

இ - ள். தீவினையென்னுஞ்செருக்கு • தீவினையென்றுசொல்

லப்படுமயக்கத்தைத்} — தீவினையார் - (முன்செய்த) தீவினையுடையோர்|—அஞ்சார்.—விழுமியார்| — (அதுஇல்லாத) மேலோர் | - அஞ்சுவார்.எ-று. ❊ தீவினையாகியகாரியம் அதன் காரணமாகிய செருக்கென உபசரிக்கப்பட்டது. முன்னெதொடங்கிச் செய்து பழகி வந்தமையால் அஞ்சாரென்றும், செய்தறியாமையால் அஞ்சுவாரென்றும், சொல்லினர். (௧)

தீயவை தீய பயத்தலாற் றீயவை - - - ❊
தீயினு மஞ்சப் படும். - - - - - - (௨)

இ-ள். தீயவை - (இன்பத்தின்பொருட்டுச்செய்யுந்) தீவினைகள்—(பின்னே)—தீய - துன்பங்களை—பயத்தலால் - தருதலால்.—தீயவை - (அப்படிப்பட்ட)தீவினைகள்}—தீயினும் - தீயினும் அதிகமாக—அஞ்சப்படும்-(ஒருவனால்) அஞ்சப்படும். எ-று.❊ வேறொருகாலத்திலும் வேறோரிடத்திலும் வேறொருடம்பிலும், போய்ச் சுடுதல் தீவினைக்கே அல்லாமல் நெருப்புக்கு இல்லாமையால் தீயினும் அஞ்சப்படுமென்றார். (௨)

அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய - - - ❊
செறுவார்க்குஞ் செய்யா விடல். - - - (௩)

இ-ள். செறுவார்க்கும்- (தம்மை) வருத்துவோரிடத்தும்—தீய - தீவினைகளை—செய்யாவிடல்- செய்யாமல்விடுதலை—அறிவினுளெல்லாம் - (தமக்குஉறுதிநாடும்) அறிவுகளெல்லாவற்றிலும்—தலை - முதலானவறிவாகும்—என்ப - என்று (நல்லோர்|) சொல்லுவர். எ - று. ❊ விடுதற்குக்காரணமாகிய அறிவைவிடலென்றும், செய்யத்தக்கவிடத்தும் செய்யாதிருந்தால் தமக்குத் துன்பம்வாராதென்று ஆலோசித்தறிதலால் அதனை அறிவினுளெல்லாந் தலையென்றும், சொல்லினர். [இவை மூன்று பாட்டாலும் தீவினைக்கு அஞ்சவேண்டுமென்பது சொல்லப்பட்டது.] (௩)

மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழி - - - - ❊
னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு. - - - - - (௪)

இ-ள். (ஒருவன்|)—பிறன்-பிறனுக்கு—கேடு- கேட்டைத்தரும்வினையைத்}—மறந்தும்—சூழற்க - எண்ணாதிருக்கக்கடவன்.—சூழின் - எண்ணுவானாயின்—சூழ்ந்தவன் - அவ்வெண்ணினவனுக்கு—கேடு-கேட்டைத்தரும்வினையை—அறம் - அறக்

கடவுள் — சூழும் - எண்ணுவான். எ-று. ※ கேடிரண்டும் - அவ
ற்றைத்தரும் வினைகளையுணர்த்தலால் ஆகுபெயர்கள். எண்
ணுமெப்பொழுதேதானும் உடனே எண்ணுதலால் இவன் பிற்ப
ட்டாலும் அறக்கடவுள் சூழ்வானென்பது கொள்ளப்பட்
டது. [அறக்கடவுளெண்ணுதலாவது - அவன்கெடத் தான் நீங்
கநினைத்தல். தீவினையை எண்ணுதலுமாகாதென்பதாம. (௪)

இலனென்று தீயவை செய்யற்க செய்யி ※
னிலனாகு மற்றும் பெயர்த்து. (௫)

இ-ள். இலனென்று - வறுமையையுடையேனென்று நினைத்
து — (அதுநீக்குதற்பொருட்டு) — தீயவை - தீவினைகளை — செய்
யற்க - (ஒருவன் பிறர்க்குச்) செய்யாதிருக்கக்கடவன். — செய்
யின் — பெயர்த்தும் - பினனும் — இலனாகும் - வறுமையையுடை
யவனாவான். எ-று. ※ மற்றும் - அசைநிலை - அத்தீவினையினா
லே பிறவிதோறும் வறியவனாவனென்பதாம். (௫)

தீப்பால தான்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால ※
தன்னை யடல்வேண்டா தான். (௬)

இ-ள். நோய்ப்பால - துன்பஞ்செய்யுங் கூறுடைப்பாவங்
கள் — தன்னை — அடல்வேண்டாதான் — (பின்வந்து) வருத்து
தலைவேண்டாதவன் | — தீப்பால - தீமைக்கூறுடையவினைக
ளை — தான் — பிறர்கண் - பிறரிடத்தே — செய்யற்க - செய்யா
திருக்கக்கடவன். எ-று. ※ செய்வானாயின் அப்பாவங்கள் அவ
னை வருத்துவதற்கு ஐயமில்லையென்பதாம். (௬)

எனைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை ※
வீயாது பின்சென் றடும். (௭)

இ-ள். எனைப்பகையுற்றாரும் - எவ்வளவுபெரியபகையையு
டையவரும் | — உய்வர் - (அதனை ஒருவழியினாலே) தப்புவார் -
— (அப்படியல்லாமல்) — வினைப்பகை - தீவினையாகியபகை
யானது | — வீயாது - நீங்காமல் — பின்சென்று - போனவிடத்
துக்குப்போய் — அடும் - கொல்லும். எ-று. (௭)

தீயவை செய்தார் கெடுத னிழறன்னை ※
வீயா தடியுறைந் தற்று. (௭)

இ-ள். தீயவை - தீவினைகளை — செய்தார் - (பிறருக்குச்) செ

ய்தவர்—கெடுதல் - (தாம்) கெடுதல்—(எத்தன்மைத்தென்றா ல்)—நிழல் (ஒருவனது) நிழலானது—(நெடுந்தூரம்போயி னும்)—தன்னை அவனை—வீயாது - விடாதுவந்து—அடி - அ டியினிடத்தே — உறைந்தற்று - தங்கியதன்மைத்து. எ - று. ❊முன்பாட்டில் வினைப்பகைவீயாது பின்சென றடுமென்று சொல்லப்பட்டதை இங்கே உபமானத்தினால்விளக்கினார். (அ)

> தன்னைத் தான் காதல னாயி னெனைத்தொன்றுந் ❊
> துன்னற்க தீவினைப் பால். - - - - - க.

இ-ள். (ஒருவன்)—தன்னை—தான்—காதலனாயின் - விரும் புதலுடையவனாயிருந்தால்—தீவினைபால் - தீவினையாகியபி ரிவின்—எனைத்தொன்றும - எவ்வளவுசிறியதொன றையாயி னும்—துன்னற்க - (பிறனிடத்தே) செய்யாதிருக்கக்கடவன. எ - று. ❊ நல்வினை தீவினை என வினைப்பிரிவு இரண்டாகலின தீவினைப்பாலென்றார். பிறரிடத்தேசெய்ததீவினை தன்னிடத் தே துன்பந்தருதலை விளக்கினாராதலால் - தன்னைத்தான் காத லனாயினென்றார். [இவை ஆறுபாட்டாலும் பிறருக்குத் தீவி னை செய்தால் தாமகெடுவரொன்பதுசொலலப்பட்டது.] (க)

> அருங்கேட னென்ப தறிக மருங்கோடித் - - ❊
> தீவினைசெய்யானெனின். - - - - (ம.)

இ ள். (ஒருவன் செவ்வையானவழியைவிட்டு)—மருங்கோ டி-கொடியவழியிலே சென்று—தீவினை - தீவினைகளை—செய் யானெனின் - (பிறரிடத்தே) செய்யானாயின் — அருங்கேட னென்பது - (அவன) இல்லாதகேட்டையுடையவனென்பதை —அறிக - அறியக்கடவர். எ - று. ❊ [இதனாலே தீவினைசெய் யாதவன்கேடில்லாதவனாவனென்பதுசொல்லப்பட்டது.] (ம)

❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊—❊—❊❊❊❊❊❊❊❊❊❊❊❊

## உ௨-ஆம், அதி—ஒப்புரவறிதல்.

அஃதாவது - உலகநடையை அறிந்து செய்தல். மனோ வாக்குக்காயங்களாலே செய்யத்தகாதவை சொல்லினார் இனிச்செய்யத்தகு மவைகளில் முன் சொல்லப்பட்ட வ ற்றுள் அடங்காதவைகளைச் சொல்லுகின்றாராகையால் இது தீவினையச்சத்தின் பின் வைக்கப்பட்டது.

கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமா *
டென்னாற்றுங் கொல்லோ வுலகு. - - (க)

இ-ள். உலகு - உயிர்களானவை]—மாரிமாட்டு - (தமக்குநீ ருதவுகின்ற) மேகங்களிடத்து—என் - என்னபிரதியுபகாரத் தை}—ஆற்றும் - செய்துவருகின்றன.[ஒன்றும் செய்கின்றன வில்லையென்றபடி.]—(ஆதலால்)—கடப்பாடு - (அம்மேகங்க ள்போல்வார்செய்யும்) உபகாரங்களும்]—கைம்மாறு - பிரதி யுபகாரங்களை}—வேண்டா - வேண்டுவனவல்ல. எ-று. ※ கொ ல், ஒ, அசை. கடப்பாடென்னும் பெயரினாலேயே அவசியம் செய்ய வேண்டுவதென்பது பெறப்பட்டது. உபகாரஞ்செ ய் வாரது வேண்டாமையை உபகாரத்தின்மேல் ஏற்றினார். (க)

தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு *
வேளாண்மை செய்தற் பொருட்டு. - - உ.

இ-ள். தக்கார்க்கு - தகுதியுடையவர்க்காயின்—தாளாற் றி - முயற்சிசெய்து—தந்த - சம்பாதிக்கப்பட்ட—பொருளெ ல்லாம்]—வேளாண்மை - உபகாரத்தை — செய்தற்பொருட் டு-செய்தற் பயனுடையனவாம். எ-று. ※ தகுதியில்லாத பிற ருக்குப்போல் தாம் அனுபவித்தற்பொருட்டும், வைத்து இழ த்தற்பொருட்டும் அல்லவென்பதாயிற்று. (உ)

புத்தே ளுலகத்து மீண்டும் பெறலரிதே - - *
யொப்புரவி னல்ல பிற. - - - - - (ங.)

இ-ள். புத்தேளுலகத்தும் - தேவருலகத்திலும்—ஈண்டும் - இவ்வுலகத்திலும்—ஒப்புரவின் - உபகாரம்போல்—நல்ல - ந ல்லவையாகிய—பிற - வேறுசெயல்களை—பெறல்] - அரிது. எ-று. ※ கொடுப்பாரும், கொள்வாரும், இல்லாமல் எல்லா ரும் ஒருதன்மையராயிருக்கையால் தேவருலகத்தில் அரிதாயி ற்று. யாவருக்கும் ஒப்பதுபோல் வேறொன்று இல்லாமையா ல் இவ்வுலகத்தில் அரிதாயிற்று. [இவை மூன்றுபாட்டாலும் ஒ ப்புரவினது சிறப்புச் சொல்லப்பட்டது. (ங)

ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான் - *
செத்தாருள் வைக்கப் படும். - - - ச.

இ-ள். ஒத்ததறிவான் - உலகநடையை அறிந்துசெய்பவன்]

—உயிர்வாழ்வான் - உயிரோடுகூடிவாழ்பவனாவான். — மற்றையான் - அதனை அறிந்துசெய்யாதவன்} — (உயிருடையவனாயிருந்தாலும்) — செத்தாருள் — வைக்கப்படும் - (ஒருவனாக)வைக்கப்படுவான். [நினைக்கப்படுவானென்றபடி.] எ-று. ❋ உயிருக்குரிய அறிவும், செயலும், அவனிடத்தே காணப்படாமையால் - செத்தாருள் வைக்கப்படுமென்றார். [இதனால் உலக நடையிலே தவறுதல் வேதநடையிலே தவறுதல்போல் திரும்வழியை உடையதல்லவென்பது சொல்லப்பட்டது.] ௪)

**ஊ**ருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம் - - ❋
பேரறி வாளன் திரு. - - - - ௫.

இ-ள். உலகு - உலகநடையை — அவாம் - விரும்பிச்செய்யும் — பேரறிவாளன் - பெரியவறிவினையுடையவனானவன் — திரு - செல்வத்தினாலே (நிறைதல்|) — ஊருணி - ஊரில்வாழ்வார் நீருண்ணுங்குளமானது| — நீர்நிறைந்தற்று - நீரினாலே நிறைந்ததும்போலும். எ-று. ❋ அச்செல்வம் பாழ்படாமல் நெடுங் காலம் எல்லாருக்கும் வேண்டுமளவில் உதவுமென்பதாம். (௫)

**ப**யன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வ - ❋
நயனுடை யான்கட் படின். - - - - ௬.

இ-ள். செல்வம் - செல்வமானது — நயனுடையான்கண் - உபகாரஞ்செய்பவனிடத்தே — படின் - உண்டாகுமானால் — (அவ்வுண்டாதல்|) — உள்ளூர்| - ஊர்நடுவே — மரம் - மரத்தினிடத்தே — பயன் - பழமானது — பழுத்தற்று - பழுத்தல் போலும். எ-று. ❋ ஆல் - அசை. உலகநீதி பலவகையிலும் ஒப்புரவு சிறந்தமையால் அதனை நயனென்றார். அவன் அம்மரம்போல் எல்லார்க்கும் எளிதிலே பயன்கொடுப்பானென்பதாம். (௬)

**ம**ருந்தாகித் தப்பா மரத்தற்றாற் செல்வம் - - ❋
பெருந்தகை யான்கட் படின். - - - - ௭

இ-ள். செல்வம் - செல்வமானது — பெருந்தகையான்கண் - (உபகாரஞ்செய்யும்) பெரியதகைமையை யுடையவனிடத்தே — படின் - உண்டாகுமானால் — (அச்செல்வமானது|) மருந்தாகி - எல்லாவுறுப்புகளும்(பிணிகளுக்கு)மருந்தாய் — தப்பா - தப்பாத — மரத்தற்று - மரத்தை} ஒக்கும். எ-று. ❋ ஆல் - அசை. எல்லாவுறுப்புமென்றது மரத்துக்கு - இலை, பூ, காய், கனி, பூ

நலானவைகளை. செல்வத்துக்கு-அனுபவித்தற்குரிய பலபொருள்களை. தப்பாமையாவது - கொள்ளுதற்கரியவிடங்களிலே நின்றுவது, மறைந்து நின்றுவது, காலத்தால் வேறுபட்டாவது, பயன்படாமை. தன் குறைவை நோக்காமல் எல்லாவருத்தமும் தீர்க்குமென்பதாம். [இவ்வ மூன்றுபாட்டாலும் உபகாரஞ் செய்பவனது பொருள் பயன்படுமாறு சொல்லப்பட்டது. (எ)

இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார் - *
கடனறி காட்சி யவர். - - - - - அ.

இ-ள். கடனறி - (தாம்) செய்யத்தருமவைகளை அறிந்த—காட்சியவர் - இயற்கையறிவுடையவர் | — இடனில்பருவத்தும் - செல்வஞ்சுருங்கியகாலத்திலும்--ஒப்புரவிற்கு - உபகாரஞ்செய்வதற்கு — ஒல்கார்-தளரார். எ - று. ※ மற்றவைகளையெல்லாம் விட்டாலும் இதனை விடாரென்பதாம். (அ)

நயனுடையா னல்கூர்ந் தா னாதல் செயுநீர்மை - *
செய்யா தமைகலா வாறு. - - - - - கூ.

இ - ள். நயனுடையான் - உபகாரஞ் செய்தலை யுடையவன் — நல்கூர்ந்தானாதல் - வறுமைப்பட்டவனாகுதலாவது | — செயும்-(ஒழியாமற்) செய்யும்—நீர்மை - குணத்தையுடைய அவ்வுபகாரங்களை —செய்யாது - செய்யப்பெறாமல் — அமைகலாவாறு-வருந்துகின்றவியல்பாம். எ-று. ※ தான் அனுபவிக்கப்படும்பொருள்களைப்பெறாமை அவனுக்கு வறுமை அல்லவென்பதாம். [இவை யிரண்டுபாட்டாலும் வறுமையால் ஒப்புரவு செய்யாதுவிடத்தக்கதல்லவென்பதுசொல்லப்பட்டது.] (கூ)

ஒப்புரவி னல்வருங் கேடெனி னஃதொருவன் *
விற்றுக்கோட் டக்க துடைத்து. - - - - ய.

இ - ள். ஒப்புரவினால் - உபகாரஞ்செய்தலினாலே — வருங்கேடெனின் - (ஒருவனுக்குப்பொருட்) கேடுவருமென்பவருண்டாயின்—அஃது - அக்கேடானது | — ஒருவன்—விற்று-(தன்னை) விற்றாயினும் — கோட்டக்கதுடைத்து - வாங்குந்தகுதியையுடையதாகும். எ - று. ※ தன்னைவிற்று வாங்கப்படுவதொருபொருள் - இல்லையாயினும் இக்கேடுபுகழை உண்டாக்கலால் அதுவும் செயப்படுமென்றது - [இதனாலே ஒப்புரவினாலே வ.

## உ௩-ஆம், அதி—ஈகை.

அஃதாவது - வறியவராய் இரந்தவர்க்கு இல்லையென்னாது கொடுத்தல். இது மறுமையைக் குறித்ததாகலின் இம்மையைக்குறித்த ஒப்புரவறிதலின் பின்வைக்கப்பட்டது.

**வ**றியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங் *
குறியெதிர்ப்பை நீர துடைத்து. ௧.

இ-ள். வறியார்க்கு - ஒருபொருளுமில்லாதவர்க்கு—ஒன்று- (அவர்வேண்டிய) தொன்றை—ஈவதே - கொடுத்தலே — ஈகை - (பிறர்க்குக்)கொடுத்தலாகும்.—மற்றெல்லாம் - (அதுநீங்கலாகிய) எல்லாக்கொடையும்| — குறியெதிர்ப்பை - குறிக்கப்பட்டபின்வரும்பயனோடுகூடிய—நீரது - குணத்தை}—உடைத்து-உடையதாகும். எ-று. ❁ அது நீங்கலாகியகொடை - வறியவரல்லாதவர்க்கு ஒருபயனை நோக்கிக் கொடுத்தல். நீரது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. பின்னும் தம்மிடத்தே வருதலால் குறியெதிர்ப்பை நீரதுடைத்தென்றார். [இதனால் ஈகையினது இலக்கணம் அறிவிக்கப்பட்டது.] (௧)

**ந**ல்லா றெனினுங் கொளறீது மேலுலக *
மில்லெனினு மீதலே நன்று. உ.

இ-ள். கொளல் - இரத்தல்—நல்லாறெனினும் - மேலுலகத்துக்கு)நல்வழியென்பவர்உண்டாயினும் — (அது|)தீது.—(கொடுத்தவர்க்கு)— மேலுலகம் - அந்தமேலுலகத்தையடைதல்—இல்லெனினும் - இல்லையென்பவர் உண்டாயினும்—ஈதலே-கொடுத்தலே|—நன்று. எ-று. ❁ எனினுமென்பன இரண்டும் அப்படி சொல்வாரில்லாமையைக் காட்டிநின்றது. ஏகாரத்தால் பிறவறங்களில் ஈகை சிறந்ததென்பது பெறப்பட்டது. நல்லாறுசொல்லவந்தவர் தீயதும்உடன்சொல்லினார். (உ)

**இ**லனென்னு மெவ்வ முரையாமை யீதல் *
குலனுடையான் கண்ணே யுள. ௩.

இ-ள். இலனென்னும்-வறியேனென்று (இரப்பவன்) சொல்லும—எவ்வம் - இழிவை — உரையாமை - (பிறரிடத்தே) சொல்லாமையும் — (அதனைத் தன்னிடத்தேசொன்னவர்க்கு)

ஈதல் - (இல்லையென்றுமற்) கொடுத்தலும்—(ஆகியவிரண்டு ம்) —குலனுடையான்கண்ணே - நல்லகுடியிற்பிறந்தவனிடத் தே—உள - உண்டாயிருக்கும். எ - று. ※ முனபாட்டிலே தீதெ னப்பட்டதைச் செய்யாமைக்கும், நன்றெனப்பட்டதைச்செ ய்தற்கும், உரியவனை அறிவித்தபடி. (ரு)

இன்று இரக்கப் படுத லிரந்தவ ※
ரின்முகங் காணு மளவு. — ச.

இ - ள். (இரத்தலேயல்லாமல்) — இரக்கப்படுதல் - இரக்கப் படுதலும் | — இன்றுது - இன்பஞ்செய்வதன்று. — இரந்தவர் - (ஒருபொருளை) இரந்தவரது — இன் - (அதுபெற்றதனால்) இ னிதாகிய — முகம் - முகத்தை — காணுமளவு - பார்க்குமளவும். எ - று. ※ உம்மையிரண்டும் வருவிக்கப்பட்டன. இரக்கப்படு தல் - இரப்பவர்க்குக் கொடுப்பேனென்றிருத்தல். எல்லாமிர ப்பவர்க்கு ஒன்றுகொடுக்கக் கூடாமைநேரிடுமோவென்னும் அச்சத்தைக்குறித்து அதனை இன்றென்றார். எனவே எல் லாப்பொருளும் கொடுக்கவேண்டுமென்றதாயிற்று. (ச)

ஆற்றுவா ராற்றல் பசியாற்ற லப்பசியை ※
மாற்றுவா ராற்றலிற் பின். — ரு.

இ - ள். ஆற்றுவார் - (தவத்தால்) வல்லவராவோருக்கு — ஆற் றல் - வல்லமையாவது | — பசியாற்றல் - (தமக்கு அடைந்த) ப சியைப்பொறுத்தலாம். — (அவ்வல்லமைதான்) — அப்பசி யை - அப்படிபொறுத்தற்கரியபசியை — மாற்றுவார் - (கொ டையினாலே) நீக்குவோரது — ஆற்றலிற்பின் - வல்லமைக்கு ப்பின். எ - று. ※ தாமும் பசித்துப் பிறருக்கும் அது தீர்க் கமாட்டாதவரது வல்லமையைக்காட்டிலும் தாமும பசியாது பிறருக்கும் அதுதீர்ப்பவரது வல்லமை நன்றென்பதாம். (ரு)

அற்று ரழிபசி தீர்த்த லஃதொருவன் ※
பெற்றான் பொருள்வைப் புழி — சு.

இ - ள். அற்றார் - வறியவரது — அழிபசி - மிகுந்தபசியை — தீர்த்தல் - (அறமென்றெண்ணி) தீர்க்கக்கடவன். — அஃது - அவ்வறம் — பொருள்பெற்றானொருவன் — வைப்புழி - (அப்பொருளை தனக்குதவ) வைக்குமிடம். (ஆதலால்) எ - று. ※ எல்லாருடன்

மைகளும் அழியவருதலால் அழிபசியென்றார். அற்றாரழிபசி தீர்த்தபொருள் பின் தனக்கே வந்து உதவுமென்பதாம். (சு)

பாத்தூண்மரீஇ யவனைப் பசியென்னுந்
தீப்பிணி தீண்ட லரிது. (எ)

இ-ள். பாத்து - (எந்நாளும்) பகுத்து—ஊண்-உண்ணுதல்— மரீஇயவனை - பழகியவனை— பசியென்னும் - பசியெனப்படும்—தீப்பிணி - தீயநோய்|— தீண்டலரிது - தீண்டுதலில்லை. எ-று. ✻ இவ்வுடம்பிலே நின்று ஞானத்தையும், ஆசாரத்தையும், கெடுத்து - அதனால்பின்வரும் உடம்புகளுக்கும் துன்பஞ்செய்தலால் தீப்பிணியெனப்பட்டது. தனக்குமருத்துவன் தானேயாகையால் பசிப்பிணி சேராதென்பதாம் [இவை இருபாட்டாலும் ஈதலின் சிறப்புச் சொல்லப்பட்டது.] (எ)

ஈத்துவக்கு மின்ப மறியார்கொ றாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர். (அ)

இ-ள். தாமுடைமை - தாமுடையபொருளை—வைத்து - (கொடாது) வைத்து— (பின்னே) இழக்கும் - வன்கணவர் அருளிலாதவர்|— ஈத்து - (வறியவர்க்கு) வேண்டியபொருள்களைக்)கொடுத்து — உவக்கும் - (அவர்)மகிழ்தலினால் (அருளுடையாரடையும்) — இன்பம் - மகிழ்ச்சியை—அறியார்கொல் - கண்டறியாரோ. எ-று. ✻ ஈந்தென்பது எதுகைநோக்கி ஈத்தென்றாயிற்று. அறிந்தாராயின் தாமும் அவ்வின்பத்தை அனுபவிப்பாரேயல்லாமல் வைத்திழவாரென்பதுகருத்து. (அ)

இரத்தலி னின்னாது மன்ற நிரப்பிய
தாமே தமிய ருணல். (கூ)

இ-ள். நிரப்பிய - (பொருளின்குறைவை) நிறைக்கவேண்டி— (இரந்தவர்க்குக்கொடாமல்) — தாமே—தமியர் - தனித்தவராகி—உணல் - உண்ணுதலானது|—(ஒருவருக்கு)—மன்ற - நிச்சயமாக — இரத்தலின் - (பிறரிடத்தேபோய்) இரத்தலினும் — இன்னாது - துன்பஞ்செய்வதாம். எ-று. ✻ பொருளின் குறையை நிறைத்தலாவது - ஒவ்வொருதொகையைக் குறித்து அவ்வளவு சம்பாதிப்போமென்று அத்தொழிலையே மேற்கொண்டு உலோபஞ்செய்துசேர்த்தல். தனித்தல் - பிறரைச்சேராமை. இரத்தலுக்குஉள்ளது அப்போதையிழிவே-

பின்னே வறுமையில்லை - தன்னுத்துண்ணுதலுக்கு அவவரணமு
ம் உண்டாகுமாதலால் இரத்தலினின்றுதென்றார். ௬

சாதலி னின்னாத தில்லை யினிததூஉ ※
மீதலியையாக் கடை. ௰.

இ - ள். (ஒருவனுக்கு)—சாதலின் - இறத்தல்போல்—இன்
னாதது - துன்பஞ்செய்வதொன்று — இல்லை.—அதூஉம். அப்
படிப்பட்டஇறத்தலும்|— ஈதல் - (வறியவர்க்கு) கொடுத்த
ல் - இயையாக்கடை - முடியாதவிடத்து—இனிது - இன்பஞ்செ
ய்வதாகும். எ - று. ※ பிறருக்குப் பயன்படாத உடற்சுமை
நீங்குதலால் இனிதென்றார். [இவைமூன்றுபாட்டாலும் ஈயா
மையின் குற்றம் சொல்லப்பட்டது.] (௰)

உச - ஆம், அதி — புகழ்

அஃதாவது - இல்வாழ்க்கைமுதல் ஈகை ஈறுகச்சொல்லப்
பட்ட இல்லறத்தில் தவறாதவர்க்கு இம்மைப்பயனாகி இ
வ்வுலகத்திலே செய்தபடியே நிற்பதாகிய கீர்த்தியாம்.
இது பெரும்பாலும் ஈகைபற்றி வருதலால் அதன்பின்
வைக்கப்பட்டது.

ஈத லிசைபட வாழ்த லதுவல்ல ※
தூதிய மில்லை யுயிர்க்கு. க.

இ - ள். ஈதல் - (வறியவருக்குக்) கொடுத்தலினாலே—இசைப
ட-புகழுண்டாக — வாழ்தல் - வாழக்கடவர். — அதுவல்லது -
அப்புகழல்லாமல்—உயிர்க்கு- (மக்க) ளுயிர்க்கு—ஊதியம் -
வேறுபயன் — இல்லை (ஆதலால்). எ-று. ※ இசைபடவாழுதற்
குக் கல்விஆண்மைமுதலாகிய வேறுகாரணங்களும் இருக்கினு
ம் ஈகைசிறந்ததாதலால் எடுத்துச்சொல்லப்பட்டது. (க)

உரைப்பா ருரைப்பவையெல்லாமிரப்பார்க்கொன் ※
றீவார் மேனிற்கும் புகழ். உ.

இ - ள். உரைப்பார் - (உலகத்திலேஒன்றை) உரைப்பவரால்
— உரைப்பவையெல்லாம் - உரைக்கப்படுமவைகளெல்லாம்|
—இரப்பார்க்கு - (வறுமையால்) இரப்பவர்க்கு — ஒன்று -

(அவர் வேண்டிய) தொன்றை—ஈவார்மேல் - கொடுப்பவரி டத்தே—நிற்கும்—புகழ்-கீர்த்திகளாம். எ - று. ※ புகழ்தான். உரையும், பாட்டும், என இருவகைப்படும். அவற்றுள்- உரைப்பாருரைப்பவையென எல்லார்க்கும் உரிய வழக்கத்தையே எடுத்தாராயினும் இனம் பற்றிப் புலவர்க்கே உரிய பாட்டும் கொள்ளப்படும். பட்டே-பாடுவார் பாடுவ வெல்லா மிரப்பாரிக்கொன் றீவார் மேனிற்கும் புகழ். என்பதும் பெற்றாம். புகழின் காரணங்களி லீதல்சிறந்தமை இதனுள் ளுங்காண்க-உ

ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற் * <br>
பொன்றாது நிற்பதொன் றில். ௩.

இ-ள். ஒன்றா-தனக்கு இணையில்லையாக—உயர்ந்த - ஓங்கிய—புகழல்லால்-கீர்த்தியல்லாமல்—உலகத்து - உலகத்தில—பொன்றாது - அழியாமல்—நிற்பது—ஒன்று - வேறொன்று|—இல்-இல்லை. எ - று- ※ தனக்கு இணையில்லையாகவோங்குதலாவது-கொடுத்தற்கரிய - உயிரையும், உறுப்பையும், பொருளையும், கொடுத்தமைபற்றி வருதலால் தன்னோடு ஒப்பது இல்லாமல் தானே உயர்தல் - அப்படிப்பட்டபுகழையே மனிதனாய்ப்பிறந்தவன் சம்பாதிக்கவேண்டுமென்பதாம்- [இவைமூன்றுபாட்டாலும் புகழ்து சிறப்புச் சொல்லப்பட்டது.] (௩)

நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப் * <br>
போற்றாது புத்தே ளுலகு. ௪.

இ-ள். (ஒருவன்)—நிலவரை - பூமியினெல்லையில்—நீள்புகழ்-அழியாதுநிற்கும்புகழை—ஆற்றின் - செய்வானாயின்—புத்தேளுலகு - தெய்வலோகமானது|—(அவனையல்லாமல்)—புலவரை - (தன்னை அடைந்திருக்கிற) ஞானிகளை}—போற்றாது-பேணாது.எ-று.※ இவன்போல் அவர்-புகழ்வடிவால் இவ்வுலகத்தையும், தேவவடிவால் அவ்வுலகத்தையும், ஒருசேர அடையாமையால் - புலவரைப்போற்றாது புத்தேளுலகென்றார்

நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும் * <br>
வித்தகர்க் கல்லா லரிது. ௫.

இ-ள்.வித்தகர்க்கல்லால் - திறமையை உடையவர்க்கு அல்லாமல்—(மற்றவர்க்கு) —நத்த (மாகும்) -(புகழுடம்பிற்கு) பெருக்கமாகும்—கேடும்-வறுமையும்|—அரிது - இல்லை

உளதாகும்- (அப்புகழுடம்பு) நிலைபெறுவதாகும்—சாக்காடு ம்-மரணமும்|—அரிது - இல்லை. எ-று. ❋ நந்து என்னுமுதனிலைத் தொழிற்பெயர்-நத்து என விகாரப்பட்டு அம்விகுதி பெற்றுவந்தது. போல்-உரையசை. ஆகும் - அரிது - இவற்றை மூன்றுங் கூட்டப்பட்டன. பெருக்கமாகுங் கேடாவது - புகழுடம்பு செல்வத்தை அடைதற்குப் பூதவுடம்பு வறுமைப்படல். நிலைபெறுவதாகுமரணமாவது - புகழுடம்பு நிலைபெறற்குப் பூதவுடம்பு இறத்தல். நிலையில்லாதவுடம்பை வருத்தியும்விட்டும் நிலையானபுகழை வளர்த்தலும் நிறுத்தலும்பிறர்க்குமுடியாமையால்-வித்தகர்க் கல்லாலரிதென்றார். [இவை யிரண்டுபாட்டாலும் புகழுடையாரது மேன்மைசொல்லப்பட்டது. (ரு)

தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார் ❋
தோன்றலிற் றோன்றாமை நன்று. - சா.

இ-ள். தோன்றின் - (மனிதராய்ப்)பிறந்தால்—புகழொடு புகழுக்கு ஏதுவாகியகுணத்தோடு-தோன்றுக - பிறக்கக்கடவர்.—அஃதிலார் - அக்குணமில்லாதவர்—தோன்றலின் - (மனிதராய்ப்) பிறத்தலினும் —தோன்றாமை - பிறவாமையானது | [விலங்குகளாய்ப்பிறத்தலென்றபடி]—நன்று. எ-று. ❋ புகழுக்கு ஏதுவைப்புகழென்றலால் ஆகுபெயர். இலாறென்றதனால் மனிதராயென்பதும், மனிதராய்ப் பிறவாமையென்ற அருத்தாபத்தியினாலே விலங்காய்ப் பிறத்தலென்பதும், கொள்ளப்பட்டன. இகழ்வா ரில்லாமையால் நன்றென்றார். (சா)

புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை ❋
யிகழ்வாரை நோவ தெவன். - - - - - எ.

இ-ள். புகழ்பட - (தமக்குப்) புகழுண்டாக—வாழாதார் - வாழமாட்டாதவர் — (அதுபற்றிப்பிறரிகழ்ந்தவிடத்தே) — தந்நோவார் - (இவ்விகழ்ச்சி நமதுமாட்டாமையால்வந்ததென்று) தம்மைநோவாதவராகி—தம்மை — இகழ்வாரை—நோவது|—எவன்-என்னநினைத்து. எ-று. ❋ புகழ்படவாழவேண்டியதாயிருக்க அப்படிவாழமாட்டாத குற்றம்பற்றிப்பிறர் இகழ்வது ஒருபக்ஷமாகலால் - இகழ்வாரைநோவதெவனென்றார். (எ)

வசையென்ப வையத்தார்க் கெல்லா மிசையென்னு ❋
மெச்சம் பெறாஅ விடின். - - - - - அ.

இ-ள். இசையென்னுமெச்சம் - புகழென்னும் எச்சத்தை

—(பெறவேண்டியிருக்க) — பெறாவிடின் -(அதனைப்)பெறா
துவிடுவாராயின் — வையத்தார்க்கெல்லாம் - பூமியிலுள்ளார்
க்கெல்லாம் — வசை -(அதுதானே) வசையாகும் — என்ப - என்
று(நல்லோர்) சொல்லுவர். ☼ செய்தவர் இறந்து போகத்தா
ன் இறவாமல் நிற்கையால் - புகழை எச்சமென்றார். இகழப்ப
டுதற்கு மற்றொருகுற்றம் வேண்டாதென்பது கருத்து. (அ)

**வ**சையிலா வண்பயன் குன்று மிசையிலா - ☼
யாக்கை பொறுத்த நிலம். - - - ௯.

இ - ள். இசையிலா - புகழில்லாத — யாக்கை - உடம்பை —
பொறுத்த - சுமந்த — நிலம் - நிலத்தில் — வசையிலா பழிப்பில்
லாத — வண்பயன் - வளப்பத்தையுடையவிளைவு — குன்றும் - கு
றையும். எ - று. ☼ உயிருண்டாயினும் அதனாலே பயன்கொள்
ளாமையால் - யாக்கையென்றும், அது நிலத்திற்குப் பாரமாத
லின் பொறுத்தவென்றும், சொல்லினார். விளைவு குறைதற்கு
ஏது பாபசரீரத்தைச் சுமக்கின்ற வெறுப்பு. [இவைநான்கு
பாட்டாலும் புகழில்லோரது தாழ்வுசொல்லப்பட்டது.] (௯)

**வ**சையொழிய வாழ்வாரே வாழ்வா ரிசையொழிய ☼
வாழ்வாரே வாழா தவர். - - - ௰.

இ - ள். வசையொழிய - (தம்மிடத்து) வசையுண்டாகாமல்
[புகழுண்டாகவென்றபடி] — வாழ்வாரே — வாழ்வார் - (உயி
ர்)வாழ்வோராவார். — இசையொழிய - புகழுண்டாகாமல்
[வசையுண்டாகவென்றபடி] — வாழ்வாரே — வாழாதவர் —
இறந்தோராவார். எ - று. ☼ வசையென்பவென்னும் பாட்டி
ல் - வசையொழிதல் புகழ்பெறுதலானதால் - இங்கே இசை
யொழிதல் - வசைபெறுதலாயிற்று. முன்பாட்டிலேபுகழில்லா
தவுடம் பென்றதனை விளக்கியவாறு. [இதனால் அம்மேன்மை
யுந்தாழ்வும் உடன்சொல்லப்பட்டன.] மறுமைப்பயன் வானு
றையுந் தெய்வத்துள் வைக்கப்படுமென முன்னேசொல்லப்ப
ட்டமையால் இல்லறத்துக்கு இவ்வுலகத்திலேபுகழும் தேவரு
லகத்திலேபோகமும் பயனென்பது கொள்ளப்பட்டது. (௰)

இனி மனுமுதலிய அறநூல்களாற் பொதுவாகக்கூறப்
பட்ட இல்லறங்களெல்லாம் இவர் தொகுத்துக்கூறிய இ
வற்றுள்ளே அடங்கும் அஃது அறிந்து அடக்கிக்கொள்க.

இல்லறவியல் முற்றுப்பெற்றது.

ஆக-குறள்-௨௱௪௰

# துறவறவியல்.

இனிமுறைப்படித் துறவறம் சொல்லத்தொடங்கினார். துறவறமாவது, முன்சொல்லப்பட்ட இல்லறத்தின் வழுவாது நடந்து - அறிவுடையராய்ப் - பிறப்பினை அஞ்சி - முத்தி பெறுதற் பொருட்டு - துறந்தவர்க்குஉரித்தாகிய அறமாம். அது - விரதமும், ஞானமும், எனவிருவகைப்படும்.

## விரதம்.

அதாவது - வினைமாசுதீர்ந்து - அந்தக்கரணங்கள் பரிசுத்தமாதற்பொருட்டு - இன்ன அறங்களைச் செய்வேனென்றும், இன்ன பாவங்களை விடுவேனென்றும், தமது வல்லமைக்கு ஏற்க அளவுசெய்து கொண்டு துறந்தோரால் காப்பாற்றப் படுவது. அவ்விரதங்கள் அளவில்லாதனவையாயிருக்கினும் அவைபலவற்றையும் தம்முள்ளே அடக்கிநிற்குஞ் சிறப்புடைய சிலவற்றை இங்கே சொல்லத்தொடங்கி முதலிலே அருளுடைமையை அருளிச்செய்கின்றார்.

### ௨௫ - ஆம், அதி — அருளுடைமை,

அஃதாவது - தொடர்புபற்றாமல் இயல்பாக எல்லாவுயிர்களின்மேலும் செல்வதாகிய கருணையையுடையராதலாம் - இல்லறத்துக்கு அன்புடைமைபோல் இது துறவறத்துக்குச் சிறத்தலால் முன் சொல்லப்பட்டது.

அருட்செல்வஞ் செல்வத்துட்செல்வம்பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள - - - - - - - - க.

இ-ள். பொருட்செல்வம் - பொருளால்வருஞ்செல்வங்கள் | — பூரியார்கண்ணும் - இழிந்தவரிடத்தும் — உள - இருக்கின்றன. — (ஆதலால்) — செல்வத்துள் - செல்வங்கள் பலவற்றுள்ளும் ஆராய்ந்து எடுக்கப்பட்ட — செல்வம் - செல்வமாவது | — அருட்செல்வம் - அருளால்வருஞ்செல்வமாம். எ-று. ❋ அருளால் வருஞ் செல்வமாவது - உயிர்களைக் காப்பாற்றி அவ்வறத்தால்

ரம்பமதலாம். இழிந்தோரிடத்து இல்லாமல் உயர்ந்தோரி
த்துமாத்திரம் உள்ள அருட்செல்வமே சிறப்புடைய செல்
மென்றும், இழிந்தோரிடத்தும் உள்ள மற்றைப் பொருட்
சல்வங்கள் சிறப்புடையன அல்லவென்றும், சொல்லியதாம்.

நல்லாற்றா னாடி யருளாள்க பல்லாற்றாற் - *
றேரினு மஃதே துணை. - - - - - ௨.

இ-ள். (நல்லாற்றால்) - நல்வழியிலேநின்று—நாடி - (அள
வைகளாலும் யுத்தியாலும்நமக்குத்துணையாகும் அறமியாதெ
ன்று)ஆராய்ந்து—அருளாள்க - அருளுடையாராகக்கடவர்.—
பல்லாற்றால்- (ஒன்றுக்கு ஒன்று ஒத்திராத) பலசமயவழிகளா
ல்—தேரினும் - ஆராய்ந்தாலும்—துணை - துணையாவது|—
அஃதே - அவ்வருளே [வேறொன்றில்லையென்றபடி.] எ - று.
※ அளவைகளாவன - பொறிகளாலே காணும் காட்சியும், கு
றிகளாலே ஆலோசித்து அறியும் அநுமானமும் +, கருத்தா
மொழியாகிய ஆகமமும், எனமூன்றுவகைப்படும். ஒப்புமை
பற்றி அறிகிற உவமானமும்,இப்படிஅல்லாமற்போனால் இது
கூடாதென்று அறியும் அருத்தாபத்தியும்*, உண்மைக்கு எதி
ராகிய இல்லாமையும், எனவிவையுங்கூட்டி ஆறென்பாரும்
உண்டு. இவையும் அம்மூன்றுள் அடக்கிக்கொள்ளப்படும். யுத்
தியாவது-இது கூடும் இது கூடாது எனத் தன்னிடத்தேதோ
ன்றுவது.—ஒன்றுக்கு ஒன்று ஒத்திராமையாவது - மதவேறு
பாட்டால் அளவைகளும், பொருள்களும், தம்முள்ளே மாறு
கொள்ளுதலாம். அப்படியிருந்தாலும்-அருள் துணையென்ப
து எல்லார்க்கும் ஒத்திருக்குமென்பதாம். உயிரைவிட்டு நீங்
காமல் இருமையிலும் உதவலால் துணையென்றார்.[இவை யிர
ண்டுபாட்டாலும் அருளது சிறப்புச்சொல்லப்பட்டது.](௨)

அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த *
வின்னா வுலகம் புகல். - - - - - ௩.

இ-ள். இருள்சேர்ந்த—இன்னாவுலகம் - துன்பவுலகத்திலே
—புகல் - (போய்ப்) புகுதல்|—அருள்சேர்ந்த—நெஞ்சினார்
க்கு-நெஞ்சையுடையவர்க்கு—இல்லை. எ-று. ※ இருள்சேர்ந்
த வின்னாவுலகமென்றது-நெருங்கியவிருளையுடையதாய்த் து

+ புகையினாலே நெருப்பை அறிவதுமுதலானவை.
* பகலுண்ணான்பருத்திருக்கைநோக்கிஇரவிலுண்பானெனவறிவதுபோல்வன.

ன்னை அடைந்தவர்க்குத் துன்பஞ் செய்வதொரு நரகத்தை. அது கீழுலகத்துள் ஓரிடமாகலின் உலகமெனப்பட்டது. (௩)

மன்னுயி ரோம்பி யருளாள்வார்க் கில்லென்ப *
தன்னுயி ரஞ்சும் வினை. - - - - - - - ௪.

இ-ள். மன்னுயிர் - நிலைபேறுடைய உயிர்களை — ஓம்பி - காப்பாற்றி — அருளாள்வாற்கு (அவைகளிடத்தே) அருளுடையனாயிருப்பவனுக்கு — தன்னுயிர் — அஞ்சும் - அஞ்சுதற்கு ஏதுவாகிய — வினை பாவங்களானவை | — இல் - உண்டாகா. — என்ப - என்று (அறிந்தோர் | ) சொல்லுவர். எ-று. * உயிர்களெல்லாம் நித்தியமாதலின் மன்னுயிரென்றார். அஞ்சுதல் - துன்ப நோக்கி அஞ்சுதல். அப்படிப்பட்ட அறமுடையவன் கொலை முதலாகிய பாவங்களைச் செய்யானெனவே மறுமையிலே நரகத்தை அடையாமைக்கு ஏது சொல்லப்பட்டதாயிற்று. (௪)

அல்ல லருளாள்வார்க் கில்லை வளிவழங்கு - - *
மல்லன்மா ஞாலங் கரி. - - - - - - ௫.

இ - ள். அருளாள்வார்க்கு - அருளுடையவருக்கு — (இம்மையிலும) — அல்லல் - ஒருதுன்பமானது | — இல்லை - உண்டாகாது. — (அதற்கு) — வளிவழங்கும - காற்றுலாவுகின்ற - மல்லல் - வளப்பத்தையுடைய — மா - பெரிய — ஞாலம் - பூமியில்வாழ்வோர் | — கரி - சாக்ஷியாவார். எ-று. * சாக்ஷியாவார் - தாம்கண்டு தெளிந்த பொருளைக் காணாதார்க்குத் தெளிவித்தற்கு உரியவர். அருளாள்வார்க்கு அல்லலுண்டாக ஒருகாலத்திலும் ஓரிடத்திலும் ஒருவரும் கண்டறிவாரில்லாமையால் - உலகத்தாரனைவரும் சாக்ஷியாவரென்றற்கு ஞாலங்கரியென்றார். எனவே இம்மையிலென்பது பெற்றாம். ஞாலத்தாரை ஞாலமெனலால் ஆகுபெயர். [இவைமூன்றுபாட்டாலும் அருளுடையவர்க்கு இருமையிலும் துன்பமில்லாமை சொல்லப்பட்டது.] (௫)

பொருணீங்கிப் பொச்சாந்தா ரென்ப ரருணீங்கி*
யல்லவை செய்தொழுகு வார். - - ௬.

இ-ள். அருணீங்கி - (உயிர்களிடத்துச்செய்யவேண்டும்) அருளைவிட்டு — அல்லவை - விடவேண்டுங்கொடுமைகளை — செய்து — ஒழுகுவார் - நடப்பாரை — பொருணீங்கி - (முன்பிறப்பிலேயும்) உறுதிப்பொருளைத்தேடாமல் — பொச்சாந்தார் - (தாம்துன்பப்படுகின்றமையை) மறந்தவர் — என்ப - என்று (நூ

ல்லோர் |) சொல்லுவர். எ - று. ❊ உறுதிப்பொருள் - அறம். துன்பப்படுதல் - தன்னைப்பற்றிவருவது முதலாகிய பிறவித் துன்ப மூன்றையும் அனுபவித்தலாம். மறவா திருந்தாராயி ன் அப்படி நடவாரென்பது கருத்து. (௬)

அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க் ❊
கிவ்வுலக மில்லா கியாங்கு. - - - - - எ.

இ - ள். பொருளில்லார்க்கு—இவ்வுலகம் - இவ்வுலகத்தினி ன்பம்—இல்லாகியாங்கு - இல்லாதமைபோல்—அருளில்லார் க்கு -(உயிர்களின்மேல்)அருளில்லாதவர்க்கு—அவ்வுலகம் - அ வ்வுலகத்தினின்பம் |—இல்லை. எ-று. ❊ உலகமிரண்டும் அவற் றினின்பங்களுக்கு ஆகுதலால் - ஆகுபெயர்கள். எப்படி இந்த வுலகவின்பத்துக்குப் பொருளோ அப்படியே அந்தவுலகவி ன்பத்துக்கு அருள் காரண மென்பதாயிற்று. (எ)

பொருளற்றார் பூப்ப ரொருகா லருளற்றா ❊
ரற்றார்மற் றாத லரிது. - - - - அ.

இ-ள். பொருளற்றார் - (ஊழினாலே)வறுமைஅடைந்தவர் | —(அது நீங்கி)—ஒருகால்-(பின்)மொருகாலத்தில்— பூப்பர் - (செல்வத்தினால்) பொலிவார்.— (அப்படியல்லாமல்) — அரு ளற்றார்-அருளில்லாதவர் | —(பாவம் நீங்காமையால்)—அற்றா ர் - அழிந்தவரே.— மற்று - பின்னொருகாலத்திலும்—ஆதலரி து - ஆகுதலில்லை.எ-று. ❊ முன்பாட்டில் ஒருவிதத்தால் பொ ருளில்லாமையோடு அருளில்லாமையை ஒப்பாக்கிச் சொன் னாராதலால் இப்பாட்டில் மற்றொரு விதத்தினாலே அதனை ம றுத்து அதிலும் கொடிதென்பது சொல்லியபடி. (அ)

தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற் றேரி ❊
னருளாதான் செய்யு மறம். - - - - ௯.

இ-ள். அருளாதான் - (உயிர்களிடத்தே) அருள்செய்யாத வன்—செய்யும்—அறம் - அறத்தை — தேரின் - ஆராயின்— தெருளாதான் - ஞானமில்லாதவன்—மெய்ப்பொருள் - மெய் ந்நூலிற்சொல்லப்பட்டபொருளை— கண்டற்று - (ஒருகால்)க ண்டதுபோலும்.எ-று.❊ ஆல் - அசை. எப்படிநிலைபெற்றஞா னமில்லாதவன் நடுவேமெய்ப்பொருளைஉணர்ந்தால் அதனைத் தனதுஞானமில்லாமையாற்றானே அழித்துவிடுவானோ அப்ப

டியே அருளில்லாதவன் நடுவே அறஞ்செய்தால் அதனைத் த ன்னருளில்லாமையாற்றானே அழித்துவிடுவா னென்பதாயிற் று. ஆகவே மற்றெல்லாவறங்களுக்கும் அருளுடைமை மூல மென்பதுபெறப்பட்டது. [இவை நான்குபாட்டாலும் அரு ளில்லாதவர்க்கு வரும் குற்றம் சொல்லப்பட்டது.] (௯)

வலியார்முற் றன்னை நினைக்கதான் றன்னின் *
மெலியார்மேற் செல்லு மிடத்து. - - - ௰.

இ-ள். (அருளில்லாதவன்) — தன்னின்மெலியார்மேல் — தான் — செல்லுமிடத்து - (வருத்துதற்குச்) செல்லுமிடத்து — வலியார்-(தன்னின்)வலியவர் — (தன்னைவருத்துதற்கு வரு ம்போது) — முன் - (அவர்) முன் — தன்னை - (அஞ்சிநிற்கும்) தனது நிலைமையை — நினைக்க-நினைக்கக்கடவன். எ - று. மெ லியாரெனினும் - அஃதிணைக்குங்கொள்க. அதனை நினைக்கவே இந்தவுயிருக்கும் அப்படியே அச்சமுண்டாகு மென்று அறி ந்து அதன்மேல் அருளுடையவனுவானென்பது கருத்து. [இ தனுலே அருள் பிறத்தற்கு உபாயம் சொல்லப்பட்டது.] (௰)

உ௱௬-ஆம், அதி—புலான்மறுத்தல்.

அஃதாவது - ஊனுண்ணுதலை ஒழித்தலாம். கொலைப்பா வத்தைப் பின் உண்டாக்கலால் அதற்குக் காரணமாத லையும், முன்னும் அதனால் வருதலால் அதன்காரியமாத லையும், ஒருசேர உடைத்தாகிய ஊனுண்ணுதல் அருளு டையார்க்கு இயைவது அன்றாகலின் அதனைவிலக்குதற் கு இது அருளுடைமையின்பின்வைக்கப்பட்டது.

தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பா *
னெங்ஙன மாளு மருள். - - - - - - - க.

இ-ள். தன்னூன்-தன்னுடம்பை—பெருக்கற்கு - வளர்த்த ற்பொருட்டு — தான் — பிறிதூன் - மற்றொன்றினுடம்பை — உ ண்பான் - தின்பவன் — எங்ஙனம் - எவ்வகையால் — அருள் - அ ருளை — ஆளும் - ஆளுவான். எ-று. பயனில்லாத தன்னூன் வ ளர்த்தலைப் பயனென நினைத்து இக்கொடுமைசெய்வோனே அறிவில்லாத கொடியோனென்றதாயிற்று. எங்ஙனமாளு ம ருளென்பது ஆளானென்பது படநின்ற இகழ்ச்சிக்குறிப்பு.

பொருளாட்சி போற்றாதார்க் கில்லை யருளாட்சி *
ஆங்கில்லை யூன்றின் பவர்க்கு. - - - உ.

இ-ள். பொருளாட்சி - பொருளினாலே பயன்கொள்ளுதல் | — போற்றாதார்க்கு - (அதனைக்) காப்பாற்றாதவர்க்கு — இல்லை. — ஆங்கு - அதுபோல் — அருளாட்சி - அருளினாலே பயன்கொள்ளுதல் | — ஊன்றின்பவர்க்கு — இல்லை. எ-று. ☼ எப்படி பொருட்பயனை இழத்தற்கு அதனைக் காப்பாற்றாமையோ அப்படியே அருட்பயனை இழத்தற்கு ஊன்றினல் காரணமென்றதாயிற்று. [ஊன்றின்றாராயினும் உயிர்களுக்கு ஒருதீங்கு நினையாராயின் அருளாளுதற்குக் குறைவில்லை யென்பாரை மறுத்து அது உண்டென்பது இவை இரண்டு பாட்டாலும் சொல்லப்பட்டது.] (எடுத்துக்காட்டுவமையணி.) (உ)

படைகொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா தொன்ற *
னுடல்சுவை யுண்டார் மனம். - - - - - - ௩.

இ-ள். ஒன்றன் - பிறிதோருயிரினது — உடல் - உடலை — சுவையுண்டார் - சுவைபடவுண்டவரது — மனம் - மனமானது | — படைகொண்டார் - கொலைக்கருவியைத் (தங்கைகயிலே) கொண்டவரது — நெஞ்சம்போல் - மனம்போல் — நன்றூக்காது - (கொலையைநோக்குவதல்லது) அருளைநோக்காது. எ-று. ☼ சுவைபடவுண்டல் - காயங்களால் இனியசுவைபடச் சமைத்து உண்டல். — படை - வாள்முதலானவை. [இதனால்ஊன்றின்பாரது மனந்தீங்குநினைத்தல் உபமானப்பிரமாணத்தினாலே சாதித்து முன்பாட்டிலேசொல்லியது உறுதிசெய்யப்பட்டது.] (௩)

அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல் - *
பொருளல்ல தவ்வூன் றினல். - - - - - ௪.

இ-ள். அருள் - அருளானது | — யாதெனின் - எதுவென்றால் — கொல்லாமை. — அல்லது - அவ்வருளல்லாததானது | — யாதெனின் - எதுவென்றால் — கோறல் - கொல்லுதல். — (ஆதலால்) — அவ்வூன் - அக்கொல்லுதலால்வந்தஊனை — தினல் - தின்னுதல் | — பொருளல்லது - அறமல்லாததாம். [பாவமாம்]. எ-று. ☼ கொல்லாமையை அருளென்றும் - கொல்லுதலை அல்லதென்றும் - காரியங்களைக் காரணங்களாகவும், ஊன்றின்னலையாகிய காரணத்தைப் பாவமாகியகாரியமாகவும், உபசரித்தார். —

அருளல்லது - கொடுமை,—சிறப்புப்பற்றி - அறம் பொருளெனப்பட்டதலால் - பாவம் பொருளல்லது எனப்பட்டது. (ச)

உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண *
வண்ணாத்தல் செய்யா தளறு. - - - - ரு.

இ-ள். உயிர் - (சிலவகை) யுயிர்கள் — நிலை - (உடம்புகளிலே) நிற்கை | —ஊன் - ஊனை — உண்ணாமையுள்ளது - உண்ணாமையென்னும் அறத்தினிடத்தது.—(ஆதலால்) —உண்ண-(அந்நிலை நிலைய ஒருவன் அதனை) உண்பானாயின் — அளறு - (அவனை விழுங்கிய) நரகமானது | — அண்ணாத்தல்செய்யாது - (பின் உமிழ்தற்கு) வாய்திறவாது. எ- று. ※ உண்ணப்படுகிற விலங்குகள் அதனாலே குறைந்துபோக மற்றவைகடல்குதலால் - உண்ணாமையுள்ளதுயிர் நிலையென்றார். — உண்ணவென்பது உண்ணினென்னும் பொருளில் வந்தது. [ஊனுண்டவன் அப்பாவத்தினாலே நெடுங்காலம் நரகத்துள் அழுந்துவானென்பதாம். [கொல்லும்பாவம் கொன்றவர்மேல் நிற்றலால் பின் ஊனுண்டார்க்குப் பாவமில்லையென்பாரை மறுத்து அது உண்டென்பது ... பாட்டாலும் சொல்லப்பட்டது.] ரு.

தினற்பொருட்டாற் கொள்ளா துலகெனின் யாரும் *
விலைப்பொருட்டா லூன்றருவா ரில். - - சு.

இ-ள். தினற்பொருட்டால் - தின்னுதல்காரணமாக—உலகு - உலகத்தார் — கொள்ளாதெனின் - (ஊனைக்) கொள்ளாராயின் — விலைப்பொருட்டால் - விலைப்பொருள்காரணமாக — ஊன் தருவார் - ஊனை விற்பவர் — யாரும் - எவரும் | — இல் - இல்லை. எ-று.※ [பின்னே உண்டாவதாகிய ஊனைத்தின்னுதல் அதற்கு முன்னே உண்டாவதாகிய கொலைக்குக்காரணமாகாமையால் தின்பார்க்குக்காரணத்தால் வரும் பாவம் இல்லையென்ற வாதியை நோக்கி அருத்தாபத்தி பிரமாணத்தினாலே காரணமாகுதல் சாதித்தபின் இதனால் முன்பாட்டிலேசொல்லியது உறுதி செய்யப்பட்டது.] (சு)

உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன் *
புண்ண துணர்வார்ப் பெறின். - - - எ.

இ-ள். புலால் - புலாலானது | —பிறிதொன்றன் - வேறோருடம்பினது—புண் - புண்ணாகும்.—அது - அப்புலால் அசுத்த

ணாயிருக்கையை—உணர்வார் - அறிவோரை—பெறின் - பெற்றால்—உண்ணாமைவேண்டும் - (அப்புலாலை) உண்ணாதொழிய வேண்டும். எ-று. ❋ அந்தமெய்மையை அறியாமையால் அதனை உண்கின்றாரென்பதாம். [இதனால் யுத்தியினாலும் ஊனுண்ணல் இழிந்ததென்பது சொல்லப்பட்டது.] (எ)

செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணா ❋
ருயிரிற் றலைப்பிரிந்த வூன். - - - அ.

இ-ள். செயிரின் (மயக்கமாகிய) குற்றத்தினின்றும்—தலைப்பிரிந்த - நீங்கிய—காட்சியார் - அறிவினையுடையவர் | —உயிரின்-ஒருயிரினின்றும்—தலைப்பிரிந்த - நீங்கிவந்த—ஊன்-ஊனை } —உண்ணார். எ-று. ❋ தலைப்பிரிவு-ஒருசொல். பிணமென்று ஊனின் மெய்மைதானே அறிதலால் உண்ணாரென்றார். (அ)

அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற ❋
னுயிர்செகுத் துண்ணாமை நன்று. - - - கூ.

இ-ள். அவி - (நெய்முதலாகிய) அவிகளை—சொரிந்து - (தீயினிடத்தே) பெய்து—ஆயிரம்வேட்டலின் - ஆயிரம்யாகஞ் செய்தலினும்—ஒன்றன் - ஒருவிலங்கினது—உயிர் - உயிரை—செகுத்து - போக்கி—உண்ணாமை - (அவ்வுயிர்நின்றவூனை) உண்ணாமை |—நன்று. எ-று. ❋ அந்தயாகங்களால் வரும்பயனினும் இந்தவிரதத்தால் வரும்பயன் பெரிதென்பதாம். (கூ)

கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி ❋
யெல்லா வுயிருந் தொழும். - - - ய.

இ-ள். கொல்லான் - (ஒருயிரையும்) கொல்லாதவனுமாய்—புலாலைமறுத்தானை - புலாலையுமுண்ணாதவனை } —எல்லாவுயிரும் |—கைகூப்பி-கைகுவித்து—தொழும் - வணங்கும். எ-று. ❋ இவ்விரண்டறங்களையும் ஒருமிக்கவுடையவர்க்கு அல்லாமல் ஒன்றைமாத்திரம் உடையவர்க்கு அதனாற் பயனில்லை யாகலின் கொல்லாமையும் உடன் சொல்லினார். இப்பேரருளுடையவன் மறுமையிலே தேவரினும் உயர்ந்தவனாவனென அப்பயனது பெருமை சொல்லியபடி. [இவை மூன்றுபாட்டாலும் ஊனுண்ணாமையினது உயர்ச்சி சொல்லப்பட்டது.] (ய)

## உஎ - ஆம், அதி — தவம்.

அஃதாவது - மனம் பொறிவழிபோகாமல் நிற்றற்பொருட்டு விரதங்களினாலே உண்டி சுருக்குதல் முதலான செயல்களை மேற்கொண்டு - அவைகளால் தம்முயிர்க்கு வருந் துன்பங்களைப்பொறுத்துப் - பிறவுயிர்களைக்காப்பாற்றலாம். புலான்மறுத்து உயிர்களின்மேல் அருள் முதிர்ந்தவிடத்தே செயப்படுவதாகலின் இது புலான்மறுத்தலின் பின்வைக்கப்பட்டது.

உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை *
யற்றே தவத்திற் குரு. - - - - - - - க.

இ-ள். தவத்திற்கு—உரு - வடிவமானது | — உற்றநோய் - (உண்டிசுருக்குதல் முதலானவைகளால்) தம்முயிர்க்கு வரும் துன்பங்களை—நோன்றல் - பொறுத்தலும்—உயிர்க்கு - பிறவுயிர்க்கு—உறுகண்செய்யாமை - (தாம்) துன்பஞ்செய்யாமையும் ஆகிய—அற்றே-அவ்வளவினதேயாகும்.எ-று. ☼ மற்றைய விரதங்களெல்லாம் இவ்விரண்டிலே அடங்குமாதலின் - அற்றேயெனத் தேற்றேகாரங் கொடுத்தார். [இதனால் தவத்தினது இலக்கணம் சொல்லப்பட்டது.] (க)

தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை - - *
யஃதிலார் மேற்கொள் வது. - - - - உ.

இ-ள். தவமும்-(பயனேயல்லாமல்) தவம் உண்டாவதும் | —தவமுடையார்க்கு - (முன்னைத்) தவத்தை உடையவர்க்கே —ஆகும்.—(ஆதலால்)—அதனை - அத்தவத்தை — அஃதிலார் - அம்முன்னைத்தவமில்லாதவர் | — மேற்கொள்வது - செயத்தொடங்குவது |—அவம்-வீணாம். எ-று. ☼ முன்பழக்கத்தால் அறிவும்வல்லமையும் உடையராய் முடித்தலால் தவமுடையார்க் காகுமென்றும், பழக்கமில்லாதவர்க்கு அவ்விரண்டும் இல்லாமையினாலே முடியாமையால் அவமென்றும்,கூறினார். (உ)

துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொன் *
மற்றை யவர்க டவம். - - - - - - ௩.

இ-ள். மற்றையவர்கள் - இல்லறத்தையே பற்றி நிற்பவர்கள் | —துறந்தார்க்கு—துப்புரவு - உண்டியும் மருந்தும் இரு

படுமும்—வேண்டி-(உதவுதலை) வேண்டி—தவம்-(தாம்) தவஞ்செய்தலை—மறந்தார்கொல் - மறந்தார்போலும். எ-று. ※ துப்புரவு - அனுபவிக்கப்படும்பொருள்கள்.—தவமானது வேண்டியவைகளை வேண்டியபடியே பெறத்தருவ தாதலால் யாவராலும் செய்யத்தகுவதாகிய அதைத் தம்மாலே செயப்படுகிற தானத்தின்மேல் விருப்பமிகுதியால் மறந்தார்போலுமெனவே தானத்தினும் தவம் உயர்ந்தது என்றதாயிற்று. (௩)

ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலு - - ※
மெண்ணிற் றவத்தான் வரும். - - - - - ௪.

இ-ள். ஒன்னார்-(தமது அறத்துக்கு இடையூறுசெய்த) பகைவரை—தெறலும் - கெடச்செய்தலையும்—உவந்தாரை-(அதனை) விரும்பினவரை—ஆக்கலும் - உயரச்செய்தலையும்—எண்ணின் - (தவஞ்செய்வோர்) நினைப்பாராயின்—தவத்தான் - (அவரது) தவவலிமையினால்—வரும் - (அவை அவருக்கு) உண்டாகும். எ-று. ※ முழுதுந் துறந்தவருக்கு - பகைவரும், நட்பினரும், இருப்பது கூடாமையால் தவத்திற்கு ஏற்றிச் சொல்லப்பட்டது. —எண்ணினென்றதனால் அவர்க்கு அவை எண்ணாமையே இயல்பென்பது தோன்றுகிறது. —பகைவர் - பெரியராயினும் அவருக்குக்கேடும், விரும்பினவர் சிறியராயினும் அவருக்கு உயர்வும், நினைத்தவளவில்வந்து நிற்குமெனத்தவஞ்செய்வார்மேல்வைத்துத் தவத்தின்வல்லமைசொல்லியபடி. (௪)

வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ ※
மீண்டு முயலப் படும். - - - - - ௫.

இ-ள். வேண்டிய-(முயன்றால்) பெறவேண்டிய பயன்களை—வேண்டியாங்கு - வேண்டியபடியே—எய்தலால் - (மறுமையிலேதாம்) பெறலாமாதலால்—செய்தவம் - செய்யத் தகுவதாகியதவமானது—ஈண்டு-இம்மையில்—முயலப்படும் - (அறிவுடையோராலே) முயலப்படும். எ-று. ※ ஈண்டென்றதனால் மறுமை வருவிக்கப்பட்டது. —மேலேகதியும், மோக்ஷமும், தவத்தாலல்லாமல் அடைதல்கூடாதென்பதாம். [இவைநான்குபாட்டாலும் தவத்தினது சிறப்புச் சொல்லப்பட்டது.]

தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லா - ※
ரவஞ்செய்வா ராசையுட் பட்டு. - - - - - ௬.

இ-ள். தவஞ்செய்வார்—தங்கருமஞ்செய்வார் - தமதுகரு

மத்தைச்செய்பவராவார் | — மற்றல்லார் - மற்றைப் பொருளின்
பங்களைச்செய்வார் | — ஆசையுட்பட்டு - (அவைகளி) னாசையா
கியவலையில் அகப்பட்டு — அவஞ்செய்வார் - (தமக்குக்)கேடு
செய்பவராவார். எ-று. ※ அநித்தியமாய் - மூவகைத் துன்பத்
துக்கு இடமாய் உயிரின்வேறாய் உள்ள உடம்புக்கு வருத்தம்
வருமென்று விடாமல் தவத்தைச்செய்தால் - பிறப்பு - பிணி-
மூப்பு - இறப்பு - இவைகளால் அறுதியாகத் துன்பப்பட்டுக்
கொண்டு வருகிற உயிரானது ஞானம்பெற்று மோக்ஷத்தை
அடையும் ஆதலால் தவஞ்செய்வாரைத் தங்கருமஞ் செய்வா
ரென்றும், க்ஷணத்தில் அழிவதாகிய சிற்றின்பத்தின் பொருட்
டுப் பலபிறவிகளிலும் துன்பப்படத்தக்க பாவஞ்செய்துகொ
ள்ளுதலால் அல்லாதாரை அவஞ்செய்வாரென்றும், சொல்லினார்.

சுடச்சுடப் பொன்போ லொளிவிடுந் துன்பஞ் - ※
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு. - - - - - எ.

இ-ள். சுடச்சுட - (புடத்தீயானது) சுடச்சுட — பொன்
போல் - பொன்னுக்குப்போல் — நோற்கிற்பவர்க்கு - தவஞ்
செய்யவல்லவர்க்கு — துன்பம் - (அதனால்வருகிற) துன்பம் —
சுடச்சுட — ஒளிவிடும் - ஒளிமிகும். எ-று. ※ ஒளி - பொன்னு
க்கு - காந்தியும், தவஞ்செய்வோர்க்கு - ஞானமும், ஆம். — காந்
திமிகுந்தோறும் பொன்னுக்குக் குற்றம் நீங்கல்போல் ஞான
மிகுந்தோறும் அவர்க்குப்பாவம் நீங்கல்கொள்க. — ஒளிபோ
ற்பொருளை விளக்கலால் - ஞானம் ஒளியெனப்பட்டது. (எ)

தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய - - - ※
மன்னுயி ரெல்லாந் தொழும். - - - - - அ.

இ-ள். தன்னுயிர் - தனது உயிரை — தானற - தனக்கு உரித்
தாக — பெற்றானை — ஏனைய - அதுபெறாதவையாகிய — மன்
னுயிரெல்லாம் - நிலைபேறுடைய உயிர்களெல்லாம் — | தொ
ழும். எ-று. ※ தனக்குரித்தாதல் - தவமாகிய தன்கருமஞ்செய்த
ல். — அதைக்காட்டிலும் பெறுதற்கு உரியது இல்லாமையா
ல் - பெற்றானையென்றார். அதுபெறாதவையென்றது - ஆசையிற்
பட்டு அவஞ்செய்யுமுயிர்களை. — சாபானுக்கிரகவல்லமையை
ப்பெற்றிருக்கையினாலே எல்லாவுயிருந் தொழுமென்றார். (அ)

**கூ**ற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி - - ❊
ளாற்ற றலைப்பட் டவர்க்கு. - - - - ௯.

இ-ள். கூற்றம் - யமனை — குதித்தலும் - கடத்தலும் | — கைகூடும் - உண்டாகும் — நோற்றலின் - தவஞ்செய்தலால் வருவதாகிய — ஆற்றல் - வல்லமையை — தலைப்பட்டவர்க்கு - கூடியவர்க்கு. எ - று. ❊ குதித்தலுமென்னும்உம்மை அதுகூடாமையை விளக்கியது. ஆற்றல்-சாபானுக்கிரகம். [இவை நான்குபாட்டானும் தவஞ்செய்வோரது உயர்ச்சி சொல்லப்பட்டது.] (௯)

**இ**லர்பலராகிய காரண நோற்பார் - - - ❊
சிலர்பலர் நோலா தவர். - - - - - ௰.

இ-ள். (உலகத்திலே செல்வர் சிலராக) — இலர் - வறியவர் — பலராகியகாரணம் - பலராதற்குக் காரணம் — (யாதென்றால்) — (அது|) — நோற்பார் - தவஞ்செய்வோர் — சிலர் - சிலராக — நோலாதவர் - தவஞ்செய்யாதவர் — பலர் - பலராதல். எ - று. ❊ இங்கே செல்வம் ஞானத்தையும், வறுமை அஞ்ஞானத்தையும், குறித்தும் நின்றன. நோற்பார் சிலரெனக் காரணத்தைச் சொல்லலால் - அதன்காரியமாகிய செல்வர் சிலராதல் வருவிக்கப்பட்டது. [இதனால் தவஞ்செய்யார்க்கு இம்மை யின்பமும் இல்லையென்று இதனால் அதனது தாழ்வுசொல்லப்பட்டது.] (௰)

❊❊❊❊❊❊❊❊❊❊❊—❊❊❊—❊❊❊❊❊❊❊❊❊❊❊

## உ௮-ஆம், அதி—கூடாவொழுக்கம்.

அஃதாவது - தாம்விட்ட காமவின்பத்தை உறுதியில்லாமையினாலே பின்னும் விரும்பும் வழிதோன்ற அவ்வழியேகொண்டு நின்று தவத்தோடு பொருந்தாததாகிய தீயவொழுக்கம். அது விலக்குதற்கு இது தவத்தின்பின் வைக்கப்பட்டது.

**வ**ஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க ❊ -
ளைந்து மகத்தே நகும். - - - - - - ௧.

இ - ள். வஞ்சமனத்தான் - வஞ்சம்பொருந்திய மனத்தையுடையவனது — படிற்றொழுக்கம் - மறைத்த ஒழுக்கத்தை — பூதங்களைந்தும் - (உடம்பாய்அவனோடுகலந்துநிற்கின்ற) பஞ்

சபூதங்களும்|—(கண்டு)—அகத்தே - (தம்)முள்ளே—நகும்-சிரிக்கும்.எ-று. ❊காமம் தன்னுள்ளே வருந்திக்கொண்டிருக்கவும் காமமில்லாமையைச் சொல்லிப் புறத்தாரை வஞ்சித்தலால் - வஞ்சமனமென்றும், அவ்வருத்தம் பொறுக்கமாட்டாமற் செய்யும் கள்ளச்செய்கையைப் படிற்றொழுக்க மென்றும், உலகத்திலே களவுடையவர் பிறர் அறியாமற் செய்யுங்காரியங்களுக்கு ஐம்பெரும் பூதங்களே சாக்ஷியாகலின் அச்செய்கையையும்-அவன் மறைக்கின்ற விதத்தையும், அறிந்து அவன் அறியாமல் தம்முள்ளே சிரித்தலால் அகத்தே நகுமென்றும் சொல்லினார். செய்தகுற்ற மறையாதாகலின். தவஞ்செய்வோனுக்கு அவ்வொழுக்கம் ஆகாதென்பது கருத்து. (க)

**வா**னுயர் தோற்றமெவன்செய்யுந் தன்னெஞ்சந்❊
தானறி குற்றப் படின். - - - - உ.

இ-ள். தான்—அறி-அறிந்த—குற்றம்-குற்றத்திலே—தன்னெஞ்சம்-தனதுமனம்—படின் - தாழுமாயின்—(ஒருவனுக்கு)—வானுயர் -வான்போலுயர்ந்த—தோற்றம் - தவவேடமானது|—எவன் -என்னபயனை?—செய்யும்,எ-று. ❊அறியாது செய்தகுற்றத்துக்கு அல்லாமல் அறிந்து செய்தகுற்றத்துக்குப் பிராயச்சித்தம் இல்லாமையால் நெஞ்சு குற்றமுடையதாகிய விடும் விடவேதின்ற வேஷமாத்திரத்துக்குப் புறத்தாரை வெருட்டுதலே அல்லது வேறுபயன் இல்லையென்பதாம். (உ)

**வ**லியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம் - ❊
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று. - ௩.

இ-ள். வலி-(மனத்தைஅடக்கும்)வல்லமையை—இல்-இல்லாத—நிலைமையான்-இயல்புடையவன்—வல்லுருவம்-அவ்வல்லமையை யுடையவரது வேடத்தைக்கொண்டு (மனம் போனவழிபோகுதல்|)—பெற்றம்-பசுவானது—(காவற்காரர் தூரத்தாதிருக்கும்படி)—புலியின்றோல் - புலியினதுதோலை—போர்த்து—மேய்ந்தற்று — பயிரைமேய்ந்தால் அச்செய்கை போலும்.எ-று. ❊மேய்தலுக்கு ஏற்க மனம்போனவழிபோகுதல் வருவிக்கப்பட்டது. காவற்காரர் தூரத்தாமை - புலிபயத்தாற் புல்லைத்தின்றது என்பதனாலும், அச்சத்தாலும், ஆம், ஆகவே - அவ்வல்லுருவங் கொள்ளுதற்குப்பயன் அப்படிப்பட்ட காரணங்களால் - உலகத்தார் சந்தேகப் படாமையாயி

ற்று. பசுதனக்கு உரிய புல்லை விட்டுப் புலித்தோல்போர்த்து ப் பிறர்க்கு உரிய பயிரை மேய்தல்போல் அக்கூடாவொழுக்க த்தான் தனக்கு உரியமனைவியை விட்டுத் தவவேடங்கொண்டு பிறருக்கு உரிய பெண்டிரை அனுபவித்தலென்க, (அப்படி செய்கிற பசு இல்லாமையால் இல்பொருளுவமையணி.) (௩)

தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து - ※
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று. - - - - .. ச

இ-ள். (அவ்வல்லவையில்லாத நிலைமையான்)— தவம் - தவ வேடத்திலே — மறைந்து — அல்லவை - தவமல்லாதவைகளை —செய்தல்|—வேட்டுவன் - வேடன்|—புதல்-புதலிலே—ம றைந்து—புள்-பறவைகளை—சிமிழ்த்தற்று - பிடித்தல்போலு ம். எ-று. ※ தவம் அதன் வேடத்துக்கு ஆகுதலால் ஆகுபெ யர். தவமல்லவற்றைச் செய்தலாவது - பிறர்க்கு உரிய மகளி ரைத் தன்வசத்தாராக்குதல். இப்படி செய்தலென்பது இத் தொழிலுவமையினாலே தோன்றுதல் அறிக. (ச)

பற்றற்றே மென்பார் படிற்றொழுக்க மெற்றெற்றென் ※
றேதம் பலவுந் தரும். - - - - - - ரு.

இ-ள். (பிறர்தம்மை நன்குமதித்தற்பொருட்டு) —பற்றற் றேமென்பார் - பற்றற்றேமென்றுசொல்லுவாரது — படிற் றொழுக்கம்-மறைந்தவொழுக்கமானது|— (அப்பொழுது இ னிதுபோல்தோன்றுமாயினும்) — எற்றெற்றென்று - (பின்) என்செய்தோம் என்செய்தோமென்று (தாமேஇரங்கும்படி) — ஏதம்பலவும்-பலதுன்பங்களையும்} —தரும் - (அவருக்குக் கொடுக்கும்.எ-று. ※ சொல்லளவிலல்லது பற்று நீங்காமை யால் பற்றற்றே மென்பாரென்றும், சிறிதாய்க்கணத்துள்ளே அழிவதாகிய இன்பத்தின்பொருட்டுப் - பெரிதாய்நெடுங்கால ம் நிற்பதாகிய பாவத்தைச் செய்வோர் அது துன்பத்தைத் த ரும்போது ஐயோ பாவமேயென்று அழுவாராதலின் எற்றெ ற்றென்றும், சொல்லினார். [இவை ஐந்துபாட்டாலும் கூடா வொழுக்கத்தினது இழுக்கம் சொல்லப்பட்டது] (ரு)

நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து ※
வாழ்வாரின் வன்கணா ரில். - - - - சா.

இ-ள். நெஞ்சின் - மனதினால்—துறவார் - (பற்றுக்களைத்)

றவாராகி— துறந்தார்போல் — வஞ்சித்து - (தானஞ்செய்வாரை) வஞ்சித்து—வாழ்வாரின் - வாழுமவர்போல்—வன்கணார் இரக்கமில்லாதவர்|—இல் - இல்லை. எ-று. ❋தானஞ்செய்வாரை வஞ்சித்தலாவது-யாம் மறுமையிலே நற்கதி அடைதற்பொருட்டு இந்த அரியதவத்தோர்க்கு இன்னது கொடுப்போமென்று அறியாமற்கொடுத்தவரை அதை வாங்கிக்கொண்டு தாழ்ந்த கதியை அடைவித்தலாம். தமக்கு அமைவகளைச்செய்தார்க்கு ஆகாதவைகளைச் செய்தலால் - வன்கணாரில்லென்றார். (சு)

புறங்குன்றி கண்டனைய ரேனு மகங்குன்றி - - ❋
மூக்கிற் கரியா ருடைத்து. - - - - எ.

இ-ள். புறம்-மேலே—குன்றி - குன்றிமணியானது—கண்டனையரேனும் - காணப்படுதல்போற் காணப்படுகிற செம்மை நடையுடையவராயினும—அகம் - உள்ளே — குன்றிமூக்கி[illegible] குன்றிமணியின் மூக்குப்போல்—கரியார்- கறுத்திருப்பவ[illegible]—உடைத்து - (உலகமானது|) உடையதாயிருக்கி[illegible] எ-று. ❋குன்றியாகிய உபமானத்திலே நிறத்தைக்காட்டிய செம்மைகருமைகள் - உபமேயத்திலே செவ்வையாயிருக்கையையும் அறிவில்லாமையையும காட்டுகின்றன. (எ)

மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி - - - ❋
மறைந்தொழுகு மாந்தர் பலர். - - - - அ.

இ-ள். மாசு-அழுக்கானது—மனத்ததாக-(தம்) மனத்திலுள்ளதாக — மாண்டார் - (பிறர்கருத்தவத்தால்) மாட்சிமையுடையவராக—நீராடி- நீரிலேமுழுகிக (காட்டி) —மறைந்து-(தாம் அதனிடத்தே) மறைந்து—ஒழுகும்-நடக்கும்—மாந்தர்-மனிதர்|—பலர் - (உலகத்திலே)பலர். எ-று. ❋மாசு-காமவெகுளி மயக்கங்கள். அவைபோதற்காக வல்லாடல்-மாட்சிமைப்பட்டவரென்று பிறர்நினைத்தற்காக நீராடுதலால் அத்தொழிலே அவர்மறைதற்கு இடமாகின்றார். [இவை மூன்றுபாட்டாலும் கூடாவொழுக்கத்தாரது குற்றமும், அவரை அறிந்து நீக்கவேண்டுமென்பதும், சொல்லப்பட்டன.] (அ)

கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன - ❋
வினைபடு பாலாற் கொளல். - - - - கூ.

இ-ள், கணை-அம்பானது|—(வடிவினாலே செவ்விதாயிரு

ாலும்)—கொடிது - (செயலினாலே) கொடியதாயிருக்கின்றது.—யாழ் - வீணையானது|—கோடு (வடிவினாலே) வளைவினதாயிருந்தாலும்—செவ்விது - (செயலினாலே) செவ்விதாயிருக்கின்றது.—ஆங்கு - அவ்வகையே—அன்ன - தவஞ்செய்வார் கொடியர் செவ்வியராயிருக்கைகளை } — (அவரது வடிவினாலே கொள்ளாமல்) — வினைபடுபாலால் - (அவரது) செயல்பட்ட பகுப்பினாலே—கொளல் - அறிந்துகொள்ளக்கடவர். எ - று. ❊ அம்புக்குச் செயல் - கொல்லுதல். வீணைக்குச்செயல் - இசையினாலே இன்பத்தைத்தருதல். அவ்வகையே - அவர் பாவத்தைச்செய்தால் - கொடியரென்றும், அறத்தைச்செய்தால் - செவ்வியரென்றும், கொள்ளவேண்டுமென்பதாம். [இதனால் அவரை அறியுமவழி சொல்லப்பட்டது.] (கூ)

மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம் - - - ❊
பழித்த தொழித்து விடின். - - - - - - ம.

இ-ள் - (தவஞ்செய்வோர்க்கு) — மழித்தலும் - (தலைமயிரை) மழித்தலும்—நீட்டலும் - (அதனைச்) சடையாக்கலும் அல்லது வளர்த்தலும்|— வேண்டா - வேண்டுவனவல்ல.— உலகம் - உயர்ந்தோரால் — பழித்தது - (தவத்திற்கு ஆகாதென்று) குற்றஞ் சொல்லப்பட்ட ஒழுக்கத்தை — ஒழித்துவிடின் - நீக்கிவிடுவாராயின். எ - று. ❊ மழித்தலென்பதே தலைமயிரைக் காட்டலால் அதைச் சொல்லினாரில்லை. [இதனாலே கூடாவொழுக்கத்தை விட்டுத் தவஞ் செய்வோர்க்கு வேஷமும் வேண்டாமென அவரது சிறப்புச் சொல்லப்பட்டது.] (ம)

உகூ-ஆம், அதி — கள்ளாமை.

அஃதாவது - பிறருடைமையா யுள்ளவைகளில் யாதொரு பொருளையும் அவரை வஞ்சித்துக் கொள்ள நினையாமையாம். நினைத்தலும் செய்தற்குச் சமானமாதலால் - கள்ளாமையென்றார்.

இல்லறத்தாருக்குத் தம்மவரோடுவினையாட்டாகவாவது செய்யக்கூடும் அறவறத்தாருக்கு நினைத்தவிடத்தும் பெரியதவறும் ஆதலின் இது துறவறமாயிற்று. புறத்திலே போகாமல் மடங்கி ஒரிடத்தையுற்று உயிரை நோக்க வேண்டியதாகிய அவரது மனம் அதைவிட்டுப் புறத்திலேபோய்ப் பலவிடத்தையுற்று உடம்பின்பொருட்டுப் பொருளை நோக்குதலல்லாமலும் அப்பொருளையும் வஞ்சித்துக்கொள்ள நினைத்தல் அவருக்குப் பெரியகுற்றமாதல் அறிக. இவ்விதம் வாய்மைமுதற் கொல்லாமை முடிவாகிய நான்கதிகாரத்துக்கும் ஒக்கும். இது பொருளைப் பற்றியுண்டாங்குற்றத்தை விலக்குவதாகலின் காமம்பற்றியுண்டாங் கூடாவொழுக்கத்தின் பின்வைக்கப்பட்டது.

எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்தொன்றுங்
கள்ளாமை காக்கதன் னெஞ்சு. - - - - க.

இ-ள். எள்ளாமை - (முத்தியை) இகழாமல்—வேண்டுவா னென்பான்-விரும்புவோன் இவனென்று (தவத்தோராலே) நன்குமதிக்கப்படுவோன் |— எனைத்தொன்றும் - யாதொரு பொருளையும்—கள்ளாமை - பிறரைவஞ்சித்துக்கொள்ள நினையாதபடி—தன்னெஞ்சு - தனதுநெஞ்சை}—காக்க - காக்கக்கடவன்-எ-று. ☼ முத்தியை இகழ்தலாவது-காட்சியே பிரமாணமென்றும்,—நிலம்-நீர்-நெருப்பு-காற்று எனப்பூதம் நான்கே யென்றும், — அவைகள் கூடுதலின் சிறப்பினாலே தோன்றிப் பிரிவினாலே அழிவதாகிய உடம்பினிடத்தே அறிவு மதுவினிடத்தே களிப்புப்போல் வெளிப்பட்டு அழியுமென்றும்,—இறந்தவுயிர் பின்னை பிறவாதென்றும், — இன்பமும் பொருளும் முயற்சியால் வருவதென்றும்,—சொல்லும் - உலோகாயத மதமுதலாகிய மயக்கநூல்களைத் தெளிந்து அவற்றுக்கு எற்க நடத்தலாம். ஞானநூற் பொருளையாயினும் ஆசாரியனுக்கு வழிபாடுசெய்யாமல் வஞ்சித்துக்கொள்ளின் அதுவும் களவாமாகலின் எனைத்தொன்றுமென்றார். நெஞ்சு கள்ளாமைகாக்கவென்றலால் - துறந்தோர்க்கு விலக்கப்பட்டகள்ளுதலாவது-களவுசெய்ய நினைத்தலென்பது பெற்றாம். (க)

உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக் *
கள்ளத்தாற் கள்வே மெனல். - - - - உ.

இ-ள். (குற்றங்களை)—உள்ளத்தால்-(தமது) நெஞ்சினாலே—உள்ளலும்-நினைத்தலும்|—தீதே - (துறந்தார்க்குப்) பாவமேயாகும்.—(ஆதலால்)—பிறன் -பிறனது—பொருளை—கள்ளத்தால் - அவனறியாதவகையினாலே—கள்வேம் - வஞ்சித்துக்கொள்வோம்—எனல் - என்று நினையாதிருக்கக்கடவர். எ-று. ☼ அவருள்ளம் சிறந்த தென்பது தோன்றுதற்கு உள்ளத்தாலென்பது அதிகமாகச் சொல்லப்பட்டது. [இவை யிரண்டுபாட்டாலும் துறந்தோர்க்குக் களவாவது இது வென்பதும், அதை நீக்கவேண்டு மென்பதும், சொல்லப்பட்டன.] (உ)

களவினா லாகிய வாக்க மளவிறந் - - - - *
தாவது போலக் கெடும். - - - - - - ௩.

இ-ள். களவினால்—ஆகிய - உண்டாகிய—ஆக்கம் - பொரு

பாதவனாகி—வினைவிழைவான் - தொழில்முடித்தலையே விரும்புவோன்—தன்கேளிர் - தன்சுற்றத்தாரும் நட்பாளருமாகிய கேளிரது—துன்பம் - (பாரத்தின்) துன்பத்தை — துடைத்து—ஊன்றும் - (அதனைத்) தாங்குவதாகிய—தூண் - தூணும். எ-று. ❋ கேளிரதுவறுமையுந் தீர்த்து அவரைக் காத்தலுஞ் செய்யவல்லவனுமெனவே தனக்கு அவை செய்துகொள்ளுதல் சொல்லவேண்டுவதில்லையாயிற்று. — காரியமாகிய இன்பத்தை விரும்பாமல் காரணமாகிய முயற்சியை விரும்புவோன் எல்லாப்பயன்களும் அடைவானென்றதனால் அக்காரணத்தைவிட்டு அக்காரியத்தை விரும்புவோன் ஒருபயனும் அடையானென்பது பெறப்பட்டது. (ஏகதேச வுருவகம்.) [இதனால் அதனையுடையவனது நன்மை சொல்லப்பட்டது.

முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை - - ❋
யின்மை புகுத்தி விடும். - - - - ௬.

இ-ள். முயற்சி - (அரசரிடத்தேஉண்டாகிய) முயற்சியானது|—திருவினை. (அவரது) செல்வத்தை}—ஆக்கும் - வளர்க்கும்.—முயற்றின்மை - அம்முயற்சியில்லாமையானது|—இன்மை-வறுமையை} — புகுத்திவிடும் - அடைவித்துவிடும்-எ-று. ❋ இங்கேசெல்வம் - மந்திரிமுதலாகிய அறுவகை அங்கங்கள்.— வறுமை அவையில்லாதவராதல். — அதனை அடைவித்துவிடவே பகைவரால் அழிவொன்பது கருத்து. (௬)

மடியுளாண் மாமுகடி யென்ப மடியிலான் - - ❋
றாளுளா டாமரையி னாள். - - - - - ௭.

இ-ள். மாமுகடி - கரியமூதேவியானவள்— மடி - (ஒருவனது) சோம்பலினிடத்தே—உளாள் - இருப்பாள். — தாமரையினாள் - சீதேவியானவள்|—மடியிலான் - சோம்பலில்லாதவனது—தாள் - முயற்சியினிடத்தே — உளாள் - இருப்பாள்.—என்ப - என்று (அறிந்தோர்) சொல்லுவர்., எ-று. ❋ பாவத்தின்கருமை அதன்பயனாகிய முகடிமேலேற்றப்பட்டது. சோம்பலையும் முயற்சியையும் உடையவரிடத்தே அவர்களிருத்தலை அவைகளின்மேலே ஏற்றினார். [இவை இரண்டுபாட்டாலும் அவ்விரண்டுக்கும் ஏதுக்கள் சொல்லப்பட்டன.] (௭)

பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந் *
தாள்வினை யின்மை பழி. - - - அ.

இ-ள். பொறியின்மை - (பயனைத்தருவதாகிய) விதியில்லா மை | —யார்க்கும்—பழியன்று - பழியாகாது. — அறிவறிந்து - அறியவேண்டுமவைகளை அறிந்து — ஆள்வினையின்மை - தொழில்செய்யாமையே | —பழி - பழியாகும். எ-று. ✻ அறியவேண்டுமவை - வலிமுதலானவையாம்.—ஊழ்பொருந்தா தவிடத்தே தொழில்செய்தலாலே பயன் இல்லையென்பாரை நோக்கி உலகம் பழையவினைபற்றிப் பழியாது இவ்விடத்தே தொழில்செய்யாத குற்றமுடைமை பற்றியே பழிப்பரென்றார். அதனுல் விடாது முயல்க வென்பது கருத்து. (அ)

தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன் *
மெய்வருத்தக் கூலி தரும். - - - கூ.

இ-ள். (முயற்சி செய்ததொழில்) —தெய்வத்தான் - ஊழ் வகையால்—ஆகாதெனினும் - (நினைக்கப்பட்டபயனைத்) தாராதாயினும்—முயற்சி | — தன்மெய் - தனக்கிடமாகிய உடம்பு—வருத்தக்கூலி (வருந்திய) வருத்தத்தின் கூலியளவு} — தரும் [பாழாகாது] எ-று. ✻ ஊழினுல் ஆகிய விடத்துத் தன்னளவின் மிகுந்த பயனைத் தருமென்பது உம்மையாற் பெற்றாம். — ஆனவிடத்தும் ஆகாவிடத்தும் பாழாகாமை யால் ஊழைநோக்கி இராமல் முயல்கவென்பது கருத்து. கூ.

ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித் *
தாழா துஞற்று பவர். - - - - ௰.

இ-ள். ஊழையும் - (பயனைவிலக்குவதாகிய) ஊழையும் —உப்பக்கங்காண்பர் - புறங்காண்பார்.—உலைவின்றி - (அவ் விலக்குதற்கு) இளையாமல்—தாழாது - தாழ்வற—உஞற்றுப வர் - (தொழிலை) முயல்வோர். எ-று. ✻ தாழ்வறுதல் - ஆலோசனையிலும், வலிமுதலானவை யறிதலிலும், செயலிலும்,குற்றமறுதல்.—ஊழானது - தொழிலை ஒருகால் இருகால் அல்லாமல் விலக்காமையாலே பலகாலும் முயற்சிசெய்வோர் பயனை அடைவாரென்றற்கு - உப்பக்கங்காண்பரென்றார். [ஊழினுலே இடுக்கண்வரினும் முயற்சிவிடத்தக்க தல்லவென்பது இம்மூன்று பாட்டாலும் சொல்லப்பட்டது.] (௰)

***************-***-***************
***************-***-***************



அஃதாவது - தொழிலிலே முயல்பவன் ஊழினாலாவது, பொருளில்லாமையினாலாவது, மெய் வருத்தத்தாலாவது, தனக்குத் துன்பம் வந்தவிடத்து அதற்கு மனங்கலங்காமை. அதிகாரமுறைமையும் இதனாலேவிளங்கும்.

இடுக்கண் வருங்கா னகுக வதனை - - - - - *
யடுத்தூர்வ தஃதொப்ப தில். - - - - - க.

இ-ள். (ஒருவன்|)—இடுக்கண் - துன்பமானது — வருங்கால்-(வினையினாலேதனக்கு)வருமிடத்து—நகுக . (அதற்கு அழியாமல்) உள்ளமகிழக்கடவன்.—அதனை- அத்துன்பத்தை —அடுத்து-மேலுமேலுமாய்—ஊர்வது - நெருக்கவல்லது| —அஃதொப்பது-அம்மகிழ்ச்சிபோல்வது—இல் - (வேறே) யில்லை. (ஆதலால்). எ-று. ❋ தொழில் நன்றாக முடிந்தவிடத்தே உண்டாவதான மகிழ்ச்சியை அதற்கு நடுவிலே துன்பம் வருமிடத்து உட்கொண்டால் அவன் அழிவின்றி மனவெழுச்சியால் அதனைத் தள்ளி அக்குறை முடிக்க வல்லவனாதலின் - அதனை யடுத்தூர்வ தஃதொப்ப தில்லென்றார்.

வெள்ளத் தனைய விடும்பை யறிவுடையா - *
னுள்ளத்தி னுள்ளக் கெடும். - - - உ.

இ - ள். வெள்ளத்தனைய - வெள்ளம்போலே கரையில்லாத —இடும்பை - துன்பமெல்லாம்| — அறிவுடையான் — உள்ளத்தின் -உள்ளத்தினாலே — உள்ள - (ஒன்றை) நினைத்தவளவிலே —கெடும் எ-று. ❋ துன்பமாவது - உள்ளத்து ஒரு கோட்பாடே யென்பதும் - அது மாறுபாடாகக் கொண்டால் நீங்குமென்பதும் - அறியவேண்டுதலால் அறிவுடையா னென்றும், அவ்வுபாயத்தி னெளிமைதோன்ற உள்ளத்தினுள்ளவென்றும், சொல்லினார். [இவ்விரண்டுபாட்டாலும் ஊழினாலாகிய இடுக்கணால் அழியாமைக்கு உபாயம்சொல்லப்பட்டது.] (உ)

இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக் - - *
கிடும்பை படாஅ தவர். - - - - - - ௩.

இ-ள். இடும்பைக்கு-(தொழில் செய்யும்போது அதற்கு நடுவிலே வந்த) துன்பத்திற்கு — இடும்பைபடாஅதவர் - வருந்தாதவர்| —இடும்பைக்கு - அத்துன்பத்திற்கு—இடும்பை-

துன்பத்தை—படுப்பர் - உண்டாக்குவார். எ-று. ☼ வருந்துதல் - இளைத்துச் செய்யாமல்விட நினைத்தல். — மனத்திடமுடையவராய் விடாது முயன்றால் தொழில் முடிவுபெற்றுப் பயன்படுமாதலால் எல்லாத்துன்பங்களும் நீங்குமென்பது பற்றி-இடும்பைக் கிடும்பை படுப்பரென்றார்.—வருகின்றபாட்டிரண்டிலும் இதற்கு இப்படியே பொருள்கொள்க. (௩)

மடுத்தவா யெல்லாம் பகடன்னா னுற்ற - - ☼
இடுக்க ணிடர்ப்பா டுடைத்து. - - - - - ௪.

இ-ள். மடுத்தவாயெல்லாம் - தடைபட்ட விடங்களிலெல்லாம—பகடன்னான் - (பண்டியை இழுத்துச் செல்லுங்) கடாப் போலே தொழிலை மேற்கொண்டு செலுத்த வல்லவனை—உற்ற-அடைந்த — இடுக்கண் - துன்பமானது |—இடர்ப்பாடு-(தானே) துன்பப்படுதலை—உடைத்து - உடைத்தாம். எ-று. ☼ தடைபட்டவிடங்கள் - பண்டிக்குச் சேறு நில முதலானவையும், தொழிலுக்கு இடையூறுகளும், ஆம்.—கடா-பக்கத்திலொற்றியும், மூக்குப்பிடித்தும், கால்மடக்கியும், அரிதிலே செலுத்தும்விதம்போல் தன் மெய்வருத்தம்நோக்காமல் முயன்று செலுத்துவானென்றற்கு - பகடன்னானென்றார். (௪)

அடுக்கி வரினு மழிவிலா னுற்ற - - - ☼
இடுக்க ணிடுக்கட் படும். - - - - ௫.

இ-ள். அடுக்கிவரினும் - இடைவிடாது மேலுமேலும்வந்தனவாயினும — அழிவிலான் - (தன்னுள்ளக்கோட்பாடு) விடாதவனை—உற்ற-அடைந்த — இடுக்கண் - துன்பமானது |—இடுக்கட்படும்-(தான்) துன்பத்திலேபடும். எ-று. ☼ ஒன்றே பலகால்வருதலும், வேறுபலகலந்து வருதலும், அடங்க-அடுக்கிவரினுமென்றார். அழிவென்னுங் காரணப்பெயர் - காரியத்தின்மேல் நின்றது. [இவை மூன்றுபாட்டாலும ஊழாலாகிய துன்பத்துக்கு அழியாமை சொல்லப்பட்டது.] (௫)

அற்றேமென் றல்லற் படுபவோ பெற்றேமென் ☼
றோம்புத றேற்றா தவர். - - - - - - ௬.

இ-ள். பெற்றேமென்று - (செல்வக்காலத்து இது) பெற்றேமென்று —ஓம்புதல் - உலோபஞ்செய்தலை — தேற்றாதவர்-அறியாதவர் |— அற்றேமென்று - (வறுமைக்காலத்திலே) வ

றியேமாளேமென்று — அல் லற்படுபவோ-(மனத்தினாலே) துன்பப்படுவாரோ. எ - று. ❊ பெற்றவிடத்து உலோபஞ் செய்யாமையை நோக்கி அற்றவிடத்தும் மந்திரி முதலானவர்கள் விட்டு நீங்காமையால் - அல்லற்படுதலில்லையாயிற்று. [இதனாலே பொருளில்லாமையால் வந்த துன்பத்துக்கு அழியாமையும், அதற்கு உபாயமும், சொல்லப்பட்டன.] (௬)

இலக்க முடம்பிடும் பைக் கென்று கலக்கத்தைக் ❊
கையாறாக் கொள்ளாதா மேல். - - - ௭.

இ-ள். மேல் - அறிவுடையார் | — உடம்பு — இடும்பைக்கு-துன்பமாகியவாளுக்கு—இலக்கமென்று - குறியிடமென்றுதெளிந்து—கலக்கத்தை - (தம்மேல்வந்த) துன்பத்தை—கையாறு-துன்பமாக — கொள்ளாதாம் - கொள்ளார். எ - று. ❊ (இடும்பையை வாளென்னாமல் உடம்பை இலக்கமென்றதனால் ஏகதேசவுருவகம்.) இயல்பாகக்கொள்வதொன்றறிக. (௭)

இன்பம் விழையா னிடும்பை யியல்பென்பான் ❊
றுன்ப முறுத லிலன். - - - - - ௮.

இ-ள். இன்பம் - (தன்னுடம்பிற்கு) இன்பமானவைகளை—விழையான் - விரும்பானாகி—இடும்பை - (வினையால்) துன்பமடைதல்—இயல்பென்பான் - இயல்பென்றுதெளிந்திருப்பவன் |—துன்பமுறுதலிலன் - (தன்முயற்சியால்) துன்பமடையான். எ - று. ❊ இன்பம் விரும்பினாலும், இயல்பென்று துவாராமல் காக்கக்கருதினாலும், துன்பம் விளைதலால் இவ்விரண்டும்செய்யாதவனை - துன்பமுறுத லிலனென்றார். (௮)

இன்பத்து ளின்பம் விழையாதான் றுன்பத்துட் ❊
டுன்ப முறுத லிலன். - - - - - ௯.

இ-ள். இன்பத்துள் - (வினையினாலே) இன்பம்வந்தவிடத்து—இன்பம் - அவ்வின்பத்தை—விழையாதான் - (அநுபவித்துக்கொண்டே மனத்தால்) விரும்பாதவன் | — துன்பத்துள் - துன்பம்வந்தவிடத்தும் — துன்பம் - அத்துன்பத்தை—உறுதலிலன் - (அநுபவித்துக்கொண்டே மனத்தால்) அடையான். எ-று. ❊ துன்பமுயற்சியால் வரும் இடுக்கண் இரண்டும் ஒருதன்மையாக் கொள்ளலால் பயன்களும் இலவாயின.

இன்னாமை யின்ப மெனக்கொளி னாகுந்தன் - *
னொன்னார் விழையுஞ் சிறப்பு. - - - ௰.

இ-ள். (ஒருவன் தொழில்செய்யுமிடத்து)—இன்னாமை - (முயற்சியால்வருந்) துன்பத்தையே — இன்பமெனக்கொளின் - (தனக்கு)இன்பமாக நினைத்துக் கொள்ளுவானாயின் — (அதனால்)—தன்னொன்னார் - தன்பகைவர்—விழையும் - நன்குமதித்தற்கு ஏதுவாகிய — சிறப்பு - உயர்ச்சியானது|—ஆகும் - உண்டாகும். எ-று. ※ துன்பந்தானும்உயிர்க்கு இயல்பன்றி கணிதமாய் மனத்தினிடத்தே நிகழ்வதோர் கோட்பாடாகலின் அதனை மாறுபடக்கொண்டால் அதற்கு அழியாமல் மனமகிழ்ச்சியுடையனாகிஅதனாலே தொடங்கிய தொழிலை முடிக்கவல்லவனாகு மென்பது கருத்து. [இவைநான்கு பாட்டாலும் மெய் வருத்தத்தாலாகிய துன்பத்துக்கு அழியாமையும், அதற்கு உபாயமும், சொல்லப்பட்டன.] (௰)

அரசியல் - முற்றுப் பெற்றது.

# அங்கவியல்.

இனி முறையானே அரசியலை நடத்துதலிலே ஒன்றற்கொன்று துணையாகிய அங்கங்களது இயல்பை முப்பத்திரண்டு அதிகாரத்தாலே சொல்லத்தொடங்கி அவ்வங்கங்கள் ஆறனுள்ளும் ஆஞ்ஞாசக்கரத்தைச் செலுத்துதலிலே அவ்வரசனுக்குச்சமானமாகிய அமைச்சனது இயல்பு பத்ததிகாரத்தினாலே சொல்லத் தொடங்கி முதலிலே அமைச்சுச் சொல்லுகின்றார்.

௬௰௪-ஆம். அதி — அமைச்சு.

அஃதாவது-அமைச்சனது தன்மை. அத்தன்மை. அவன் குணங்களும் செய்கைகளும் ஆம்.

கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யு - - *
மருவினையு மாண்ட தமைச்சு. - - - - - - ௧

இ-ள். (தொழில்செய்யும்போது)— கருவியும் - (அதற்கு வேண்டுஞ்)சாதனங்களும்—காலமும் - (அதற்கு ஏற்ற) கால

மும்—செய்கையும் — (அது) செய்யும்விதமும் — செய்யு ருவினையும்-(அவ்விதத்திலே) செய்யப்படும் அரியதொழில்க ளும்—மாண்டது - பொருந்தவெண்ணவல்லவனே!—அமை ச்சு-மந்திரியாவான், எ-று. ❊ சாதனங்கள்-சேனையும், பொ ருளும்,—காலம் - அத்தொழிலைத் தொடங்குங்காலம். —செ ய்கையெனவே அது தொடங்கு முபாயமும், இடையூறுநீக்கி முடிக்கும்விதமும், அடங்கின.—சிறிய முயற்சியினாலே பெ ரியபடன் தருமென்றற்கு அருவினையென்றார். — இவ்வைந் தையும் வடநூலார் மந்திரத்துக்கு அங்கமென்பார். (க)

வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் லாள்வினையோ ❊
டைந்துடன் மாண்ட தமைச்சு. - - - உ.

இ-ள். வன்கண் - (தொழில்செய்தலிலே) அசைவில்லாமை யும்—குடிகாத்தல்-குடிகளைககாத்தலும்—கற்றறிதல்-(நீதிநூ ல்களைக்)கற்று (விதிவிலக்குகளை)அறிதலும்— ஆள்வினை-முய ற்சியும்—ஐந்துடன் - (முன்சொல்லப்பட்ட) அங்கங்களைந்து டனே—மாண்டது - திருந்தவுடையவனே!—அமைச்சு - மந் திரியாவான். எ - று. ❊ இந்நான்கினையும் முன்னையவைக ளோடு சேர்த்துச்சொல்லியது - அவைகளும் இவைகளோடு கூடியே மாட்சிமைப்பட வேண்டுமென்பதை அறிவித்தற்கு ம், அவை ஐந்தென்னுந் தொகைபெறுதற்கும், என்க. (உ)

பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப் - ❊
பொருத்தலும் வல்ல தமைச்சு. - - - ௩.

இ-ள். (போர்வந்தவிடத்து) — பிரித்தலும் - (பகைவர்க் குத் துணையாயினவரை அவரைவிட்டுப் பிரிக்கவேண்டினால்) பிரித்தலும்—பேணிக்கொளலும் - (தம்மிடத்தோரை அவர் பிரியாமற் கொண்டயினாலும் இன்சொல்லினாலும்) காத்துக் கொள்ளுதலும் — பிரிந்தார் - (தம்மைவிட்டும் தம்மவரைவி ட்டும்) பிரிந்தவரை — பொருத்தலும் - (மறுபடி பொருத்த வேண்டினால்)பொருத்தலும்—வல்லது - வல்லவனே | — அ மைச்சு-மந்திரியாவான். எ-று. ❊ இவைகளுள் அப்பொழு தை நிலைக்கு ஏற்ற செயலறிதலும், அதனை அவரறியாமல் அ தற்கு ஏற்ற உபாயத்தால் முடிவுறப்பிடித்தலும், அருமையா தல் நோக்கி வல்லதென்றார்.— பொருத்தலுக்குச் சந்தியென் றும், பிரித்தலுக்கு விக்கிரகமென்றும், பெயர்கள். (௩)

தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச் ❋
சொல்லலும் வல்ல தமைச்சு. - - - ௪.

இ-ள். (ஒருகாரியச் செய்கை பலவிதமாகத் தோன்றினு ல்)—தெரிதலும் - (அவற்றுள் ஆவதை) ஆராய்ந்தறிதலும்—தேர்ந்துசெயலும் - (அது செய்யும்போது பலிக்கும்விதம்) நாடிச் செய்தலும் — (சில்லைப்பிரித்தல் பொருத்தல் செய்த விலே)—ஒருதலையாச் சொல்லலும் — (அவர்க்கு இதுவே ந ம்பத் தக்கதென்று) துணிவு பிறக்கும் வகைச் சொல்ல லும்—வல்லது-வல்லவனே|—அமைச்சு-மந்திரியாவான்.எ-று. ❋ தெரிதல் செயலின் மேலாயிற்று-வருகின்ற ததுவாகலின்

அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ் ஞான்றுந் ❋
திறனறிந்தான் றேர்ச்சித் துணை. - - - ரு.

இ-ள். அறன் - (அரசனுலே செய்யப்படும்) அறங்களை—அறிந்து—ஆன்றமைந்த - (தனக்குஎற்றகல்வியாலே) நிறைந் தமைந்த—சொல்லான் - சொல்லையுடையவனுகி— எஞ்ஞான் றும்- எந்நாளிலும் — திறன் - (தொழில்செய்யுந்) திறங்களை —அறிந்தான்|— தேர்ச்சி - ஆலோசனைக்கு—துணை - (அவ னுக்குத்) துணையாவான். எ-று. ❋ தன்னரசன் சுருங்கிய கா லத்திலும் பெருகிய காலத்திலும் நடுவான காலத்திலும் என் றற்கு - எஞ்ஞான்றுமென்றார். [இவ்வைந்துபாட்டாலும் ம ந்திரிகளது குணத் தன்மை சொல்லப்பட்டது.] (ரு)

மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம் - - ❋
யாவுள முன்னிற் பவை. - - - - - ௬.

இ-ள். மதிநுட்பம் - (இயற்கையாகிய) புத்தி நுட்பத்தை —நூலோடு - (செயற்கையாகிய) நூலறிவோடு—உடையார்க் கு-உடையமந்திரிகளுக்கு— அதிநுட்பம் - அதிக நுட்பத்தை யுடைய ஆலோசனைகளாய் — முன்னிற்பவை | — யாவுள-எ வையுள. எ-று. ❋ நூல் - அதனறிவுக்கும், அதிநுட்பம் - அத னையுடைய ஆலோசனைக்கும், ஆகுதலால் ஆகுபெயர்கள்.— முன்னிற்றல் - பகைவராலோசனையால் தம்மாலோசனை அழி யாது நிற்றல். பகைவராலோசனையை தாம் அறிந்து அழித் து அவரறிந்து அழியாதவைகளைத் தாம் ஆலோசிப்பவரென் பதுகருத்து. [இதனுல் அவரது சிறப்புச் சொல்லப்பட்டது.

செயற்கை யறிந்தக் கடைத்து முலகத் - - ※
தியற்கை யறிந்து செயல். - - - - ௭.

இ-ள். செயற்கை-(நூல்வழியினால் தொழில்) செய்யுந்திறத்தை—அறிந்தக்கடைத்தும்- அறிந்தவிடத்தும்—உலகத்து-உலகத்திலே—இயற்கை - (அப்போது நடக்கின்ற) இயற்கையை—அறிந்து—செயல் - (அதனோடுபொருந்தச்) செய்க்கடவன். எ-று. ※ நூல் வழியேயாயினும் உலக வழியோடு பொருந்ாதவைகளைச் செய்தால் அவ்வுலகம் பழிக்குமென்று உலகியற்கையினறிவினால் பயன் சொல்லியபடி. (௭)

அறிகொன் றறியா னெனினு முறுதி - - ※
யுழையிருந்தான் கூறல் கடன். - - - அ.

இ-ள். அறிகொன்று- (அறிந்துசொல்லினவரது) அறிவையும் அழித்து—அறியானெனினும்- (தானும்) அறியானேயாயினும—(அக்குற்றநோக்கிக்கைவிடாமல்)—உறுதி - (அரசனுக்கு)உறுதியானவைகளை—கூறல்- சொல்லுதல் | — உழையிருந்தான் -மந்திரியினது—கடன் - முறையாகும். எ-று. ※ அழித்தல்-தான் கொள்ளாமல் மேலும் இகழ்ந்துசொல்லல். உறுதி சொல்லாதபோது அவன் முடிவெய்துங் குற்றத்தை உலகந் தன்மேல் ஏற்றுமென்றற்கு -கூறல் கடனென்றார். [இவை இரண்டுபாட்டாலும் அவர்செயல் சொல்லப்பட்டது.]

பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் டெவ்வோ ※
ரெழுபது கோடி யுறும். - - - - - ௯.

இ-ள். பக்கத்துள் - பக்கத்திலிருந்து — பழுதெண்ணும்-தீங்குசெய்யவெண்ணும் — மந்திரியின் - மந்திரியொருவனில் —தெவ் - (அரசனுக்கு) எதிர்நிற்பவர்—ஓரெழுபதுகோடி-ஓரெழுபதுகோடிபகைவர்—உறும்-உறுவர். எ-று. ※ எழுபது கோடியென்றது - மிகவும்பலவாகிய எண்ணிக்கைக்கு ஒன்று காட்டியபடி. அவர் வெளிப்பட்டு நிற்கையால் அவருக்குத் தப்பலாம் உட்பகையாய் நிற்றலால் இவனுக்குத் தப்புதல் கூடாதென்பதுபற்றி இப்படிச் சொல்லினார். (௯)

முறைப்படச் சூழ்ந்து முடிவிலவே செய்வர் • ※
திறப்பா டிலாஅ தவர். - - - - - ௰.

இ-ள். (செயப்படுந்தொழில்களை) — திறப்பாடு - (முடித்

நறகுஎறற)கூறுபாடு — இலாதவர்| — முறைப்படச்சூழ்ந்து
ம் - (அவைகளைமுன்னே)அடைவுபட ஆலோசித்திருந்தும் —
முடிவிலவேசெய்வர் - (செய்யும்போது அவைகள்)முடிவில்
லனவாகவே செய்யாநிற்பர். எ-று. ❋ அக்கூறுபாடாவன-
வந்தவந்த இடையூறுகளுக்கு ஏற்ற ஏற்ற பரிகாரம் அறிந்து
செய்தலும்,தாம் திடமுடையவராதலும். ஆம். — தப்பாமல்
ஆலோசிக்கவல்லவரா யிருந்தும் செய்து முடிக்கமாட்டாத
வரும் உண்டென்பதாம். [இவை இரண்டு பாட்டாலும் மந்தி
ரிகளுள் விடப்படுவாரது குற்றம் சொல்லப்பட்டது.] (ய)

********************* ***** **********

## ௬௫ - ஆம்,அதி — சொல்வன்மை.

அஃதாவது-தான் நினைத்த தொழில் முடியும் வழியால்
வார்த்தை சொல்லவல்லவனாகுதல். முன்னதிகாரத்திலே
ஒருதலைபாச் சொல்லனு மென்றதையே சிறப்புப்பற்றி
விரித்துச்சொல்லுதலால் அதன்பின் வைக்கப்பட்டது.

நா நலமென்னு நலனுடைமை யந்நலம் - - *
யானலத் துள்ள தூஉ மன்று. - - - க.

இ-ள். (மந்திரிகளுக்கு அவசியம் வேண்டிய குணமாவது|)
—நாநலமென்னும் - நாநலமென்று சிறப்பித்துச்சொல்லப்
படும்—நலனுடைமை - நலத்தினையுடையராதல். — அந்நல
ம்|—(பிறர்க்கும்) - யாநலத்து-பிறநலங்களிலெல்லாம் - உள்
ளதூஉமன்று - அடங்குவதன்று [மிகுந்தது.](ஆதலால்).எ-
று. ❋ நாநலம்-நாவானுளதாகிய நலமெனவிரியும்.—இந்நல
ம் உலகத்தைத்தம்வசமாக்கும் மந்திரிகளுக்கு வேறாயிருக்க
வேண்டுமென்னும் நீதிநூல் வழக்கம்பற்றி - நாநலமென்று
ம்,பிறருக்கும் இதுபோற் சிறந்தது வேறில்லாமைபால்-அந்
நலம் யாநலத்துள்ள தூஉ மன்றென்றும், சொல்லினார்.—பிரி
த்தல் பொருத்தல் முதலாகியதொழிலில்லார்க்கும் இது அவ
சியம்வெண்டுவதானால் அத்தொழிலுடைய மந்திரிகளுக்குச்
சொல்லவேண்டுமோ வென்பது கருத்து. (க)

ஆக்கமுங் கேடுமதனால் வருதலாற் - - - *
காத்தோம்பல் சொல்லின் கட் சோர்வு. - - உ.

இ-ள். (மந்திரிகள்|)சொல்லின்கண் - சொல்லினிடத்து —

சோர்வு - சோர்தலை}—காத்தோம்பல் - (தம்மிடத்தே உண்டாகாமல்)காக்கக்கடவர்.— (தம் அரசனுக்கும் அங்கங்களுக்கும்)—ஆக்கமும் - பெருக்கமும்—கேடும் - அழிவும்—அதனால் - அச்சோர்வினாலே — வருதலால். எ - று. ❊ ஆக்கத்துக்கு ஏதுவாகிய நல்ல சொல்லையும், கேட்டுக்கு ஏதுவாகிய தீய சொல்லையும், சொல்லென்கிற - ஒப்புமைபற்றி - அதனாலென்றார். இவர் சொற்சோர்வு மற்றைச்சோர்வுபோலாகாமல் உயிர்களுக்கெல்லாம் ஒருசேரவருதலால் - காத்தோம்பலென்றார். [இவை இரண்டுபாட்டாலும் சொல் வல்லமை மந்திரிகளுக்கு அவசியம் வேண்டுமென்பது சொல்லப்பட்டது.] (உ)

கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும் ❊
வேட்ப மொழிவதாஞ் சொல். - - - ௩.

இ-ள். கேட்டார் - (நட்பா) யேற்றுக்கொண்டவரை—பிணிக்கும் - (பின்வேறுபடாமற்) கட்டும்—தகை - குணங்களை —அவாய் - அவாவி — கேளாரும் - (மற்றைப்பகையா) யேற்றுக்கொள்ளாதவரும்—வேட்ப - (பின் அப்பகைமை யொழிந்து நட்பினை) விரும்பும் வண்ணம்—மொழிவது - சொல்லப்படுவதே|—சொல்லாம். எ-று. ❊ அக்குணங்களாவன - வழுவின்மை - சொற்சுருங்குதல் - பொருள்விளங்குதல் - இனிதாதல் - மேலானபயனைத்தருதல் - இவை முதலானவை.—அவைகளை அவாவுதலாவது - அச்சொல் சொல்லுவான் குறித்த பொருளையேயன்றி வேறே புத்திநுட்ப முடையவராலே கொள்ளப்பட்டவைகளின்மேலும் நோக்குடைத்தாதல். [இதனுற்சொல்லினது இலக்கணம் சொல்லப்பட்டது.] (௩)

திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும் - ❊
பொருளு மதனி னூஉங் கில். - - - - ச.

இ-ள்.(மந்திரிகள்|) — சொல்லை - (அப்படிப்பட்ட) சொல்லை—திறன் - (தம்முடையவும் கேட்பாருடையவுமான) திறங்களை — அறிந்து — சொல்லுக - சொல்லக்கடவர்.—அதனினூங்கு - அப்படி சொல்லுதற்கு மேற்பட்ட — அறனும்பொருளும்|—இல் - இல்லை. (ஆதலால்) எ-று. ❊ அத்திறங்களாவன - குடிப்பிறப்பு-கல்வி - ஒழுக்கம்-செல்வம் - உருவம்-பருவம்- என்பவைகளால் வரும் தகுதிவேறுபாடுகள். அவைகளை அறிந்துசொல்லுதலாவது - அவைகளாலே தமக்கும் அவர்க்கும்

உண்டாகிய உயர்வுதாழ்வுகளை அறிந்து அவரவர்க்குத் தகுந்த மரபினாலே சொல்லுதல். அது உயர்ந்தோர் நடையோடு பொருந்தலையும், இனிமையையும், தருதலால் அறனாயிற்று. தமது காரியமுடிதலாலே பொருளாயிற்று. அறனும்பொருளும் எனக்காரணத்தைக் காரியமாக்கிச் சொல்லினார். (௪)

சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச்சொல்லை ✻
வெல்லுஞ்சொ லின்மை யறிந்து. - - ௫

இ-ள். சொல்லை-(தாம்சொல்லக்கருதிய) சொல்லை—வெல்லுஞ்சொல் - வெல்லவல்லசொல்லாகிய — பிறிதோர்சொல்— இன்மை - இல்லாமையை — அறிந்து — அச்சொல்லை — சொல்லுக - சொல்லக்கடவர். எ-று. ✻ பிறிதோர் சொல்லாவது - பகைவரது எதிரானசொல். வெல்லுதல் - குணங்களாலே மிகுதல். அதுவே வெல்லச் சொல்லுக வென்பதாம். (௫)

வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொற்பயன்கோடன் ✻
மாட்சியின் மாசற்றார் கோள். - - - ௬.

இ-ள். வேட்ப - (பிறர் பின்னுங்கேட்க) விரும்பும்படி— தாஞ்சொல்லி — பிறர்சொல் - பிறர் (தமக்குச் சொல்லுஞ்) சொல்லினது— பயன்கோடல் - பயனைக்கொண்டுவிடுதல்|— மாட்சியில் - (மந்திரி) யிலக்கணத்திலே—மாசற்றார் - குற்றமற்றவரது— கோள் - துணிவு. எ-று. ✻ பிறர் சொற்களிலே குற்றமுளவாயினும் அவைநோக்கி இகழாரென்பதாம். வல்லமை யில்லாதவரை யிகழ்தல் - வல்லவர்க்குத் தகுதியல்லாமையால் இதுவும உடன்சொல்லினார். [இவை மூன்றுபாட்டாலும் அதனைச சொல்லும்விதம் சொல்லப்பட்டது.] (௬)

சொலல்வல்லன் சோர்விலனஞ்சானவனை ✻
யிகல்வெல்லல் யார்க்கு மரிது. - - ௭.

இ-ள். (தான் எண்ணியகாரியங்களை) — சொலல்வல்லன் -| (பிறர்க்கு ஏற்கச்) சொல்லுதல்வல்லவனாகி—(அவைமிகவும்பலவானவிடத்தே)—சோர்விலன் - (ஒன்றினுஞ்) சோர்வில்லாதவனாகி—அஞ்சான் - (சபைக்கு) அஞ்சாதவன் (யாவன்)—அவனை—இகல் - மாறுபாட்டிலே — வெல்லல்|—யார்க்கும்—அரிது. எ-று. ✻ ஏற்கச்சொல்லுதல் - அவருக்கு அவைகாரியமல்லாதவையா யிருந்தாலும் ஆமென்று நம்பும்படி சொ

ல்லுதல். சோர்வு-சொல்ல வேண்டியதனை மறதியாலொழிந்த
ல். இம்மூன்று குணமுமுடையவனைப் பகைவராய்ப் பிரித்
தல் பொருத்தல் செய்து வெல்வார் இல்லை யென்பதாம். (எ)

விரைந்து தொழில்கேட்கு ஞாலம் நிரந்தினிது - *
சொல்லுதல் வல்லாரப் பெறின். - - - அ.

இ-ள். தொழில் - (சொல்லப்படும்) காரியங்களை —நிரந்து-ஒழுங்குபடக்கோத்து — இனிது-இனிதாக — சொல்லுதல்—வல்லார் - வல்லவரை — பெறின் — ஞாலம் - உலகமானது|—விரைந்து—கேட்கும் - (அவைகளை) ஏற்றுக்கொள்ளும். எ - று. ❊ ஒழுங்குபடக் கோத்தல் - முன்னேசொல்ல வேண்டியவையும் பின்னேசொல்ல வேண்டியவையும் அறிந்து அம்முறையேவைத்தல். இனிதாதல் - கேட்பார்க்கு இன்பந்தருதல்.—சொல்லுதல் வல்லவன் நூறுபிரம்பேரு ளொருவன் என்னும் வடமொழிபற்றி - வல்லார்ப்பெறினென்றார். [இவை இரண்டுபாட்டாலும் அவ்விதங்களாலே சொல்லுதல் வல்லாரது சிறப்புச்சொல்லப்பட்டது.] (அ)

பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற - - *
சிலசொல்ல றேற்றா தவர். - - - - - ௯.

இ-ள். மாசற்ற - குற்றமற்றவையாய்—சில - சிலவாகியவார்த்தைகளை—சொல்லல் - (அப்படி) சொல்லுதலை—தேற்றாதவர் - அறியாதவர்|—பல - பலவாகியவார்த்தைகளை}—சொல்ல—காமுறுவர்-விரும்புவார். எ-று. ❊ குற்றம்-முன்சொல்லப்பட்ட குணங்களுக்கு எதிரானவை. இடைவிடாமற் பலசொல்லுதலையும் சொல்வன்மையென்று விரும்புவாரும் உண்டு. அவர் அப்படி சொல்லமாட்டாதவரே - வல்லவர் அது செய்யாரென உறுதிப்படுத்துதற்கு-மன்றவென்றார். (௯)

இணரூழ்த்து நாறா மலரனையர் கற்ற - - *
துணர விரித்துரையா தார். - - - - (௰)

இ-ள். கற்ற-கற்றநூல்களை—உணர - (பிறர்) அறியும்விதமாக—விரித்துரையாதார் - விரித்து உரைக்கமாட்டாதவர்|—இணர்-கொத்தினிடத்தே—ஊழ்த்தும் - மலர்ந்திருந்தும்—நாறா-மணக்காத—மலரனையர் - பூப்போல்வர். எ-று. ❊ எப்படி செவ்விபெற மலர்ந்திருந்தும் வாசனைசெய்யாதமலர்

கூடப்படாதோ அப்படியே நூலைக் கற்றிருந்தும் சொல்ல மாட்டாதவர் நன்கு மதிக்கப்படா ரென்பதாம். [இவை இரண்டுபாட்டாலும் அதுமாட்டாரது இழிவுசொல்லப்பட்டது.]

-*-*-*-*-*-*-*-*-*-*-*-*-*-*-*-*-

## சுசு-ஆம், அதி—வினைத்தூய்மை.

அஃதாவது-செயப்படுந் தொழில்கள் பொருளை மாத்திர மல்லாமல் அறமும் புகழுந்தந்து நல்லவையாதல். சொல்லே யல்லாமல் செயலும் நன்றாக வேண்டு மென்கின்றமையால் இது அதன் பின் வைக்கப்பட்டது.

துணைநல மாக்கந் தருஉம் வினைநலம் - - *
வேண்டிய வெல்லாந் தரும். - - - - - க.

இ-ள். (ஒருவனுக்கு)—துணைநலம்-துணையினது நன்மையானது|—ஆக்கம் - செல்வமொன்றையே}—தருஉம் - கொடுக்கும்.—வினைநலம்-தொழிலினது நன்மையானது|—வேண்டியவெல்லாம் - (அவன்) வேண்டியவைகளையெல்லாம்}—தரும். எ-று. * வேண்டிய வெல்லாமென்றது - இம்மையில் அறம்பொருளின்ப முதலானவைகளையும், மறுமையில் தான் விரும்பிய பதங்களையும்.—[இதனால் காணப்படுந் துணை நன்மையினும் கருதப்படுந் தொழினன்மை சிறந்ததெனவினைத்தூய்மையது சிறப்புச் சொல்லப்பட்டது.] (க)

என்று மொருவுதல் வேண்டும் புகழொடு - - *
நன்றி பயவா வினை. - - - - - - - உ.

இ-ள். (தம்மரசனுக்கு) — புகழொடு-(இம்மைக்கு) புகழையும்—நன்றி-(மறுமைக்கு) அறத்தையும்—பயவா - தாராத—வினை-தொழில்களை}—என்றும் - எக்காலத்திலும்—ஒருவுதல்வேண்டும்-(மந்திரிகளுக்கு|) ஒழிதல்வேண்டும். எ-று. * பெருகல் - சுருங்கல் - நடுநிற்றல் - என்கிற நிலைவேறுபாடுக்ளகாலத்தினால்வருதலால்-என்றுமென்றார். (உ)

ஓதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை - *
யாஅது மென்னு மவர். - - - - - - ௩.

இ-ள். ஆதும் - மேலாகக்கடவோம்—என்னுமவர் - என்று நினைப்பவர்|—ஒளி-(தம்) மொளி — மாழ்கும் - கெடுத்தற்கு

க்காரணமாகிய—வினை - தொழிலை — செய் - செய்தலை}—ஒ
தல்வேண்டும் - ஒழியக்கடவர். எ-று. ❋ ஒளியாவது - தாம்
இருக்கின்ற காலத்திலே எல்லாராலும் நன்குமதிக்கப்படுதல்.
ஒளிகெடவருமாக்கம்-ஆக்கமன் றென்பதாம். (௩)

இடுக்கட் படினு மிளிவந்த செய்யார். - - ❋
நடுக்கற்ற காட்சி யவர். - - - - - ௪.

இ-ள். நடுக்கற்ற - அசைவற்ற—காட்சியவர் - தெளிவையு
டையவர்|—இடுக்கட்படினும் - (தாம்) துன்பத்திலே படவரி
னும்—(அது தீர்தற்பொருட்டு)—இளிவந்த - (முன்செய்தவ
ர்க்கு) இழிவுவந்ததொழில்களை}—செய்யார். எ-று. ❋ சிறி
து போதிலே நீங்குவதாகிய துன்பத்தைநோக்கி எப்போ
தும் நீங்காத இழிவை அடையலாகாதென்பதும், அவ்விழிவை
அடைந்தாலும் வருவதாயுள்ள அத்துன்பமானது வருமென்
பதும், தெளிவாராதலால் - செய்யாரென்றார். (௪)

எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல் - ❋
மற்றன்ன செய்யாமை நன்று. - - - ௫.

இ-ள். எற்றென்று - (நான்செய்தது) எப்படிப்பட்டதெ
ன்று—இரங்குவ - (பின்தானே) இரங்குந் தொழில்களை}—
செய்யற்க-(ஒருகாலும்) செய்யாதிருக்கக்கடவன். — செய்
வானேல்— (ஒருகால்மயங்கி அவைகளைச்) செய்வானாயின்—
மற்று-பின்பு—அன்ன-அவ்விரங்கல்களை — செய்யாமை|—
நன்று. எ-று. ❋ தொழில்-பலவாதலால் இரக்கமும்பலவாயி
ற்று. செய்துவிட்டபின்பு இரங்குவானாயின் அது தீரும் வ
ழி அறிந்திலனென்றும், தைரியமிலனென்றும், பயனில்லாத
வைகளைச் செய்கின்றானென்றும், தன்பழியைத் தானே தூ
ற்றுகின்றானென்றும், எல்லாரும் இகழுவாராதலால் பின்பு
இரங்காமை நன்றென்றார். —இரங்காமையும் நல்லதொழில்
செய்வோர் செயலாதலால் உடன் சொல்லப்பட்டது. (௫)

ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க - ❋
சான்றோர் பழிக்கும் வினை. - - - - ௬.

இ-ள். (ஒருவன்) —ஈன்றாள் - (தன்னைப்) பெற்ற தாயின
து—பசி-பசியை—காண்பானாயினும்- (வறுமையாலே) கண்
டிருக்குந் தன்மையனாயினனெனினும் — (அதைக்குறித்து)

—சான்றோர் - (அறிவினாலே) நிறைந்தோர் — பழிக்கும்— வினை - தொழில்களை — செய்யற்க - செய்யாதிருக்கக்கடவன். எ-று. ❋ வயது முதிர்ந்த தாய் தந்தையரும், கற்புடைய மனைவியும், குழந்தையும், பசியால் வருந்துமளவிலே தீயவை பலவும் செய்தாயினும் காப்பாற்றுக வென்று அறநூலிற் சொல்லப்பட்டபொது விதி - பொருணூலின் வழிநடத்தலும், அரசர்தொழிற்கு உரியராகலும், நன்குமதிக்கப்படுதலும், உடைய மந்திரிகளுக்கு ஆகாமைபற்றி இப்படிசொல்லினர். [இவை ஐந்துபாட்டாலும் பாவமும் பழியும் தரும் தொழிலைச் செய்யலாகாதென்பது சொல்லப்பட்டது.] (௬)

பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர். - ❋
கழிநல் குரவே தலை. - - - - - - எ.

இ-ள். (சான்றோரல்லாதவர் தீயதொழில்களைச் செய்து) பழிமலைந்து - (அதனாற்) பழியைத்தம்மேற்கொண்டு—எய்திய - பெற்ற—ஆக்கத்தின் - செல்வத்தைக்காட்டிலும்—சான்றோர் - (அதுமேற்கொள்ளாத) சான்றோரனுபவிக்கும்—கழிநல்குரவே - மிகுந்தவறுமையே | — தலை - உயர்ந்தது. எ-று. ❋ நிலையில்லாத செல்வத்தின்பொருட்டு நிலையுள்ள பழியை மேற்கொள்ளல் சான்றோர் தன்மையோடு பொருந்தாமையால் சான்றோர் கழிநல்குரவே தலையென்றார். (எ)

கடிந்த கடிந்தொரார் செய்தார்க் கவைதா - ❋
முடிந்தாலும் பீழை தரும். - - - - அ.

இ-ள். கடிந்த - (நூலோர்) தள்ளியதொழில்களை— கடிந்தொரார்-(தாமும்) தள்ளிவிடாராகி — செய்தார்க்கு - (பொருட்குறித்துச்) செய்தமந்திரிகளுக்கு — அவைதாம் | —(தூய்மையல்லாமையால்முடியாவாம்)—முடிந்தாலும் - (ஒருவழியால்)முடிந்தாலும்—(பின்)—பீழை-துன்பத்தை}—தரும். எ-று. ❋ முடிதல் - நினைத்தபொருளைத் தருதல். (அ)

அழக்கொண்ட வெல்லா மழப்போ மிழப் பினும் ❋
பிற்பயக்கு நற்பா லவை. - - - - - ௯.

இ-ள்.(ஒருவன்)—அழக்கொண்டவெல்லாம் - (தீயதொழிலாற்செய்து - (பிறர்) இரங்க — கொண்டபொருளெல்லாம் | அழப்போம் - (இம்மையிலே அவன்) இரங்கப்போகாநிற்

கும்.— நற்பாலவை - மற்ற நல்லதொழில்களால் வந்தபொரு ள்கள்|—இழப்பினும் - (முன்) இழந்தானாயினும்—பிற்பய க்கும் - பின்வந்து பயன்கொடுக்கும். எ - று. ❊ பின்னெனவே மறுமையும் அடங்கிற்று - பொருள்களால் அவைகளுக்குக்கா ரணமாகிய தொழில்களது இயல்பு சொல்லியபடி.] (௬)

சலத்தாற் பொருள்செய்தே மார்த்தல் பசுமட் *
கலத்துணீர் பெய்திரீஇ யற்று. - - - - ௰.

இ-ள். (மந்திரியானவன்|)—சலத்தால்-தீயதொழில்களால் —பொருள்செய்து-பொருளைச்சம்பாதித்து — ஏமார்த்தல்- (அதனால் அரசனுக்குக்) காப்புச்செய்தல் — பசுமட்கலத்து ள் - பசியமண்ணின்பாத்திரத்துள்—நீர்பெய்து — இரீஇயற் று-(அதற்குக்) காப்புச்செய்ததனோடொக்கும். எ-று. ❊இரு த்துதல்-நெடுங்காலம் இருப்பாகச்செய்தல் - அரசனும் பொ ருளும் ஒருசேரப் போமென்பதாம். [இவை நான்கு பாட்டா லும் அதற்குக் காரணம் சொல்லப்பட்டது.] (௰)

சுஎ-ஆம், அதி—வினைத்திட்பம்.

அஃதாவது - அப்பரிசுத்தமாகிய தொழிலை முடிப்பவ னுக்கு வேண்டுவதாகிய மனவலிமையாம். அதிகார மு றைமையும் இதனாலேயே விளங்கும்.

வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்ப *
மற்றைய வெல்லாம் பிற. - - - - ௧.

இ-ள். வினைத்திட்பமென்பது - தொழில் செய்யுமிடத்து வலிமையென்று சொல்லப்படுவது|—ஒருவன்-(அதனை முடி த்தற்குரிய) ஒருவனது — மனத்திட்பம் - மனத்தினது வலி மையாம்.—மற்றையவெல்லாம் - அது நீங்கலான வல்லமைக ளெல்லாம்|—பிற-(அதற்கு) வலிமையென்று சொல்லப்படுவ னவல்ல. எ-று. ❊ அது நீங்கலானவை-படை அரண் நட்புமு தலானவைகளின் வலிமைகள். அவையும் அதற்கு வேண்டும வையாய் இனமாகலால்-மற்றையவென்றும், அவை வேண்டி யவையாயிருந்தாலும் அம்மனவலி இல்லாதவிடத்தே பயனி லவாகலால் பிறவென்றும், சொல்லினார். [இதனால் வினைத்திட் பமாவது இன்னதென்று சொல்லப்பட்டது.] (௧)

**ஊ**ஏறொரா லுற்றபி னொல்காமை யிவ்விரண்டி *
னாறென்ப ராய்ந்தவர் கோள். - - - உ.

இ-ள். ஆய்ந்தவர் - (முன்புநீதி நூலை) ஆராய்ந்த மந்திரிகள து—கோள் - துணிவு | — ஊறு - பழுதுபடுந்தொழிலை— ஒரால் - செய்யாமையும்—உற்றபின் - (செய்யுந்தொழில் ஊ ழினாலே) பழுதுபட்டவிடத்து—ஒல்காமை - (அதற்குத்) தள ராமையும் ஆகிய—இவ்விரண்டின் - இவ்விரண்டினது—ஆ று-வழியாகும். — என்பர் - என்று (நூலோர்|) சொல்லுவர். எ-று. * தேவர்க்கும் அசுரர்க்கும் மந்திரிகளாகிய பிரகற்ப தி சுக்கிரன் இவர்களது துணிவைத்தொகுத்துப் பின்னே நீ திநூ லுடையோராலே சொல்லப்பட்ட படியே சொல்லுகி ன்றமையால் இங்கே வினைத்தூய்மையும் உடன்சொல்லினார்.

**க**டைக்கொட்கச் செய்தக்க தாண்மை யிடைக்கொட்கி *
னெற்றா விழுமந் தரும். - - - - - ங.

இ-ள். (செயப்படுந்தொழிலை) — கடை - முடிவிலே — கொட்க-சுழல [வெளிப்பட வென்றபடி] — செய்தக்கது - (அதற்கு முன்னெல்லாம் மறைத்துச்) செய்வதே | — ஆண் மை - வலியாகும்.--இடை - நடுவிலே — கொட்கின் - வெ ளிப்படுமாயின்—(அவ்வெளிப்படுதல்|) — எற்றா - நீக்கப்ப டாத—விழுமம் - துன்பத்தை—தரும் - (செய்தவனுக்குக்) கொடுக்கும். எ-று. * மறைத்துச் செய்தலாவது - சேனைமு தலாகிய ஐந்து அங்கங்களும் எண்ணிய விதத்தை - பிறர் அறி யாதிருக்கவும், தான் அறிந்ததையும் - தன்னிங்கிதம் - வடிவு - செயல் - சொற்களால் - அவர் ஆலோசித்து அறியாதிருக்கவு ம், அடக்கிச்செய்தல்.—அத்துன்பங்களாவன - பகைவர் முன் னறிந்து அத்தொழிலைவிலக்குதலும், செய்வானை விலக்குதலு ம், செய்வாராதலால் அவ்விலக்குதல்களால் வருவன. [இவை இரண்டுபாட்டாலும் அதன் பகுதி சொல் லப்பட்டது.] (ங)

**சொ**ல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ் - *
சொல்லிய வண்ணஞ் செயல். - - ச.

இ-ள். சொல்லுதல் - (இத்தொழிலை இவ்விதத்தாலே செ ய்வோமென்று ஒழுங்குபடச்) சொல்லுதல் | — யார்க்கும்— எளிய - எளியவையாகும். —(அதனை) — சொல்லியவண்ணம் -

அச்சொல்லப்பட்ட விதத்தால்—செயல் | — அரியவாம் - அரியவையாம். எ-று. ※ அரியவைகளை எண்ணிச் சொல்லுதல் மனவலிமையில்லாதவர்க்கும் கூடுமாதலால் - எளியவென்றார். [இதனால் அதனது அருமை சொல்லப்பட்டது.] (௪)

**வீ**றெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்க ※
ணூறெய்தி யுள்ளப் படும். - - - - - ௫.

இ-ள். வீறெய்தி - (எண்ணத்தினாலே) சிறப்பை அடைந்து—மாண்டார் - (மற்றையிலக்கணங்களாலும்) மாட்சிமைப்பட்டமந்திரிகளது — வினைத்திட்பம் - தொழில்வலிமையானது |—வேந்தன்கண் - அரசனிடத்து— ஊறெய்தி - உறுதலை அடைதலாலே—உள்ளப்படும் - (எல்லாராலும்) நன்குமதிக்கப்படும். எ-று. ※ வேந்தன்கணூறெய்தல் - எடுத்ததொழில் அதனால்முடிந்து செல்வமும் புகழும் அவனிடத்தேஉண்டாதல். [இதனால் அதன் சிறப்புச்சொல்லப்பட்டது.] (௫)

**எ**ண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார் ※
திண்ணிய ராகப் பெறின். - - - - - - ௬.

இ-ள். எண்ணிய - (தம்மால்) எண்ணப்பட்ட பொருள்களெல்லாம்} — எண்ணியாங்கு - அவ்வெண்ணியபடியே—எய்துப-அடைவார். — எண்ணியார் — (அவ்வெண்ணப்பட்ட பொருள்களுக்கு வழியாகிய தொழிலிடத்தே) — திண்ணியராகப்பெறின் - வலிமையுடையவராகப்பெற்றால். எ-று. ※ எளிதிலே அடைவாரென்றற்கு - எண்ணியாங்கெய்துபவென்றார். அவர் அப்படியல்லாமல் எண்ணுமையில் வலிமையையுடையராகவே தொழில்முடியும் அத்தொழில் முடியவே அவையெல்லாம் கைகூடுமென்பது கருத்து. [இதனால் அதனையுடையவர் அடையும் பயன்சொல்லப்பட்டது.] (௬)

**உ**ருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து. - - - - எ.

இ-ள். (உலகமானது |)—உருள் - உருளாநின்ற—பெருந்தேர்க்கு- பெரியதேர்க்கு — அச்சாணியன்னார் - அச்சினிடத்தே ஆணிபோல் தொழிலினிடத்தே வலிமையையுடையவரை}—உடைத்து.—(அதனால்)—உருவுகண்டு (அவர்) வடிவினிடத்தே சிறுமைநோக்கி—எள்ளாமைவேண்டும் - (அவரை) இக

டாமைவேண்டும். எ - று. ❊ எள்ளாமைவேண்டுமென்றத னாலும், உவமானத்தாலும், சிறுமை வருவிக்கப்பட்டது. அச்சு - உருள்கோத்தமரம். ஆணி உருள்கழலாமல் அதன்கடையிலே செருகுவது. அது வடிவினாலே சிறிதாயிருந்தே பெரிய பாரத்தைக்கொண்டு செலுத்துகிற வலிமை யுடைத்தாதல்போல் வடிவினாலே சிறியராயிருந்தே பெரிய தொழிலைக்கொண்டு செலுத்துகிற வலிமையுடைய மந்திரிகளும் உண்டு அவரை அவ்வலிமைநோக்கி அறிந்துகொள்க வென்பதாம். [இதனால் அவரை அறியும்விதம் சொல்லப்பட்டது.] (௭)

கலங்காது கண்ட வினைக்கட் டுளங்காது - - ❊
தூக்கங் கடிந்து செயல். - - - - - ௮.

இ-ள். கலங்காது-(மனம்) தெளிந்து—கண்ட - (செய்வதாகத்) துணிந்த—வினைக்கண் - தொழிலினிடத்து — துளங்காது-(பின்)அசைதலில்லாமல்—தூக்கங்கடிந்து - ஆலசியத்தை ஒழித்து— செயல் - செயக்கடவர். எ-று. ❊ கலங்கியவிடத்து ஒழிவது செய்வதுபோல் தோன்றுமாகலால் தெளிந்து பலகால் ஆராய்ந்தாலும செய்வதாதலொத்த தொழிலை - கலங்காதுகண்டவினையென்றார். துளங்காமை - வலியுடைமை. (௮)

துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி - - ❊
யின்பம் பயக்கும் வினை. - - - - ௯.

இ-ள். (முதலிலே மெய்ம் முயற்சியினாலே) — துன்பம் —உறவரினும் - (தமக்கு) மிகவரினும் — (அதுகண்டுதளராமல்)—இன்பம் - சுகத்தை—பயக்கும் - (முடிவிலே) தருகின்ற—வினை - தொழிலை}—துணிவாற்றி - வலிமையுடையராய்—செய்க-செய்யக்கடவர். எ-று. ❊ துணிவு - கலங்காமை. அக்கலங்காமை யுடையவர்க்கல்லது சிறிதுகாலத்திலே நீங்குவதாகிய முயற்சித் துன்பம் நோக்காமல் அதனால் உண்டாய் நிலைபெறும் இன்பத்தைநோக்கிச் செய்தல் கூடாமையாலே - துணிவாற்றிச் செய்கவென்றார். [இவை இரண்டு பாட்டாலும் அவர் தொழில் செய்யும் விதம் சொல்லப்பட்டது.] (௯)

எனைத்திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்பம் ❊
வேண்டாரை வேண்டா துலகு. - - - ௰.

இ-ள். உலகு- உயர்ந்தோர் | — வினைத்திட்பம் - தொழில்

வலிமையை—வேண்டாரை - (இது நமக்குச்சிறந்ததென்று) கொள்ளாதமந்திரிகளை — எனைத்திட்பம் : அவை நீங்கலாகிய வலிமைகளெல்லாம் — எய்தியக்கண்ணும் - உடையவராகிய விடத்தும்—வேண்டாது - நன்குமதியார். எ - று. ❋ மனத்திடத்திலே வலிமை யில்லாதவர்க்கு- படை - அரண் - நட்பு - முதலானவைகளின் வலிமைகளெல்லாம் உண்டாயினும் தொழில் முடியாமையால் அவ்வலிமைகளெல்லாம் கெடுமென்பது பற்றி உலகு வேண்டாதென்றார். [இதனால் தொழில் வலிமையில்லாதவரது இழிவு சொல்லப்பட்டது.] (௰)

*********** *********** **************

## ௬௱எ-ஆம். அதி—வினைசெயல்வகை.

அஃதாவது - அவ்வலிமையுடைய மந்திரியானவன் அத்தொழிலைச் செய்யுந் திறமாம். — அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.

சூழ்ச்சி முடிவு துணிவெய்த லத்துணிவு - ❋
தாழ்ச்சியுட் டங்குதல் தீது. - - - - - க

இ-ள். சூழ்ச்சி - ஆலோசனைக்கு — முடிவு - எல்லையாவது | — துணிவெய்தல் - (ஆலோசிப்பவன் இனி இது தப்பாதென்னுந்) துணிவைப்பெறுதல்.—அத்துணிவு - அப்படி துணிவுபெற்றதொழில்—தாழ்ச்சியுள் - (பின்) ஆலசியத்தில்—தங்குதல் | —தீது - குற்றமுடையதாம். எ-று. ❋ சூழ்ச்சி முடிவு துணிவெய்தலென்றதனால் - துணிவுபெறும் வரைக்கும் ஆலோசிக்க வேண்டுமென்பதாயிற்று. பின்வந்த துணிவு - அது பெற்ற தொழிலுக்கு ஆகலால்- ஆகுபெயர் —ஆலசியமுண்டானவிடத்தே காலக்கழிவாகலாலும், பகைவர் அதை அறிந்து அழித்தலாலும், முடியாமையால் - அதனைத் தீதென்றார். (க)

தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க - ❋
தூங்காது செய்யும் வினை. - - - - - உ.

இ-ள். தூங்கி - ஆலசியித்து—செயற்பால - செய்யும்பகுதியையுடையதொழில்களுள் — தூங்குக - ஆலசியம்பண்ணக்கடவன். — தூங்காது - ஆலசியம்பண்ணுமல் — செய்யும் வினை - செய்யுந்தொழில்களுள்— தூங்கற்க - ஆலசியம்பண்ணுதிருக்கக்கடவ

ன்.எ-று. ※ இருவகைத்தொழில்களும் - வலியாலும், காலத்தாலும், அறியப்படும். மாறிச்செய்தால் - அவைபலியாமற்போமென்பது கருத்து. முன்னே தூங்காமையென்றதை இங்கே பகுத்துச் சொல்லினார். [இவை இரண்டுபாட்டாலும் பொதுவகையால் தொழில்செய்யுந் திறஞ்சொல்லப்பட்டது.] (உ)

ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே யொல்லாக்காற் ※
செல்லும்வாய் நோக்கிச் செயல். - - - ௩.

இ-ள். (தொழில் செய்யும்போது) — ஒல்லும் வாயெல்லாம் - கூடுமிடத்தெல்லாம் — வினை - தண்டஞ்செய்தல் — நன்று - நல்லதாகும். — ஒல்லாக்கால் - (அது) கூடாதவிடத்து — (மற்றைமூன்று உபாயங்களிலே) — செல்லும்வாய்நோக்கி - (அது) முடிவதோருபாயம்நோக்கி — செயல் - செய்யக்கடவன். எ-று. ※ கூடுமிடம் - பகைவனிலும் தான்வலியவனாகியகாலம். — அக்காலத்திலே பகைவர் தண்டத்துக்கே அஞ்சுவாராகலால் - அத்தண்டமே நன்றென்றார். — கூடாதவிடம் - ஒத்தகாலமும், இளைத்தகாலமும், ஆம். [இதனால் - வலிமை - ஒப்புமை - மெலிமை - என நிலை மூவகைப்படுமென்பதும், அவைகளுள் வலிமையினது சிறப்பும், சொல்லப்பட்டன] (௩)

வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்காற் ※
றீயெச்சம் போலத் தெறும். - - - ௪.

இ-ள். வினை - (செய்யத்தொடங்கிய) தொழிலும் — பகை - (அழிக்கத்தொடங்கிய) பகையும் — என்றிரண்டின் - என்று சொல்லப்பட்ட இரண்டினது — எச்சம் - குறையும் — நினையுங்கால் - ஆராயுமிடத்து — தீயெச்சம்போல - தீயினது குறைபோல் — தெறும் - (பின்வளர்ந்து) கெடுக்கும். எ-று. ※ இனி இக்குறை என்னசெய்ய மாட்டுமென்று இகழ்ந்துவிட்டுவிடாமல் முடிவுபெறச் செய்கவென்பதாம். — பின்வளர்தல் ஒப்புமைபற்றிப் பகையெச்சமும் உடன்சொல்லினார். [இதனால் வலியவன் செய்யுந்திறஞ் சொல்லப்பட்டது.] (௪)

பொருள்கருவி காலம் வினையிடனோ டைந்து ※
மிருடீர வெண்ணிச் செயல். - - ௫.

இ-ள். (தொழில்செய்யுமிடத்து) — பொருள் - பொருளு

ம்—கருவி-சாதனமும்—காலம் -காலமும்—வினை - தொழிலும்—இடன் - இடமும் ஆகிய—ஐந்தும்.— இருடீர-மயக்கமற—எண்ணி—செயல் - செய்யக்கடவன். எ - று. ※ பொருள் - அழியும்பொருளும், ஆகும்பொருளும்,—கருவி - தன் சேனையும், பகைவர்சேனையும்,—காலம் - தனக்கு ஆங்காலமும், அவர்க்கு, ஆங்காலமும்,—வினை- தான் வல்லதொழிலும், அவர் வல்லதொழிலும்,—இடன் - தான் வெல்லும் இடமும், அவர்வெல்லும் இடமும்,—இவைகளைத் தான் வெற்றிபெறுந் திறத்தில் தப்பாமல் எண்ணிச்செய்க வென்பதாம். (௫)

முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும் - - *
படுபயனும் பார்த்துச் செயல். - - - ௬.

இ-ள். (தொழில்செய்யுமிடத்து) — முடிவும் - (அது) முடிதற்கு உளதாகிய முயற்சியையும் — இடையூறும் - (அதற்குவரும) இடையூற்றையும்—முற்றி-(அவ்விடையூறுநீக்கி) முடித்தால்—எய்தும் - (தான்) அடையும்—படுபயனும் - பெரும்பயனையும்—பார்த்து - சீர்தூக்கி—செயல் - செய்யக்கடவன். எ-று. ※ முடிவு - அதன்முயற்சிக்கு ஆகுதலால் ஆகுபெயர். — முயற்சியளவுக்கும் இடையூறளவுக்கும் பயனளவு பெரிதாயிருந்தால் அத்தொழிலைச் செய்கவென்பதாம். (௬)

செய்வினை செய்வான் செயன்முறை யவ்வினை *
யுள்ளறிவா னுள்ளங் கொளல். - - - ௭.

இ-ள். செய்வினை - (அவ்வழியினாலே) செய்யப்படுந்தொழிலை — செய்வான் - செயத்தொடங்கினவன் — செயன்முறை - செய்யுமுறைமையாவது | — அவ்வினை - அத்தொழிலினது —உள் - உளப்பாட்டை — அறிவான் - அறிபவனது — உள்ளம் - கருத்தை—கொளல்-(தான்) அறிதல். எ - று. ※ அவ்வாறென்றது - பொருண்முதலானவைகளை எண்ணலையும், முடிவு முதலானவைகளை ஆராய்தலையும்,—உள்ளறிவான் - முன்செய்துகைவந்தவன். — அவன் கருத்து - அதனைச் செய்து வந்த உபாயம். — அதனை அறியவே தானும் அவ்வுபாயத்தினாலே செய்துபயனை அடைவானென்பதாம். [இவை மூன்றுபாட்டாலும் ஒப்பவன் செய்யுந்திறம்சொல்லப்பட்டது.] (௭)

வினையான் வினையாக்கிக் கோட னனைகவுள் *
யானையால் யானையாத் தற்று. - - - ௮.

இ-ள். வினையால் - (செயப்படுகின்ற) தொழிலினாலே — வினை - (அப்படிப்பட்ட) வேறொருதொழிலை — ஆக்கிக்கோடல்-முடித்துக்கொள்ளக்கடவன் — (அது) — நனைகவுள் - (மதத்தால்) நனைந்த கபோலத்தையுடைய — யானையால் — யானை - (அப்படிப்பட்டவேறொரு) யானையை — யாத்தற்று - கட்டியதோடு ஒக்கும். எ-று. ❋ பிடித்தற்கருமைதோன்ற - நனைகவுளென்றார். தொடங்கிய தொழிலாலே வேறுமொரு தொழிலை முடித்தற்கு உபாயமாகும் விதம் ஆலோசித்துச் செய்தால் எல்லாத்தொழில்களும் எளிதிலே முடியுமென்பதாம். (௮)

நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே *
யொட்டாரை யொட்டிக் கொளல். - - ௯.

இ-ள். (தொழில்செய்பவனால்) — நட்டார்க்கு - (தனது) நட்பினருக்கு — நல்லசெயலின் - நல்லவைகளைச் செய்தலினும் — ஒட்டாரை - (தன்பகைவரது) பகைவரை — ஒட்டிக்கொளல் - (தனக்கு) நட்பாக்கிக்கொள்ளுதல் — விரைந்ததே - விரைந்துசெய்யத்தகுவதாம். எ-று. ❋ அத்தொழிலைப் பலிக்கச் செய்யும் அவ்விரண்டு காரியங்களையும் பகைவர்க்குத் தன் மெலிவு தெரிவதன்முன்னே செய்கவென்றற்கு - விரைந்ததென்றார். (௯)

உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக் குறைபெறிற் *
கொள்வர் பெரியார்ப் பணிந்து. - - - ௰.

இ-ள். உறைசிறியார் - ஆளுமிடஞ் சிறியராகிய மந்திரிகள் (தம்மின் மிகுந்தவலியவர் எதிர்ந்தவிடத்தே) — உள் - (தமது) அங்கங்கள் — நடுங்கல் - நடுங்குதலுக்கு — அஞ்சி - பயந்து — குறைபெறின் - (அந்நிலைக்கு வேண்டுவதாகிய) சந்தி கூடுமாயின் — பெரியார் - அப்பெரியவரை — பணிந்து — கொள்வர் - (அதனை ஏற்றுக்) கொள்ளுவர். எ-று. ❋ இடம் - நாடும், அரணும், — அவைகளின் சிறுமை உடையர்மேல் ஏற்றப்பட்டது. — மெலியாரோடு சந்திக்கு வலியாரிசைதல் அரிதாகலால் - பெறினென்றார். — அடியிலே மெலியராயினார் தம் மங்கங்களும் அஞ்சி நீங்கினால் முதலோடும் கெடுவராகலின்

அதுவாராமற் சிறிது கொடுத்தும் சந்தியை ஏற்றுக்கொள்க வென்பதாம். — பணிதல் மானிகளுக்குக் கருத்தல்லாமையா ல் கொள்வரென உலகியலாற்சொல்லினர். [இவை மூன்றுபா ட்டாலும் மெலியவன் செய்யுந் திறம் சொல்லப்பட்டது.]

கூகூ-ஆம், அதி—தூது.

அஃதாவது - பொருத்தல் பிரித்தல்களுக்கு வேற்றரசரி டத்தே செல்வாரது தன்மை. அவ்விரண்டினையும் மு ன் வினைசெயல்வகை யென்றமையால் இது அதன்பின் வைக்கப்பட்டது. தான் வகுத்துச் சொல்லுவோன் - சொல்லியதுசொல்லுவோன் - எனத்தூது இருவகைப்ப டும். அவருள் முன்னோன் மந்திரியோடு சமானனுவானு கலானும் பின்னோன் அவனிலே காற்பங்கு குணங்கு றைந்தோனுகலானும் இஃது அமைச்சியலாயிற்று.

அன்புடைமை யான்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு. - க.

இ-ள். அன்புடைமை - (தன்சுற்றத்தாரிடத்து) அன்புடை யவனுதலும் | — ஆன்றகுடிப்பிறத்தல் - (மந்திரித் தொழில் செய்தற்கு) அமைந்த குடியிலே பிறத்தலும் | — வேந்தவா ம்பண்புடைமை - அரசர் சாதி விரும்புங் குணமுடையவ னுதலும் | — தூதுரைப்பான் - தூது வார்த்தையைச்சொல் லுவோனுக்கு—பண்பு - இலக்கணமாம். எ-று. முன்னை ய விரண்டினுலும் முறையே சுற்றத்தார்க்குத் தீங்குவாராம ல் தானே காத்து நடத்தலும், தன்முன்னோர் தூதியல்கேட்டு அறிதலும், பெற்றும்.—வேந்தவாம் பண்புடைமை - பின்புமு ன்னோச் சேர்ந்தொழுகலிலே அறியப்படும். அதனுல் வேற்ற ரசரும் அவனுக்கு வசப்படுதல் கொள்ளப்படும். (க)

அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்
கின்றி யமையாத மூன்று. - - - - - உ.

இ-ள். அன்பு - (தம்மரசனிடத்து) அன்புடைமையும் | — அறிவு-(அவனுக்கு ஆமவைகளை அறியும்) அறிவுடைமையும் | —(அவைகளை வேற்று வேந்தரிடத்துச்சொல்லும்போது) — ஆராய்ந்த சொல்வன்மை - ஆராய்ந்து சொல்லுதல் வலிமையு

ம் என—தூதுரைப்பார்க்கு - தூதுசொல்ல உரியவர்க்கு—இ ன்றியமையாத-அவசியமாக வேண்டிய குணங்கள் | — மூன் று. எ-று. ஆராய்தல் - அவைகளுக்குச் சம்மதிக்கும் சொற் களைத்தெரிதல்.—அவசியமாக வேண்டிய குணங்கள் மூன்றெ னவே மந்திரிகளுக்குச் சொல்லிய மற்றைக் குணங்களும் வே ண்டுமென்றதாயிற்று. [இவை இரண்டுபாட்டாலும் இருவ கைத் தூதர்க்கும் பொது விலக்கணம் சொல்லப்பட்டது.] உ

நூலாரு ணூல்வல்ல னாகுதல் வேலாருள் *
வென்றி வினையுரைப்பான் பண்பு. ௩.

இ-ள். வேலாருள் - வேலினையுடைய வேற்றரசரிடத்து— வென்றி-(தன்னரசனுக்கு) வெற்றியைத் தருகின்ற — வினைபு ரைப்பான் - தொழிலைச்சொல்வோனுக்கு — பண்பு - இலக்க ணமாவது | —நூலாருள் - நீதிநூலை அறிந்த மந்திரிகளிடத்து —நூல்வல்லனாகுதல்-(தான்) அந்நூலில் வல்லவனாகுதல். எ- று. கொலைத்தொழிலோ டொன்பதுதோன்ற - வேலாரென் றும், தூதுத் தொழிலிரண்டு மடங்க - வென்றி வினையென்று ம், சொல்லினார்.—வல்லவனாகுதல் - அறிதன்மாத்திர முடை யராகிய அவர் முன் வருக்கும் வல்லமையுடைய னாகுதல். (௩)

அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றின் *
செறிவுடையான் செல்க வினைக்கு. ௪.

இ-ள். அறிவு - (இயற்கையாகிய) அறிவும்—உருவு - (கண் டோரிச்சிக்கும்) தோற்றப்பொலிவும் — ஆராய்ந்த கல்வி- (பலரோடும் பலகாலும்) ஆராயப்பட்டகல்வியும் என—இம் மூன்றின் - (நன்குமதித்தற்கு ஏதுவாகிய) இம்மூன்றினது— செறிவுடையான் - கூட்டத்தை யுடையவன் | — வினைக்கு- (வேற்றரசரிடத்துத்தூதுத்) தொழிலுக்கு—செல்க - செல்ல க்கடவன் எ-று. இம்மூன்றும் ஒருவனிடத்துக் கூடுதல்அ ரிதாகலால்-செறிவுடையானென்றார். இவைகளாலே நன்குமதி ப்புடையவனாகவே இனிது முடியுமென்பது கருத்து. (௪)

தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி *
நன்றிபடப்பதாந் தூது. ௫.

இ-ள். (வேற்றரசர்க்குப் பலகாரியங்களைச் சொல்லுமிடத் து)—தொகச்சொல்லி - (காரணவகையால்) தொகுத்துச்சொ

ல்லியும் — (இனிமையில்லாத காரியங்களைச் சொல்லுமிடத்து)—தூவாதநீக்கி - வெய்யசொற்களை நீக்கி — நகச்சொல்லி - (இனிமையானசொற்களால்) மகிழச்சொல்லியும் — நன்றிபயப்பது - (தன்னரசனுக்கு) நன்மையைச் செய்பவனே|—தூது - தூதனாவான். எ-று. ❊ பலகாரியங்களுக்கு உடம்படாதவர் - பரம்பரையால் அப்பலவும் முடித்தற்குக் காரணமான ஒருகாரியத்தைச் சொல்ல அதனால் அவை பயன்படும் விதத்தை ஆலோசித்தறிதல் அருமையாதலால் - சுருக்கத்தால் உடன்படுவர். இனிமை யில்லாதகாரியங்களுக்கு உடன்படாதவர் - மன மகிழச்சொல்ல அவ்வினிமை யில்லாமை தோன்றாமையால் உடன்படுவர். ஆதலால் - அவ்விருவழியாலும் தன் காரியம் தவறாமல் முடிக்கவல்லவனென்பதாம்.]      (௫)

கற்றுக்கண் ணஞ்சான் செலச்சொல்லிக் காலத்தாற் *
றக்க தறிவ தாந் தூது.      -      -      -      ௬.

இ-ள். கற்று-(நீதிநூல்களைக்)கற்று — செல - (பகைவேந்தர்) மனங்கொள — சொல்லி - (தான் சென்ற கருமத்தைச்) சொல்லி — கண்ணஞ்சான். - (அவர் கோபித்துப் பார்க்கில்) அப்பார்வைக்குஅஞ்சாது—காலத்தால் - காலத்தோடு பொருந்த—தக்கது - (அதுமுடிக்கத்) தக்க உபாயத்தை — அறிவது-அறிபவனே|—தூதாம் - தூதனாவான். எ - று. ❊ அவ்வுபாயம் அறிதற்பொருட்டு நீதிநூற் கல்வியும், அதனாலன்றி வேறொன்றால் முடியுங் காலம் வரின் அவ்வாறு முடிக்கவேண்டுதலால்-காலத்தாற்றக்கதறிதலும்.இலக்கணமாயின.      (௬)

கடனறிந்து காலங் கருதி யிடனறிந்      -      -      -      *
தெண்ணி யுரைப்பான் றலை.      -      -      -      -      எ.

இ-ள். கடன் - (வேற்றரசரிடத்துத்தான்செய்யு) முறைமையை—அறிந்து—காலங்கருதி - (அவர்) சமயம்பார்த்து—இடன் - (சென்றகருமஞ்சொல்லுதற்குஏற்ற) விடத்தை—அறிந்து—எண்ணி - (சொல்லும்வழியை முன்னே) விசாரித்து—உரைப்பான் - (அவ்வழி)சொல்லுவோன்|— தலை (தூதரில்) மிக்கவன். எ-று. ❊ செய்யுமுறைமையாவது - அவர்நிலையும், தன்னரசனிலையும், தன்னிலையும், சீர்தூக்கி அவைகளுக்கு ஏற்பக்காணும் முறைமையும் சொல்லு முறைமையு முதலாயின.— செவ்வி-தன்சொல்லை யேற்றுக்கொள்ளு மனநிகழ்ச்சி. அது

காலத்தின் வசத்ததாகலால் - காலமென்றார்.—இடன் - தனக்குத்துணையாவார் உடனாகியவிடம்.—எண்ணுதல் - தான் அது சொல்லும்விதமும், அதற்கு அவர் சொல்லும் உத்தரமும், அதற்குப்பின் தான்சொல்லுமவைகளும், ஆக இவ்வழியால் மேலுமேலும் தானேயெண்ணுதல். வடநூலார் இவ்விருவகையாருடனே ஓலைகொடுத்து நிற்பானையும் கூட்டித் தூதனைத்தலை இடை கடை என வகுத்துச் சொல்லுகின்றாராகலால் அவர் மதமும் தோன்ற - தலையென்றார். — தூதென்பது அதிகாரத்தால்வந்தது. [இவை ஐந்துபாட்டாலும் தான் வகுத்துச் சொல்லுவானது இலக்கணம் சொல்லப்பட்டது.] (௭)

தூய்மை துணைமை துணிவுடைமை யிம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு. - - அ.

இ-ள். வழி - (தன்னரசன்வார்த்தையை) அவன்சொல்லியவழியே—உரைப்பான் - (வேற்றரசர்க்குச்) சொல்லுவானது—பண்பு - இலக்கணமாவது—தூய்மை - (பொருளாலுங்காமத்தாலும்) பரிசுத்தனாதலும — துணைமை - (தனக்கு அவர்மந்திரிகள்) துணையாந்தன்மையும்—துணிவுடைமை - துணிதலையுடைமையும் —இம்மூன்றின்-இம்மூன்றோடுகூடிய — வாய்மை—மெய்மையும் ஆம். எ-று. பொருள் காமங்கள் பற்றி வேறுபடச் சொல்லாமைப்பொருட்டு - தூய்மையும், தன்னரசனுக்கு உயர்ச்சி சொல்லியவிடத்தே எம்போல்வார்க்கு அது இயல்பென்று அவர்கோபத்தை நீக்கற்பொருட்டு - துணைமையும், இதுசொன்னால் இவர் துன்பம் செய்வாரென்று ஒழியாமைப்பொருட்டு துணிவுடைமையும், யாவராலும் நம்பப்படுதற்பொருட்டு - மெய்மையும், வேண்டப்பட்டன.

விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன். - - - - கூ.

இ-ள். விடுமாற்றம் - (தன்னரசன்சொல்லி) விட்டவார்த்தையை—வேந்தர்க்கு - வேற்றரசர்க்கு—உரைப்பான் - சொல்லுதற்கு உரியவன்—(தனக்குவருந்துன்பத்திற்குஅஞ்சி)—வடுமாற்றம் - (அவனுக்குத்) தாழ்வானவார்த்தையை — வாய்சோரா - வாய்சோர்ந்தும் சொல்லாத — வன்கணவன் - வலிமையையுடையவன். எ-று. தாழ்வு - அரச சாதிக்குத் தருமமல்லாமையால் - அதனை வடுவென்றார். (கூ)

இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற் - - ✻
குறுதி பயப்பதாந் தூது. - - - ம.

இ-ள். இறுதிபயப்பினும் - (அவ்வார்த்தை தனக்கு) முடிவைத்தருமாயினும்—எஞ்சாது - (அதற்கு) அஞ்சிவிடாது—(தன்னரசன் சொன்னபடியே)—இறைவற்கு - அவ்வரசனுக்கு—உறுதி - மிகுதியை — பயப்பது - (வேற்றரசரிடத்துச்) சொல்லுவானே—தூதாம் - தூதனுவான். எ-று. ✻ முடிவைத்தரினுமென்றதனால் - மற்றைத் துன்பங்களைத் தருதல்சொல்லவேண்டுவதில்லையாயிற்று. [இவை மூன்றுபாட்டாலும் சொல்லியதுசொல்லுவானது இலக்கணம் சொல்லப்பட்டது.] ம

-✻-✻-✻-✻-✻-✻-✻-✻-✻-✻-✻-✻-✻-✻-✻-

எம - ஆம், அதி—மன்னரைச் சேர்ந்தொழுகல்-

அஃதாவது - மந்திரி அரசரைப் பொருந்தி நடக்கும்விதம். இது - வேந்தவாம் பண்புடைமையென முன்சொல்லப்பட்டமையால் தூதின் பின்வைக்கப்பட்டது.

அகலா தணுகாது தீக்காய்வார் போல்க - - ✻
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார். - - - க.

இ - ள். இகல் - மாறுபடுதலையுடைய — வேந்தர் - அரசரை—சேர்ந்து - அடுத்து—ஒழுகுவார் - நடக்கு மந்திரிகள்—(அவரை)—அகலாது - மிகநீங்காமலும் — அணுகாது - மிகநெருங்காமலும் — தீக்காய்வார்போல்க - நெருப்பிற் குளிர்காய்வார்போல் நடுவிடத்து நிற்கக்கடவர். எ - று. ✻ முன் கோபக்காரரென்பது தோன்ற - இகல்வேந்தரென்றார். — மிக நீங்கினுற் பயன்கொடாமல் மிகநெருங்கினுல் அவமதிபற்றி வருத்தும் வேந்தர்க்கு-மிகநீங்கினுற் குளிர்நீக்காமல் மிகநெருங்கினுற் சுடுவதாதலால் தீ உபமானமாயிற்று. (க)

மன்னர் விழைப விழையாமை மன்னரான் - ✻
மன்னிய வாக்கந் தரும். - - - - - உ.

இ - ள். மன்னர் - (தம்)மன்னரால்—விழைப - விரும்பப்பட்டவைகளை—விழையாமை - (தாம்) விரும்பாதிருத்தல்—மன்னரால் - அவ்வரசராலே — மன்னிய - நிலைபெற்ற — ஆக்கம் - செல்வத்தை — தரும் - (மந்திரிகளுக்குக்) கொடுக்கும். எ - று. ✻ இங்கே விரும்பப்பட்டவையென்றது - அவர்க்குச் சிறப்

மாக உரியவைகளை. அவை உண்ணப்படுவனவும் - அணியப்படுவனவும் முதலானவை. இவைகளைச் சமமாய்த்தோன்றற்கு அஞ்சி விரும்பாதொழியவே அவ்வச்சநோக்கி மகிழ்ந்து அவர்தாமே எல்லாச்செல்வமும் தருவரென்பது கருத்து. (௨)

போற்றி னரியவை போற்றல் கடுத்தபின் - *
றேற்றுதல் யார்க்கு மரிது. - - - ௩.

இ-ள். (மந்திரிகள்)—போற்றின் — (தம்மைக்) காத்துக்கொள்ளவேண்டினால்—அரியவை - அரியபிழைகளை — போற்றல் - (தம்மிடத்துலேவாராமற்) காக்கக்கடவர். — கடுத்தபின் - (அவ்வரசர் அவை வந்தவைகளாகக்கேட்டு) சந்தேகித்தபின்பு—தேற்றுதல் - (அவரைப்பின்) தெளிவித்தல் | — யார்க்கும்—அரிது. (ஆதலால்) எ-று. ※ அரியபிழைகள்—அவராலே பொறுத்தற்கரிய கீழறுத்தல் முதலானவை. அவைகளைக் காத்தலாவது - ஒருவன் சொல்லியக்கால் அவர் நம்பாதிருக்கும்படி நடத்தல். பின் ஒருவழியால் நம்புவித்தாலும் கடன்கொண்டவரைக் கண்டவிடத்தெல்லாம் அப்பொருள்போல் தம்மைக் கண்டவிடத்தெல்லாம் அப்பிழை தோன்றுமாதலால் யார்க்குமரிதென்றார். [இவை மூன்றுபாட்டாலும் அதுபொதுவகையாற் சொல்லப்பட்டது.] (௩)

செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு மவித்தொழுக *
லான்ற பெரியா ரகத்து. - - - - ௪.

இ-ள். ஆன்ற - நிறைந்த — பெரியாரகத்து - அரசரிடத்திருக்கும்போது—செவிச்சொல்லும் - (ஒருவன்) காதிலேசொல்லுதலையும்—சேர்ந்த நகையும் - (ஒருவன்முக) நோக்கிநகைத்தலையும்—அவித்து - நீக்கி—ஒழுகல் - நடக்கக்கடவன். எ-று ※ சேர்தல் - பிறரோடுசேர்தல் -அவைசெய்தால் - தஞ்சோர்வுகண்டுசெய்தவையாகக்கொள்வரென்பது கருத்து.] (௪)

எப்பொருளு மோரார் தொடரார்மற் றப்பொருளை *
விட்டக்காற் கேட்க மறை. - - - - ௫.

இ-ள். மறை-(அரசனுக்குப் பிறரோடு) ரகசியம் நிகழுமிடத்து—எப்பொருளும் - யாதொருபொருளையும் — ஓரார் - செவிகொடுத்துக்கேளாமலும் — தொடரார் - (அவனை) மூடுகினுவாமலும் — அப்பொருளை - அந்தரகசியப்பொருளை

—விட்டக்கால்-(அவனே) அடக்காமற்சொல்லினால் — கேட்க-கேட்கக்கடவர். எ-று. ❋ முடுகிவினவுதற்கு - உரியபொருளாயிருந்தாலுமென்றற்கு-எப்பொருளுமென்றார். (௯)

குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில ❋
வேண்டுப வேட்பச் சொலல். ௬௰

இ-ள். (அரசனுக்குக் காரியஞ் சொல்லும்போது) —குறிப்பறிந்து-(அப்பொழுது நிகழ்கின்ற அவனது) குறிப்பை அறிந்து —காலங்கருதி-(சொல்லுதற்குஏற்ற) காலத்தையும் பார்த்து — வெறுப்பில - வெறுப்பில்லாதனவும் — வேண்டுப-வேண்டுவனவும்ஆகியகாரியங்களை}—வேட்ப - (அவன்மனம்) விரும்பும்வகை—சொலல் - சொல்லக்கடவர். எ-று. ❋ அரசன்மனம் காரியத்திலன்றிக் காமவெகுளி யுள்ளிட்டவைகளிலே நிகழுமிடத்தும், அதற்கு ஏற்காத காலத்தும், சொல்லுதல்பயன்படாமற் போதலால் - குறிப்பறிந்து காலங்கருதியென்றும், அவனுடம்படாத காரியங்கள் முடிவுபெறாமையால் - வெறுப்பிலவென்றும், பயனில்லாதவையும் பயன்சுருங்கியவையும் ஆகிய காரியங்களைச் செய்யவேண்டாமையால்-வேண்டுப வென்றும், அவைகளை இனியவையாய்ச் சுருங்கி விளங்கிய பொருளுடையவையாகிய சொற்களாலே சொல்லுகவென்றற்கு வேட்பச்சொலலென்றும், சொல்லினார். (௬௰)

வேட்பன சொல்லி வினையில வெஞ்ஞான்றுங் ❋
கேட்பினுஞ் சொல்லா விடல். ௭

இ-ள். (பெரும்பயனுள்ளவையும்)—வேட்பன - (அரசன்) விரும்புவனவும்(ஆகிய காரியங்களை)—சொல்லி - (அவன் கேட்டிலனாயினும்)சொல்லி — எஞ்ஞான்றும் - எந்நாளும்—வினையில-பயனில்லாதவைகளை—கேட்பினும் - (தானே) கேட்டாலும்—சொல்லாவிடல் - சொல்லாது விடக்கடவன். எ-று ❋ வினையில கேட்பினும் எனவந்த சொற்களால் அவைகளுக்கு எதிரானசொற்கள் - வருவிக்கப்பட்டன.—வினையால்வருதலின் - வினையென்றும், வறுமைக்காலமும் அடங்க-எஞ்ஞான்றுமென்றும், சொல்லினார்.—சொல்லத்தக்கவையும், சொல்லத்தகாதவையும், வகுத்துச்சொல்லியபடி. [இவை நான்குபாட்டாலும் சிறப்புவகையால் சொல்லப்பட்டது.] (௭)

இளையரின முறைய ரென்றிகழார் நின்ற - - ✻
வொளியோ டொழுகப் படும். - - - அ.

இ-ள். இளையர் - (இவர் எமக்கு) இளையவர் — இனமுறை
யர். (எமக்கு) இன்னமுறையினர்—என்றிகழார் - என்று (அர
சனை) அவமதியாமல்— நின்ற - (அவரிடத்து) நிலைபெற்ற—ஒ
ளியோடு - ஒளியோடுபொருந்த — ஒழுகப்படும் - நடக்கத்த
கும். எ - று. ✻ ஒளி - நித்திரைசெய்யா நிற்கவும் உலகங்காக்
கின்ற அவரதுதெய்வத்தன்மை அதனோடு பொருந்தவொழு
குதலாவது - அவர் தேவரும் தாம் மனிதருமாகநடத்தல். அவ்
வொளியினாலே நீக்கப்பட்ட இளமையும் முறைமையும் பற்
றி இகழ்வாராலும் தாமும் நீக்கப்படுவரென்பது கருத்து. அ

கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாதசெய்யார்
துளக்கற்ற காட்சி யவர். - - - - ௯.

இ-ள். துளக்கற்ற - அசைவற்ற — காட்சியவர் - அறிவையு
டையவர்|—கொளப்பட்டேமென்று - (அரசனால்) நன்குமம
திக்கப்பட்டோமென்று—எண்ணி — கொள்ளாத - (அவன்)
விரும்பாதவைகளை}—செய்யார். எ-று. ✻ விரும்பாதவைக
ளைச் செய்து அழிவடைவோர் கொள்ளப்பட்டபின்பு தம்மை
வேறொருவராக நினைப்பாராகலால் முன்னையராகவே நினை
த்து அஞ்சிநடப்பவரை - துளக்கற்ற காட்சியவரென்றார். (௯)

பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யுங் - ✻
கெழுதகைமை கேடு தரும். - - - - - ௰.

இ-ள். பழையமென - (அரசனுக்குப்) பழமையோமென
—கருதி - நினைத்து—பண்பல்ல - (தமக்கு) இயல்பல்லாதவை
களை —செய்யும்—கெழுதகைமை- உரிமையானது | — கேடு
தரும் - (மந்திரிகளுக்குக்) கேட்டைத்}தரும். எ - று. ✻ அவன்
பொறுத்து வருந்தும் பொழுதில் அப்பழமைநோக்கி முகங்
கொடாமல் உயிரைவௌவுதலால் அவன் வேண்டாதவை செ
ய்தற்கு - ஏதுவாகிய உரிமை - கேடுதருமென்றார். இவை மூ
ன்றுபாட்டாலும் பொறுப்பரென்று அரசர்க்கு வெறுப்பா
யுள்ளவைகளைச் செய்ய லாகாதென்பது சொல்லப்பட்டது.]

அஃதாவது - அரசர் நினைத்ததை அவர்சொல்லாமல் அறிதல். இவை மன்னரைச் சேர்ந்து நடப்பவர்க்கு அவசியமானதாகலால், இது அதன்பின் வைக்கப்பட்டது.

கூறாமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்று *
மாறாநீர் வையக் கணி. - - - - - - க.

இ-ள். குறிப்பு - (அரசனாற்) குறிக்கப்பட்ட காரியத்தை—கூறாமை-(அவன்) சொல்லவேண்டாவகை — நோக்கி - (அவன்முகத்தையாவது கண்ணையாவது) பார்த்து— அறிவான் - அறிகிறமந்திரியானவன் | —எஞ்ஞான்றும் எந்தநாளும் — மாறாநீர் - வற்றாத நீராலே சூழப்பட்ட— வையக்கு - உலகத்துள்ளார்க்கு—அணி - ஆபரணம். எ - று. ❋ அறிவுடையனாகி எல்லார்க்கும் அழகுசெய்தலால் - வையக்கணியென்றார். குறிப்பும் வையமும் ஆகுபெயர்கள். வையத்திற்கென்பதுவிகாரம். (க)

ஐயப்படாஅ தகத்த துணர்வானைத் - - - *
தெய்வத்தோ டொப்பக் கொளல். - - - உ.

இ-ள். அகத்தது-(ஒருவனது) மனத்தினிடத்திலே நிகழ்வதை—ஐயப்படாது-சந்தேகப்படாமல் — உணர்வானை - துணிவாக அறியவல்லவனை--(மனிதனேயாயினும்) — தெய்வத்தோடொப்ப - தெய்வத்தோடேசமானமாக—கொளல் - நன்குமதிக்கக்கடவன். எ - று. ❋ உடம்பு முதலானவைகளால் ஒப்பாகானாயினும் பிறர் நினைத்ததை அறிகிற தெய்வத்தன்மையுடைமையால் தெய்வத்தோ டொப்பவென்றார். (உ)

குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள் - *
யாது கொடுத்துங் கொளல். - - - - ௩.

இ-ள். குறிப்பின் - (தங்) குறிப்புநிகழும்விதம் அறிந்து—குறிப்புணர்வாரை - (அதனால்) பிறர்குறிப்பு அறியுந்தன்மையவரை—உறுப்பினுள்(அரசர்தம்) முறுப்புகளுள்— யாதுகொடுத்தும் - (அவர்வேண்டுவது) யாதொன்றைக் கொடுத்தாயினும்—கொளல்- (தமக்குத்) துணையாகக்கொள்ளக்கடவர். எ - று. ❋ உள்ளே நிகழும்வழி யாவர்க்கும் ஒத்தலால் பிறர்குறிப்பை அறிதற்குத் தங்குறிப்பு சாதனமாயிற்று — உறுப்புகள் - பொருள், நாடுமுதலாகிய புறத்துறுப்புகள். [இவை மூன்று பாட்டாலும் குறிப்பறிவாரது சிறப்புச் சொல்லப்பட்டது.

குறித்தது கூறாமைக் கொள்வாரோ டேனை
யுறுப்போ ரனையரால் வேறு. ௪.

இ-ள். குறித்தது - (ஒருவன்மனத்தி)னினைத்ததை—கூறாமை (அவன்) சொல்லாமல் — கொள்வாரோடு - அறியவல்லவரோடு — ஏனை-மற்றை (அறியமாட்டாதவர்|) — உறுப்பு - அவயவத்தால்—ஓரனையர் - ஒருதன்மையாக வொப்பினும் — வேறு - (அறிவால்)வேறு. எ-று. ※ அறியமாட்டாதவ ரென்பதும், அறிவாரெலன்பதும், வருவிக்கப்பட்டன. சிறந்த அறிவில்லாமையால் மிருகமென்னுங்கருத்தால் - வேறென்றார். (௪)

குறிப்பிற் குறிப்புணரா வாயி னுறுப்பினு
ளென்ன பயத்தவோ கண். ௫.

இ-ள். குறிப்பின் - (குறித்ததை அறியவல்லதன்) காட்சியால்—குறிப்பு- (பிறர்) குறிப்பை—உணராவாயின் - அறியமாட்டாவாயின் —(ஒருவனுக்கு) — உறுப்பினுள் - அவையவங்களுள் — கண் - (சிறந்த) கண்கள் | — என்னபயத்தவோ - (வேறே) என்னபயன்செய்வனவோ. எ-று. ※ குறிப்பறியுமிடத்தே துணையாகு சிறப்புப்பற்றி உயிரினறிவு கண்மேல் ஏற்றப்பட்டது. அக்கண்களாலே பயனில்லை யென்பதாம். [இவை இரண்டு பாட்டாலும் குறிப்பறியா ரிழிவு சொல்லப்பட்டது.

அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்
கடுத்தது காட்டு முகம். ௬.

இ-ள். அடுத்தது - (தன்னை) அடுத்த பொருளினது நிறத்தை—காட்டும் - (தான்கொண்டு) காட்டுகிற — பளிங்குபோல் —நெஞ்சம் - (ஒருவனது) நெஞ்சத்தில்—கடுத்தது - மிகுந்த குணத்தை} —முகம் - (அவன்) முகமானது| — காட்டும் - (தான்கொண்டு)காட்டும். எ-று. ※ அடுத்ததனிறத்தை அடுத்ததெனலால் ஆகுபெயர். — ஒருபொருள் வேறொருபொருளின் குணத்தைக்கொண்டு தோற்றுதலாகிய தொழிலுவமை. (௬)

முகத்தின் முதுக்குறைந்த துண்டோ வுவப்பினுங்
காயினுந் தான்முந் துறும். ௭.

இ-ள். (உயிரானது|)—உவப்பினும் - விரும்பினாலும்—காயினும் - வெறுத்தாலும்—தான்—(அறிந்து) — முந்துறு

ம்-(அவ்விரண்டிலும் அவ்வுயிருக்கு) முற்பட்டுநிற்கும்.—(ஆதலால்)—முகத்தின் - முகம்போல்—முதுக்குறைந்தது - அறிவுமிகுந்தது | — உண்டோ. எ-று. ❊ அறிவு உயிர்க்கே யல்லாமல் முகத்திற்கு இல்லையென்பானை நோக்கி உயிரினது கருத்தை அறிந்து அது விரும்பினால் தான்மலர்ந்தும், அது வெறுத்தால் தான்கருகியும் வரலால் உண்டென்று மறுப்பவர்போல் குறிப்பறிதலுக்குச் சாதனம் சொல்லியபடி. (எ)

முகநோக்கி நிற்க வமையு மகநோக்கி ❊
யுற்ற துணர்வார்ப் பெறின். - - - - அ.

இ-ள். குறையுறுவோன்—அகநோக்கி-(தன்) மனத்தைக் குறிப்பால் அறிந்து — உற்றது - (தான்) உற்றதனை—உணர்வார்-அறிந்து தீர்ப்பானை—பெறின் — (அவர் தன்முகத்தைப்பார்க்கும்படியாக)—முகநோக்கி- (அவர்) முகத்தைப்பார்த்து—நிற்க-(அவ்வளவிலே) நிற்க— அமையும் - போதும். எ-று. ❊ அப்படிநில்லாமல் சொல்லுவானாகில் இருவருக்கும் சிறுமையாமாகலால் அது வேண்டா மென்பதாம். குறையுறுவோனது இயல்பு சொல்லுவார்போல் சாதனம் சொல்லியபடி. [இவை மூன்றுபாட்டாலும் குறிப்பறிதற்குச் சாதனம் முகமென்பது சொல்லப்பட்டது.] (அ)

பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின் ❊
வகைமை யுணர்வார்ப் பெறின். - - - கூ.

இ-ள். கண்ணின்வகைமை - (தமது) பார்வைவேறுபாட்டுத்தன்மையை—உணர்வார் - அறியவல்ல மந்திரிகளை — பெறின்- (அரசர்) பெற்றால் — (அவர்க்கு) — பகைமையுங் கேண்மையும்—(மனத்திலுள்ள) பகைத்தன்மையும் நட்புத்தன்மையும்—(வேற்றரசர்சொல்லாமற்போயினும்) — கண் - (அவர்)கண்களே|—உரைக்கும்-சொல்லும். எ-று. ❊ பார்வை வேறுபாடாவன-வெறுத்தபார்வையும், விரும்பியபார்வையும், ஆம். —உணர்தல் அவைகளை அந்தந்தக்குறிகளால் அறிதல். (கூ)

நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்கால் ❊
கண்ணல்ல தில்லை பிற. - - - - - - ம.

இ-ள். நுண்ணியமென்பார் - நுட்பவறிவுடையேமென்றிருக்கும்மந்திரிகள் — அளக்குங்கோல் - (அரசரது கருத்தை)

அளக்குங் கோலாவது | — காணுங்கால் - ஆராயுமிடத்து—க ண்ணல்லது-(அவரது) கண்களல்லாமல்—பிற -வேறு|—இல் லை-எ-று. ※ இங்கிதம் - வடிவு-தொழில் -சொல் - என்பவைமு தலான பிறர்கருத்தளக்கிற அளவைகள் பலவும் முன்னறிந் துவிடத்தே அவராலே மறைக்கப்படும் பார்வை மனத்தோடுக லத்தலால் மறைக்கப்படாதென்பதுபற்றி அதனையே பிரித் துச்சொல்லினர். *[இவை இரண்டுபாட்டாலும் நுண்ணிய க ருவி பார்வையென்பது சொல்லப்பட்டது.] (ய)

ஒ-************** .ஒ-※-ஓ.**************-ஓ

## எஉ-ஆம், அதி—அவையறிதல்.

அஃதாவது - அரசனோடிருந்த சபையியல்பை அறிதல் - காரியஞ் சொல்லுங்கால் அவன் குறிப்பறிதலே யல்லா மல் இதுவும் வேண்டுதலால் பின்வைக்கப்பட்டது.

அவையறிந் தாராய்ந்து சொல்லுக சொல்லின் *
றொகையறிந்த தூய்மை யவர். - - - (க)

இ-ள். சொல்லின்றொகை - சொல்லின்கூட்டத்தை — அ றிந்த—தூய்மையவர் - பரிசுத்தகுணமுடையவர்|—(தாம் ஒ ன்றுசொல்லும்போது) — அவை - (அப்பொழுதுள்ள) ச பையை—அறிந்து—ஆராய்ந்து — சொல்லுக - சொல்லக்க டவர். எ-று. ※ சொல்லின்றொகையெனவே - செஞ்சொல்-ஆ க்கச்சொல் - குறிப்புச்சொல்-என மூவகைச்சொல்லும் அடங் கின.—தூய்மை - அச்சொற்களில் தமக்கு ஆகாதவை ஒழித் து ஆமவை கொள்ளல். — அவையினளவை அவை யென்றார். அவ்வளவு-மிகுதி - ஒப்பு - தாழ்வு-என மூவகைப்படும். அறித ல் - தம்மோடுதூக்கி அறிதல். ஆராய்தல் - இச்சபையிலேசொ ல்லப்படுங்காரியம் - இது. சொல்லும்விதம் - இது. சொன்னால் அதன்முடிவு - இது. என்று இவை யுள்ளிட்டவை ஆராய்தல்.

இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லி *
னடைதெரிந்த நன்மை யவர். - - - உ.

இ-ள். சொல்லினடை - சொற்களது நடையை—தெரிந்த - ஆராய்ந்து அறிந்த —நன்மையவர் - நன்மையை யுடையவர்| —(சபையினிடத்து ஒன்று சொல்லும்போது) — இடைதெ ரிந்து - (அதன் சமயத்தை) ஆராய்ந்தறிந்து — நன்குணர்ந்

து-(வழுப்படாமல்) மிகவுந்தெளிந்து—சொல்லுக - சொல்லக்கடவர். எ-று. ❋ சொற்களினடையாவது - அம்மூவகைச் சொற்களும் - செம்பொருள் - ஆக்கப்பொருள் - குறிப்புப்பொருள் இவைகளை உணர்த்தும் விதம். சமயம்-கேட்குதலில் ஆசையுடைமை. வழு-சொல்வழுவும், பொருள்வழுவும். [இவை இரண்டுபாட்டாலும் ஒன்று சொல்லும்போது சபையறிந்தே சொல்லவேண்டுமென்பது சொல்லப்பட்டது.] (உ)

அவையறியார் சொல்லன்மேற் கொள்பவர் சொல்லின் ❋
வகையறியார் வல்லதூஉ மில். - - - ௩.

இ-ள். அவை-சபையினளவை—அறியார் - அறியாதவராகி—சொல்லல் - (ஒன்று) சொல்லுதலை — மேற்கொள்பவர் —சொல்லின்வகை - அச்சொல்லின்கூறுபாடும் — அறியார். —வல்லதூஉம் - (மற்றும்) வல்லகலையும்—இல் - (அவர்க்கு) இல்லை. எ-று. ❋ சொல்லுதல் வகைமை - கேட்பவரது உணர்வுவகைமை பற்றிவருதலால் - சொல்லின்வகை யறியாரென்றும், இஃதறியார் யாதுமறியாரென்று எல்லாராலும் இகழப்படுதலால்-வல்லதூஉ மில்லென்றும், சொல்லினர். [இதனால்சபையை அறியாதவிடத்துவரும் குற்றம்சொல்லப்பட்டது.

ஒளியார்முன் னொள்ளிய ராதல் வெளியார்முன் ❋
வான்சுதை வண்ணங் கொளல். - - - ௪.

இ-ள். ஒளியார்முன் - (அறிவால்) ஒள்ளியாரது சபையினிடத்து — ஒள்ளியராதல் - (தாமும்) ஒள்ளிய ராகக்கடவர்.—வெளியார்முன் - (மற்றை) வெள்ளைகளது சபையினிடத்து—வான்சுதைவண்ணம் - (தாமும்) வெண்சுண்ணச் சாந்து நிறத்தை—கொளல்-கொள்ளக்கடவர். எ - று. ❋ ஒளியாரென்றது - மிக்காரையும், ஒத்தாரையும்,—ஒள்ளியராதல் - தமது நூலறிவும் சொல்வன்மையும்தோன்ற விரித்துரைத்தல். — வயிரமில்லாத மரத்தை வெளிறென்பதுபோல் அவ்விரண்டு மறியாதபுல்லரை வெளியாரென்றார். — அவர்மதிக்கும்படிக்குஅவரினும் வெண்மையுடையராகவென்றற்கு - வான்சுதைவண்ணங்கொளலென்றார். [சபையளவறிந்தார் செய்யுந்திறம் இதனால் தொகுத்துச் சொல்லப்பட்டது.] (௪)

நன்றென்ற வற்றுள்ளு நன்றே முதுவருண் - *
முந்து கிளவாச் செறிவு. - - - - - - ௫.

இ-ள். முதுவருள் - (தம்மின்) மிகுந்தவரது சபையினிடத்து—முந்து - (அவருக்கு) முற்பட்டு — கிளவா - (ஒன்றைச்) சொல்லாத—செறிவு - அடக்கம் | — நன்றென்றவற்றுள்ளும் - (ஒருவர்க்கு இது) நல்லதென்று சிறப்பித்துச் சொல்லப்பட்ட குணங்கள் பலவினும்—நன்றே. எ-று. ✲ தங்குறையும், அவர் மிகுதியும், அவர்சொல்லுதற்கு முன்னேசொன்னால் உண்டாகிற இழுக்கும், சொல்லாவிட்டால் வருகிற நன்மையும், அறிந்தே அடங்கலால் அவ்வடக்கத்தை - நன்றென்றவற்றுள்ளு நன்றே என்றார்.—முன்சொல்லுதலையே விலக்கினமையால் உடன்சொல்லுதலும், பின் சொல்லுதலும், ஆமென்பது பெறப்பட்டது. [இதனால் மிகுந்தவரது சபையினிடத்துச் செய்யுந்திறம் சொல்லப்பட்டது.] (௫)

ஆற்றி னிலைதளர்ந் தற்றே வியன்புல - - - *
மேற்றுணர்வார் முன்ன ரிழுக்கு. - - - ௬.

இ - ள். வியன்புலம் - விரிந்த நூற்பொருள்களை—ஏற்று - உட்கொண்டு—உணர்வார் முன்னர் - (அவைகளின் மெய்ம்மையை) அறியவல்லவர் சபையினில்—இழுக்கு - (வல்லவனொருவன்) சொல்லிழுக்குப்படுதல் | — (முத்திபெறற்பொருட்டு நல்வழியினின்றவனொருவன்)—ஆற்றின் - அவ்வழியினின்றும்—நிலைதளர்ந்தற்றே - நிலைதளர்ந்து வீழ்ந்தாலொக்கும். எ-று. ✲ நிலைதளர்ந்து வீழ்தல் - அறிவால் ஐம்பொறிவென்றொழுகியவன் - பின்னிளகிக் கூடாவொழுக்கத்தானாகுதல். பயனிழத்தலேயன்றி இகழவும் படுவானென்பதாம். [இதனால் அச்சபையில் தவறியவிடத்துப்படும் குற்றம் சொல்லப்பட்டது.]

கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச் - - - *
சொற்றெரிதல் வல்லா ரகத்து. - - - - - ௭.

இ-ள். கசடற - வழுப்படாமல்—சொற்றெரிதல் - சொற்களை ஆராய்தலில் — வல்லாரகத்து - வல்லவர் சபையிடத்தே —(சொல்லினால்)—கற்று - (பலநூல்களையும்) கற்று—அறிந்தார் - (அவைகளாலாகியபயனை) அறிந்தவரது—கல்வி | — விளங்கும் - (யாவர்க்கும்) விளங்கித்தோன்றும். எ-று. ✲ அப்படிப்பட்ட சபையிலேயே சொல்லக்கடவனென்பதாம். (௭)

உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன் *
பாத்தியு ணீர்சொரிந் தற்று. - - - - அ.

இ-ள். உணர்வது - (பொருள்களைத்தாமே) அறியவல்ல அறிவை — உடையார்முன் - உடையவர் சபையினிடத்து — சொல்லல் - (கற்றவர் ஒன்றைச்) சொல்லுதல் | — வளர்வதன் - (தானே) வளர்வதொருபயிர் நின்ற—பாத்தியுள் — நீர்சொரிந்தற்று - நீரைச்சொரிந்தாற்போலும். எ-று. ※ தானேயும் வளர்தற்குரியகல்வி மிகவளருமென்பதாம். [இவை இரண்டு பாட்டாலும் ஒத்தாரது சபையிடத்து எவ்வழியும் சொல்லக் கடவனென்பது சொல்லப்பட்டது.] (அ)

புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல் லற்க நல்லவையு*
ணன்கு செலச்சொல்லு வார். - - - - கூ.

இ-ள். நல்லவையுள் - நல்லவரிருந்த சபையினிடத்து—ந ன்கு - நல்லபொருள்களை—செல - (அவர்) மனங்கொள்ள— சொல்லுவார்-சொல்லுதற்கு உரியவர் | — புல்லவையுள் - (அ வையறியாத) புல்லரிருந்தசபையினிடத்து — பொச்சாந்து ம்-மறந்தும்—சொல்லற்க - (அவைகளைச்) சொல்லாதொழிய க்கடவர். எ-று. ※ சொல்வாராயின் தமக்குரியசபையை அறி யாதகுற்றம்பற்றி நல்லோர்சபையும், சொன்ன பொருளறி யாமையால் புல்லர்சபையும், இகழ்தலால் இரண்டு சபைக்கும் ஆகாரென்பதுகருதி - பொச்சாந்துஞ் சொல்லற்கவென்றார்.

அங்கணத் துளுக்க வமிழ்தற்றாற் றங்கணத்த - *
ரல்லார்முற் கோட்டி கொளல். - - - - ய.

இ-ள். (நல்லோர்|) —தங்கணத்தரல்லார்முன் - தம்மினத் தவரல்லாதவர்சபையிடத்து — கோட்டிகொளல் - யாதொன் றையும்சொல்லாதிருக்கக்கடவர்.—(சொன்னால்அது|) —அங் கணத்துள் - (பரிசுத்தமல்லாத)முற்றத்துள்—உக்க-வீழ்ந்த— அமிழ்தற்று - அமிர்தமொக்கும். எ-று. ※ சொல்லின் - அது - இவ்விரண்டும் வருவிக்கப்பட்டன.— சாவாமருந்தாகுதலறிந் து உண்போர்கையிலும் படாமல் அம்முற்றத்திற்கும் பொ ருத்தமில்லாமல் கெட்டவிதம் தோன்றற்கு - உக்கவமிழ்தென் றார். அச்சொல் பயனில்லாத சொல்லாமென்பதாயிற்று. [இ வை இரண்டுபாட்டாலும் தாழ்ந்தோர் சபையினிடத்து ஒரு வழியும் சொல்லாகாதென்பது சொல்லப்பட்டது.] (ய)

எ௩-ஆம், அதி—அவையஞ்சாமை.

அஃதாவது-சொல்லுதற்குரிய சபையை அறிந்து சொல்லுங்கால் அதற்கு அஞ்சாமை. அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.

வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின் *
றொகையறிந்த தூய்மை யவர். - - - - க.

இ-ள். சொல்லின் றொகையறிந்த - சொற்களது தொகையை அறிந்த—தூய்மையவர் - பரிசுத்தகுணமுடையவர் | —வகையறிந்து - (கற்றுவல்லசபை மூடசபை என்கிற சபையின்) வகையை அறிந்து—வல்லவை - கற்றுவல்லசபையில் — (ஒன்றுசொல்லும்போது) — வாய்சோரார் - (அச்சத்தாற்பிழைபடச்) சொல்லார். எ-று. ❋ இருந்தாரது வல்லமை சபைமேல் ஏற்றப்பட்டது. அச்சத்தாலென்பது - அதிகாரத்தால்வந்தது.

கற்றாருட் கற்றா ரெனப்படுவர் கற்றார்முற் - . *
கற்ற செலச்சொல்லு வார். - - - - - - உ.

இ - ள். கற்றார்முன் - கற்றோர்சபையினிடத்தே — கற்ற - (தாம்) கற்றவைகளை — செல-(அவர்) மனங்கொள்ளும் வகை —சொல்லுவார் - (அஞ்சாமல்) சொல்லவல்லவர் } — கற்றாருள்-கற்றவரெல்லாரினும் — கற்றார் - (இவர்) நன்றாகக்கற்றவர் —எனப்படுவர் - என்று (உலகத்தோராலே) சொல்லப்படுவர் எ - று. ❋ உலகமறிவது அவரையேயாகலின் அவ்வுலகத்தினாலே புகழப்படுவாரும் அவரே யென்பதாம். (உ)

பகையகத்துச் சாவா ரெளிய ரரிய - - - *
ரவையகத் தஞ்சா தவர். - - - - - - ௩.

இ-ள். பகையகத்து-பகையினிடத்து— சாவார் - (அஞ்சாதுபோய்) இறக்கவல்லவர் — எளியர் - (உலகத்துப்) பலர்.— அவையகத்து - சபையினிடத்து — அஞ்சாதவர் - அஞ்சாமற் (போய்ச்சொல்ல)வல்லவர் | —அரியர்—சிலர். எ - று. ❋ அஞ்சாமை சாவாரென்பதனோடுங்கூட்டி அதனாலே சொல்லவல்லவரென்பது வருவிக்கப்பட்டது. [இவை மூன்றுபாட்டானும் அவையஞ்சாரது சிறப்புச் சொல்லப்பட்டது.] (௩)

கற்றார்முற் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற - *
மிக்காருண் மிக்க கொளல். - - - - . ௪.

இ-ள். கற்றார்முன் - (பலநூல்களையுங்) கற்றோர் சபையினி

டத்து—கற்ற - (தாம்) கற்றவைகளை—செல - (அவர்) மனங்கொள்ளும்படி —சொல்லி—தாங்கற்ற - தாம்கற்றவைகளினும்—மிக்க-அதிகமானபொருள்களை—மிக்காருள் - அதிகமாகக்கற்றவரிடத்து—கொளல் - (அறிந்து) கொள்ளக்கடவர். எ - று. ❋ எல்லாமொருவருக்குக்கற்றல் கூடாமையால் வேறுவேறாகியகல்வியுடையவர் பலரிருந்த சபையில் தாங்கற்றவைகளைச்சொல்லிக் கற்கப்பெறாதவையும்கேட்டு அறியலா மென்பதாயிற்று. [இதனால் அதனது ஒருசார்பயன் சொல்லப்பட்டது.

ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா - - - ❋
மாற்றங் கொடுத்தற் பொருட்டு. - - - - ரு.

இ-ள். அவை - (வேற்றுவேந்தர்) சபையில்—அஞ்சா - அஞ்சாமல்—மாற்றம் - எதிர்மொழியை — கொடுத்தற்பொருட்டு—ஆற்றின் - (சொல்லிலக்கண) வழியாலே—அளவு - அளவைநூலை—அறிந்து—கற்க - (மந்திரிகள்) கற்கக்கடவர். எ-று. ❋ அளவை நூல்சொல்லிலக்கணங்கற்றே கற்கவேண்டுதலால் இதற்கு அது வழியெனப்பட்டது. அளவை யெனப்பட்ட தர்க்க நூலைக் கற்றவர்க்கே அவர்சொல்லை வெல்லக்கூடுமாகலால் அவைகளைப் பிழைபடாமற் கற்கக்கடவரென்பதாம். [இதனால் அதன் காரணம் சொல்லப்பட்டது.] (ரு)

வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடென்
னுண்ணவை யஞ்சு பவர்க்கு. - - - (சா)

இ-ள். வன்கண்ணரல்லார்க்கு - சௌரியமுடையவ ரல்லாதவர்க்கு—வாளொடு—என் - என்ன (சம்பந்தமுண்டு.) — (அதுபோல்)—நுண்ணவை - புத்திநுட்பமுடையவரது சபையை — அஞ்சுபவர்க்கு — நூலொடு—என் - என்ன (சம்பந்தமுண்டு.) எ-று. ❋ இருந்தாரது நுண்மை அவைமேல் ஏற்றப்பட்டது. நூலுக்கு உரியவரல்லரென்பதாம். (சா)

பகையகத்துப் பேடிகை யொள்வா ளவையகத் ❋
தஞ்சு மவன் கற்ற நூல். - - - - - (எ)

இ-ள். அவையகத்து - (சொல்லப்படுஞ்) சபைநடுவில்—அஞ்சுமவன் - (அதனை) யஞ்சுமவன் —கற்றநூல்—பகையகத்து - (எதிர்ப்படும்பகைநடுவில்) — பேடி - (அதனை அஞ்சும்) பேடி—கை - கையிற்பிடித்த—ஒள்வாள் - கூர்வாளை யொக்கும். எ - று. ❋ பேடி பெண்ணியல்புமிகுந்து ஆணியல்புமுடையவள் - இடமும்வாய்த்துத் தானும் நன்றாயிருந்ததே யாயி

னும் பிடித்தவனது குற்றத்தால் வாள்சிறவாமைபோல் சபையும் வாய்த்தநூத் தானும் நன்றாயிருந்ததேயாயினும் கற்றவனது குற்றத்தால் நூல் சிறவாதாயிற்று. (௭)

பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையு - - ✻
ணன்கு செலச்சொல்லா தார். - - - - ௮.

இ-ள். நல்லவையுள் - நல்லவரிருந்தசபையுள் — நன்கு - நல்லசொற்பொருள்களை — செல - (அவர்க்கு) ஏற்க — சொல்லாதார்-(அச்சத்தால்) சொல்லமாட்டாதவர் | — பல்லவைகற்றும் - பலநூல்களைக்கற்றாராயினும் — பயமிலரே - (உலகத்துக்குப்) பிரயோசனப்படுதலிலர். எ-று. ✻ அறிவார்முன்சொல்லாமையால்கல்வியினுண்மை அறிவார் இல்லையென்பதாம். (௮)

கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்து - - ✻
நல்லா ரவையஞ்சு வார். - - - - - ௯.

இ-ள். கற்று - (நூல்களைக்) கற்று — அறிந்தும் - (அவைகளாலேபயனை) அறிந்திருந்தும் — நல்லார் - நல்லவரிருந்த — அவை-சபையை — அஞ்சுவார் - அஞ்சி - (அவ்விடத்திலே) சொல்லாதவரை } — கல்லாதவரின்-மூடரினும் — கடை - கடையர் — என்ப-என்று(உலகத்தோர் |) சொல்லுவார். எ-று. ✻ அக்கல்வியறிவுகளாலே பயனைத்தாமும் அடையாமல் பிறரையும் அடைவிக்காமல் கல்வித்துன்பமே அடைந்துநிற்கையால் கல்லாதவரிற் கடையென உலகம்பழிக்குமென்பதாம். (௯)

உளரெனினு மில்லாரோ டொப்பர் களனஞ்சிக் ✻
கற்ற செலச்சொல்லா தார். - - - - ௰.

இ-ள். களன் - சபையை | — அஞ்சி — கற்ற - (தாம்) கற்றவைகளை — செல - (அதற்கு) ஏற்க — சொல்லாதார் - சொல்லமாட்டாதவர் | — உளரெனினும் - உயிரோடிருந்தாலும் — (உலகத்தோரால் எண்ணப்படாமையால்) — இல்லாரோடொப்பர்-இறந்தவரோடொப்பாவார். எ-று. ✻ [இவை ஐந்துபாட்டாலும் சபையஞ்சுவோரது இழிவுசொல்லப்பட்டது. (௰)

அங்கவியலில் அமைச்சு முற்றியது.

௭௪-ஆம், அதி — நாடு.

இனி அவ்வரசனாலும் - மந்திரியாலும் - கொண்டு செலு

த்தப்படுவதும், மற்றை அரண்முதலிய அங்கங்களுக்கு அவசியம் வேண்டுவதும், ஆகியநாடு ஓரதிகாரத்தினாலே சொல்லுகின்றார்.

அஃதாவது - இப்படிப்பட்டதென்பதும், அதிகார முறைமையும், இதனுள்விளங்கும்.

தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச் - - *
செல்வருஞ் சேர்வது நாடு. - - - - - க.

இ-ள். நாடு|—தள்ளாவிளையுளும் - குன்றாத விளைவுசெய்வோரும் —— தக்காரும் - அறவோரும் — தாழ்விலாச்செல்வரும் - கேடில்லாத செல்வமுடையோரும்—சேர்வது - கூடி வாழ்வதே. எ-று. ※ தக்கார் முதலானவரோடும், சேர்தற்றொழிலோடும், பொருந்தாமையால் விளையென்பது உழவரை உணர்த்திநின்றது. — குன்றாமை - எல்லாவுணவுகளும் நிறையவுண்டாதல். இதனால் வாழ்வோர்க்கு வறுமை யில்லாமை பெறப்பட்டது.—அறவோர் - துறந்தோரும் அந்தணரு முதலாயினோர். இதனால் அழிவில்லாமை பெறப்பட்டது—கேடில்லாமை-கொடுக்கக்குறையாமை. செல்வர் - கப்பலினும் பண்டியினும் பொருள்தரும் வணிகர். இதனால் அரசனுக்கும், வாழ்வோர்க்கும், பொருள்கிடைத்தல் பெறப்பட்டது.

பெரும்பொருளாற் பெட்டக்க தாகி யருங்கேட டா*
லாற்ற விளைவது நாடு. - - - - - உ.

இ-ள். நாடு | — பெரும்பொருளால் - அளவற்றபொருளுடைமையால்—பெட்டக்கதாகி - (பிறதேசத்தாராலும்) விரும்பத்தக்கதாகி — அருங்கேட்டால் - அழிவில்லாமையோடு கூடி—ஆற்றவிளைவது - மிகவிளைவதே. எ-று. ※ கேடாவது - அதிகமழை - மழையில்லாமை - எலி - விட்டில் - கிளி - அரசாண்மை - எனப்படுகிற இவைகளால் வருவது.—இவைகளை வடநூலார் ஈதிபாவமென்று சொல்வர். இவைகளுள் அரசாண்மை அரசனறத்தாலும், மற்றவை அவன்மறத்தாலும், இலவாம். இவையில்லாமற்போகவே மிகவிளையுமென்பதாயிற்று. (உ)

பொறையொருங்கு மேல்வருங்காற் றாங்கி யிறைவற்
கிறையொருங்கு நேர்வது நாடு, - - ௩.

இ-ள். நாடு|—பொறை - (பிறநாடுகள்சுமந்த) பாரமெல்

லாம்—ஒருங்கு-ஒருசேர—மேல்வருங்கால் - (தன்) மேல்வரு
ம்போது—தாங்கி-(அவைகளைத்) தாங்கி — (அதன்மேலும்)
—இறைவற்கு-(தன்)னரசனுக்கு— இறையொருங்கு - இறை
ப்பொருண்முழுதையும் — நேர்வது - உடன்பட்டுக்கொடுப்
பதே. எ-று. ※ பாரமாவது - மனிதர்கூட்டமும், பசுமுதலா
கியவிலங்கின்கூட்டமும்,—தாங்குதலாவது - அவைகள்தத்தந்
தேசங்களிலே பகைவர் வருதலாலாவது, அரசன் முறைதப்
பலாலாவது, உணவில்லாமையாலாவது தன்னிடத்து வந்
தால் அவ்வத் தேசங்கள்போல் இனிதிருப்பச்செய்தல்.—அ
தனுல் தன்னரசனுக்கு வரிப்பணங் குறைபடுத்தாமல்தானே
கொடுப்பதென்றற்கு-இறையொருங்கு நேர்வதென்றார். (௩)

உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ் *
சேரா தியல்வது நாடு - - - - - ௪.

இ-ள். நாடு | — உறுபசியும் - அதிகபசியும் — ஓவாப்பி
ணியும்- நீங்காதநோயும் — செறுபகையும் - (புறத்திலிருந்து
வந்து) அழிவுசெய்யும்பகையும்—சேராது - அடையப்பெறா
மல்—இயல்வது-இனிதுநடப்பதே. எ-று. ※ அதிகபசி-உ
ழுவருடைமையாலும், மிகவிளைதலாலும், சேராதாயிற்று.—
நீங்காதநோய் - தீக்காற்றுமிக்ககுளிர் வெப்பங்களும், உண்
ணப்படுமவைகளது தீமையும் இல்லாமையால் சேராதாயிற்
று.—செறுபகை - அரசன்வலிமையும், நிலப்படையும், அட
வியும்-அரணும், உடைமையால் சேராதாயிற்று. (௪)

பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்குஞ்*
கொல்குறும்பு மில்லது நாடு. - - - - - ௫.

இ-ள். நாடு | — பல்குழுவும் - (சங்கேதவசத்தால் மாறு
பட்டுக்கூடும்) பலகூட்டமும் — பாழ்செய்யும் - (உடனிருந்
துகொண்டே) பாழாகச்செய்யும் — உட்பகையும் — வேந்த
லைக்கும்-(சமயம்வந்தால்) அரசனை அலைக்கின்ற—கொல்குறு
ம்பும் - கொலைத்தொழிற்குறும்பரும் — இல்லது - இல்லாத
தே. எ-று. ※ சங்கேதம்- சாதிபற்றியும், சமயம்பற்றியும், ப
லர்க்குஉளதாமொருமை. — உட்பகை - வழியலைத்துப் பறிக்
குங்கள்வர் கோள்சொல்லுவோர் முதலாகிய மக்களும், பன்
றி புலி கரடி முதலியமிருகங்களும்.—இம்மூன்றும் அரசனு
லும், வாழ்வோராலும், கடியப்பட்டுநடப்பதென்பதாம். (௫)

கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா — ❋
நாடென்ப நாட்டிற் றலை. - - - - - ௬.

இ-ள். கேடறியா - (பகைவராலே) கெடுதலறியாததும் — கெட்டவிடத்தும் - (அரிதிற்)கெட்டவிடத்தும் — வளங்குன்றா - (அப்போதும்) வளங்குறையாததும்ஆன — நாடு - நாட்டை — நாட்டின்-(எல்லா)நாடுகளிலும் — தலை - முதன்மையதாகும் — என்ப - என்று (நூலோர்) சொல்லுவார். எ-று. ❁ அறியாத - குன்றாத - என்பன இறுதி கெட்டுவந்தன. — கேடறியாமை - அரசன் வலிமையாலும், கடவுட்பூசை அறங்கள் என்றிவைகளைச் செயலாலும், வரும். — வளம் - ஆகரங்களிற் படுமவையும், வயல் தண்டலைகளில் விளையுமவையும், ஆம். — குறையாமை - அவை சம்பாதிக்கவேண்டாமல் இயல்பாகவே உளவாவும் முன்சம்பாதிக்கப்படுங் குறையறுதலும். [இவை ஆறு பாட்டாலும் நாட்டது இலக்கணஞ்சொல்லப்பட்டது.] (௬)

இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும் - ❋
வல்லரணு நாட்டிற் குறுப்பு. - - - எ.

இ-ள். இருபுனலும் - கீழ்நீர் மேனீர் எனப்படுகிற தன்னிடத்து நீரும் — வாய்ந்தமலையும் - வாய்ப்புடைத்தாகியமலையும் — வருபுனலும் - (அதிலிருந்து) வருவதாகியநீரும் — வல்லரணும் - அழியாதநகரியும் — நாட்டிற்கு — உறுப்பு - அவயவமாம். எ-று. ❁ இவ்விடத்துப் புனலென்றது - துரவு கேணிகளும் ஏரிகளும் ஆறுகளும் ஆகிய ஜலாதாரங்களை. அவயவமாதற்கு உரியன அவையே யாகலால் அவைகளால் மழைவறப்பினும் வளமுடைமை பெறப்பட்டது. — நடுவதல்லாமல் ஒருபக்கத்ததாகலும், தன்வளந்தருதலும், மாரியிலுண்ட நீர் கோடையிலுமிழ்தலு முடைமைபற்றி - வாய்ந்தமலையென்றார். [இதனால் அதனது அவயவம் சொல்லப்பட்டது.] (எ).

பிணியின்மை செல்வம் விளைவின்ப மேம - ❋
மணியென்ப நாட்டிற்கிவ் வைந்து. - - அ.

இ-ள். பிணியின்மை - நோயில்லாமை — செல்வம் — விளைவு — இன்பம் — ஏமம்-காவல் — இவ்வைந்து - இவ்வைந்தினையும் — நாட்டிற்கு — அணி - அழகாகும் — என்ப - என்று (நூலோர்) சொல்லுவார். எ-று. ❁ பிணியில்லாமை - நிலநலத்தா

ஆகரம் - மணி பொன் முதலியவை எடுக்குமிடங்கள்.

லவருவது.—செல்வம் - முன்சொல்லியது.—இன்பம் - விழவும் - வேள்வியும் சான்றோருமுடைமையாலும், அநுபவிப்பவையுடைமையாலும், நிலநீர்களது நன்மையாலும், வாழ்வார்க்கு உள்ளே நிகழ்வது.—காவலெனவே அரசன்காவலும், வாழ்வோர் காவலும், அரண்காவலும், அடங்கின. [பிறதேசத்தோரும் இச்சித்துப் பின்னே அவைகளை நினையாமைக்கு ஏதுவாகிய அதனழகு இதனாலே சொல்லப்பட்டது.] (அ)

நாடென்ப நாடா வளத்தன நாடல்ல - - ✻ -
நாட வளந்தரு நாடு. - - - - - - கூ.

இ·ள். நாடா - (தம்மிடத்துவாழ்வோர்) தேடி வருந்தாமல்(அவரிடத்தேதானே அடையும்) —வளத்தன - செல்வத்தையுடையவைகளை—நாடு-நாடுகள்—என்ப - என்று (நூலோர்|) சொல்லுவர்.—(ஆதலால்) — நாட-தேடிவருந்த — வளந்தரும்-செல்வத்தை அடைவிப்பவையாகிய—நாடு - நாடுகள் | — நாடல்ல·நாடுகளாகாவாம்- எ - று. ✻ நூலோர் விதிபற்றி எதிர்மறைமுகத்தால்-குற்றம் சொல்லியபடி. (கூ)

ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே - ✻
வேந்தமை வில்லாத நாடு. - - - - ௰.

இ-ள். வேந்து-அரசனோடு— அமைவில்லாத - பொருந்துதலில்லாத—நாடு| — ஆங்கு - மேற்சொல்லிய குணங்களாலெல்லாம்—அமைவெய்தியக்கண்ணும் - நிறைந்துள்ளதாயினும்—பயமின்றே—(அவைகளாலே) பயனுடைத்தன்று. எ - று. ✻ வேந்தமைவெனவே குடிகள்-அவனிடத்தே அன்புடையராதலும். அவன் குடிகளிடத்தே அருளுடையனாதலும், அடங்கின. அவையில்லாவிடத்து அந்நாட்டில் வாழ்வோரில்லாமையால் அவைகளாலே பயன் இல்லையாயிற்று. [இவை இரண்டுபாட்டாலும் அதனது குற்றம்சொல்லப்பட்டது.] (௰)

✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻

## எடு-ஆம், அதி—அரண்.

இனி அந்நாட்டிற்கு உறுப்பாய் அடங்குமாயினும் பகைவரால் தொலைவுவந்தவிடத்து அதற்கும், அரசனுக்கும், காப்பாதற் சிறப்புப்பற்றி வேறோரங்கமாகச்சொல்லப்பட்ட அரண் ஓரதிகாரத்தால் சொல்லுகின்றார்.

அஃதாவது - இன்னதென்பதும், அதிகார முறைமையும், இதனுள் விளங்கும்.

ஆற்று பவர்க்கு மரண்பொரு ளஞ்சித்தற் - - *
போற்று பவர்க்கும் பொருள். - - - க.

இ-ள். அரண் - கோட்டையானது | — ஆற்றுபவர்க்கும் - (மூவகைவலிமையுமுடையவராய்ப்) பிறர்மேலே செல்வோர்க்கும் — பொருள் - சிறந்ததாகும். — அஞ்சி - (அவையல்லாமல் தம்மேல்வருவோர்க்கு |) அஞ்சி — தற்போற்றுபவர்க்கும் - தன்னை யடைவோர்க்கும் — பொருள் - சிறந்ததாகும். எ - று. ※ பிறர்மேற் செல்லும்போது உரிமைப்பொருள் முதலானவைகளைப் பிறனொருவன் வௌவாமல் வைத்துச்செல்லவேண்டுதலாலும், பெருமைதொலைந்து முடிவுவந்தவிடத்துக் கடலினடுவே உடைகப்பற்காரர் போன்று காப்புக் காணாது முடிவராகலாலும், அவ்விருவகையோர்க்கும் அரண் பொருளாயிற்று. — வலிமையுடையவராயினும் அரணில்லாத விடத்து அழியுந்தன்மையராகலால் அவரை முன்சொல்லினார். [இதனால் அரணினது சிறப்புச் சொல்லப்பட்டது.] (க)

மணிநீரு மண்ணு மலையு மணிநிழற் - - - *
காடு முடைய தரண். - - - - - - உ.

இ-ள். அரண் | — மணிநீரும் - மணிபோல் நிறத்தையுடைய நீரும் — மண்ணும் - வெளிநிலமும் — மலையும் — அணிநிழற்காடும் - குளிர்ந்தநிழலையுடையகாடும் — உடையது - உடையதே. எ - று. ※ எந்நாளும் வற்றாத நீரென்றற்கு - மணிநீரென்றும், நீருநிழலுமில்லா மருநிலமென்றற்கு - மண்ணென்றும், செறிந்தகாடென்றற்கு - அணிநிழற்காடென்றும், சொல்லினார். — மதிற்புறத்து வெளிநிலம் பகைவர் அரண்பற்றாமைப் பொருட்டு. — நீரரண் - நிலவரண் - மலையரண் - காட்டரண் - என்கிற இந்நான்கனும் சூழப்படுவது அரணென்பதாம். (உ)

உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கி - *
னமைவர ணென்றுரைக்கு நூல். - - - ௩.

இ-ள். உயர்வு - உயர்ச்சியும் — அகலம் - அகலமும் — திண்மை - வலிமையும் — அருமை - அருமையும் (எனப்பட்ட) — இந்நான்கின் — அமைவு - மிகுதியையுடையமதிலை — அரணை

ன்று — நூல் - நூலோர் | — உரைக்கும் - சொல்லுவர். எ-று. ❊ அமைவு நூல் இரண்டும் ஆகுபெயர்கள்:— உயர்வு - ஏணிக்கு எட்டாதது. — அகலம் - புறத்தோர்க்குத் தோண்டக்கூடாத அடியகலமும், உள்ளிடத்தோர்க்கு நின்று தொழில்செய்தற் கானதலையகலமும், — திண்மை - கருங்கல் செங்கல்களாலே செய்தலால் - குத்தப்படாமை. — அருமை - பொறிகளாலே சேர்தற்கருமை. — [பொறி - எந்திரப்பாவைகள்.] (ங)

சிறுகாப்பிற் பேரிடத்த தாகி யுறுபகை
யூக்க மழிப்ப தரண். ❊ ச.

இ-ள். அரண் | — சிறுகாப்பின் - காக்கவேண்டுமிடஞ் சிறிதாய் — பேரிடத்ததாகி - பரந்தவிடத்தை யுடையதாய் — உறுபகை - (தன்னைச்) சூழ்ந்த பகைவரது — ஊக்கம் - மனவெழுச்சியை — அழிப்பது - கெடுப்பதே. எ-று. ❊ வாயிலும் வழியும் ஒழிந்தவிடங்கள் - மலை - காடு - நீர்நிலை - என்றிவைகளுள் ஏற்பவைகளை உடைத்தாதல்பற்றி - சிறுகாப்பினென்றும், உள்ளிடத்தோர் நலிவில்லாமல் இருத்தல்பற்றி - பேரிடத்ததாகியென்றும், தம்வலிமைகண்டு இப்பொழுதே அழிப்போமென்றுவரும் பகைவர்வந்து அதுகண்டால் அத்தைரியம் ஒழிதல்பற்றி ஊக்கமழிப்பதென்றும், சொல்லினார். (ச)

கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி யகத்தார்
நிலைக்கெளிதா நீர தரண். ரு.

இ-ள். அரண் | — கொளற்கரிதாய் - (புறத்தோராலே) கொள்ளுதற்கரிதாய் — கொண்ட - உட்கொண்ட — கூழ்த்தாகி - (பலவகை) யுணவையுடையதாகி — அகத்தார் - உள்ளிடத்தோரது — நிலைக்கு - (போர்) நிலைக்கு — எளிதாம் — நீரது - குணத்தையுமுடையதே. எ-று ❊ கொள்ளுதற் கருமை - காவற்காடு கிடங்குகளாலும், பொறிகளாலும், இடங்கொள்ளுதற்கருமை. — உணவு - தலைமை பற்றிச் சொல்லினமையால் மற்றுமுள்ள அனுபவிக்கப் படுமவைகளும் அடங்கின:— நிலைக்கெளிதா நீர்மையாவது - உள்ளிடத்தோரால் விடப்பட்ட ஆயுதமுதலானவை புறத்தோர்மேல் எளிதிலே செல்லலும், அவரால் விடப்பட்டவை உள்ளிடத்தோர் மேலே செல்லாமையும் பதணப்பரப்பும், முதலானவை. பதணம்மதி

எல்லாப் பொருளு முடைத்தா யிடத்துதவு *
நல்லா ளுடைய தரண். - - - - - ௬.

இ-ள். அரண் | — எல்லாப்பொருளும் - (உள்ளிடத்தோர் வேண்டும்) பொருள்களியாவையும் — உடைத்தாய் — இடத்து - (புறத்தோரால்) அழிவடையுமளவில்—உதவும் - (அதுவாமற்படி) உதவிக்காக்கவல்ல—நல்லாள் - நல்ல வீரனையும் —உடையது-உடையதே. எ-று. ❋ அரசனிடத்து - அன்பும், மானமும், மறமும், சோர்வில்லாமையும், முதலாகிய நற்குணங்களை உடைமைபற்றி - நல்லாளென்றார். (௬)

முற்றியு முற்று மெறிந்து மறைப்படுத்தும் *
பற்றற் கரிய தரண். - - - - - - - ௭.

இ-ள். அரண் | — முற்றியும் - (வரவுபோக்கு ஒழியும்வகை) நெருங்கிச்சூழ்ந்தும் — முற்றாது - அப்படிசூழாமல் — எறிந்தும் - (நெகிழ்ந்தவிடநோக்கி) ஒருமுகமாகப் போர்செய்தும் — அறைப்படுத்தும் - (உள்ளிடத்தோரை அவருக்கு நம்பிக்கையானவரைவிட்டுக்) கீழறுத்துத்திறப்பித்தும் — பற்றற்கரியது - (புறத்தோராலேபிடித்துக்) கொள்ளுதற்கரியதே. எ-று. ❋ இம்மூன்று உபாயங்களுள்ளும் முதலாவது - எல்லாப்பொருளு முடைமையாலும், மற்றவைகள்- நல்லா ளுடைமையாலும், பலிப்பனவல்லவாயின. (௭)

முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப் *
பற்றியார் வெல்வ தரண். - - - - - அ.

இ-ள். அரண் | — முற்றாற்றி - (சேனைப்பெருமையால்) சூழ்தல்வல்லவராகி — முற்றியவரையும் - (வந்து) சூழ்ந்தபுறத்தோரையும் — பற்றியார் - (தன்னைப்பற்றிய) உள்ளிடத்தோர் — பற்றாற்றி - (தாம்) பற்றியவிடம் விடாதேநின்று — வெல்வது - (போர்செய்து) வெல்வதே. எ - று. ❋ வெல்வதென அரணுடையார்தொழில் அரண்மேலேநின்றது. — பெரும்படையானைச் சிறுபடையானைப் பொறுத்துநிற்குந் துணையேயன்றி வெல்லுமியல்பினதென்பதாம். — [இவை எழுபாட்டாலும் அதனது இலக்கணம் சொல்லப்பட்டது.] (அ)

முனைமுகத்து மாற்றலர் சாயவினை முகத்து *
வீறெய்தி மாண்ட தரண். - - - - ௯.

இ-ள். அரண் | — முனைமுகத்து - போர்தொடங்கினவளவிலே — மாற்றலர் - பகைவர் — சாய — வினைமுகத்து — (உள்ளி

டத்தோர்செய்யுந்)தொழில்வேறுபாடுகளால் — வீறெய்தி - வீறு பெற்று — மாண்டது - (மற்றும்வேண்டும்)பெருமையை யுடையதே.எ-று. ✻ ஆரம்பத்திலே கெட்டவர் பின்னுங்கூடிப் போர்செய்தல் கூடாமையால் முனைமுகத்துச்சாயவென்றார். — தொழில்வேறுபாடுகளாவன - பகைவர் தொடங்கிய போரை அறிந்து எய்தல் எறிதல் குத்துதல் வெட்டுதல் என்றிவைமுதலாகிய தொழில்களுள் அப்போரை அழிப்பவைகளைச் செய்தல். — மற்றும் வேண்டும் பெருமை யென்றது - புறத்தோர் அறியாமல் புகுதல் போகுதல் செட்டதற்கு உண்டாக்கப்பட்ட சுருங்கை வழிமுதலானவை யுடைமை. (க)

எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி - ✻
யில்லார்க ணில்லா தரண். - - - - - ம.

இ-ள். அரண் | — எனைமாட்சித்தாகியக்கண்ணும் - (முன் சொல்லப்பட்ட) பெருமையெல்லாம் உடைத்தாகிய விடத்தும் — வினை - தொழில்செய்யுமிடத்து — மாட்சி - பெருமையை — இல்லார்கண் - இல்லாதவரிடத்து — இல்லது - (அவை) இலதாம். எ - று. ✻ சுமமாவிருக்கையும், அளவறியாது செய்தலும், ஏற்காதது செய்தலும், எல்லாமடங்க - வினைமாட்சியில்லாமொன்றும், ஏற்றதொழிலை அளவறிந்து செய்து காப்பாற்றுமற்போருல் அவ்வரணது அப்பெருமைகளாலே பயனில்லாமல் அழியுமென்றற்கு - அவையுடைத்தன்றென்றும், சொல்கின்றார். [இவை இரண்டுபாட்டாலும் காப்பவர் அவசியம் வேணுமென்பது சொல்லப்பட்டது.] (ம)

எசுா - ஆம், அதி — பொருள்செயல்வகை.

இனிப் பெரும்பாலும் - நாட்டாலும், அரணாலும், வளர்க்கவும், காக்கவும். படுவதாகிய பொருள் சம்பாதித்தவின் விதம் இவ்வதிகாரத்தாலே சொல்லுகிறார். அஃதாவதின்னதென்பதும் அதிகார முறைமையும் இதனுள் விளங்கும்.

பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும் ✻
பொருளல்ல தில்லை பொருள். - - க.

இ-ள். பொருளல்லவரை - ஒருபொருளாக மதிக்கப்படா

தவரையும்—பொருளாகச்செய்யும் - பொருளாக மதிக்கப்பட
டச்செய்யவல்ல—பொருளல்லது — பொருள் | —இல்லை. எ-
று. ※ மதிக்கப்படாதவர் - அறிவில்லாதவரும், இழிகுலத்தா
ரும், — மதிக்கப்படச் செய்தல் - அறிவுடையவரும், உயர்கு
லத்தவரும், அவரிடத்திலே போய் நிற்கப் பண்ணுதல். —.
அதனாலே சம்பாதிக்கவேண்டுவது அதுவேயென்பதாம். (க)

இல்லாரை யெல்லா ரெள்ளுவர் செல்வரை - ※
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு. - - - உ.

இ-ள். (எல்லா நன்மையு முடையவராயிருந்தாலும்) — இ
ல்லாரை - (பொரு) ளில்லாதவரை} —எல்லாரும் | — எள்ளுவர் -
இகழ்வர். —(எல்லாத்தீமையு முடையவரா யிருந்தாலும்) —
செல்வரை - அப்பொருளுடையவரை} —எல்லாரும் | — சிறப்
புச்செய்வர் - உயரச்செய்வர். எ - று. ※ உயரச்செய்தல் - தா
ம் தாழ்ந்து நிற்றல். —இகழ்விலும் தாழ்விலும் பகைவர் நட்
பினர் அயலவர் என்று மூவகையோரும் ஒத்தலால் எல்லா
ருமென்றார். பின்னுஞ்சொல்லியது அதனை உறுதிசெயற்கு.

பொருளென்னும் பொய்யா விளக்க மிருளறுக்கு ※
மெண்ணிய தேயத்துச் சென்று. - ௩.

இ-ள். பொருளென்னும் - பொருளென்று (எல்லாராலுஞ்)
சிறப்பிக்கப்படும் — பொய்யாவிளக்கம் - நந்தாவிளக்கான
து | —(தன்னைச் சம்பாதித்தவர்க்கு) — எண்ணிய - அவர்) நி
னைத்த—தேயத்து — சென்று—இருள் - (பகையென்னு) மி
ருளை} —அறுக்கும் கெடுக்கும். எ-று. ※ பொருள் - எல்லா
ர்க்குமெ எந்நாளும் அவசியம் வேண்டுவதாய் வருதல்பற்றி -
பொய்யா விளக்கமென்றும், மற்றை விளக்கோடு இதனிட
த்து வேற்றுமைதோன்ற - எண்ணியதேசத்துச் சென்றென்
றும், சொல்லினார். ஏகதேச வுருவகம். [இவை மூன்று பா
ட்டாலும் பொருளது சிறப்புச் சொல்லப்பட்டது.] (௩)

அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து - - ※
தீதின்றி வந்த பொருள். - - - - - ச.

இ-ள். திறனறிந்து - (சம்பாதிக்குந்) திறத்தைஅறிந்து —
தீதின்றி - (அரசன்) கொடுங்கோன்மையிலனாக — வந்தபொ
ருள் | —(அவனுக்கு) —அறன் - அறத்தையும்} —ஈனும் - கொ
டுக்கும். —இன்பமும் - இன்பத்தையும்} — ஈனும் - கொடுக்கு

டீ. எ-று. ❁ திறம் - சம்பாதித்தற்கு உரியவழி. செங்கோல னென்று புகழப்படுதலாலும் - கடவுட் பூசை தானங்களாலே பயன் அடைதலாலும் - அறனீனுமென்றும், நெடுங்காலமிரு ந்து அனுபவிக்கப்படுதலால் - இன்பமுமீனுமென்றும், சொ ல்லினார்.—ஆதலால் அத்திறத்தாற் சம்பாதிக்கவென்பதாம்.

அருளொடு மன்பொடும் வாராப் பொருளாக்கம் ❋
புல்லார் புரள விடல். - - - - - ரு.

இ-ள். அருளொடும் - (தாம்குடிகளிடத்துச்செய்யும்) கரு ணையோடும்—அன்பொடும் - (அவர் தம்மிடத்துச்செய்யும்) அன்போடும்—வாரா-(கூடி)வாராத—பொருளாக்கம் - பொ ருட்சம்பாத்தியத்தை — புல்லார் - (அரசர்) பொருந்தாராகி —புரளவிடல்- நீங்கவிடக்கடவர். எ - று. ❁ அவைகளோடு கூடிவருதலாவது ஆறிலொன்றாய்வருதல். அப்படிக்கு வாரா தபொருள் பச்சை மண்பாண்டத்து நீர்போல் சம்பாதித்தவ ளையும் கொண்டு இறத்தலால் அதனைப் புல்லாதொன்றவளவி லே நிறுத்தாமற் புரளவிடலென்றும சொல்லினார். (ரு)

உறுபொருளு முல்கு பொருளுந்தன் னொன்னார்த் ❋
தெறுபொருளும் வேந்தன் பொருள். - - சு.

இ-ள். உறுபொருளும் - (உடையவர் இல்லாமையால் தா னேவந்து) கிடைத்தபொருளும்|—உல்குபொருளும் - சுங்க மாகியபொருளும் |— தன்னொன்னார் - தன்பகைவரை—தெ றுபொருளும் - வென்று (திறையாகக்கொள்ளும) பொருளும் —வேந்தன்பொருள் - அரசனுக்குரிய பொருள்கள். எ-று. ❁ உறுபொருள் - வைத்தவரிறந்துபோக நெடுங்காலம் நிலத்தி னின்கீழ்க்கிடந்து பின் கண்டெடுத்ததுமாம். சுங்கம் - மரக்கல த்திலும் பண்டியிலும் வரும பண்டங்களுக்கு வாங்கும் வரி. தெறுபொருள் - தெறுதலால் வரும்பொருளென விரியும். ஆ றிலொன்றல்லாமலும் உரியவை சொல்லியபடி. [இவை மூன் றுபாட்டாலும் அது சம்பாதிக்கும் வழிசொல்லப்பட்டது.]

அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ் ❋
செல்வச் செவிலியா லுண்டு. - - - - எ.

இ-ள். அன்பீன் - அன்பினால் ஈன்றிடப்பட்ட— அருளெ ன்னும் - அருளென்கின்ற—குழவி - குழந்தையானது |—

பொருளென்னும் - பொருளென்று உயர்த்திச் சொல்லப்படு ம் — செல்வம் - செல்வத்தையுடைய — செவிலியால் - செவிலி த்தாயால் — உண்டு - வளரும். எ - று. ※ சம்பந்தம்பற்றுமல் வருந்துபவர்க்கு இரங்கி அவரிடத்துச் செல்வதாகிய அருள் - சம்பந்தம் பற்றிச் செல்லும் அன்புமிகுந்தவிடத்து உண்டாவதாகலால் அதனை அன்பீன்ற குழவியென்றும், அது வறியவர்மேற் செ ல்வது - அவ்வறுமையையகற்றவல்ல பொருளுடையவர்க்கு ஆதலா ல் பொருளை - அதற்குச் செவிலியென்றும், அது உலகிற்செ விலிபோலல்லமல் தானே எல்லாப்பொருளும் உதவிவள ர்த்தலால் - செல்வச் செவிலியென்றும், சொல்லினர். (எ)

குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்தொன் றுண்டாகச் செய்வான் வினை. - - - அ.

இ-ள். தன்கைத்து - தன்கையதாகியபொருள் — உண்டாக — ஒன்று - ஒருதொழிலை — செய்வான் - செய்பவனது — வி னை - செய்கையானது| — குன்றேறி - (ஒருவன்) மலைமேல் ஏறி நின்று — யானைப்போர் - யானைகளதுபோரை — கண்டற் று - கண்டதனோடொக்கும். எ - று. ※ எப்படி குன்றேறின வன் அச்சமும் வருத்தமும் இல்லாமல் பூமியில் யானையும் யானையும் செய்கின்ற சண்டையைத் தான் இனிதிருந்து கா ண்பானோ, அப்படி கைப்பொருளுண்டாக ஒருதொழிலை மே ற்கொண்டவனும் அச்சமும் வருத்தமும் இல்லாமல் வல்லவ ரை ஏவித் தான் இனிதிருந்து முடிப்பானென்பதாம். (அ)

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கு மெஃகதனிற் கூரியதில். - - - - கூ.

இ-ள். (தமக்கு ஒன்று உண்டாக நினைப்பவர்|) — பொரு ளை — செய்க - சம்பாதிக்கக்கடவர். — (அப்பொருள்|) — செ றுநர் - (தம்) பகைவரது — செருக்கு - தருக்கை — அறுக்கும் — எஃகு - ஆயுதமாம். — (அதற்கு) — அதனின் - அதுபோல் — கூரியது - கூரியஆயுதம்| — இல் - (வேறு) இல்லை. எ - று. ※ பொருளைச் சம்பாதித்தவர் பெருமையும் நட்புமுடையவ ரா வராதலாலே பகைவர் செருக்குநீங்கித் தாமே அடங்குவாரெ ன்பதற்கு - செறுநர் செருக்கறுக்கு மெஃகென்றும், மற்றை யாயுதங்கள் அதுபோல் அருவப்பொருளை அறுக்கமாட்டா மையால் - அதனிற் கூரியதில்லையென்றும், சொல்லினர். (கூ)

ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொருஃ
ளேனை யிரண்டு மொருங்கு. - - - - ௰.

இ-ள். ஒண்பொருள் - நல்லவழியால் வரும்பொருளை—காழ்ப்ப-மிகவதிகமாக — இயற்றியார்க்கு - உண்டாக்கினவர்க்கு—ஏனையிரண்டும் - மற்றை அறமும் | இன்பமும் |—ஒருங்கு - ஒருசேர—எண்பொருள் - எளியபொருள்களாம். எ - று. ※ காழ்த்தல் - முதிர்தல். அப்பொருள் - பயன்கொடுத்தல்லது போகாமையால் - ஒண்பொருளென்றும், மற்றை யிரண்டும் அதன் விளைவாகலால் தாமே ஒரேகாலத்திலே உண்டாகுமென்பதற்கு - எண்பொருளென்றும், சொல்லினார். [இவை நான்குபாட்டாலும் அதன் பயன் சொல்லப்பட்டது.] (௰)

❧*************-❧*※*❧-************❧

எஅ-ஆம், அதி—படைமாட்சி.

இனிப்பொருளினால் ஆவதாய் வெல்வதாகிய படையை இரண்டதிகாரத்தாலே சொல்லத் தொடங்கி முதலிலே படைமாட்சி சொல்லுகிறார்.

அஃதாவது - சேனையினது நன்மையாம். அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.

உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன் ※
வெறுக்கையு ளெல்லாந் தலை. - - - - க.

இ-ள். உறுப்பு - (யானைமுதலாகிய) நாலுறுப்புகளாலும்—அமைந்து - நிறைந்து—ஊறு - (போரிலே) காயம்படுதற்கு—அஞ்சா-அஞ்சாது நின்று — வெல் - (பகையை) வெல்வதாகிய—படை - சேனையானது | — வேந்தன் - அரசனது—வெறுக்கையுளெல்லாம் - செல்வங்களிலெல்லாம் — தலை - முதன்மையாகிய(செல்வமாம்).எ-று. ※ இவ்விடத்திலே படையுறுப்பாவன-அந்நான்கின் கூட்டத்தை. சேனை - ஊறஞ்சியவிடத்தே வெல்லுதல் கூடாமையால் ஊறஞ்சாவென்றும், அச்சேனை ஒழிந்த அங்கங்களுக்கும் அரசனுக்கும் காவலாகலால்-வெறுக்கையு ளெல்லாந்தலையென்றும் சொல்லினார். (க)

உலைவிடத் தூறஞ் சாவன்கண் டொலைவிடத்துத் ※
தொல்படைக் கல்லா லரிது. - - - - உ.

இ-ள். தொலைவிடத்து - (தான்) சிறிதாகியவிடத்தும்.

லைவிடத்து- (அரசனுக்குப்போரினிடத்து) அழுயுவுழா ல— ஊறு-(தன்மேலே) காயம்படுதற்கு—அஞ்சா - அஞ்சாதுநி ன்றுதாங்கும்—வன்கண் - சௌரியமானது|—தொல்படை க்கல்லால் - அவன்முன்னோரைத் தொடங்கிவருஞ் சேனைக்கல் லாமல்—அரிது-உண்டாகாது. எ-று. ※ இழிவு சிறப்பும்மை· விகாரத்தால் தொக்கது.—மூலப்படை - கூலிப்படை - நாட்டு ப்படை-காட்டுப்படை - துணைப்படை - கைப்படை. எனப்ப டுகிற அறுவகைப் படைகளுள்ளும் சிறப்புடையது மூலப்ப டையாதலால் அரசன் அதற்கு வேண்டுமவைகளைக் கொடுத் து அதைக் காப்பாற்றுகவென்பது கருத்து. (உ)

ஒலித்தக்கா லென்னா முவரி யெலிப்பகை ※
நாக முயிர்ப்பக் கெடும். ௩.

இ-ள். எலிப்பகை - எலிகளாகியபகைதிரண்டு— உவரி-கு டல்போல்—ஒலித்தக்கால்-இரைந்தால் — என்னும் - (பாம்பு க்கு)என்னதுன்பம்வரும். — நாகம் - அப்பாம்பு—உயிர்ப் ப-மூச்செறிந்தவளவிலே—கெடும் - (அது|தானே) கெடும். எ-று. ※ இத்தொழிலுவமத்தால் திரட்சிபெற்றும். (வீரரல் லாதார் பலர் திரண்டு ஆர்த்தால் அதற்கு வீரன் அஞ்சான் அவன் எழும்பினவளவிலே அவர் கெடுவரென்பது தோன் ற நின்றமையால்-இது பிறிது மொழிதலணி.) வீரரல்லாதா ர் பலரினும் வீரனொருவனை ஆளுதல் நல்லதென்பதாம். [இ வை மூன்றுபாட்டாலும் முறையே அரசனுக்குப் படையா னது மற்றை யங்கங்களுட் சிறந்ததென்பதும், அதனுள்ளு ம் மூலப்படைசிறந்ததென்பதும், அதனுள்ளும் வீரன் சிற ந்தவனென்பதும், சொல்லப்பட்டன.] (௩)

அழிவின் றறைபோகா தாகி வழிவந்த ※
வன்க ணதுவே படை. ௪.

இ-ள். படை-(அரசனுக்குப்)படையாவது | — அழிவின் று-(போரினிடத்துக்) கெடுதலில்லாமல் — அறைபோகாதா கி-(பகைவராலே) கீழறுக்கப்படாததாகி -- வழிவந்த - பழ மையாகவந்த —வன்கணதுவே-சௌரியமுடையதே. எ - று. அழிவில்லாமையால் மறமானங்களுடைமையும், அறைபோ காமையால் அரசனிடத்து அன்புடைமையும், பெறப்பட்டன.

கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கு - *
மாற்ற லதுவே படை. - - - - - ௫.

இ-ள். படை|—கூற்று - கூற்றுவன்—உடன்று - கோபித்து—மேல்வரினும்—கூடி - மனமொத்து—எதிர்நிற்கும் - எதிர்நின்றுதாங்கும் — ஆற்றலதுவே - மனவலிமையையுடையதே. எ-று. ※ மிகப்பலர் மனமொத்தற்குக் காரணம அரசன்மேலன்பு. உம்மை-சிறப்பும்மை. (௫)

மறமான மாண்ட வழிச்செலவு தேற்ற - - *
மெனநான்கே யேமம் படைக்கு. - - - ௬.

இ-ள். மறம்-சௌரியமும்|—மானம் - மானமும்|—மாண்ட—வழிச்செலவு - (முன்வீரர்சென்ற) நல்வழியிலேசெல்லுதலும்—தேற்றம் - (அரசனுல்) நம்பப்படுதலும் — என நான்கே - என இந்நான்குகுணமுமே — படைக்கு-சேனைக்கு—எமம்-அரணும். எ-று. ※ இவைகளால் முறையே பகைவரைச் சீக்கிரத்திலே கொன்று நிற்கையும், அரசனுக்குத் தாழ்வு வாராமற் காத்தலும், தோற்பவர்மேற் படையெறியாமை முதலியவும், அறைபோகாமையும், ஆகிய செய்கைகள் பெறப்பட்டன இச்செய்கையோர்க்குப் பகைவர் நெருங்கமாட்டாராகலின் வேறரண் வேண்டாமென்பதாம். (௬)

தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த - - *
போர்தாங்குந் தன்மை யறிந்து. - - - எ.

இ-ள். தானை-சேனையாவது| — தலைவந்த - (பகைவரானே வகுக்கப்பட்டுத்) தன்மேல்வந்த—போர் - (படையின்) போரை—தாங்குந்தன்மை விலக்கும்வகுப்பை — அறிந்து - அறிந்து (வகுத்துக்கொண்டு)—தார் - (அவரது) தூசிப்படையை—தாங்கி-(தன்மேல்வாராமல்) தடுத்து—செல்வது - (தான் அதன்மேலே) செல்வதே. எ-று. ※ படைவகுப்பாவது - வியூகம். அது எழுவகை உறுப்புகளையுடையதாய் - வகையால் நான்காய் - விரியால் முப்பதாம். இவைகளின் பெயரும் இலக்கணங்களும் இங்கேசொன்னுல் விரியும் அவையெல்லாம் வடநூல்களுட்கண்டுகொள்க. [இவை நான்குபாட்டாலும் படையது இலக்கணம் சொல்லப்பட்டது.] (எ)

அடற்றகையு மாற்றலு மில்லெனினுந் தானை *
படைத்தகையாற் பாடு பெறும். - - - - ௮.

இ-ள். தானை சேனை|—அடற்றகையும் - (பகைமேலே தான்சென்று) போர்செய்யுஞ்சௌரியமும்—ஆற்றலும் - (அது தன்மேல்வந்தால்) பொறுக்கும் வலிமையும் — இல்லெனினும் - இல்லையாயினும் — படைத்தகையால் தனது தோற்றப் பொலிவாலே — பாடு - பெருமையை}—பெறும். எ-று. ❊ இல்லெனினுமெனவே அவசியம் அவைகள் வேண்டுமென்பது பெறப்பட்டது. தோற்றப்பொலிவாவது - அலங்கரிக்கப்பட்ட தேர் யானை குதிரைகளுடனும் படாகை கொடி குடை பலவாத்தியம் காகளமுதலானவைகளுடனும் அணிந்து தோன்றும் அழகு. பாடு-கண்டவளவிலே பகைவரஞ்சும்பெருமை.

சிறுமையுஞ் செல்லாத் துனியும் வறுமையு - - *
மில்லாயின் வெல்லும் படை. - - - - - ௯.

இ-ள். சிறுமையும் - (தான்தேய்ந்து) சிறிதாகலும்—செல்லாத்துனியும் - (மனத்திலிருந்து) நீங்காதவெறுப்பும் —வறுமையும்-தாரித்திரியமும்—இல்லாயின் - (தனக்கு) இல்லையாயின் —படை - சேனையானது|—வெல்லும் - (பகையை}) வெல்லும். எ-று. ❊ விட்டுப்போதலும், வறுமையடைதலும், அரசன் பொருள் கொடாமையால் வருவன. நீங்காவெறுப்புமகளிரை வௌவ இழிவாயின செய்தல் முதலானவைகளால்வருவது. இவையுள்ளவிடத்து அவனிடத்து அன்பில்லாமல் உற்றுப் போர் செய்யாமையின் இல்லாயின் வெல்லுமென்றார்.

நிலைமக்கள் சால வுடைத்தெனினுந் தானை - *
தலைமக்க ளில்வழி யில். - - - - - - ௰.

இ-ள். நிலைமக்கள் - (போரினிடத்து) நிலையையுடைய வீரரை—சாலவுடைத்தெனினும் - மிகவுடையதாயினும் — தலைமக்கள்-(தனக்குத்) தலைவராகியவீரர்— இல்வழி - இல்லாவிடத்து—தானை —சேனை|—இல் - நில்லாது. எ-று ❊ சேனாதிபதிகள் நிலையுடையவரல்லாமல் போவாராயின் காண்போரில் லெனப் போர்செய்யாமல் தானும் போமென்றற்கு - தலைமக்களில்வழியில்லென்றார். [இவை மூன்றுபாட்டாலும் முறையே படைத் தகைமையாலும், அரசன் கொடைத் தாழ்வுகளாலும், தலைவரில்லாமையாலும், தாழ்வு சொல்லப்பட்டது.]

அஃதாவது - அச்சேனையினது மறமிகுதியாம. அதிகார முறைமையும் இதனாலே விளங்கும்.

என்னைமுன் னில்லன்மின் றெவ்விர் பலரென்னை *
முன்னின்று கன்னின் றவர். - - - - - - ௧.

இ-ள். தெவ்விர் - பகைவரே — என் - என்னுடைய—ஐ முன - தலைவனெதிர்—நின்று - (போரேற்று) நின்று—கன்னின்றவர் - (அவன் வேல்பட்டு வீழ்ந்து) கல்லினிடத்தே நின்ற வீரர்|—பலர்.— (நீர் அதனிடத்து நில்லாமல் உமமுடம்பிலே நிற்கையை வேண்டில்)—என்-என்னுடைய—ஐமுன் - தலைவனெதிர் — நில்லன்மின் - (போரேற்று) நில்லாதேயுங்கள்.எ-று. ❁ கல்.போரில் வீரர் இறந்தவிடத்து அவருருவஞ்செய்து நடப்படுகல். ஒரு வீரன் தன்மறம் அரசன்மேல்வைத்துச் சொல்லியபடி. [இப்பாட்டு ✝ நெடுமொழி வஞ்சி] (௧)

கான முயலெய்த வம்பினில் யானை - - - *
பிழைத்தவே லேந்த லினிது. - - - - ௨.

இ-ள். கானம்-காட்டில் ஓடுகிற — முயல் - முசலை—எய்த-(தப்பாமல்) எய்த—அம்பினின்-அம்பை ஏந்துதலைப்பார்க்கிலும்—யானை-(வெளிநிலத்திலேநின்ற) யானையை — (எறிந்து)—பிழைத்தவேல் - தப்பியவேலை—ஏந்தல்| — இனிது-நன்று. எ-று. ❁ கானமுயலென்றதனால்-வெளிநிலமென்பதும், பிழைத்தவேலென்றதனால் - தப்பாமலென்பதும், முயற்குத்தக எய்தவென்றதனால் - யானைக்குத்தக எறிதலும், வருவிக்கப்பட்டன.—இது பகையரசனது சேனையோடு சண்டைசெய்து அது தோற்றுப் பின்னிடக்கண்டு நாணிப்பின் அவ்வரசன்மேற்செல்லலுற்றானொருவீரனதுசொல்லு. (௨)

பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கா *
லூராண்மை மற்றத னெஃகு. - - - ௩.

இ-ள். தறுகண் - (பகைவரிடத்தே முகங்கொடாமற் செய்கிற)மறம்|—பேராண்மை - மிகுந்தவாண்மையாகும.— ஒன்றுற்றக்கால்- (அவர்க்கு) ஒருதாழ்வுவந்ததாயின்—(அது தீர்த்துக்கொள்ளுதற்பொருட்டு) — ஊராண்மை - (முகங்கொடுத்து) உபகாரியாந்தன்மை | — அதன் - அதற்கு—எஃகு-கூர்

✝ நெடுமொழிவஞ்சியாவது, பகைவர்முன்னே தன்னாண்மையைச்சொலவது.

மையாகும்.—என்ப-என்று (நூலோர்|) சொல்லுவர். எ-று.
❋ மற்று-அசை. [இவை இரண்டுபாட்டும் * தழிஞ்சி.] (௩)

**கை**வேல் களிற்றொடு போக்கி வருபவன் - *
மெய்வேல் பறியா நகும். - - - - ௪.

இ-ள். கைவேல் - (தன்) கைப்படையாகிய வேலை — களிற்றொடு-(தன்மேல்வந்த) யானையோடு — போக்கி - எறிந்துவிட்டு—வருபவன் - (வருகின்ற யானைக்கு வேல் தேடித்) திரிபவன்|—மெய்வேல் - தன்மார்பிலிருந்தவேலை— (கண்டு)—பறியா-பிடுங்கி—நகும்-மகிழ்வான் எ-று. ❋ களிற்றொடுபோக்கல்-களிற்றினுயிரைக் கொண்டு போம்படி விடுதல். — மகிழ்ச்சி-தேடியது அடைதலால்.—இதனுள் - களிற்றையல்லது எறியானென்பதும், கோபமிகுதியால் வேல் மார்பிலே புதைந்ததை அறிந்திலனென்பதும், பின்னும் போர்மேல் விருப்பினனென்பதும், பெறப்பட்டன. [இது * நூழிலாட்டு-]

**வி**ழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பி*
னொட்டன்றோ வன்க ணவர்க்கு. - - - ௫.

இ-ள். விழித்தகண் - (பகைவரைக்) கோபித்துப்பார்த்தகண்—வேல்கொண்டு . (அவர்) வேலைக்கொண்டு—எறிய — அழித்து-(அதற்குப் பொறாமல் அப்பார்வையை) அழித்து — இமைப்பின் - இமைக்குமாயின் — (அவ்விமைத்தல்|) —வன்கணவர்க்கு - வீரர்க்கு— ஒட்டன்றோ-தோற்பல்லவா. எ-று.
❋ அக்கோபப்பார்வையிமைத்தலும் போரிலிடத்து இகழ்ச்சியென்று நினைத்து அதுவும் செய்யாரென்பதாம். (௫)

**வி**ழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள் *
வைக்குந்தன் னாளை யெடுத்து. - - - ௬.

இ-ள். (வீரனானவன்|)—தன்னாளை - தனக்குக்கழிந்ததினங்களை—எடுத்து - எடுத்(தெண்ணி)— (அத்தினங்களுள்) —விழுப்புண்-பெருங்காயங்கள் — படாதநாளெல்லாம் - படாததினங்களையெல்லாம்} — வழுக்கினுள் - பயன்படாது கழிந்ததினங்களுள்ளே—வைக்கும் - வைப்பான். எ-று. ❋ விழுப்புண்-முகத்திலும், மார்பிலும், பட்டபுண். போர்பெற்றிருக்கவு

---

* தழிஞ்சி, தோற்றவர்மேலே ஆயுதஞ்செலுத்தாத மிகுமறச்சொல்வது.
* நூழிலாட்டு, பகைவர் ஒடமார்பிற்புதைந்தவிடத்தலாயுதம்பிடுங்கி எறிவது.

ம அது பெறுதநாள்களோடு கூட்டுவ னென்பதாம். [இவை மூன்றுபாட்டாலும் ஊறஞ்சாமை சொல்லப்பட்டது.] (௬)

சூழலு மிசைவேண்டி வேண்டா வுயிரார் - - *
கழல்யாப்புக் காரிகை நீர்த்து. - - - - - எ.

இ-ள். சுழலும்- (பூமியைச்) சூழ்ந்துநிற்கும்—இசை-புகழை— வேண்டி — வேண்டாவுயிரார் - உயிர்வாழ்தலைவேண்டாதவீரர்—கழல் - வீரக்கழலை—யாப்பு - கட்டுதல் | —காரிகைநீர்த்து - அலங்கார குணமுடையதாம். எ-று. ❋பூமியைச் சூழுமெனவே அப்புகழின் பெருமை பெறப்பட்டது.—அப்படிப்பட்டவீரர் வானுலகமும் புகழும் எளிதில் அடைவராகலால் ஆபரணமாவது அக்கழலே யென்பதாம். (எ)

உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன் - - - *
செறினுஞ்சீர் குன்ற லிலர். - - - - ௮ .

இ-ள். உறின்-(போர்) பெறின்—உயிர் -(தம்) முயிர்ப்பொருட்டு—அஞ்சா-அஞ்சாமல் (அதன் மேற்செல்லும்) — மறவர்-வீரர்|—இறைவன் -(தம்) மரசன்—செறினும் - (அதுவேண்டாமென்று) கோபிக்கினும்— சீர் குன்றல் - அவ்வீரமிகுதி குறைதல்—இலர். எ-று. ❋ வீரர்போர்பெற்றுஅறியாமையால் அதுபெற்றால் அரசன்தடுப்பினும்நில்லாரென்பதாம். (௮)

இழைத்த திகவாமைச் சாவாரை யாரே - - *
பிழைத்த தொறுக்கிற் பவர். - - - - ௯.

இ-ள். இழைத்தது - (தாம்) சொல்லியசபதம் — இகவாமை - தப்பாமற்பொருட்டு— சாவாரை - (போய்ச்) சாகவல்ல வீரரை— பிழைத்தது - (அது) தப்பியவிதம்(சொல்லி)—ஒறுக்கிற்பவர்-இகழ்தற்குரியவர் | —யார். எ - று. ❋ இழைத்தல்-இன்னதுசெய்யேனாகில் இன்னனாகுகவெனத் தான்வகுத்தல். சொல்லியென்பது - வருவிக்கப்பட்டது. சபதமுடிக்கப்புகுந்து முன்னே இறந்தாலும் தொலைவில்லாமையால் அதுமுடித்தவராவரெனச் சாதற்சிறப்புச்சொல்லியபடி. (௯)

புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா - - *
டிரந்துகோட் டக்க துடைத்து. - - - - ௰.

இ-ள். (தமக்குச்செய்த நன்றிகளை நினைத்து)—புரந்தார்-

ஆண்டவரசரது — கண் - கண்கள் — நீர்மல்க - நீர்பெருகு ம்படி—சாகிற்பின்- (போரிலே) சாகப்பெறின் — சாக்காடு- அச்சாவு | —இரந்து - இரந்தாயினும் — கோட்டக்கது-கொள்ளுந்தகுதியை| —உடைத்து. எ-று. ❊ சுற்றத்தார் அழ இல்லினிட்டு நோயினாலே சாவோர் பழவினைப்பயனை அடைதலால்-அப்போதை வினையால் வானுலகத்தை அடையும் சாவை-இரந்துகோட்டக்க துடைத்தென்றார். [இவை நான்குபாட்டாலும் உயிர்காவாமை சொல்லப்பட்டது.] (௰)

❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊

## ௭௯-ஆம், அதி—நட்பு.

இனிப்படைபோல் அரசனுக்குத் தொழிலிடத்து உதவுவதாகிய நட்பை ஐந்ததிகாரத்தால் விதிமுகத்தாலும், பன்னிரண்டதிகாரத்தால் எதிர்மறைமுகத்தாலும், சொல்லத்தொடங்கி விதிமுகவதிகார மைந்தினுள்ளும் முதலிலே நட்புச் சொல்லுகின்றார்.

அஃதாவது இன்னதென்பதும் அதிகார முறைமையும் இதனுள் விளங்கும்.

செயற்கரிய யாவுள நட்பி னதுபோல் - - ❊
வினைக்கரிய யாவுள காப்பு. - - - க.

இ-ள். நட்பின் - நட்புப்போல்—செயற்கரிய - சம்பாதித்துக்கொள்ளுதற்கு அரியபொருள்கள் — யா - எவைகள் | — உள-இருக்கின்றன. — (சம்பாதித்துக்கொண்டால்) — அதுபோல் — வினைக்கரிய - (பகைவர்செய்யுந்) தொழிலுக்குப் (புகுதற்கு) அரிய—காப்பு - காவலானவை — யா - எவைகள் | — உள - இருக்கின்றன. எ - று. ❊ நட்புச் செய்தற்கு ஆவாரைப் பெறுதலும், பெற்றால்செய்யும் உபாயமும், செய்தால் வேறுபடாமல் நிற்றலும், முதலானவை அருமையாகலால் - நட்புப்போல் செயற்கரியன வில்லையென்றும், செய்தால் பகைவர் அஞ்சிப் போர்தொடங்கா ராதலால் - அதுபோல் போர்வாராமற்காத்தற்கு அரியகாவலில்லையென்றும், சொல்லினார்.— நட்பு - இயற்கை, செயற்கை, என இருவகைப்படும். அவைகளில் இயற்கை-நட்பு - பிறப்பு முறையாலாகியதும், தேயமுறையாலாகியதும், என இருவகைப்படும். அவைகளுள் முன்னைய து சுற்றமாகலால் சுற்றந்தழாலில் அடங்கிற்று. மற்றது பகை

யிடையிட்ட தேயத்ததாகலால் துணைவலியென வலியறிதலு ள் அடங்கிற்று. [இனி இவ்வதிகாரத்திலே சொல்லப்படுவது - முன் செய்த உதவிபெற்றுவருவதாகிய செயற்கை நட்பேயா கலால் அதன் சிறப்பு இதனால் சொல்லப்பட்டது.] (க)

நிறைநீர நீரவர் கேண்மைபிறைமதிப் - - ✻
பின்னீர பேதையார் நட்பு. - - - - உ.

இ-ள். நீரவர் - அறிவுடையவரது — கேண்மை - நட்புக ள் | —பிறை-பிறைபோல் — நிறைநீர - (நாடோறும்) நிறையு ந்தன்மையினவாம். — பேதையார் - அறிவில்லாதவரது—ந ட்பு - நட்புக்கள் | —மதி - (நிறைந்த) சந்திரன்போல் — பின் னீர - பின்னை நாடோறும் குறையுந்தன்மைபனவாம். எ-று. ✻ இனிமைபற்றி நீரவொன்றார். - அறிவுடையவர் தங்களிலே செய்தநட்பு முன்சுருங்கிப் பின் பெருகற்கும், அறிவிலாதவ ர் தங்களிலே செய்த நட்பு முன்பெருகிப் பின்சுருங்கற்கும், காரணம்-தம்முள் முன்னறியாமையும்பின்னறிதலுமாம். (உ)

நவிற்றொறு நூனயம் போலும் பயிற்றொறும் -✻
பண்புடை யாளர் தொடர்பு. - - - - ௩.

இ-ள். பண்புடையாளர் - நற்குணமுடையமக்கள்—தொ டர்பு-(தங்களிலேசெய்த) நட்பு—பயிற்றொறும் - பழகுந்தோ றும்— (அவருக்கு இன்பஞ்செய்தல் | ) — நூல் - நூற்பொரு ள்—நவிற்றொறும் - கற்குந்தோறும்—நயம்போலும் - (கற்ப வர்க்கு) இன்பஞ்செய்தல்போலும், எ-று. ✻ இரண்டிலும் ஒருபோதுக்கு ஒருபோது மிகுமென்பதாம். [இவை இரண்டு பாட்டாலும் அச்சிறப்புக்கு ஏது சொல்லப்பட்டது. (௩)

நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண் ✻
மேற்சென் றிடித்தற் பொருட்டு. - - - ௪.

இ-ள். நட்டல் - (ஒருவரோடு ஒருவர்) நட்புச்செய்தல் | — (நகைசெய்தற்கு ஏற்றவைசொல்லி) — நகுதற்பொருட்டு-ந கைசெய்தற்பொருட்டு—அன்று.—மிகுதிக்கண் - (அவர்க்கு) வேண்டாதசெய்கை (உண்டானவிடத்து) —மேற்சென்று-மு ற்பட்டு—இடித்தற்பொருட்டு - கண்டித்துப் புத்திசொல்லு தற்பொருட்டு. எ-று. ✻ பழியும்பாவமும் தருஞ்செய்கை-து ன்பமேதருதல் பற்றி வேண்டப்படுவ தல்லாமையால் - அத

லை பிசுகியென்றும், அது செய்தற்குமுன்னே திருப்பவேண் டுதலால் - மேற்சென்றென்றும், இனிய சொல்லுக்குத் திரும் பாமையால் - இடித்தற்பொருட்டென்றும், சொல்லினார். [இ தனால் நட்பின்பயன் சொல்லப்பட்டது.] (ச)

புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதா * 
னட்பாங் கிழமை தரும். ரு.

இ - ள். (ஒருவனோடு ஒருவன் நட்பாகுதற்கு) — புணர்ச் சி-ஒரிடத்திருத்தலும் — பழகுதல் - பலதரங்கண்டுபேசலும் —வேண்டா - வேண்டுவதில்லை — உணர்ச்சிதான் - (இருவர்க் கும்) ஒத்த அறிவுதானே | —நட்பாம் —கிழமை-உரிமையை} —தரும். எ-று. ※ இவை இல்லையாயினும் ஒருவனை யொரு வர் சமமாக வறிதலே உடனுயிர் நீங்குதற்குரிய நட்பை உண் டாக்குமென்பதாம். [நட்பிற்கு-புணர்ச்சி - பழகுதல் - உண ர்ச்சியொத்தல் - என்கிற காரணமூன்றுள்ளும்-பின்னது சிற ப்புடையதென்பது இதனாற்சொல்லப்பட்டது.] (ரு)

முகநக நட்பது நட்பன்று நெஞ்சத் * 
தகநக நட்பது நட்பு. சா.

இ-ள். முகநக - (கண்டவிடத்து) முகமாத்திரமே மலரும் வகை—நட்பது-சினேகிப்பது | — நட்பன்று - சினேகமன் று . — நெஞ்சத்தகநக - (அன்பால்) உள்ளமும்மலர — நட் பது-சினேகிப்பதே| — நட்பு - சினேகமாம். எ-று. ※ நெ ஞ்சத்தகமுமென்னு மெச்சவும்மைதொக்குநின்றது. அதனால் இரண்டும் ஒருசேர மலரவேண்டுமென்பது பெற்றாம். (சா)

அழிவினவை நீக்கி யாறுய்த் தழிவின்க * 
ணல்ல லுழப்பதா நட்பு. எ.

இ-ள். நட்பு - (ஒருவனுக்கு) நட்பாவது| — அழிவின் - அ ழிவைத்தருகிற —அவை - தீயவழிகளிலே — நீக்கி—ஆறு - ந ல்வழிகளிலே—உய்த்து - நடத்தி— அழிவின்கண் - (ஊழினா லே) கேடுவந்தவிடத்து — அல்லல் - அத்துன்பத்தை — உழ ப்பதாம் - உடனிருந்து அனுபவிப்பதே. எ-று. ※ ஆறெண வருகின்றமையால் அழிவினவை தீயவழியெனப்பட்டது.] எ

உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே * 
யிடுக்கண் களைவதா நட்பு. அ.

இ-ள். நட்பு-நட்பாவது—உடுக்கையிழந்தவன் - (சபையி

விடத்து) ஆடை-குலைந்தவனுக்கு— கைபோல — (சிநேகிக்க
ப்பட்டவனுக்கு) —ஆங்கே - அப்பொழுதே—இடுக்கண் - து
ன்பத்தை—களைவதாம். எ - று. ❁ ஆடை குலைந்தவனுக்குக்
கை எப்படியோ அப்படியே ஆபத்தை அடைந்தவனுக்கு ந
ட்பாளன் மனத்தினும் முற்பட்டு உதவிசெய்து துன்பம் ஒழி
ப்பானென்பதாம். நட்பினன்செயல் நட்பில் ஏற்றப்பட்டது.

நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி ❋
ஒல்லும்வா யூன்று நிலை. - - - - ௯.

இ-ள். நட்பிற்கு— வீற்றிருக்கை - அரசிருக்கை — யாதெ
னின் —(அது)—கொட்பின்றி - (எந்நாளும்) வேறுபாடாமல்
—ஒல்லும்வாய் - கூடுமிடத்தெல்லாம் — ஊன்று நிலை - (அறம்
பொருள்களிலே தளராமல்) தாங்குந்திண்மை. எ - று. ❁ ஒரு
நாளும் வேறுபடாமல் கூடுமிடத்தெல்லாம் மறுமை யிம்மை
களுக்கு உறுதியாகிய அறம்பொருள்களிலே தளர்ந்தவிடத்
து அத்தளர்ச்சிநீக்கி நிறுத்துதற்குமேல் ஒருசெயலும் இ
ல்லாமையால் அதனை நட்பிற்கு முடிந்த எல்லை என்றார். (௯)

இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று - - ❋
புனையினும் புல்லென்னு நட்பு. - - - ௰.

இ-ள். இவர்—எமக்கு— இனையர் - இவ்வளவன்பினர்.—
யாம்—இன்னம்-(இவர்க்கு) இவ்வளவன்பினேம்.—என்று—
புனையினும்-(ஒருவரை) ஒருவர் சிறப்பிக்கினும் — நட்பு—
புல்லென்னும் - சிறிதாய்த்தோன்றும். எ று. ❁ தாம் அவர்
என்கிற பேதமில்லாதிருந்தும் சிறப்பித்துச் சொல்லிலபே
தம் உண்டாகலால் - புல்லென்னுமென்றார். [இவை ஐந்துபா
ட்டாலும் நட்பினது இலக்கணம் சொல்லப்பட்டது.] (௰)

***************************

## ௮௰-ஆம், அதி—நட்பாராய்தல்.

அஃதாவது - முன் சொல்லப்பட்ட இலக்கணமுடையவ
ரை ஆராய்ந்தறிந்தே சிநேகிக்க வேண்டுதலால் அவரை
ஆராயுந்திறம். அதிகார முறையும் இதனாலே விளங்கும்.

நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின் - ❋
வீடில்லை நட்பாள் பவர்க்கு. - - - ௧.

இ-ள். நட்பாள்பவர்க்கு-நட்பைவிரும்பி அதனிடத்தே நி

ற்பவர்க்கு—நட்டபின் - (ஒருவனோடு) நட்புச்செய்தபின்—வீடு-(அவனை) விடுதல்|—இல்லை - உண்டாகாது.— (ஆதலால்)—நாடாது - ஆராயாமல்—நட்டலின் - சிநேகித்தல்போல்—கேடு-கேடு தருவது|—(வேறே) இல்லை. எ - று. ❋ ஆராய்தல்- குணநன்மை செய்கைநன்மைகளை ஆராய்தல். — கேடுதருவதைக் கேடெனலால் ஆகுபெயர். — சிநேகித்தால்-தாம் அவனொன்றும வேற்றுமை இல்லாமையால் - வீடில்லையென்றும், அவ்வொற்றுமைபால் அவனிடத்துப் பழிபாவங்கள் தம்மவையாகலால் இருமையும் கெடுமென்பது நோக்கி-நாடாது நட்டலிற்கேடில்லையென்றும், சொல்லினர். (க)

> ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை ❋
> தான்சாந் துயரந் தரும். - - - - - உ.

இ-ள். (குணமுஞ்செய்கையும்நல்லனென்பதும் அல்லனென்பதும்)—ஆய்ந்து-(பலகால்) ஆராய்ந்தும்—ஆய்ந்து-(பலவழியால்) ஆராய்ந்தும்—கேண்மை-(ஒருவனோடு) நட்பை—கொள்ளாதான்|—கடைமுறை - முடிவில்—தான்—சாம்-சாவதற்கு ஏதுவாகிய—துயரம் - துன்பத்தை}—தரும்-(தானே) விளைத்துக்கொள்ளுவான். எ - று. ❋ தீயகுணமுந் தீயசெயலுமுடையவனோடு நட்புக்கொள்ளின் அவனுக்கு வரும் பகைமையெல்லாம் தனக்கும் வந்தபின் அவைகளால் இறந்து விடுமென்பதாம். [இவை இரண்டுபாட்டாலும் ஆராயாதவிடத்துப்படும் இழுக்குச் சொல்லப்பட்டது.] (உ)

> குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா - - ❋
> இனனு மறிந்தியாக்க நட்பு. - - - - ௩.

இ-ள். குணனும்-(ஒருவனது) குணத்தையும்—குடிமையும்-குடிப்பிறப்பையும்—குற்றமும் - குற்றத்தையும் — குன்றாவினனும்-குறைவற்ற சுற்றத்தையும் — அறிந்து - (ஆராய்ந்து) தமிழ்ந்து—நட்பு—யாக்க-(அவனோடு) செயக்கடவன். எ-று. ❋ குற்றமில்லாதவர் உலகத்திலே இல்லாமையால் பொறுக்கத்தக்க குற்றமுடையராயிருந்தால் அவர் நட்புவிடக்கூடாதென்பதற்கு - குற்றமுமென்றும், சுற்றத்தாரோடு கட்டுண்டிருப்பவர் நட்பாளரோடும் கட்டுண்டுவருதலால் - குன்றாவினனுமென்றும், விடப்பட்டால் - தங்குறையாமென்பதற்கு-அறிந்தியாக்கவென்றும், சொல்லினர். (௩)

குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக் - - ✻
கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு. - - ச.

இ-ள். குடிப்பிறந்து - உயர்ந்தகுடியிற்பிறந்து — தன்கண் — பழி - (உலகர்)சொல்லும்பழிக்கு — நாணுவானை - அஞ்சுவானை — கொடுத்தும் - (சில) கொடுத்தாயினும் — நட்புக் கொளல்வேண்டும். எ-று. ❁ குடிப்பிறப்பால்தான் பிழைசெய்யாமையும், பழிக்கு அஞ்சலால் பிழைபொறுத்தலும், பெற்றும். இவை இரண்டுமுடையவனைப் பெறுதல் அருமையாதலால் அவனட்பை விலைகொடுத்தும் கொள்கவென்பதாம். (ச)

அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய - - ✻
வல்லார்நட் பாய்ந்து கொளல். - - - ரு.

இ-ள். அல்லது - (தாம்) உலகநடையல்லாததை (செய்யநினைக்கின்) — அழச்சொல்லி - அழும்வகைசொல்லி (விலக்கியும்) — (செய்தக்கால்) — இடித்தும் - (பின்னும் செய்யாவகை) நெருக்கியும் — வழக்கு - அவ்வுலகநடையைச் (செய்யாவிடத்து) — அறியவல்லார் - செய்விக்கவும் வல்லவரை — ஆய்ந்து — நட்பு — கொளல் - கொள்ளக்கடவர். எ-று. ❁ அழச்சொல்லி இடித்து எனவந்த பரிகாரத்தொழில்களுக்கு ஏற்ற குற்றத்தொழில்கள் வருவிக்கப்பட்டன. வழக்கு - உலகத்தார் ஆதி தொடங்கிச் செய்துவந்தசெயல் - தம்மோடு சினேகித்தவரும் அறியும்வகை அறிதல் அரிதாகலால் - அறியவல்லாரென்றார்.

கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை - - ✻
நீட்டி யளப்பதோர் கோல். - - - சு.

இ-ள். (ஒருவனுக்குக் கேடென்பது) — கிளைஞரை - சுற்றத்தாரது நட்பாகிய (நிலங்களை) — நீட்டியளப்பது - குறையாமல் அளப்பதாகிய — ஓர்கோல் - ஒருகோலாம். — (ஆகலால்) — கேட்டினும் - அக்கேட்டினிடத்தும் — ஒருறுதி - (அவராலேபெறப்படும்) ஒருநல்லறிவு — உண்டு. எ-று. ❁ தமது சினேகத்தி னெல்லை சுருங்கியிருக்கவும் செல்வக் காலத்திலே புறத்து வெளிப்படாமல் வந்தவர் பின்கேடுவந்த விடத்துச் செயல் வேறுபடுதலால் அக்கேட்டால் சினேகத்தை அளவு செய்யலாமென்பதுபற்றி - கேட்டினைக் கோலாக்கியும், அதனால் அளந்தறிந்தால் ஆவாரையே கொள்ளுதலால் அவ்வறி

லை உறுதியென்றும், சொல்லினார். (இஃ
ம்.) [இவை நான்குபாட்டாலும் ஆராயும் வகையும், ஆராயுந்
தால் சிநேகிக்கப்படுவார் இவரென்பதும், சொல்லப்பட்டன.]

ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார் - *
கேண்மை யொரீஇ விடல். - - - - ௭.

இ-ள். ஒருவற்கு - ஒருவனுக்கு—ஊதியமென்பது—பே
றென்றுசொல்லப்படுவது|—பேதையார் - அறிவில்லாதவரது
—கேண்மை- நட்பை—ஒரீஇ -ஒழிந்து — விடல் - (அவனை)
விடுதல். எ-று. ❁ நட்பொழிந்தாலும் விட்டு நீங்காதவிடத்
துத் தீங்குவருதலால் - விடலென்றும், நீங்கியவிடத்துத் தீங்
கொழிதலே யல்லாமல் இருமை யின்பங்களுக்கும் உரிமை
பெறுதலால்-அதனை ஊதியமென்றும், சொல்லினார். (௭)

உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க - - *
வல்லற்க ணாற்றறுப்பார் நட்பு. - - - ௮.

இ-ள். உள்ளம்-(தம்) மனவெழுச்சி — சிறுகுவ - சுருங்கு
தற்குக்காரணமாகிய தொழில்களை}— உள்ளற்க - (செய்ய) நி
னையாதிருக்கக்கடவர்.—(அதுபோல்) — அல்லற்கண் - (தமக்
கொரு) துன்பம் வந்தவிடத்து — ஆற்றறுப்பார் - கைவிடு
வோரது—நட்பு-சிநேகத்தை} — கொள்ளற்க - கொள்ளாதி
ருக்கக்கடவர். எ-று. ❁ அத்தொழில்களாவன - தம்மின்வலிய
வரோடு தொடங்கியவையும், பயனில்லாதவையும், ஆம்.—மு
ன்னெல்லாம் வலியாவார்போலே நடத்தலால் - ஆற்றறுப்பா
ரென்றார். ஆற்றறுத்தல் - வலியறுத்தல். (எடுத்துக்காட்டுவ
மை.) கொண்டால் அழிந்தேவிடுவனென்பதாம். (௮)

கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை யடுங்காலை *
யுள்ளினு முள்ளஞ் சுடும். - - - - ௯.

இ-ள். கெடுங்காலை - (ஒருவன்) கெடுங்காலத்து—கைவிடு
வார்-(அவனைவிட்டு) நீங்குவார்—கேண்மை - (முன் அவனோ
டுசெய்த) நட்பானது | — அடுங்காலை - (கூற்றுவன்) கொல்
லுங்காலத்து—உள்ளினும் - (ஒருவன்) நினைக்கினும் — உள்
ளம் -(அந்நினைத்த) உள்ளத்தை}—சுடும். எ - று. ❁ நினைத்
தவளவிலே சம்பந்த மில்லாத பிறனுக்கும் கூற்றுவனிலும்
கொடியதாமென்று - கைவிட எண்ணிச் செய்த நட்பின்கொ

மைசொல்லியபடி.[இவை மூன்றுபாட்டாலும் ஆராய்ந்தா ல் சிநேகிக்கப்படாதவர் இவரென்பது சொல்லப்பட்டது.]

மருவுக மாசற்றார் கேண்மையொன் றீத்து. - *
மொருவுக வொப்பிலார் நட்பு. - - ௰.

இ-ள். மாசற்றார் - (உலகோடொத்துக்) குற்றமற்றவரது— கேண்மை - நட்பையே — மருவுக - பழகக்கடவன். — ஒப்பி லார்-(உலகத்தோடு)ஒத்தலில்லாதவரது—நட்பு - நட்பை — (ஆராயாதுகொண்டால்)— ஒன்று - (அவருக்குவேண்டிய) ஒ ன்றை—ஈத்தும் - கொடுத்தாயினும் —ஒருவுக - விடக்கடவன். எ-று. ✻ உலகோடொத்தவர் நட்பு இருமையின்பமும் தரு தலால் மருவுகவென்றும், அதனோடு மாறாயினவர்நட்புத் து ன்பமே தருதலால் அதை விலைகொடுத்தாயினும் விடுகவென் றும்,சொல்லினார்.[இதனால் சிநேகிக்கப்படுவாரும் படாரும் ஆகிய அவ்விருமையும் தொகுத்துச் சொல்லப்பட்டது.](௰)

*************-*✻*-************

## அ௧-ஆம், அதி—பழமை.

அஃதாவது - நட்பினரது பழையராந் தன்மைபற்றி அ வர்செய்த பிழைகளைப் பொறுத்தல். ஆராய்ந்து சிநே கிக்கப் பட்டாராயினும் பொறுக்கப்படும் குற்றமுடை யராகலாலும் ஊழ்வகையாலும் நட்புக்கொள்ளப்பட்ட வரிடத்துப் பிழையுளதாமென்பது அறிவித்தற்கு இது நட்பாராய்தலின் பின்வைக்கப்பட்டது.

பழமை யெனப்படுவ தியாதெ னின் யாதுங் - *
கிழமை யைக் கீழ்ந் திடா நட்பு. - - - - க.

இ-ள். பழமையெனப்படுவது— யாதெனின்—(அது)— கிழமையை - (பழமையோர்) உரிமையாலே செய்தவைகளை —யாதும் - சிறிதாயினும்—கீழ்ந்திடா - சிதைக்காமல் (அவை களுக்கு உடன்படுவதாகிய)—நட்பு. எ - று. ✻ கிழமை-ஆகு பெயர். பின்கெழுதகைமை யெனவருவதுமது — உரிமையா ற்செய்தவையாவன-கருமஞ் செய்யும்போது கேளாது செய் தல் - கெடும்வகைசெய்தல். தமக்கு வேண்டுமவைகளைத் தா மே கொள்ளுதல். பணிவச்சங்களில்லாமை. இவை முதலான வை. [இதனாலே பழமையாவது காலஞ்சென்றதன்று இப்ப டிப்பட்ட நட்பென்பது சொல்லப்பட்டது.]　　(க)

நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற் ❊
குப்பாதல் சான்றோர் கடன். - - - - ௨.

இ-ள். நட்பிற்கு—உறுப்பு- அவயவமாவன|—கெழுதகைமை-(நட்பினர்) உரிமையாற்செய்பவையாம்.—(ஆதலால்)—அதற்கு—உப்பாதல் - இனிமையராதல்— சான்றோர் - நிறைந்தோர்க்கு—கடன் - முறைமை. எ-று. ❊ மற்று - அசை. வேறல்லாமைதோன்ற உறுப்பென்றார். அவயவமாகுதலறிந்தே இனியராவரென்பது தோன்ற - சான்றோர் மேல்வைத்தார்.

பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை - ❊
செய்தாங் கமையாக் கடை. - - - - - ௩.

இ-ள். கெழுதகைமை - (நட்பினர்) உரிமையினாலே செய்தவைகளுக்கு — செய்தாங்கு - (தாம்) செய்ததைப்போல் — அமையாக்கடை - உடன்படாராயின்—பழகிய - (அவரோடு) பழையதாய்வந்த—நட்பு | — எவன் - என்னபயனை}—செய்யும். எ-று. ❊ அப்படி உடன் படுதலாவது - தாமும் அவரிடத்து உரிமையால் உடன்படுதல். [இவை இரண்டுபாட்டாலும் பழைமையால்வரும் உரிமையது சிறப்புச் சொல்லப்பட்டது.]

விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையாற்❊
கேளாது நட்டார் செயின். - - - - ௪.

இ-ள். நட்டார் - நட்பினர்—கெழுதகையால் - உரிமையால்—கேளாது—செயின் - (தங்கருமத்தைச்) செய்தாராயின்—விழைதகையான்-(அச்செயலது) விரும்பப்படுந் தன்மைபற்றி—(அறிவுடையோர்|)—வேண்டியிருப்பர் - (அதனை}) விரும்புவர். எ-று. ❊ ஒருவர்க்குத் தங்கருமம் தாம் அறியாமல் முடிந்திருக்கையைக் காட்டிலும் நன்மை இல்லாமையால் அச்செயல் விரும்பத் தக்கதாயிற்று. அதனை அப்படியறிந்து விரும்புதல் அறிவுடையார்க்கல்லது இல்லாமையால் அவர் மேல்வைத்துச் சொல்லப்பட்டது. [இதனால் கேளாது செய்தவிடத்து அதனை விரும்புகவென்பது சொல்லப்பட்டது.] (௪)

பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க
நோதக்க நட்டார் செயின். - - - - ௫.

இ-ள். நோதக்க-(தாம்) வெறுக்கத்தக்கவைகளை—நட்டா

௬-சினேகித்தவர்—செயின் - (அதற்குக்காரணம்|)— பேதை மையொன்றோ—அறியாமையொன்றோ. — பெருங்கிழமை யிருந்த உரிமையுடமாம்.—என்று — உணர்க - அறியக்கடவர். எ-று. ❋ செயினெனவே தம்மியல்பிலே செய்யாமை பெற் றாம். இது வருகின்றவைக்குள்ளும் ஒக்கும். இழவூழால்வரும் பேதைமை-யார்க்கும் உண்டாகலால் தமக்கு ஏதங்கொண்டா ரென்றுவது, ஊட்வகையால் எம்மால் வரக்கடவது ஒற்றுமை யிருதிபற்றி அவரால் வந்ததென்றுவது, கொள்வதல்லது அன் பிலாமையென்று கொளப்படாதென்பதாம். [கெடும் வகை செய்யின் அதற்குக்காரணம் இதனால் சொல்லப்பட்டது.]

எல்லைக்க ணின்றார் துறவார் தொலைவிடத்துந் - ❋
தொல்லைக்க ணின்றார் தொடர்பு. - - - ௬.

இ-ள். எல்லைக்கணின்றார் - (நட்பின்) வரம்பிலேநின்றவர்| —தொல்லைக்கணின்றார் - (தம்மோடு) பழமையில்வேறுபடா துநின்றவரது—தொடர்பு - நட்பை} — தொலைவிடத்தும்- (அவராலே) தொலைவுவந்தவிடத்தும்—துறவார் - விடார். எ- று. ❋ பழமையில் வேறுபடாமையாவது - உரிமையொழி யாமையாம்.—தொலைவு - பொருட்கேடு - போர்க்கேடு. (௬)

அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின் - - ❋
வழிவந்த கேண்மை யவர். - - - - - எ.

இ-ள். அன்பின் - அன்புடனே—வழிவந்த-பழையதாய்வந் த—கேண்மையவர் - நட்பினையுடையவர் | — (நட்பினர்)— அழிவந்த - அழிவுவந்தவைகளை — செய்யினும்—அன்பறார்- (அவரிடத்தே) அன்பு நீங்கார். எ-று. ❋ அழிவு - முன்சொல் லியகேடுகள். [இவை இரண்டுபாட்டாலும் கேடுசெய்தவிடத் தும் விடுந்தன்மையதன்றென்பது சொல்லப்பட்டது] (எ)

கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு❋
நாளிழுக்க நட்டார் செயின். - - - - அ.

இ-ள். கேள் - நட்பினரது—இழுக்கம்-பிழையை—கேளா- (பிறர்சொல்லினும்) கேளாத — கெழுதகைமை வல்லார்க்கு- உரிமையறியவல்லவர்க்கு—நட்டார் - அந்நட்பினர் |—இழுக் கம் - பிழையை—செயின்—(அது|) — நாள் - (பயன்பட்ட) நாளாம். எ-று. ❋ பிழையாவன - முன்சொல்லிய - பணியா மை- அஞ்சாமை - நற்பொருள்வெளவல்- முதலானவை.—கே

ட்டல் - உட்கொள்ளுதல். செய்த விடத்தல்லாமல் அவ்வல்லமை வெளிப்படாமையால் செய்யாதவை நாளல்ல வாயின. [இதனால் பிழைபொறுத்தற் சிறப்புச் சொல்லப்பட்டது.]

கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை - *
விடாஅர் விழையு முலகு. - - - - ௯.

இ-ள். கெடா-(உரிமை) கெடாமல்—வழிவந்த - பழையதாய்வந்த — கேண்மையார் - நட்பையுடையவரது — கேண்மை-நட்பை—விடார் - (அவர்பிழைநோக்கி) விடாதவரை]—உலகு- உலகமானது|—விழையும் - (நட்புக்குறித்து) விரும்பும். எ-று. ❊ விடாதாரை யெனவே விடுதற்குக் காரணம் சொல்லப்பட்டது. நம்மிடத்தும் இவர் இப்படிப்பட்டவராவரென்று யாவரும் தாமேவந்து நட்பாவரென்பதாம். (௯)

விழையார் விழையப் படுப பழையார்கட் - *
பண்பிற் றலைப்பிரியா தார். - - - - ௰.

இ-ள். பழையார்கண் - பழையநட்பினரிடத்து—(அவர்பிழைசெய்தாராயினும்)—பண்பிற்றலைப்பிரியாதார்-(தம்) பண்பு நீங்காதவர்|—விழையார் - பகைவராலும் — விழையப்படுப-விரும்பப்படுவர். எ-று. ❊ தம்பண்பாவது - செய்யாத முன்போல் அன்புடையவராதல். அக்குணநோக்கிப் பகைவரும் நட்பினராவரென்பதாம். [இவை இரண்டு பாட்டாலும் பழைமை யறிவார் அடையும் பயன் சொல்லப்பட்டது.] (௰)

❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊❊

௮௰௨-ஆம். அதி—தீநட்பு.

இனிப் பொறுக்கப்படாத குற்றமுடைமையால் விடத்தக்கதாகிய நட்பு நட்பாராய்த லதிகாரத்தில் சுருங்கச் சொல்லி அவ்வளவில் அடங்காமையால் அதனை இருவகைப் படுத்தி இரண்டதிகாரத்தாலே சொல்லத் தொடங்கி முன்னே தீநட்புச் சொல்லுகின்றார்.

அஃதாவது- தீக்குணத்தாரோடு உண்டாகியநட்பாம். அதிகாரமுறைமை சொல்லாமலே விளங்கும்.

பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை - *
பெருகலிற் குன்ற லினிது. - - - - - ௧.

இ-ள். பருகுவார்போலினும் - (ஆசைமிகுதியால்) உண்டு

ர்போன்றாராயினும் — பண்பிலார் - குணமிலாரது [தீக்குணமுடையவரது என்றபடி] — கேண்மை - நட்பானது | — பெருகலின் - வளர்தலினும் — குன்றல் - குறைதல் | — இனிது. எ - று. ❊ பெருகினால் வருங்கேடு குன்றினால் வாராமையின் குன்றலினிதென்றார். [இதனால்தீநட்பினதாகாமை பொதுவகையாற் சொல்லப்பட்டது. இனிச்சிறப்புவகையாற்கூறுவர்.]

உறின்நட் டறினொரூஉ மொப்பிலார் கேண்மை ❊
பெறினு மிழப்பினு மென். - - - - உ.

இ-ள். உறின் - (தமக்குப்பயன்) உள்ளவிடத்து — நட்டு - சினேகித்து — அறின் - (அது) இல்லாவிடத்து — ஒரூஉம் - ஒழியும் — ஒப்பிலார் - ஒப்பில்லாதவரது — கேண்மை - சினேகத்தை — பெறினும் — (என்) - (ஆக்கம் |) யாது. — இழப்பினும் — என் - (செல்வம்) யாது. எ-று. ❊ தமக்கு உற்றவைபார்ப்பவர் பிறரோடு பொருத்தமிலராதலால் அவரை ஒப்பிலாரென்றார். அவரிடத்து அயலார்தன்மையேபொருந்துமென்பதாம்.

உறுவது சீர்தூக்கு நட்பும் பெறுவது - - ❊
கொள்வாருங் கள்வரு நேர் - - - - ௩.

இ-ள். உறுவது சீர்தூக்குநட்பும் - (நட்பளவுபாராமல் அதனால்) வரும்பிரயோசனத்தளவுபார்க்கும் நட்பினரும் | — பெறுவது கொள்வாரும் - (கொடுப்பானைக் கொள்ளாமல்) விலையைக்கொள்ளும் வேசையரும் | — கள்வரும் - (பிறர்கேடுநோக்காது அவர்சோர்வுபார்க்கும்) கள்வரும் | — நேர் - (தம்முள்) ஒப்பர். எ-று. ❊ நட்பு-ஆகுபெயர். பொருள்களைக்குறித்து வஞ்சித்து நடத்தலால் அவ்விருவரோடும் ஒப்பரென்பதாயிற்று. [இவை இரண்டுபாட்டாலும் தமக்குப் பிரயோசனம் பார்ப்பவரது நட்பினது தீமை சொல்லப்பட்டது.] (௩)

அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா வன்னார் - ❊
தமரிற் றனிமை தலை. - - - - - ௪.

இ-ள். (முன்னெல்லாந் தாங்குவதுபோலிருந்து) — அமரகத்து - போர்வந்தவிடத்து — ஆற்றறுக்கும் - போர்க்களத்திலே தள்ளிவிட்டுப்போகின்ற — கல்லா - கல்வியில்லாத — மாவன்னார் - குதிரைபோல்பவரது — தமரின் - தமராந்தன்மையினும் — தனிமை | — தலை - சிறப்புடைத்து. எ-று. ❊ கல்லாமை - கதியைந்தும், சாரியைபதினெட்டும், போர்செய்திறமும், அறி

யாமை, துன்பம் வாராதமுன்னெல்லாம் துணையாவார்போன்று வந்தவிடத்துவிட்டு நீங்குவாரென்பது உவமையாற்பெற்றும். அவர் தமராதலால் வரும் அழிவு தனியாலுல்வாராமையால் - தனிமை தலையென்றார். எனவே அதுவும் தீதாதலறிக. (௪)

செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை *
யெய்தலி னெய்தாமை நன்று. - - - ரு.

இ-ள். செய்து - செய்துவைத்தாலும்—ஏமஞ்சாரா - காப்பாகாத—சிறியவர் - கீழ்மக்களது—புன்கேண்மை— தீநட்பு|— எய்தலின் - (ஒருவனுக்கு) உண்டாதலின் —எய்தாமை - இல்லாதிருத்தல்|—நன்று. எ-று. * சிறப்பும்மை வருவிக்கப்பட்டது. காவலாகாமை - தொலைவினிடத்து விட்டு நீங்கல். எய்தலி னெய்தாமை நன்றென்பதற்கு - முன் உரைத்தபடி உரைக்க. [இவை இரண்டுபாட்டாலும் தொலைவிலே துணையாகாதவர் நட்பினது தீமைசொல்லப்பட்டது.] (ரு)

பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையா -*
ரேதின்மை கோடி யுறும். - - - - சா.

இ-ள். பேதை - அறிவில்லாதவனது — பெருங்கெழீஇ நட்பின்-மிகநெருங்கிய நட்பைப்பார்க்கிலும் — அறிவுடையார்-அறிவுடையவரது—ஏதின்மை - பகைமை|—கோடியுறும்-கோடிப்பங்குநல்லது. எ - று. அறிவுடையவனது பகைமை-ஒருதீங்கும் செய்யாமையாலும்- பேதையினது நட்பு-பலதீங்கும்செய்தலாலும், கோடியுறுமென்றார். (சா)

நகைவகைய ராகிய நட்பிற் பகைவராற் - - *
பத்தடுத்த கோடி யுறும். - - - - எ.

இ-ள். நகைவகையராகிய - (தாம் அறிதல்வகையராதற்கல்லாமல்) நகுதல்வகையராதற்குவதுவாகிய—நட்பின் - நட்பால் (வருமவைகளின்)—பகைவரால் - பகைவரால் (வருபவை|)—பத்தடுத்தகோடி-பத்துக்கோடிமடங்கு — உறும் - நல்லவையாம். எ-று. * அந்நட்பாவது - விடரும், தூர்த்தரும், கழைக்கூத்தரும், போன்றுபலவகையால் நகுவித்துத் தாம்பயன் கொண்டொழிவாரோடு உண்டாகியது. பத்தடுத்தகோடி பத்தாகத் தொகுத்தகோடி. அந்நட்பில் வருமின்பங்களில் அப்பகைவரால் வருந்துன்பங்கள் மிகநல்லவென்பதாம். (எ)

ஒல்லுங் கரும முடற்று பவர் கேண்மை - *
சொல்லாடார் சோர விடல். - - அ.

இ-ள். ஒல்லுங்கருமம் - (தம்மாலே)முடியுந்தொழிலை — உடற்றுபவர் - முடியாதாகச் செய்பவரோடுகொண்ட — கேண்மை - நட்பை} — (அதுகண்டால்)—சொல்லாடார் - (அதை அவரறியச்)சொல்லாமல்— சோர விடல் - தளரவிடக்கடவர். எ-று. ※ சோரவிடல் - விடுகின்றவிதந்தோன்றாமல் ஒருகாலைக்கொருகால் ஒயவிடுதல். — அறியச்சொல்லினும், விடுகின்றவிதந் தெரிந்தாலும், அப்போது பரிகரித்துப்பின்னும் நட்பாயிருக்க நினைப்பாராகலால் சொல்லாடாரென் றும், சோரவிடலென்றும், சொல்லினார். [இவை மூன்றுபாட்டாலும் முறையே பேதையர் - நகுவிப்பவர் - இயல்வது செய்யாதவர்-இவர் நட்புத் தீமைகள் சொல்லப்பட்டன.] (அ)

கனவினு மின்னாது மன்னோ வினைவேறு - - *
சொல்வேறு பட்டார் தொடர்பு. - - - - கூ

இ-ள். வினைவேறு - தொழில்வேறு—சொல்வேறு — பட்டார்-பட்டவரது—தொடர்பு - நட்பு| — கனவினும் - (நனவிலேமாத்திரமல்லாமல்) கனவிலும் — இன்னாது - துன்பஞ் செய்வதாகும். எ-று. ※ தொழிலுஞ் சொல்லும் ஒவ்வாமல் வேறுவேறாயிருத்தல் - தொழிலிலே பகைவராயும், சொல்லிலே நட்பினராயும், இருக்கை. நிகழ்ச்சியிலே உண்டாயிருத்தலாலே-கனவினுமின்னாதென்றார். மன்-ஒ-அசைநிலை. (கூ)

எனைத்துங் குறுகுத லோம்பன் மனைக்கெழீஇ - *
மன்றிற் பழிப்பார் தொடர்பு. - - - - ώ.

இ - ள். மனை - வீட்டிலே (தனித்திருந்தபோது) — கெழீஇ - நட்பாடி—மன்றில் - சபையிலே (பலருடனிருந்தபோது) — பழிப்பார் - பழிசொல்வோரது — தொடர்பு - நட்பு—எனைத்தும்-எவ்வளவுசிறிதாயினும் — குறுகுதல் - (தம்மைச்)சேர்தலை—ஓம்பல் - பரிகரிக்கக்கடவர். எ-று. ※ அவ்விருசெயலும் தீதாகலின் அவர் ஒருபோதும் தம்மைச் சேராதவிதம் குறிக்கொண்டு காக்கவேண்டுமென்பதற்கு அவர் நட்பின்மேல் வைத்துச் சொல்லினார். [இவை இரண்டுபாட்டாலும் வஞ்சர் நட்பின் தீமை சொல்லப்பட்டது.] (ώ)

இனிமற்றைக் கூடாநட்புச் சொல்லுகின்றார்.

அஃதாவது-பகைமையால் உள்ளே கூடாதிருந்தே சமயம் கிடைக்குமளவும் புறத்திலே கூடிநடப்பவர்நட்பு.

சீரிடங் காணி னெறிதற் குப் பட்டடை - - - *
நேரா நிரந்தவர் நட்பு. - - - - - - க.

இ-ள். நேரா - கூடாதிருந்தே — நிரந்தவர் - (வாய்க்குமிடம் காணுமளவும) புறத்திற்கூடிநடப்பவரது—நட்பு- கினேகம்|—சீரிடம் - வாய்க்குமிடத்தை— காணின் — எறிதற்கு - (அற) வெறிதற்குத் (துணையாகிய) —பட்டடை. எ-று. ❋ எறியுங்காலம் வாராமுன்னெல்லாந் தாங்குவதுபோ லிருந்து வந்தவிடத்து அறவெறிவிப்பதாகிய பட்டடைக்கும் அப்படிப்பட்டதாகிய நட்பிற்கும் தொழிலொப்புமை யிருத்தலால் அதுபற்றி அந்நட்பைப் பட்டடையாக உபசரித்தார்.] (க)

இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர் - *
மனம் போல வேறுபடும் - - உ.

இ-ள். இனம்போன்று - (தமக்கு) உற்றவர் போன்று— இனமல்லார்-உறாதவரோடு உண்டாகிய — கேண்மை-நட்பானது|—(இடம்பெற்றால்)—மகளிர்-பெண்பாலார் — மனம் போல — வேறுபடும். எ-று. ❋ நட்பு-வேறுபடுதலாவது-(இடம்பெறறால்) பழையபகை யேயாகுதல். [இவைஇரண்டுபாட்டாலும கூடாநட்பினது குற்றம சொல்லப்பட்டது.] (உ)

பலநல்ல கற்றக் கடைத்து மனநல்ல - - - *
ராகுதன் மாணார்க் கரிது. - - - - - ௩.

இ-ள். நல்ல - நல்லவையாகிய— பல - பலநூல்களை —கற்றக்கடைத்தும் - கற்றவிடத்தும — (அகனுள்)—மனநல்லராகுதல் - மனந்திருந்திநட்பினராகுதல் | — மாணார்க்கு-பகைவர்க்கு—அரிது இல்லை. எ-று. ❋ நல்லநூல் - மனக்குற்றங் கெடுப்பன. நல்லராகுதல் - சலம்விடுதல். உட்சலமுடையானைக் கல்வி யுடைமைபற்றி நட்பென்று கொளலாகாதென்பதாம்.

முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா - - - *
வஞ்சரை யஞ்சப் படும. - - - - - ௪.

இ-ள். (கண்டபோது)—முகத்தின் - முகத்தால்—இனிய - இனிமையுள்ளனவாக—நகாஅ - சிரித்து—அகத்து - மனத்

னால்—இன்னா - (எப்பொழுதும்) இனியராகாத—வஞ்சரை —அஞ்சப்படும் - அஞ்சல்வேண்டும். எ-று. ❋ நகையுதவலைபற்றி-இனியவென்றும், மனத்திலே சலம் தோன்றாநிற்கவும் அதற்கு விரோதமாகிய நகையைப் புறத்திலேகாட்டலால் வஞ்சரென்றும், அச்சலம் குறிப்பதற்குச் சாதனமாகிய முகத்தாலும் தோன்றாமையால்-அஞ்சப்படுமென்றும், சொல்லினார். [இவை இரண்டுபாட்டாலும் குற்றத்திற்கு ஏதுவாகிய அவர்கொடுமை சொல்லப்பட்டது.] (௪)

மனத்தி னமையா தவரை யெனைத்தொன்றுஞ் ❋
சொல்லினாற் றேறற்பாற் றன்று. - - - ௫.

இ-ள். மனத்தின் - மனத்தால் — அமையாதவரை -(தம்மோடு) பொருந்தாதவரை — எனைத்தொன்றும் - யாதொருகருமத்திலும்— சொல்லினால் — தேறற்பாற்று —தெளிதன்முறைமையது—அன்று-(என்று நீதிநூல்) சொல்லும். எ-று. ❋ பகைமை மறைத்தற்பொருட்டுச் சொல்லுகின்ற வஞ்சனைச் சொல்லை நல்லசொல்லென நினைத்து அவராக்கருமங்களிலே தெளிதல் நீதிநூலின் முறைமை அன்றென்பதாம். (௫)

நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்சொ ❋
லொல்லையுணரப்படும். - - - - - ௬.

இ-ள். நட்டார்போல் - நட்பினர்போல் — நல்லவை - நன்மையைத்தருஞ் சொற்களை — சொல்லினும் — ஒட்டார்சொல் - பகைவர்சொற்கள் — (அதுதாராமை) —ஒல்லை - விரைவிலே [சொல்லியபொழுதே யென்றபடி] — உணரப்படும்-அறியப்படும். எ-று. ❋ சொல்லியெனவே அவர் அவைசொல்லாமையேபெற்றாம். பகைவராதலால் - தீமைதருதற்கு ஐயமில்லையென்பதற்கு ஒல்லையுணரப்படு மென்றார். (௬)

சொல்வணக்கமொன்னார்கட்கொள்ளற்கவில்வணக்கந் ❋
தீங்கு குறித்தமை யான். - - - - ௭.

இ-ள். வில்வணக்கம்-வில்லினதுவணக்கம்—தீங்கு- (ஏற்றவர்க்குத்) தீமைசெய்தலை —குறித்தமையான் — ஒன்னார்கண் - பகைவரிடத்தே (பிறக்கும்) — சொல்வணக்கம் - சொல்லினது வணக்கத்தையும்—கொள்ளற்க - (தமக்கு நன்மைசெய்தலைக்குறித்ததென்று) நினையாதிருக்கக்கடவர். எ-று. ❋ தம்வண

க்கம் அன்றென்பதுதோன்ற - சொல்வணக்கமென்றும், வில்வணக்கம் வேறாயினும் - வணங்குத லொப்புமைபற்றி அதன் குறிப்பையே ஏதுவாக்கியும், சொல்லினார்.—வில்லினன் குறிப்பு அவனிறாகிய வில்வணக்கத்தின்மேல் நிற்றலால் பகைவரது குறிப்பும் அவரிறாகிய சொல்வணக்கத்தின்மேலதாயிற்று. இதுவும் தீங்கு குறித்தவணக்கமென்றேகொண்டு அஞ்சிக்காக்க வேண்டுமென்பதாம. [இவை மூன்றுபாட்டாலும் அவரைச்சொல்லாலே தெளியலாகாதென்பது சொல்லப்பட்டது.]

தொழுதகை யுள்ளும் படையொடுங்குமொன்னா - *
ரழுதகண் ணீரு மனைத்து. - - - - அ.

இ - ள். (பகைவர்குறிப்பை அறியவல்லவர்க்கு) — ஒன்னார்-பகைவர்—தொழுதகையுள்ளும் - கும்பிட்டகையுள்ளும்—படை - ஆயுதமானது|—ஒடுங்கும் மறைந்திருக்கும்.—அழுதகண்ணீரும் - (அவர்) அழுதகண்ணீரும்|—அனைத்து - அப்படியே அதுமறைந்திருத்தற்குஇடமாம். எ - று. ❊ தாம் நட்பென்பதனைத் தங்கையாலும், கண்ணாலும், நம்புவித்துப் பின் கொல்லுதற்கு எடுக்கவிருக்கின்ற ஆயுதம் ஆலோசித்தறியும்போது நம்புவிக்கின்றபொழுதே அவைகளுள்ளே தோன்றுமென்பதற்கு - ஒடுங்குமென்றார்.—பகைவர் தமது தளர்ச்சிகாட்டித் தொழுதாலும் அழுதாலும் அவர் குறிப்பையே நோக்கிக் காத்துக்கொள்கவென்பதாம். [இதனால் அவரைச் செயலால் தெளியலாகாதென்பது சொல்லப்பட்டது.] (அ)

மிகச்செய்து தம்மெள்ளு வாரை நகச்செய்து - *
நட்பினுட் சாப்புல்லற் பாற்று. - - - *

இ - ள். (அரசநீதியானது|)—மிகச்செய்து - (புறத்திலே நட்பை)மிகச்செய்து—தம்மெள்ளுவாரை - (உள்ளே) தம்மை இகழும்பகைவரை—நட்பினுள் - (தாமும்) அந்நட்பினிடத்தே நின்று—நகச்செய்து - (புறத்திலே அவர்) மகிழும்படிசெய்து — சாப்புல்லற்பாற்று - (உள்ளே அது) சாம்படிக்குப் பொருந்துந் தன்மையுடைத்து. எ - று. ❊ நின்றென்பதும், அரசநீதியென்பதும், வருவிக்கப்பட்டன. உள்ளொன்று புறமொன்றுதல் ஒருவருக்குத் தகாதாயினும் பகைவரிடத்தானால் தகுமென்பது நீதிநூலது துணிவென்பதற்கு அதன்மேல்வைத்துச்சொல்லினார். எள்ளுவாரைப் புல்லெனக்கூட்டுக,

பகைநட் பாங் காலம் வருங்கால் முகநட்
டகநட் பொரீஇ விடல். - - - ௰.

இ-ள். பகை-(தம்)பகைவர் — நட்பாங்காலம்-நட்பினராய் நடக்குங்காலம்— வருங்கால் — முகம்-(தாமும்)முகத்தால் — நட்டு - (அவரோடு)நட்புச்செய்து—அகம்-மனத்தால் — நட்பு-நட்பை—ஒரீஇ - நீங்கி—விடல்-(பின் அறவும்) விடக்கடவர். எ-று. ❊ அக்காலமாவது - தம்மாலும் பகைமையென்று வெளிப்பட நீக்கக்கூடாதவளவு. இதனாலே கூடுமளவெல்லாம் நீக்குகவென்பது பெற்றும். [இவை இரண்டுபாட்டாலும் அந்நட்பிடத்து நடக்கும விதம சொல்லப்பட்டது-]௰

இனி அந்நட்பை எதிர்மறுத்துப்பகைமுகத்தாலேசொல்லத் தொடங்கினர். அப்பகைதான் முழுவதும் விடலாகாத குற்றமாகிய குரோதத்தாலும், காமத்தாலும். வருவதாம். அவைகளுள்-குரோதத்தால் வருபவை ஐந்ததிகாரத்தாலும்,காமத்தால் வருபவை ஐந்ததிகாரத்தாலும். சொல்லுதற்கு அவ்விரண்டுக்கும் அடியாகிய மயக்கத்தைஇருவகைப்படுத்தி இரண்டதிகார த்தாலேசொல்லத்தொடங்கி முதலிலே பேதைமை சொல்லுகிருர்.

## அச - ஆம், அதி—பேதைமை.

அஃதாவது-யாதொன்றும் அறியாமை.

பேதைமை யென்பதொன் றியாதெனி னேதங்கொண்
டூதியம் போக விடல். - - - - - - - - க.

இ-ள். பேதைமையென்பது| —ஒன்று - (மற்றைக்குற்றங்களினெல்லாம் மிகுந்த) தொன்று.—யாதெனின்-(அது|) யாதென்றுவினவினுல்—ஏதங்கொண்டு - (தனக்குக்) கேடுதருமவைகளைக் கைக்கொண்டு—ஊதியம் - ஆக்கந்தருமவைகளை} — போகவிடல்-கைவிடுதல். எ - று. ❊ கேடு-வறுமை பழிபாவங்கள். ஆக்கம் - செல்வம் புகழறங்கள்.—பேதைமை - தானே தன்னிருமைப்பயனும் கெடுத்துக்கொள்ளுதலென்பதாம். க

பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கட் செயல். - - - - உ.

இ - ள். (ஒருவனுக்கு) — பேதைமையுளெல்லாம் — பே

தைமை - மிகுந்த பேதைமையாவது | — கையல்லதன்கண் - (தனக்கு) ஆகாத செய்கையில் — காதன்மை - ஆசைசெய — செயல். எ-று. ❊ இருமைக்கும் ஆகாவென்று நூலோர் கடிந்தசெயல்களை விரும்பிச்செய்தலென்பதாம். [இவை இரண்டுபாட்டானும் பேதைமையது இலக்கணம்சொல்லப்பட்டது.]

நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும் ❊
பேணாமை பேதை தொழில். - - - ௩.

இ-ள். நாணாமை - (நாணவேண்டுமவைகளுக்கு) நாணாமையும் | — நாடாமை - (நாடவேண்டுமவைகளை) நாடாமையும் | — நாரின்மை - (யாவரிடத்தும்) முறிந்த சொற்செயலுடைமையும் | — யாதொன்றும் - (பேணவேண்டுமவைகளுள்) யாதொன்றையும் — பேணாமை - பேணாமையும் | — பேதைதொழில் - மூடனது தொழில்களாம். எ - று. ❊ நாணவேண்டுமவை - பழிபாவங்கள். நாடவேண்டுமவை - கருமங்களிலே விதிவிலக்குகள். முறிதல் - கண்ணறுதல். பேணவேண்டுமவை - குடிப்பிறப்புக் கல்வியொழுக்கமுதலாயின. இவை பேதைக்கு எந்நாளும் இயல்பாய்வருதலாலே - தொழிலென்றார். (௩)

ஓதியுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப் ❊
பேதையிற் பேதையா ரில். - - - - ௪.

இ-ள். ஓதி - (மனமொழிமெய்கள் அடங்குதற்கு ஏதுவாகிய நூல்களை) ஓதியும் — உணர்ந்தும் - (அவ்வடக்கத்தால்வரும் பயனை) அறிந்தும் — பிறர்க்கு — உரைத்தும் - (அதனை அறியும்படி) சொல்லியும் — தான் — அடங்கா - (அவை) அடங்கிநடவாத — பேதையின் - மூடன்போல் — பேதையார் - மூடர் — இல் - (உலகில்) இல்லை. எ - று. ❊ இப்பேதைமை - தனக்கு மருந்தாகிய இவைகளாலே தீராமையானும், வேற்றுமருந்தில்லாமையானும், பேதையிற் பேதையா ரில்லென்றார். [இவ்விரண்டு பாட்டானும் பேதையது தொழில் பொதுவகையாற் சொல்லப்பட்டது.] இனிச் சிறப்புவகையாற்கூறுவர். (௪)

ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையுந் ❊
தான்புக் கழுந்து மளறு. - - - - - ௫.

இ-ள். பேதை - மூடனானவன் — எழுமையும் வரும்பிறவிகளிலெல்லாம் — தான் — புக்கு - புகுந்து — அழுந்தும் - அழுந்

துதற்கிடமாகிய—அளறு - நரகத்தை — ஒருமை - இவ்வொ ருபிறப்புள்ளே — செயலாற்றும் - செய்துகொள்ளவல்லவனு வான். எ-று. ❋ எல்லாப்பிறப்பும் ஏழாய்அடங்குதல் அறியப்ப ட்டமையின் எழுமையு மென முற்றும்மைகொடுத்தார். இவ் விடத்துப் பிறப்புகளிலும் கொடுவினைவசத்தால் அந்நரக த்துன்பமே அனுபவித்து வருதலால் எழுமையுந் தான் புக் கழுந்துமளறென்றார். நெடுங்காலம் தான் நரகத்துன்பம் அனு பவித்தற்கு ஏதுவாம்கொடுவினைகளையே அறிந்து சிலகாலத்து ள்ளேசெய்துகொள்ளுதல் பிறர்க்கு அரிதாதலின் ஆற்றுமெ ன்றார். [இதனால் அவன் மறுமைச்செயல் சொல்லப்பட்டது.]

**பொ**ய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப் *
பேதை வினைமேற் கொளின். - - - ௬.

இ-ள். கையறியா - செய்முறைமையறியாத — பேதை - மூடனானவன் — வினை - ஒருதொழிலை — மேற்கொளின் - மே ற்கொள்வானாயின் — பொய்படும் - (அதுவும்|) புரைபடும். — ஒன்றோ - (அது|) ஒன்றதானோ. — புனைபூணும் - (தானும்|) தளைபூணும். எ-று. ❋ புரைபடுதல் - பின் ஆகாதபடி உள்ள ழிதல். அதனையும் கெடுத்துத் தானும் கெடுமென்பதாம். [இ தனால் அவன்செல்வம் படைக்குமாறுசொல்லப்பட்டது. (௬)

**ஏ**திலா ரார த் தமர்பசிப்பர் பேதை - - - *
பெருஞ்செல்வ முற்றக் கடை. - - - - ௭.

இ-ள். பேதை - மூடனானவன் — பெருஞ்செல்வம் - பெரி யசெல்வத்தை — உற்றக்கடை - (ஊழால்) அடைந்தவிடத்து — ஏதிலார் - (தன்னோடு) ஒரு சம்பந்தமுமில்லாதவர்| — ஆர - நிறைய — தமர் - (எல்லாச் சம்பந்தமுமுடைய) தம்மவர்| — ப சிப்பர். எ - று. ❋ எல்லாநன்மைகளும் செய்துகொள்ளற்கு ச்சாதன மென்பதுதோன்ற - பெருஞ்செல்வமென்றும், அ தனைப் படைக்கும்வலிமை இல்லாமைதோன்ற - உற்றக்கடை யென்றும், எல்லாம்பெறுதல்தோன்ற - ஆரவென்றும், உணவு ம்பெறாமைதோன்ற - பசிப்பரென்றும், சொல்லினார். (௭)

**மை**யலொருவன் களித்தற்றாற் பேதைதன் - *
கையொன் றுடைமை பெறின். - - ௮.

இ-ள். பேதை-மூடனானவன் — தன்கை - தன்கையில் — ஒ ன்று - ஒருபொருளை — உடைமைபெறின் - உடைமையாகப்

பெற்றாயின்—மையலொருவன் - பித்தினையுடைய ஒருவன்|—களித்தற்று - (அம்மயக்கத்தின்மேலே) மதுவுண்டுமயங்கியதுபோலும், எ-று. ❊ ஆல்-அசை.—பெறினெனவே - அவன்உண்டாவல்லது - தன்றாலேபெறாமைபெற்றாம்.—பேதைமையும், செல்வக்களிப்பும், ஒருசேரவுடைமையால் அவன்செய்காரியங்கள்-மையலும்,மதுக்களிப்பும், ஒருசேரவுடையவன்செய்காரியங்கள்போலேதலைதடுமாறுமென்பதாம். [இவை இரண்டுபாட்டாலும் அவன் செல்வமடைந்தவிடத்துப் பயன்கொள்ளும்விதம் சொல்லப்பட்டது.] (அ)

பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட் ❊
பீழை தருவதொன் றில். - - - - ௯.

இ-ள். பிரிவின்கண் - (பின்) பிரிவு வந்தவிடத்து — (அப்பிரிவு) — தருவது - (இருவருக்கும்) தருவதாகிய — பீழையொன்று - துன்பமொன்று—இல் - இல்லை (ஆதலால்)—பேதையார்—கேண்மை—(தம்முட்கொண்ட) நட்பு|—பெரிதினிது-மிகவுமினிது. எ-று. ❊ தினந்தோறும் தேய்ந்துவருதலால் துன்பந்தாராதாயிற்று. புகழ்வார் போன்று பழித்தபடி [இதனால் அவனது நட்பின்குற்றம்சொல்லப்பட்டது.] (௯)

கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற் சான்றோர் ❊
குழாஅத்துப் பேதை புகல். - - - - ௰.

இ-ள்.சான்றோர் - பெரியோரது—குழாத்து - சபையினிடத்து—பேதை-மூடனானவன்—புகல் - புகுதல்| — கழாஅக்கால் கழுவாதகாலை [அசுத்தமிகுந்த காலையென்றபடி]—பள்ளியுள்-(இன்பந்தருஞ்) சயனத்தின்மேல்—வைத்தற்று-வைத்தல்போலும். எ-று. ❊ ஆல்-அசை —அதனால் அச்சயனமும் இழிவுசெயப்படும் விதம்போல் இவனால் இச்சபையும் இழிவு செயப்படுமென்பதாம். [இதனால் அவன் சபையிடத்து இருக்கும்விதம் சொல்லப்பட்டது.] (௰)

அ௫-ஆம், அதி—புல்லறிவாண்மை.

இனிமற்றைப்புல்லறிவாண்மை சொல்லுகின்றார். அதுபுல்லிய அறிவை ஆளுதற் றன்மையென விரியும்.

அஃதாவது-தான் சிற்றறிவினனாயிருந்தே தன்னைப்பே

ரறிவனாக மதித்து உயர்ந்தோராலே சொல்லப்படும் உறுதிச் சொல்லைக் கொள்ளாமை.

அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை *
யின்மையா வையா துலகு. - - க.

இ-ள். இன்மையுள் - (ஒருவனுக்கு) இல்லாமைபலவுள்ளும்—இன்மை - மிகுந்த இல்லாமையாவது|—அறிவின்மை-அறிவில்லாமை. — பிறிதின்மை - மற்றைப் பொருளில்லாமையோவெனின்—(அதனை)—உலகு-உலகத்தார்| — இன்மையா-(அப்படிப்பட்ட) இல்லாமையாக—வையாது - கொள்ளார். எ-று. ❊புல்லறிவாளர் செல்வமடைந்தவிடத்தும் இம்மைமறுமைப்பயனடையாமையால் அதனை-இன்மையுளின்மையென்றும். நல்லறிவாளர் வறுமையடைந்தவிடத்தும் அப்பயனையிழவாமையால் அதனை இன்மை யாவையாதென்றும், சொல்லினார். [இதனாற்புல்லறிவின் குற்றம் சொல்லப்பட்டது.] க

அறிவிலா னெஞ்சுவந் தீதல் பிறிதியாது - *
மில்லை பெறுவான் றவம். - - உ.

இ-ள். அறிவிலான் - புல்லறிவுடையவன்|—நெஞ்சுவந்து-மனமகிழ்ந்து—ஈதல் - (ஒருவனுக்கு ஒன்று) கொடுத்தல் (கூடியதாயின் அதற்குக்காரணம்|) —பெறுவான் - பெறுகின்றவனது—தவம் - நல்வினையே.—பிறிதியாதும் - வேறொன்றும்| —இல்லை. எ-று. ❊ புல்லறிவாளரும் ஒரோவிடத்தே மனமகிழ்ந்து கொடுத்தலால் அவரும் நல்வினைசெய்வாரென்பார்க்கு - பெறுவான். வீழ்பொருள் அடைந்தவன் போல்வதல்லது இம்மைநோக்கியாவது மறுமைநோக்கியாவது ஈகின்றாரல்லரெனச்சொல்லியபடி. [இதனால் புல்லறிவாளர் தம்மிடத்து நல்லவைசெய்தலறியாமை சொல்லப்பட்டது.] (௨)

அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை - *
செறுவார்க்குஞ் செய்த லரிது - ௩.

இ-ள். அறிவிலார் - புல்லறிவுடையவர்| — தாம் - தாமே—தம்மை—பீழிக்கும் - வருத்தும் — பீழை - வருத்தமானது| — செறுவார்க்கும் - வருத்துதற்கு உரியபகைவர்க்கும் —செய்தல்| — அரிது எ-று ❊ பகைவர் தாம் அறிந்த ஒருதீங்கைக் காலம்பார்த்திருந்து செய்வதல்லது வறுமை பழி

பாவமுதலான பலவும் எக்காலமும் செயமாட்டாமையால் அவைக்கும் செய்தலறிதென்றார். [இதனால் அவர் தம்மிடத்து த் தியவைசெய்தலே அறிவொன்பது சொல்லப்பட்டது.] ௩

வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை *
யுடையம் யாமென்னுஞ் செருக்கு. - - ௪.

இ - ள். வெண்மையெனப்படுவது - புல்லறிவுடைமையெனப்படுவது—யாதெனின்—(அது||) — ஒண்மையுடையம்யாம் - நல்லறிவுடையோம்யாம்—என்னும் - என்று(தமமைமத்தாமே) நன்குமதிக்கும்—செருக்கு-மயக்கம. எ - று. ❋ வெண்மை-இளமை - அது அறிவுமுதிராமை - உலகத்தார் இகழ்தல் அறிந்திருந்தும் அப்படிமதித்தலால் - மயககமெனறார். (௪)

கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற - - *
வல்லதூஉ மையந் தரும். - - - - - ரு.

இ - ள். (புல்லறிவாளர்) — கல்லாத - (தாம்) கல்லாதநூல்களையும் — மேற்கொண்டு - (கற்றவராக) மேலிட்டுக்கொண்டு — ஒழுகல் - நடக்குதல்| — கசடற - குற்றமற — வல்லதூஉம் - கற்றொருநூல் (உண்டாயின்) அதனிடத்தும் — ஐயம் - ஐயத்தை—தரும் - (பிறருக்கு) விளைக்கும். எ - று. ❋ உண்டாயினென்பது வருவிக்கப்பட்டது.—ஐயம் - இவர் அந்தநூலிலே வல்லவொன்பதும் இப்படிதானிருக்குமோவென்பது. (ரு)

அற்ற மறைத்தலோ புல்லறிவு தம்வயிற் - - *
குற்ற மறையா வழி. - - - - - - ௬.

இ - ள். (புல்லறிவாளர்)—தம்வயின் - தம்மிடத்து உண்டாகும—குற்றம் - குற்றங்களை — மறையாவழி - (அறிந்து) கடியாராயின்—அற்றம் - மறைககத்தக்க அவயவத்தை — மறைத்தலோ - (ஆடையால்) மறைத்தவராகத் தம்மை நினைத்தலும— புல்லறிவு. எ-று. ❋ குற்றமறைத்தலாவது - அவைகளை இல்லாமற்போகச் செய்தல். மறைக்கப்படுமவை பலவுள்ளும் உயர்ந்தவைகளையெல்லாம் மறையாது தாழ்ந்தவொன்றையே மறைத்து அவ்வளவிலே தம்மையும் உலக நடையுள்ளவராக மதித்தலும் புல்லறிவென்பதாம். [இவை மூன்றுபாட்டாலும் அவர் தம்மை வியத்தற்குற்றம் சொல்லப்பட்டது.] (௬)

அருமறை சோரு மறிவிலான் செய்யும் - - ※
பெருமிறை தானே தனக்கு. - - - - - எ.

இ-ள். அருமறை - பெறுதற்கரிய உபதேசப்பொருளை—சோரும் — (பெற்றாலும்) உட்கொள்ளாதுபோக்கும்—அறிவிலான் - புல்லறிவாளன்—(அவ்வுறுதி அறியாமையால்) —தானே|தனக்கு—பெருமிறை - மிகுந்தவருத்தத்தை} —செய்யும்.எ-று. ※ மிகுந்த வருத்தம் - பொறுத்தற்கரிய துன்பம். எ

ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர் - ※
போஒ மளவுமோர் நோய். - - - - - அ.

இ-ள். (புல்லறிவாளன்|)—ஏவவும்- (தனக்கு) உறுதியானவைகளை (அறிவுடையார்) சொல்லவும் — செய்கலான் - செய்யான்.—(அதுவல்லாமல்) — தான் - தானாகவும்— தேறான்- (இவை செய்பவையென்று) அறியான். — அவ்வுயிர்|—போமளவும்-(உடம்பைவிட்டுப்) போமளவும்—ஓர்நோய் - (பூமிக்குப் பொறுத்தற்கரிய) ஒருநோயாம். எ-று. ※ உயிர்தான் அறியுந் தன்மையதாயிருந்தும் நின்றதேகவசத்தால் மயங்குந்தன்மையதாய் வேறுபடுதலால் அவ்வுயிரொன்றும, அதனினீங்கியபொழுதே அதற்கு இரண்டிலுள் ஒன்று கூடுதலால்-போமளவுமென்றும், குலமலைமுதலானவைகளைச் சுமக்கின்ற பூமிக்கு இப்பாவவுடமபு பெருஞ்சுமையாய்த் துன்பஞ்செய்தலால்-ஓர்நோயென்றும், சொல்லினார். (அ)

காணாதாற் காட்டுவான் றான்காணான் காணாதான்
கண்டானாந் தான்கண்ட வாறு. - - - கூ.

இ-ள். (தன்னை எல்லாமறிந்தவனாக மதித்தலால்) — காணாதான் - (பிறரால் ஒன்றை) அறியுந்தன்மையில்லாதவனை — காட்டுவான் - அறிவிக்கப்புகுவோன்|—தான்காணான் -(அவனாலே பழிக்கப்பட்டுத்) தான் அறியாதவனாய் முடியும். — காணாதான் -(இனி) அவ்வறியுந் தன்மையில்லாதவன் — (தான்கொண்டது விடாமையால்)—தான்கண்டவாறு - தான் அறிந்தவிதத்தால் — கண்டானாம் - (அதனை) அறிந்தவனாய்முடியும்.எ-று. ※ புல்லறிவாளனுக்கு நல்லறிவை வருவித்தல் ஒருவழியாலும் பொருந்துவதன்றென்பதாம். (கூ)

உலகத்தா ருண்டென்ப தில்லென் பான் வையத்
தலகையா வைக்கப் படும். - - - - ம.

இ-ள். உலகத்தார் - உயர்ந்தோர்பலராலும் — உண்டென்

பது-உண்டெனப்படுகிறபொருளை — இல்லென்—... ... —, ...
புல்லறிவால்) இல்லையென்றுசொல்லுவோன் } — (மனிதனென்
று நினைக்கப்படான்).— வையத்து - பூமியிலே—அலகையா -
(காணப்படுகிற) ஒருபேயென்று — வைக்கப்படும் - நினைக்க
ப்படுவான். எ-று. ※ கடவுளும், மறுபிறப்பும், இருவினைப்
பயனும், முதலாக அவர் உண்டெனப்படுமவை பலவாயினு
ம் சாதியொருமைபற்றி உண்டென்பதென்றும், பேயும் இ
ல்லையென்பவனும் தானே வேண்டியவை சொல்லலால் ஒத்த
லும், வடிவால் ஒவ்வாமையும் உடைமையால் தன்னுடம்பைம
றைத்து மக்களுடம்பிலே தோன்றுதல் வல்ல வலகையென்று
ம், சொல்லினார். [இவை நான்குபாட்டாலும் உறுதிச்சொல்
லைக்கொள்ளாமையினது குற்றம் சொல்லப்பட்டது.] (ய)

## அசா - ஆம், அதி—இகல்.

இனி அவைகளால் வரும் குரோதகாமங்களுள் அரசர்க்கு
க்குரோதம் அதிகமாயுள்ளதாகலால் அதனால்வருமவைக
ளைச் சொல்லத் தொடங்கி முதலிலே இகல்சொல்லுகின்
றார். அஃதாவது இருவர் தம்முள்ளே போர்செய்து வ
லிமை தொலைதற்கு ஏதுவாகிய மாறுபாடாம்.

இகலென்ப வெல்லா வுயிர்க்கும் பகலென்னும் ※
பண்பின்மை பாரிக்கு நோய். - - - க.

இ-ள். எல்லாவுயிர்க்கும் — பகலென்னும் - (பிறவுயிரோ
டு) கூடாமையென்னும்—பண்பின்மை - தீயகுணத்தை—பா
ரிக்கும் - வளர்க்கும்—நோய்-குற்றமாவது—இகல் - மாறுபா
டாம்—என்ப -என்று (நூலோர்) சொல்லுவர். எ-று. ※ மக்
களையும் விலங்குகளோடு ஒப்பாக்குவ தென்பதுதோன்ற - எ
ல்லாவுயிர்க்குமென்றும், கூடாத தீக்குணத்தைநடுநின்று விளை
த்தலால் - பகலென்னும் பண்பின்மையென்றும், சொல்லினா
ர். [இதனால் மாறுபாட்டது குற்றம்சொல்லப்பட்டது.] (க)

பகல்கருதிப் பற்ரு செயினு மிகல்கருதி - - ※
யின்னுசெய்யாமை தலை. - - - - - - உ.

இ-ள். பகல்-(தம்மோடு) கூடாமையை—கருதி - நினைத்
—பற்ரு - வெறுப்பனவைகளை—செயினும் - (ஒருவன்) செய்

தானாயினும் — இகல்கருதி - (அவனோடு) மாறுபடுதலைக்குறு
த்து — இன்னா - துன்பந்தருமவைகளை — செய்யாமை - (தாம்
அவனுக்குச்) செய்யாமை | — தலை - உயர்ந்தது - எ-று. ❖ துன்
பந்தருமவைகளைச்செய்யில் பகைமை வளரத் தாம் தாழ்ந்து
வருதலாலும், ஒழியில் அவ்வெறுப்பவைகள் ஒய்ந்துபோகத்
தாம் ஓங்கிவருதலாலும், செய்யாமைதலையென்றார். (உ)

இகலென்னு மெவ்வநோய் நீக்கிற் றவலில்லாத் - ❋
தாவில் விளக்கந் தரும். - - - ௩.

இ-ள். (ஒருவன்) — இகலென்னும் - மாறுபாடெனப்படுகின்ற
— எவ்வம் - துன்பத்தைச்செய்யும் — நோய் - நோயை — நீக்கின்
(தன்மனத்திலிருந்து) நீக்குவானாயின் — (அந்நீக்குதல் |) — த
வலில்லா - (எந்நாளும்) அழிவில்லாமைக்கு ஏதுவாகிய — தா
வில் விளக்கம் - புகழை — தரும் - (அவனுக்குக்) கொடுக்கும்.
எ-று. ❖ யாவரும்நட்பாதலால் எல்லாச்செல்வமும் பெற்றுக்
கொடைமுதலான காரணங்களால் புகழ்பெறுமென்பதாம்.

இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னுந் - ❋
துன்பத்துட் டுன்பங் கெடின். - - - ௪.

இ-ள். இகலென்னும் - மாறுபாடெனப்படுகின்ற — துன்
பத்துள் - துன்பங்கள்பலவினும் — துன்பம் - மிகுந்ததுன்ப
ம் | — கெடின் - (ஒருவனுக்கு) இல்லையாயின் — (அவ்வில்லா
மை |) — இன்பத்துள் - இன்பங்கள்பலவினும் — இன்பம் - மி
குந்தவின்பத்தை — பயக்கும் - (அவனுக்குக்) கொடுக்கும்.
எ-று. ❖ துன்பத்துட்டுன்பம்-மாறுபாடுடையோன் பலரோ
டும் போர்செய்து வலிமை தொலைதலால் யாவர்க்கும் எளிய
வனாயிருப்பது. அதனைவிளைவிலே தருதலால் - இகலென்னு
மெவ்வமென்றார். இன்பத்துளின்பம் - மாறுபாடில்லோன்
யாவரும்நட்பாகலால் எல்லாப்பயனும்பெற்றிருப்பது. (௪)

இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே - - ❋
மிகலூக்குந் தன்மை யவர். - - - - - ௫.

இ-ள். இகல் - மாறுபாடு (தம்மனத்துத்தோன்றியவிடத்து)
— எதிர்சாய்ந்தொழுகவல்லாரை - (அதனை ஏற்றுக்கொள்ளாம
ற்) சாய்ந்துநடக்கவல்லவனை — மிகலூக்கும் - வெல்லநினைக்கு
ம் — தன்மையவர் - தன்மையையுடையவர் | — யாரே - யாவர்.
எ-று. ❖ மாறுபாட்டை நீங்கிநடத்தல் வேந்தருக்கு இவ்விதத்

தாலும் அரிதாகலால் வல்லானையென்றும், அவர் யாவர்க்கும் நட்பாகலால் அவனை வெல்லநினைப்பவர் யாவரும் இல்லையென்றும், சொல்லினார். [இவைநான்குபாட்டாலும் மாறுபடாதவர்க்கு வரும் நன்மை சொல்லப்பட்டது.] (ரு)

இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை - - ✻
தவலுங் கெடலு நணித்து. - - - - சா.

இ-ள். இகலின் - (பிறரோடு) மாறுபடுதலிலே—மிகல்-மிகுதல்—இனிதென்பவன்- (எனக்கு) இனிதென்று செய்பவனது—வாழ்க்கை - உயிர்வாழ்க்கை—தவலும் - பிழைபடுதலும்| —(நணித்து)-சிறிதுபொழுதி லுண்டாம்.— கெடலும் முழுதுங்கெடுதலும்|—நணித்து-சிறிதுபொழுதி லுண்டாம். எ-று. ✻ மிகுதல்-மேலுமேலு மெழும்பல். இனிதென்பது - தான் மேல்லுதல் குறித்தல். பிழைபடுதல் - வறுமையாலே துன்பப்படுதல். முழுதுங்கெடுதல் - இறத்தல்.—பொருட்கேடும் உயிர்க்கேடும அப்பொழுதே உண்டாகுமென்பதாம. (சா)

மிகன்மேவு மெய்ப்பொருள் காணா ரிகன்மேவு ✻
லின்னா வறிவினவர். - - - - - - எ.

இ-ள். இகன்மேவும் - மாறுபாட்டோடு பொருந்துதலையுடைய — இன்னா - துன்பஞ்செய்கின்ற — அறிவினவர் - அறிவையுடையவர்| — மிகன்மேவும் - வெற்றி பொருந்துதலையுடைய —மெய்ப்பொருள் - நீதிநூற்பொருளை }— காணார் - அறியமாட்டார். எ-று. ✻ இன்னாவறிவு - தமக்கும் பிறர்க்கும் தீங்கை உண்டாக்கும் அறிவு.—வெற்றிவழி நின்றார்க்கு உண்டாவது காணப்படும் பிரயோசனத்தை யுடையதாதலால் மெய்ந்நூலெனப்பட்டது. மாறுபாட்டினாலே அறிவு கலங்குதலால் காணாரென்றார். [இவை இரண்டுபாட்டாலும் மாறுபட்டவர்க்கு வரும் தீங்குசொல்லப்பட்டது.] (எ)

இகலிற் கெதிர்சாய்த லாக்கமதனை - - - ✻
மிகலூக்கி னூக்குமாங் கேடு. - - - அ.

இ-ள். இகலிற்கு - (தன்னுள்ளத்து) மாறுபாடுதோன்றியவிடத்து—எதிர்சாய்தல் - (அதற்கு) எதிரிடுதலையொழிதல்—ஆக்கம்-(ஒருவனுக்கு) ஆக்கமாம்.—அதனை - அம்மாறுபாட்டிலே—மிகல்-மிகுதலை—ஊக்கின் - மேற்கொள்ளுவானாயின்—கேடு-கேடும்—ஊக்குமாம் - (தன்னிடத்துவருதலை) மேற்

கொள்ளும். எ-று. ※ எதிர்தல் - ஏற்றுக்கொள்ளுதல். சாய்ந்தபொழுதே வருதலால் - சாய்தலாக்கமென்றார். (௮)

இகல்காணா னாக்கம் வருங்கா லதனை - - - ※
மிகல்காணுங் கேடு தரற்கு. - - - - ௯.

இ-ள். (ஒருவன்|) — ஆக்கம்வருங்கால் - (தன்னிடத்து) ஆக்கம் வரும்போது — (காரணம் உண்டாயினும — இகல் - மாறுபாட்டை — காணான் - நினையான், — கேடுதரற்கு - (தனக்குக்) கேடுசெய்துகொள்ளுமிடத்து — (காரணம இல்லாதிருந்தும்) — அதனை - அதனிடத்தே — மிகல் - மிகுதலை — காணும் - நினைப்பான். எ-று. ※ மாறுபாட்டால் வருங்கேடு பிறரால் அன்றென்பதுதோன்ற - தரற்கென்றார். ஆக்கக் கேடுகட்குமுன் மாறுபடாமையும் படுதலும் உண்டாமென்பதாம்.

இகலானா மின்னாத வெல்லா நகலானா - - - ※
நன்னய மென்னுஞ் செருக்கு. - - - ௰.

இ-ள். இகலான் - மாறுபாடொன்றினாலே — இன்னாத வெல்லாம் - துன்பஞ் செய்பவையெல்லாம் | — ஆம் - உண்டாகும். — நகலான் - நட்பொன்றினாலே — நன்னயமென்னும் - நல்லநீதியென்னும் — செருக்கு - பெருஞ்செல்வம் | — ஆம் - உண்டாகும். எ-று. ※ இன்னாதன - வறுமை பழிபாவங்கள் முதலானவை. நகல் - மகிழ்தல். அதுவும் செருக்கென்பதும் தன்றன் காரணங்களுக்காயின. நயமென்னுஞ்செருக்கென் காரியத்தைக் காரணமாக உபசரித்தார். [இவை மூன்றுபாட்டாலும் அவ்விருமையும் சொல்லப்பட்டன.] (௰)

## ௮௭-ஆம், அதி—பகைமாட்சி.

அஃதாவது- அறிவில்லாமை முதலாகிய குற்றங்களுடைமையால் பகையை மாட்சிமைப்படுத்தல். அரசர்க்கு எவ்வழியாலும் பகையில்லாமை கூடாமையால் மேலே பொதுவகையால் விலக்கப்பட்ட இகலை இவ்விடத்தே சிறப்புவகையால் விதிக்கின்றாராகலால் இது அதன் பின் வைக்கப்பட்டது.

வலியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா - ※
மெலியார்மேன் மேக பகை. - - - - ௧.

இ-ள். வலியார்க்கு - (தம்மின்) வலியவர்க்கு — மாறேற்று

ல்-பகையாயெதிர்தலை — ஓம்புக - ஒழியக்கடவர். — மெலி யார்மேல் - மற்றைமெலியவர்க்கு—பகை - பகையாகுதலை—ஓம்பா - ஒழியாமல்—மேக - விரும்பக்கடவர். எ-று. ❈ வலியாரொன்றவிடத்துத் துணைவலியும் அடங்கலால் மெலியாரொன்றவிடத்துத் துணைவலியில்லாமையும் கொள்ளப்படும். அத்துணைதான் - படைபொருள் முதலாகிய வேற்றுமைத்துணையும், நல்லறிவுண்டைமை நீதிவழியொழுகல் முதலாகிய ஒற்றுமைத்துணையும். எனவிரண்டாம். அவ்விரண்டுமில்லாரைவெல்வார்க்கு வலிமை தொலையாமையால் அவரோடு பகைத்தல் விதிக்கப்பட்டது. சிங்கநோக்காகிய இதனுள் பகைமாட்சி பொதுவகையாலே சொல்லப்பட்டது.] (௧)

அன்பில ஞன்ற துணையிலன் றான்றுவ்வா - - ❈
னென்பரியு மேதிலான் றுப்பு. - - - ௨.

இ-ள். (ஒருவன்)—அன்பிலன் - (தன்சுற்றத்தார்மேல்) அன்பிலன்.—ஆன்ற துணையிலன்-(அதுவேயன்றி) வலிய துணையிலன்.—தான்றுவ்வான் - (அதன்மேல்) தான் வலியிலன்.—(அப்படிப்பட்டவன்)—ஏதிலான்- (தன்மேல்வந்த) பகைவனது—துப்பு - வலிமையை—என்பரியும் - எப்படிதொலைப்பான். எ-று. ❈ சுற்றமும் முன்சொல்லப்பட்ட இருவகைத் துணையும் தன்வலியும் இலனாகலால் அவன்மேலே செல்வார்க்கு வலி வளர்வதல்லாமல் தொலையாதென்பதாம். (௨)

அஞ்சு மறியா னமைவில னீகலான் - - ❈
றஞ்ச மெளியன் பகைக்கு. - - - - ௩.

இ-ள்.(ஒருவன்)—அஞ்சும்-(அஞ்சவேண்டாதவைகளுக்கு) அஞ்சுவான்.—அறியான் - (அறியவேண்டுமவைகளை) அறியான்.—அமைவிலன் - (பிறரோடு) பொருத்தமிலன்—ஈகலான் - (இவைகளின்மேலும் யாவரிடத்தும்) உலோபகுணமுடையன். — (இப்படிப்பட்டவன்) —பகைக்கு — தஞ்சமெளியன் -மிகவெளியனுவான். எ-று. ❈ தஞ்சமெளியனென்பவை - ஒருபொருளைக் குறித்துவந்த பலசொல்.—இந்நான்கு குற்றமுமுடையான் பகையில்லாமலும் அழியுமாகலால் தஞ்சமெளியனென்றார். (௩)

நீங்கான்வெகுளி நிறையில னெஞ்ஞான்றும் - ❈
யாங்கணும் யார்க்கு மெளிது. - - - - ௪.

இ-ள். (ஒருவன்)—வெகுளி - கோபத்தினின்றும்—நீங்கா

ன். — நிறையிலன்-(அதுவேயன்றித்தா) நிறையுடையனல்ல ன்.—(அவன்மேலே செல்லுதல்|) — எஞ்ஞான்றும் - எந்நா ளும் — யாங்கணும் - எவ்விடத்தும் — யார்க்கும் — எளிது. எ-று. ❁ நிறை - மறைபிறரறியாமை. இவன் கோபகுணமு டையனாகலாலும், ரகசியத்தை வெளிப்படுத்தலாலும் இவ ன்மேலே போர்க்குச் செல்வார்க்குக் காலமும் இடமும் வ லியும் அறிந்து செல்லுதல் வேண்டுவதில்லை யாயிற்று. (௪)

**வ**ழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான் ❋
பண்பிலன் பற்றார்க் கினிது. - - - ரு.

இ-ள். (ஒருவன்|)—வழிநோக்கான் - நீதிநூலைக் கல்லா ன். — வாய்ப்பனசெய்யான் - (அது) விதித்ததொழில்களைச் செய்யான்.—பழிநோக்கான் - (தனக்குவரும்) பழியைப்பா ரான்.—பண்பிலன் - குணமுடையனல்லன்.—(அவன் பகை மை|) — பகைவர்க்கு—இனிது. எ-று. ❁ பழையோராதி யாகவழங்கிவருதலால் வழியென்றும், தப்பாது பிரயோசன ப்படுதலால் - வாய்ப்பன வென்றும், இக்குற்றங்களுடையவ ன் தானே அழிதலால் பற்றார்க்கினிதென்றும், சொல்லினர்.

**கா**ணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான் - ❋
பேணாமை பேணப் படும். - - - சா.

இ-ள். காணாச்சினத்தான் - (தன்னையும் பிறரையும்) அறி யாமைக்கு ஏதுவாகிய கோபத்தையுடையவன் (யாவன்.) — க ழிபெருங்காமத்தான்-மேலுமேலும் வளராநின்ற மிகுந்தகா மத்தையுடையவன்(யாவன்.)—பேணாமை - (அவரது) பகை மை}—பேணப்படும் - விரும்பிக்கொள்ளப்படும். எ-று. ❁ முன் சொல்லப்பட்டவனுக்குயாவரும்பகையாகலாலும், பின் சொல்லப்பட்டவனுக்குக் காரியம் தோன்றாமையாலும், தா மே அழிவொன்பதுபற்றி - பேணாமைபேணப்படுமென்றார்

**கொ**டுத்துங் கொளல்வேண்டு மன்ற அடுத்திருந்து ❋
மாணாத செய்வான் பகை. - - எ.

இ-ள். அடுத்திருந்து - (தொழிலைத்) தொடங்கியிருந்து— மாணாத - (அதற்கு) ஏற்காதவைகளை —செய்வான் - செய்பவ னது—பகை - பகைமையை} —கொடுத்தும் - (சிலபொருள் அழியக்)கொடுத்தாயினும் —. மன்ற-நிச்சயமாக.—கொளல்

வேண்டும், எ-று. ※ எற்காதலை-மெலியவனுயிருந்து தணி தலும்- வலியவனுயிருந்து தணிதலும், முதலாயின. — அப் பொழுது அதனுலே சிலபொருள் அழியினும் பின்னே பல பொருள்களைப் பெறுதற்குச் சந்தேகம் இல்லாமையால்- கொடுத்துங் கொளல்வேண்டு மன்றவென்றார். [இவை ஆறு பாட்டாலும் அது சிறப்புவகையாலே சொல்லப்பட்டது.]

குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க் ※
கினனிலனா மேமாப் புடைத்து. - - - அ.

இ-ள். (ஒருவன்)—குணனிலனாய் - குணமொன்றுமிலனாய் —குற்றம்பலவாயின் - (உடைய) குற்றம் பலவாகியவிடத்து —இனனிலனும் - (அவன்) துணையில்லாதவனுகும். — (அவ் விலனுகுகையே) — மாற்றார்க்கு - (அவன்) பகைவர்க்கு—ஏ மாப்புடைத்து - துணையாகுகையையுடைத்து. எ-று. ※ குண ம் - இறைமாட்சியுள்ளே சொல்லப்பட்டவை.— குற்றம் - இவ் வதிகாரத்துள்ளே சொல்லப்பட்டவையும், மற்றும் இப்படி ப்பட்டவையும், ஆம்.— துணை - சுற்ற நட்புப் பொருள் படை முதலானவை. — பகைவர்க்கு இவ்வழியால் உண்டாகும் பய ன் தானே உண்டாமாகலால்-ஏமாப்புடைத்தென்றார். (அ)

செறுவார்க்குச் சேணிகவா வின்ப மறிவிலா ※
வஞ்சும் பகைவர்ப் பெறின். - - - கூ.

இ-ள். அறிவிலா- (நீதியை) அறிதலில்லாத — அஞ்சும்— பகைவர் - பகைவரை—பெறின் — செறுவார்க்கு- (அவரை) வெல்வார்க்கு—சேண் - உயர்வுள்ள—இன்பம் - இன்பங்கள் —இகவா - நீங்கா. எ-று. ※ உபாயமறிதலும், அறிந்தால் செ ய்து முடிக்குந்திடமும், இல்லாதவரோ பகைவராதல் கூடா மையால் - பெறினென்றும், அவரை அறிந்து மேற்சென்ற பொழுதே பகையில்லாமையும், செல்வமும், ஒருசேர அடை தலாலே - சேணுடையின்பமிகவாவென்றும், சொல்லினர். கூ.

கல்லான் வெகுளுஞ் சிறுபொரு ளெஞ்ஞான்று - ※
மொல்லானை யொல்லா தொளி. - - - - ம.

இ-ள். கல்லான் - (நீதிநூல்களைக்) கல்லாதவனோடு—வெகு ளும் - பகைத்தலால்வரும்—சிறுபொருள் - எளியபொருளை —ல்லானை - அடையாதவனை} — எஞ்ஞான்றும் - எந்நாளும்

—ஒளி - புகழ்—ஒல்லாது - அடையாது. எ-று. ❊ சிறுபொருள் - முயற்சி சிறிதாகிய பொருள். நீதியறியாதவனை வெல்லுதல் எளிதாயிருக்கவும் அதுமாட்டாதவனை வெற்றியால் வரும் புகழ் கூடாதென்பதாம். ஆகவே இச்சிறிய முயற்சியாலே பெரியபயனடைக வென்றபடியாயிற்று. [இவை மூன்று பாட்டாலும் அதனாலாகிய பயன்சொல்லப்பட்டது.] (ய)

## அஅ-ஆம், அதி—பகைத்திறந்தெரிதல்.

அஃதாவது - மாட்சிமைப்படாத பகையை ஆக்குதற்குற்றமும்; முன்னுற்றுநின்றபகையுள் - நட்பாக்குந்தன்மையதும், அயலாக்குந்தன்மையதும், அவைகளிலே செய்வதும், மற்றைக்களையுந் தன்மையதும், அதனிடத்தே செய்வனவும், களையும் பருவமும், களையாமற்போனால் படுமிழுக்கமும், என்று இவ்விதங்களை ஆராய்தல். இவையெல்லாம் மாட்சிமைப்படாத பகையின வாகலால் இது பகைமாட்சியின் பின் வைக்கப்பட்டது.

பகையென்னும் பண்பி லதனை யொருவ - - ❊
னகையேயும் வேண்டற்பாற் றன்று. - - க.

இ-ள். ஒருவன் — பகையென்னும் - பகையென்றுசொல்லப்படும்— பண்பிலதனை - தீமையுண்டாக்குவதனை — நகையேயும் - விளையாட்டிடத்தேயாயினும் — வேண்டற்பாற்றன்று-விரும்புதற்றன்மையையுடையதன்று.— (நீதிநூல்) எ-று. ❊ மாட்சிமைப்படாத பகையை ஆக்கிக்கொள்ளுதல் எவ்விதத்தாலும் தீமையே தருதலால் பண்பிலதென்றும், அதனை விளையாட்டிடத்து வேண்டினும் கோபமேவிளைந்து மெய்யாமாகலால் - நகையேயுமென்றும், வேண்டாமை பழமையோர் துணிவென்றற்கு - நீதிநூல்மேல்வைத்தும், சொல்லினார். நீதிநூல் வருவிக்கப்பட்டது. (க)

வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க - ❊
சொல்லே ருழவர் பகை. - - - - - - உ.

இ-ள். (ஒருவன்) — வில்லேர் - வில்லை ஏராகவுடைய—உழவர்-உழவரோடு—பகைகொளினும் — சொல்லேர் - சொல்லை ஏராகவுடைய—உழவர் - உழவரோடு — பகை —கொள்ள

ற்க - கொள்ளாதொழியக்கடவன். எ - று. ※ சொல் - ஆகு பெயராய் நீதிநூலின்மேல் நின்றது. வீரம் ஆலோசனை என்கிற ஆற்றல்களுள் வீரமே யுடையவரோடு பகைகொண்டால் கேடுவருவது நிச்சயமன்று. வந்தாலும் தனக்கேயாம். மற்றை ஆலோசனை யுடையவரோடாகில் தன் வமிசத்தோர்க்கும் தப்பாது வருதலால் - அதுகொள்ளினும் இதுகொள்ளற்கவென்றார். கொளினும் என்கிற உம்மையால் வில்லேருழவர் பகையும் ஆகாமைபெறப்படும். — இரண்டு முடையவரோடு கொள்ளலாகாமை சொல்லவேண்டாவாயிற்று (௨)

ஏமுற் றவரினு மேழை தமியனாய்ப் - - - ※
பல்லார் பகைகொள் பவன். - - - - ௩.

இ-ள். தமியனாய்-(தான்) தனியனா யிருந்துகொண்டு — பல்லார்-பலரோடும — பகைகொள்பவன் | — ஏமுற்றவரினும் - பித்தங்கொண்டவரினும் — ஏழை - அறிவிலன். எ-று. ※ தனிமை - சுற்றநட்புப்படை முதலானவை இல்லாமை. — மயக்கத்தால் அவ்விருவரும் ஒப்பாராயினும் பித்தங்கொண்டவர் அதனாலே தீங்கடையாமையால் தீங்கடைதலுமுடைய இவனை அவரினு மேழையென்றார். — தீங்காவது - துணையுள்ளவிடத்தும் வெல்லுதல் சந்தேகமாயிருக்க அத்துணையில்லாமலும் பலரோடும்பகைகொண்டு அவரால் வேறுவேறு போர் செய்யிடத்தும் ஒருமுகமாகப் போர்செய்யிடத்தும், அழிந்தேவிடுதல். [இவை மூன்றுபாட்டாலும் பகைகொள்ளுதற்குற்றம் பொதுவினும் சிறப்பினும் சொல்லப்பட்டது.]

பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன் ※
றகைமைக்கட் டங்கிற் றுலகு. - - - - - ௪.

இ - ள். பகை - பகையை — நட்பாக்கொண்டொழுகும் - (வேண்டியபோது வேறுபடுத்தித் தனக்கு) நட்பாகச்செய்துகொண்டுநடக்கும் — பண்புடையாளன் - இயல்புடைய அரசனது — தகைமைக்கண் - பெருமையுள்ளே — உலகு-உலகம் | — தங்கிற்று. எ-று. ※ வேறுபடுத்தல் - பகை நிலையினீக்குதல். ஒழுகல் - நீதிவழிநடத்தல். பெருமை - பொருள்படை என்கிறவிருவகை ஆற்றல். அதன் வழியதாதற்கு என்றும் வேறுபாடில்லாமையால் - அத்துணிவுபற்றி - தங்கிற்றென்றார்.

தன்றுணை யின்றாற் பகையிரண்டாற் றானொருவ *
னின்றுணையாக் கொள்கவற்றி னொன்று. - ௫.

இ-ள். தன்றுணை - தனக்கு உதவுந் துணையோவெனில்—இன்று - இல்லை.—பகை - (நலிவுசெய்யும்) பகையோவெனில்—இரண்டு.—(இப்படியிருக்கிறபோது)—தானொருவன் - ஒருவனாகியதான்— அவற்றின் - அப்பகையிரண்டனுள் — ஒன்று - (பொருந்தியதாகிய) ஒன்றை—இன்றுணையா - அப்போதைக்கு) இனிய துணையாக — கொள்க - (செய்து) கொள்ளக்கடவன். எ-று. ❊ பொருந்தியதாவது - மற்றதை வெல்லுதற்கு ஏற்றது—அப்பொழுது - அவ்வெல்லும்பொழுது.—வேறுபாடில்லாமல் செய்துகொள்கவென்றற்கு - யின்றுணையாகவென்றார். ஆவிரண்டும் - அசை. [இவை இரண்டுபாட்டாலும் நட்பாக்கற் றன்மையது சொல்லப்பட்டது.] (௫)

தேறினுந் தேறா விடினு மழிவின்கட் *
டேறான் பகாஅன் விடல். - - ௬.

இ-ள்- (பகைவன்) — தேறினும் - (முன்) தெளிந்தானாயினும் — தேறாவிடினும் - தெளிந்திலனாயினும்—அழிவின்கண் - (தனக்குப் புறத்தொருதொழிலால்) தாழ்வுவந்தவிடத்து—தேறான் - கூடானாகியும்—பகான் - நீங்கானாகியும் — விடல் - (நடுவே) விட்டுவைக்கக்கடவன். எ-று. ❊ முன் தெளிந்தானாயினும் அப்போது கூடாதொழிக வென்றது - உள்ளாய்நின்று கெடுத்தனோக்கி. — தெளிந்திலனாயினும் அப்போது நீங்காதொழிகவென்றது - அவ்வழிவிற்குத் துணையாதனோக்கி. [இதனால் அயலாக்குந் தன்மையது சொல்லப்பட்டது.]

நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க - *
மென்மை பகைவ ரகத்து. - - - ௭.

இ-ள். நொந்தது - நொந்ததனை—அறியார்க்கு - (தாமாக) அறியாத நட்பினர்க்கு—நோவற்க-(தன்) நோவுசொல்லாதிருக்கக்கடவன்.—மென்மை - வலியில்லாமையை—பகைவரகத்து (அதைப் பார்த்திருக்கும்) பகைவரிடத்து— மேவற்க-மேலிட்டுக்கொள்ளாதிருக்கக்கடவன். எ-று. ❊ பகைவரிடத்தே செய்யலாகாதது சொல்லவந்தவர் - நட்பினரிடத்தே செய்யலாகாததும் உடன்சொல்லினார். [இதனால் அவ்விருவரையிடத்தும் செய்வது சொல்லப்பட்டது.] (௭)

வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும் - ❀
பகைவர்கட் பட்ட செருக்கு. - - - அ.

இ-ள். வகையறிந்து - (தான் தொழில்செய்யும்) வகையை அறிந்து—தற்செய்து - (அதுமுடித்தற்கு ஏற்பத்) தன்னைப் பெருக்கி — தற்காப்ப - (மறந்து அடையாமல்) தன்னைக்காக்கவே—பகைவர்கண் - (தன்) பகைவரிடத்து—பட்ட - உண்டாகிய—செருக்கு - களிப்பு|—மாயும் கெடும். எ-று. ❀ வகை-வலியவனாய தான் நேரே போர்செய்விதமும், மெலியவனாயவளவிலே போர்விலக்கும் விதமும், முதலானவை.—பெருக்கல்-பொருள் படைகளாலே பெருகச்செய்தல் — களிப்பு - இவ்வழியால் வெல்வோமென்றெண்ணி மகிழ்ந்திருத்தல். இவ்விறுகுதல் அறிந்து தாமே அடங்குவரென்பதாம். [இதனாற் களையுந் தன்மை யதனிடத்துச் செய்வன சொல்லப்பட்டன.]

இளைதாக முண்மரங் கொல்க களையுநர் - - ❀
கைகொல்லுங் காழ்த்த விடத்து. - - - கூ.

இ-ள். முண்மரம் - (களையவேண்டுவதாகிய) முள்ளுமரத்தை—இளைதாக - இளைதாகிய நிலையிலே — கொல்க - களையக்கடவர்.—(அல்லாமல்)— காழ்த்தவிடத்து - முதிர்ந்தநிலையில்—(களையத்தொடங்கினால்) — களையுநர் - களைபவரது— கை - கையை—கொல்லும் - (அதுதானே) களையும். எ-று. ❀ (களையப்படுவதாகிய தம்பகையை அது மெலிதாகிய காலத்தே களைக அப்படிசெய்யாமல் வலிதாய காலத்திலே களையத்தொடங்கினால் தம்மை அப்பகைதானே களையுமென்பது தோன்ற நின்றமையால் இது பிறிது மொழிதலணி). [இதனாற் களையும் பருவம் சொல்லப்பட்டது.] (கூ)

உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர் - ❀
செம்மல் சிதைக்கலா தார். - - - ய.

இ-ள். செயிர்ப்பவர் - (தம்மோடு) பகைப்பவரது—செம்மல் - தருக்கை—(கெடுக்கலாயிருக்க) — சிதைக்கலாதார் - (இகழ்ச்சியால்) கெடுக்காதவரசர்| — உயிர்ப்ப - (பின்) மூச்சுவிடுமாத்திரத்திற்கும்—மன்ற - நிச்சயமாக— உளரல்லர் - இருக்கின்றவரல்லர். எ-று. ❀ அவர் வலியவராய்த் தம்மைக் களைதல் நிச்சயமாகலால் இறந்தாரே யாவரென்பதாம். [இதனாற் களையாவழிப்படும் இழுக்கம் சொல்லப்பட்டது.] (ய)

அஃதாவது - புறப்பகைக்கு இடமாக்கிக் கொடுத்து அது வெல்லுமளவும் உள்ளாய் நிற்கும்பகை. இதுவும் களையப்படுவதிலே சேர்ந்ததாகலால் பகைத்திறம் தெரிதலின் பின் வைக்கப்பட்டது.

நிழனீரு மின்னாத வின்னா தமர்நீரு - - - *
மின்னாவா மின்னா செயின். - - - - - க.

இ-ள், (ஒருவனுக்கு) — நிழனீரும் - (அனுபவிக்கப்படுவனவாகிய) நிழலும் நீரும் — இன்னாத - (முன் இன்பஞ்செய்வனவாயினும்பின்) நோய்செய்யுமவை | — இன்னா - இனியனவல்லவாம். — (அதுபோல்) — தமர்நீரும - (தழுவவேண்டுவனவாகிய) தம்மவரியல்புகளும் | — இன்னாசெயின - (முன் இன்பஞ் செய்வனவாயினும பின்) துன்பஞ் செய்யுமவை | — இன்னாவாம் - இனியனவல்லவாம், எ-று. ❋ நோய் பெருங்கால்-பெருவயிறுமுதலானவை. — தமரொணறதனால் - உட்பகையாதற்குரிய ஞாதிகளெனவறிக. இன்னாசெயல் - முன்வெளிப்படாதிருந்து துணைபெற்றவழி கெடுத்தல். (க)

வாள்போல் பகைவரை யஞ்சற்க வஞ்சுக - *
கேள்போல் பகைவர் தொடர்பு. - - உ.

இ-ள். வாள்போல் - வாள்போலே (வெட்டுவோமென்று வெளிப்பட்டுநிற்கும்) — பகைவரை — அஞ்சற்க - அஞ்சாதிருக்கக்கடவர். — (அப்படி நில்லாமல்) — கேள்போல் - உறவினர்போலே (மறைந்துநிற்கும்) — பகைவர் - பகைவரது — தொடர்பு - நட்பை — அஞ்சுக. எ-று. ❋ முன்னே அறிந்து காக்கப்படுதலால் - அஞ்சற்கவென்றும், அப்படி அறியவும் காக்கவுங் கூடாமையால் கெடுதல் நிச்சயமென்பது பற்றி அஞ்சுகவென்றும், சொல்லினர். — பின் செய்யும் பகையினும கொடிதாகலாலும், காக்குங்காலம் அதுவாகலாலும், அஞ்சப்படுவது முன்செய்த அவர் நட்பாயிற்று. [இவை இரண்டுபாட்டாலும உட்பகையாகாதென்பது சொல்லப்பட்டது.

உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து - *
மட்பகையின் மாணத் தெறும். - - - ௩.

இ-ள். உட்பகை - உட்பகையாயினோரை — அஞ்சி — தற்காக்க - தன்னைக்காத்துக்கொண்டு நடக்கக்கடவர். — (அப்ப

டி நடவாதபோது)—உலைவிடத்து - (தனக்கு) ஓர் தளர்ச்சிவ ந்தவிடத்து—மட்பகையின் - (குயவன்) மட்கலத்தை அறுக்கும் ஆயுதம்போல்—மாண - தப்பாமல்—தேறும் - (அவர்)கெடுப்பர். எ-று. ❊ காத்தல் - அவரணையாமலும், அவருக்கு உடம்படாமலும், பரிகரித்தல். பகைமை தோன்றாமல் உள்ளாயிருந்தே கீழறுத்தலால் கெடுதல் தப்பாதென்பதாம். (ங)

மனமாறு வுட்பகை தோன்றி னினமாறு ❊
வேதம் பலவுந் தரும். - - - - - - - ச.

இ-ள். மனமாறு - (புறந்திருந்தியது போன்று) அகந்திருந்தாத — உட்பகை — தோன்றின் - (அரசனுக்கு) உண்டாமாயின் —(அது|)—இனமாறு — சுற்றம் வசப்படாமைக்கு ஏதுவாகிய—ஏதம்பலவும் - குற்றம்பலவும்}—தரும் - (அவனுக்குத்) தரும். எ-று. ❊ அவை - சுற்றத்தாரை உள்ளாய் நின்று வேறுபடுத்தலும், அதனால் அவர் வேறுபட்டவிடத்தே தான் தேறாமையும், பின் அவைகளால் விளைவனவும், ஆம். ச

உறன்முறையா னுட்பகை தோன்றி னிறன்முறையா ❊
னேதம் பலவுந் தரும். - - - - - - ரு.

இ - ள். உறன்முறையான் - (புறத்தில்) உறவுமுறைத் தன்மையோடுகூடிய— உட்பகை — தோன்றின் - (அரசனுக்கு) உண்டாயின் — (அது|) — இறன்முறையான் - இறத்தன்முறைமையோடுகூடிய — ஏதம்பலவும் - குற்றம் பலவற்றையும்}—தரும் - (அவனுக்குக்) கொடுக்கும். எ-று. ❊ அவை-புறப்பகைக்குத் துணையாய்நின்றே அது தோன்றாமல் கொல்லுகை முதலாகிய வஞ்சனைசெய்தலும், மந்திரிகள் முதலாகிய அங்கங்களைத் தேய்த்தலும், முதலானவை. (ரு)

ஒன்றாமை யொன்றியார் கட்படி னெஞ்ஞான்றும் ❊
பொன்றாமை யொன்ற லரிது. - - - - சு.

இ - ள். ஒன்றாமை - பகைமை—ஒன்றியார்கண் (தனக்கு) உள்ளாயினரிடத்து— படின் - உண்டாகுமாயின் — பொன்றாமை - இறவாமை—ஒன்றல் - (அரசனுக்குக்கூடுதல்|—எஞ்ஞான்றும்-எந்நாளும்—அரிது. எ-று. ❊ பொருள்படைமுதலாகிய உறுப்புக்களாலே பெரியனாகிய காலத்தும் மென்றற்கு - எஞ்ஞான்றுமென்றார். [இவை நான்குபாட்டாலும் அதனால் தனக்கு வரும் தீங்குசொல்லப்பட்டது.] (சு)

செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங் கூடாதே
உட்பகை யுற்ற குடி. - - - ௭.

இ-ள். செப்பின் - செப்பினது — புணர்ச்சிபோல்— கூடினும் (புறத்தே வேற்றுமை தெரியாமற்)கூடினாராயினும் — உட்பகை—உற்ற - உண்டாகிய—குடி - குடியிலுள்ளார் — கூடாதே - (அகத்தேதம்முட்) கூடார்.எ-று. ❊ செப்பின் புணர்ச்சி - செப்பு மேன்மூடியோடு புணர்ந்த புணர்ச்சி.— அவர் உட்பகையால் மனம் வேறுபட்டமைபால் புறப்பகை பெற்றவிடத்தே வேறுவேறுவ ரென்பதாம். (௭)

அரம்பொருத பொன் போலத் தேயுமுரம் பொரு
துட்பகை யுற்ற குடி. - - - ௮.

இ-ள். (முன்வளர்ந்து வந்ததாயினும்) — உட்பகையுற்ற குடி — அரம்பொருத - அரத்தினாலே தேட்கப்பட்ட — பொன்போல - இரும்புபோல—பொருது - (அதனாலே)தேய்க்கப்பட்டு — உரம் - வலிமை — தேயும். எ-று. ❊ காரியஞ் செய்வதுபோன்று பொருந்தி மெல்ல மெல்லப் பரிசயித்தலால் வலிமைதேய்ந்து விடுமென்பதாம். [இவை இரண்டு பாட்டாலும் அவன்குடிக்குவருமதீங்கு சொல்லப்பட்டது.]

எட்பக வன்ன சிறுமைத்தே யாயினு - - ❊
முட்பகை யுள்ளதாங் கேடு. - - ௯.

இ-ள். உட்பகை - (அரசனது)உட்பகை — (அவன்பெருமையைநோக்க) — எட்பகவன்ன - எள்ளின் பிளவையொத்த — சிறுமைத்தேயாயினும் - சிறுமையுடையதேயாயினும் — கேடு - (அப்பெருமையெல்லாம் அழியவரும்) கேடு— உள்ளதாம்- (அத)னகத்ததாம். எ-று. ❊ மிகவும்பெரிய கேட்டுக்கு எல்லைவருமளவும் மிகவுஞ் சிறிய உட்பகை உள்ளே அடங்கியிருந்து வந்தால் வெளிப்பட்டு நிற்குமென்பதாம். [இதனலது சிறிதென்று இகழப்படாதென்பது சொல்லப்பட்டது.]

உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட் - ❊
பாம்போ டுடனுறைந் தற்று. - - ௰.

இ-ள். உடம்பாடிலாதவர் - மனப்பொருத்த மில்லாதவரோடு—வாழ்க்கை—(ஒருவன்) கூடிவாழும்வாழ்வு—குடங்கருள் - ஒருகுடிசையினுள்ளே—பாம்போடு—உடனுறைந்தற்

று - கூடிவாழ்ந்தாற்போலும். எ - று. ※ இடச்சிறுமையாலு
ம் பழக்கத்தாலும் பாம்பினாலே கடிக்கப்படுதல் நிச்சயமா
ம் ஆகவே அவ்வுவமையால் அவனுயிர்க்கு முடிவுவருதல் நிச்
சயமென்பது பெற்றாம். [இதனாலே கண்ணோட்டஞ்செய்யா
தவனைக்கடியக்கடவனென்பது சொல்லப்பட்டது.]          (௰)

-※-※-※-※-※-※-※-※-

௯௰-ஆம், அதி—பெரியாரைப்பிழையாமை.

அஃதாவது - பெரியாரயினாரை அவமதித்து நடவாமை
இரட்டுற மொழிதலாலே பெரியாரென்பது வலிமை
யினாலே பெரியராகிய வேந்தர்மேலும், தவத்தினாலே
பெரியராகிய முனிவர்மேலும், நின்றது. மேற்சொல்
லாமல் குறைந்து நின்றதாகலால் இது குரோதத்தால்
வருமவைகளது முடிவில் வைக்கப்பட்டது.

ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார் *
போற்றலு ளெல்லாந் தலை. - - - - க.

இ - ள். ஆற்றுவார் - (எடுத்துக்கொள்ளப்பட்டவை யாவு
ம் முடிக்க) வல்லாருடைய — ஆற்றல் - வல்லமைகளை — இக
ழாமை - அவமதியாமை|—போற்றுவார் - (தம்மிடத்துத் தீங்
குவாராமற்) காப்பவருடைய — போற்றலுளெல்லாம் - காவ
ல்களுக்குளெல்லாம் — தலை - மிகுந்தது. எ-று. ※ ஆற்றலென்
பது-பெருமை அறிவு முயற்சி என்கிற மூன்றின் மேலும் நி
ன்றது. இகழ்ந்தவிடத்தே தம்மைக் களையவல்லாரென்பது
தோன்ற -ஆற்றுவாரென்றும், அரண்படை பொருணட்புமு
தலாகிய மற்றைக் காவல்கள் அவரால் அழியுமாகலால் அவ்வி
கழாமையை - தலைமையானகாவலென்றும், சொல்லினார். [இ
தனாலே பொதுவகையால் அவ்விருவகைப் பெரியோர்க்கும்
பிழைசெய்யாமையது சிறப்புசொல்லப்பட்டது.]          (க)

பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாராற் *
பேரா விடும்பை தரும். - - - - உ.

இ-ள். (வேந்தர்) பெரியாரை - (வலிமைகளாலே) பெரிய
ராயினாரை—பேணாது - நன்குமதியாமல் (அவமதித்து)—ஒ
ழுகின்-நடப்பாராயின்— (அந்நடக்கையானது|) — பெரியா
ரால் - அப்பெரியரால்— பேராவிடும்பை - (எந்நாளும்) நீங்

காததுன்பங்களை}—தரும் - (அவருக்குக்) கொடுக்கும் எ-று. ※ அத்துன்பங்களாவன - இருமையிலும் ஓயாமல் வருகிறமூ வகைத் துன்பங்களுமாம். அவையெல்லாம் தாமே செய்து கொள்ளுகின்றவையென்பது தோன்ற ஒழுக்கத்தாரை வினைமு தலாக்கியும், பெரியாரைக் கருவியாக்கியும், சொல்லினார். [பொதுவகையால் அவர்க்குப் பிழைசெயற் குற்றம் இதனா ற்சொல்லப்பட்டது.] இனிச் சிறப்புவகையாற் சொல்லுவர். உ

கெடல்வேண்டிற் கேளாதுசெய்க வடல்வேண்டி*
னாற்று பவர்க ணிழுக்கு. - - - - - கூ.

இ-ள். அடல்வேண்டின் - (வேற்றுவேந்தனைக்) கொல்லு தல்வேண்டியவிடத்து — ஆற்றுபவர்கண் (அதனை அப்பொ ழுதே) செய்யவல்லவேந்தரிடத்து—இழுக்கு - பிழையை}— கெடல்வேண்டின் - (தான்) கெடுதல் வேண்டினானாயின்—கே ளாது - (நீதிநூலிலே சொல்லப்பட்டதைக்) கேளாமல்—செ ய்க- (ஒருவன்|)செய்யக்கடவன். எ-று. ※ நீதிநூல் அசெய லாகாதென்று சொல்லுதலாலே-கேளாதென்றார். (கூ)

கூற்றத்தைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க் *
காற்றாதா ரின்னா செயல். - - - - - ச.

இ-ள். ஆற்றுவார்க்கு - மூவகையாற்றலுமுடையவர்க்கு— ஆற்றாதார் - அவ்வாற்றலில்லாதவர்— இன்னா - இன்னாதவை களை—செயல்-(முற்பட்டுச்) செய்தல்|—கூற்றத்தை - (தானே யும்வருந்தன்மையனாகிய)கூற்றுவனை —கையால் - (அதற்குமு ன்னே)கைகாட்டி—விளித்தற்று - அழைத்தாலொக்கும். எ- று. ※ ஆல்-அசை. கையாலழைத்தல்-இகழ்ச்சிக்குறிப்பு. தா மேயும் உயிர்முதலானவைகளைக் கொள்ளுதற் குரியவனை அ தற்குமுன்னே விரைந்து தம்மேல் வருவித்துக்கொள்வாருக் கு மரணம திடமாகவும் சமீபமாகவும் வருமென்பது சொல் லியபடி. [இவை இரண்டுபாட்டாலும் வேந்தர்க்குப் பிழை செய்தலின் குற்றம் சொல்லப்பட்டது.] (ச)

யாண்டுச்சென் றியாண்டு முளராகார் வெந்துப்பின் *
வேந்து செறப்பட் டவர். - - - - ரு.

இ-ள். வெந்துப்பின் - வெவ்விதாகிய வலிமையையுடைய —வேந்து- வேந்தனால் — செறப்பட்டவர் - கோபிக்கப்பட் டஅரசர்|—யாண்டுச்சென்று - (அவனைத்தப்பி) எங்கேபோ

ய்(உளராவார்.)—யாண்டும் - எவ்விடத்தும்—உளராகார். எ-று. ※ வெவ்விய வலியுடைய அரசனுதலாலே அவனது நில
ம்விட்டுப் போனவர்க்கு இடங் கொடுப்பாரில்லை உளராகு
ல் இவர் இனி ஆகாரென்பது நோக்கி அவனோடு நட்புக்
கொள்ளுதற்பொருட்டும், தாமே வந்து அடைந்த அவருடை
மையை அபகரித்தற்பொருட்டும், கொல்லுவர் அன்றெனின்
உடனே அழிவரென்பனநோக்கி - யாண்டுச் சென்றியாண்டு
முளராகாரென்றார். [இதனுல் குற்றமுடையார் அருமைபு
டைய அரண்சேர்ந்து முய்யாரென்பது சொல்லப்பட்டது.]

எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார் - *
பெரியார்ப் பிழைத்தொழுகு வார். - - ௬.

இ-ள். (காட்டிடைச் சென்றுனொருவன்) — எரியால்-(அ
வ்விடத்துத்) தீயால்— சுடப்படினும்—உய்வு - (ஒருவழியா
ல்) உயிர்பிழைத்தல்|—உண்டாம்-கூடும்.— பெரியார் - (தவ
த்தாற்) பெரியார்க்கு — பிழைத்தொழுகுவார் - பிழைசெய்
துநடப்பவர் | — உய்யார் - (எவ்வழியாலும்) உயிர்பிழையா
ர். எ-று. ※ தீ முன் உடம்பைப் பற்றி அதுவழியாக உயிர்
மேலே செல்லுதலால் நடுவிலே உய்யவுங்கூடும் அருந்தவர்
கோபம் அப்படிப்பட்டதல்லாமல் தான் நிற்பது கணமாய்
அதற்குள் யாவர்க்கும் காத்தல் அரிதாகலின் அது கூடாதாக
லால் அதற்கு ஏதுவாகிய பிழை செய்யற்கவென்பதாம்.(௬)

வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு மென்னுந்
தகைமாண்ட தக்கார் செறின். - - - - ௭.

இ-ள். தகை - (சாபானுக்கிரகங்களுக்கு ஏதுவாகிய) பெ
ருமையால்—மாண்ட - மாட்சிமைப்பட்ட—தக்கார் - அருந்
தவர் —செறின் - (அரசனைக்) கோபிப்பாராயின்—வகை - அ
ங்கங்களால்—மாண்ட - அழகுபெற்ற — வாழ்க்கையும் - (அ
வ) னரசாட்சியும்| — வான்பொருளும் - (சம்பாதித்துவைத்
த)பெரும்பொருளும்|—என்னும்-என்படும்விடும். எ-று. ※
அங்கம்-அமைச்சு நாடு அரண் படை எனவிவை. செறினெ
ன்பது அவர் கோபியாமைதோன்ற நின்றது. பின்வருமவை
களுக்கும் இது ஒக்கும்- அரசன் தன் செல்வக்களிப்பால் அ
ருந்தவரிடத்துப் பிழை செய்வானுயின் அச்செல்வம் அவர்
கோபத்தீயால் ஒருகணத்துள்ளே வெந்துவிடு மென்பதாம்.

குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியொடு ❋
நின்றன்னார் மாய்வர் நிலத்து. ௮.

இ-ள். குன்றன்னார் - மலையையொக்குமருந்தவர் — குன்றகெட — மதிப்பின - நினைப்பாராயின் — நிலத்து - இந்நிலத்து — நின்றன்னார் - நிலைபெற்றாற்போலுள்ளசெல்வர் — குடியொடு - (தம்)குடியோடு — மாய்வர் - (அப்பொழுதே) மாய்வர். எ-று. ❋ வெயில் மழை முதலியவைகளைப் பொறுத்தலும், அசையாமையும், உள்ளிட்ட குணங்களுடைமையால் - குன்றன்னாரென்றார். — நிலைபெற்றாற்போலுதலாவது மிகவும் பெருஞ்செல்வமுடையோராதலால் இவர்க்கு எந்நாளும் அழிவில்லையென்று கண்டவரால் நினைக்கப்படுதல். (அ)

ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து ❋
வேந்தனும் வேந்து கெடும். ௯.

இ-ள். ஏந்தியகொள்கையார் - (காத்தற்கருமையால்) உயர்ந்தவிரதங்களையுடையார் — சீறின் — (அவர்வலிமையால்) — வேந்தனும் - இந்திரனும் — இடைமுரிந்து - நடுவே (தன்பதம்) இழந்து — வேந்து — கெடும் - கெடுவான். எ-று. ❋ இந்திரபதம்பெற்றநகுடன் பிழைசெய்து அகத்திய முனிசாபத்தால் அதனை இழந்தானென்பதறிக. [இவை நான்கு பாட்டாலு முனிவர்க்குப் பிழைசெய்தலின் குற்றம் சொல்லப்பட்டது.]

இறந்தமைந்த சார்புடையா ராயினு முய்யார் ❋
சிறந்தமைந்த சீரார் செறின். ௰.

இ-ள். சிறந்தமைந்த - மிகவும் அதிகமான — சீரார் - தவத்தையுடையவர் — செறின் - கோபிப்பாராயின் — (அக்கோபிக்கப்பட்டவர்) — இறந்தமைந்த - மிகவும் பெரிய — சார்புடையாராயினும் — உய்யார் - (அதுபற்றி) உய்யமாட்டார். எ-று. ❋ சார்பு - அரண் படை பொருள் நட்பு-ஆம். அவையெல்லாம கோபிப்பவரது வலிமையால் திரிபுரம்போல் அழிந்து விடுமாகலால் - உய்யாரென்றார். [இதனால் அக்குற்றமுடையவர் சார்புபற்றியும் உய்யாரென்பது சொல்லப்பட்டது.]

௯௧-ஆம், அதி — பெண்வழிச்சேறல்.

இனிக்காமத்தால் வருபவை நேரோபகையல்ல வாயினும்

ம் பெருக்கஞ்சிதைத்தல் அழிவைத்தருதல் என்கிறதொ ழில்களாலே பகையோடு ஒத்தலால் அவைகளைப் பகை ப்பகுதியின் முடிவிலே சொல்லத்தொடங்கி முதலிலே பெண்வழிச்சேறல் சொல்லுகிறார்.

அஃதாவது - தன்வழிநடத்தற்கு உரியவளாகிய மனைய வள் வழியே தான்நடத்தல்.

மனைவிழைவார் மாண்பய னெய்தார் வினைவிழைவார் * வேண்டாப் பொருளு மது. - - - - - - க.

இ-ள். மனைவிழைவார் - (இன்பகாரணமாகத்) தம்மனை யாளைவிரும்பி அவள்வழிநடப்பவர் | — மாண்பயன் - (தமக் கு) இனியதுணையாகிய அறத்தை — எய்தார் - அடையார். — வி னைவிழைவார் - பொருள் சம்பாதித்தலிலே முயல்பவர் — வே ண்டாப்பொருளும் - (அதற்கு விரோதமென்று) இகழும் பொருளும் | — அது - அவ்வின்பம். எ-று. ※ அவ்வின்பம். அவளது தன்மையராதற்கு ஏதுவானவின்பம். அது அவளா லே பயனாகிய அறத்திலும் அவ்வறத்திற்கும் தன் னதிகாரத்தி ற்கும் ஏதுவாகிய பொருளிலும் அவனைச் செல்லவிடாமை யால்-விடப்படுந் தன்மையதென்பதாம். (க)

பேணாது பெண்விழைவா னாக்கம் பெரியதோர் * நாணாக நாணுத் தரும். - - - - - உ.

இ-ள். பேணாது - (தன் ஆண்மையை) விரும்பாமல் — பெ ண்விழைவான் - (மனையவளது) பெண்மையை விரும்புவோ னது — ஆக்கம் - செல்வம் | — (இவ்வுலகத்து ஆண்பாலார்க்கெ ல்லாம்) — பெரியதோர்நாண் — ஆக - உண்டாக — நாணு - நா ணுதலை — தரும் - (தனக்கும்) கொடுக்கும். எ-று. ※ படைக் கும் வலிமையிலனாகலின் அச்செல்வத்தால் கொடுத்தலும் அ னுபவித்தலும் முதலாகிய பயன்கொள்வான் அவளாகலான் அ வ்வாண்மைச்செய்கை அவளிடத்ததாயிற்றென்று ஆண்பாலா ர் யாவரும் நாண அதனாலே தன்னாண்மையில்லாமை அறிந் து பின்னே தானும் நாணுவனென்பதுநோக்கி - பெரியதோ ர் நாணாக நாணுத்தருமென்றார். [இவை இரண்டுபாட்டானு ம் அவினை விழைதற் குற்றம் சொல்லப்பட்டது.] (உ)

இல்லாள்கட் டாழ்ந்த வியல்பின்மை யெஞ்ஞான்று * நல்லாரு ணாணுத் தரும். - - - - - - ௩.

இ-ள். (ஒருவன்) — இல்லாள்கண் - இல்லாளிடத்து — தாழ்

ந்தவியல்பின்மை - தாழ்தற்கு ஏதுவாகிய அச்சம் | — நல்லா ருள் - (அவ்வச்சமில்லாத) நல்லாரிடத்துச் (செல்லுங்கால்) — நாணு - நாணுதலை — என்ஞான்றும் - எந்நாளும் — தரும் (அவனுக்குக்)கொடுக்கும். எ-று. ❁ அவள் தனக்கு அஞ்சி நடத்தல் இயல்பாகலால் அவனுக்கு அஞ்சுதல் இயல்பில்லா மையாயிற்று. அப்படி அஞ்சி நடத்தலால் அவனை நியமிப்பா ரி இல்லையாம். ஆகவே எல்லாக்குற்றங்களும் விளையுமென்ப துநோக்கி-என்ஞான்றுநாணுந்தருமென்றார். (௩)

மனையாளை யஞ்சு மறுமையி லாளன்   -   -   -   *
வினையாண்மை வீறெய்த லின்று.   -   -   -   ௪-

இ-ள். மனையாளை-(தன்) மனையாளை — அஞ்சும் - அஞ்சிந டக்கின்ற — மறுமையிலாளன் - மறுமைப்பயனில்லாதவனு க்கு—வினையாண்மை - தொழிலையாளுந்தன்மை | (உண்டாகி யவழியும்) — வீறெய்தலின்று - (நல்லோராலே) கொண்டா டப்படாது. எ-று. ❁ இல்லறஞ் செய்தற்குரிய நன்மை இல் லாமையால் - மறுமையிலாளனென்றும், தொழிலையாளுந்தன் மை தனது புருஷத்தன்மை யில்லாத அவனுல் முடிவுபோகா மையால்-வீறெய்தலின்றென்றும், சொல்லினர். (௪)

இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்று   -   *
நல்லார்க்கு நல்ல செயல்.   -   -   -   -   -   ௫.

இ-ள். இல்லாளையஞ்சுவான்-(தன்) மனையாளை அஞ்சுவோ ன் — (தான் தேடியபொருளேயாயினும்) — நல்லார்க்கு — நல்லசெயல் - (அப்பொருளாலே) நல்லவைகள் செய்தற்கு— என்ஞான்றும்-எந்நாளும்—அஞ்சும் - அஞ்சாநிற்பன். எ-று. ❁ மற்று-அசைநிலை.—நல்லார்-அருந்தவர் சான்றோர் தாய்த ந்தைகள்முதலாயினோரும், விருந்தினரும், ஆம்.—நல்லசெ ய்தல்-அவருக்கு வேண்டுமவைகளைக் கொடுத்தல். அது செய் யவேண்டுநாள்களிலுமென்றற்கு-என்ஞான்றுமென்றார். (௫)

இமையாரின் வாழினும் பாடிலரே யில்லா   -   *
ளமையார்தோ ளஞ்சு பவர்.   -   -   -   -   ௬.

இ-ள். இல்லாள் - (தம்) மில்லாளுடைய— அமையார்தோ ள்- வேய்போலுந்தோளுக்கு — அஞ்சுபவர் | — இமையாரி ன்-(வீரத்தாலே சுவர்க்கமடைந்த) தேவர்போல் — வாழினு ம்-(இவ்வுலகத்து) வாழ்ந்தாராயினும்—பாடிலரே - ஆண்மை

-யிலர். எ - று. ※ தேவர்போல் வாழ்தலாவது - பகைத்தவீரர் தோள்களையெல்லாம வெல்லுதலால் நன்கு மதிக்கப்பட்டு வாழ்தல். அது கூடாமையால் - வாழினுமென்றார். அமையார் தோளென அஞ்சுதற் காரணத்தது எளிமை சொல்லியபடி. வீரரது தோள்களை வென்றாராயினும் இல்லாளது தோள்களை அஞ்சுவோர் ஆண்மையிலரென்பதாம். [இவை நான்கு பாட்டானும் அவளை அஞ்சுதற்குற்றம் சொல்லப்பட்டது.] ௬

பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னானுடைப் ※
பெண்ணே பெருமை யுடைத்து. - - - எ.

இ - ள். பெண் - இல்லாளது—ஏவல் - ஏவற்றொழிலை—செய் தொழுகும் - (நாணமில்லாமல்) செய்து திரிகின்றவனது—ஆண்மையின் - ஆண்டன்மையைக் காட்டிலும் — நாணுடை - நாணத்தையுடைய — பெண்ணே - (அவள்) பெண்டன்மையே| — பெருமை - மேம்பாட்டை} — உடைத்து. எ - று. ※ நாணுடைப் பெண்ணென அதிகமாகச் சொல்லியது - அவளேவல் செய்வோனது நாணில்லாமை முடித்தற்காதலால் - அது வருவிக்கப்பட்டது. — ஏவல் செய்வித்துக் கொள்ளு தற்சிறப்புத்தோன்ற - பெண்ணே எனப்பிரித்தார் (எ)

நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாட் ※
பெட்டாங் கொழுகு பவர். - - - - அ.

இ - ள். (தாம் வேண்டியபடியன்றி) — நன்னுதலாள் - (தம்) மனையாள் — பெட்டாங்கு - வேண்டியபடி — ஒழுகுபவர் - நடப்பவர்| — நட்டார் - (தம்மோடு) நட்புச்செய்தவரது — குறை - குறையை} — முடியார். — (அதுவல்லாமலும்) — நன்று - (மறுமைக்குத் துணையாகிய) அறத்தையும்} — ஆற்றார் - செய்யமாட்டார். எ - று. ※ நன்னுதலா ளென்பதனை அமையார் தோளென்றதுபோற் கொள்க. அவள் தானே அறிந்து ஏவுதலும் பொருள் கொடுத்தலும், கூடாமையால் இருமைக்கும் வேண்டுவன செய்யமாட்டா ரென்பதாம். (அ)

அறவினையு மான்ற பொருளும் பிறவினையும் - ※
பெண்ணேவல் செய்வார்க ணில். - - - ௯.

இ - ள். அறவினையும் - அறச்செயலும் | — ஆன்றபொருளும் - அது முடித்தற்கு ஏதுவாகிய பொருட்செயலும்| — பிறவினையும் - அவ்விரண்டின் வேறாகிய இன்பச் செயல்களும்}

பெண்ணேவல் - (தம்) மனைபாளேவலை — செய்வார்கண் — இல்-உண்டாகா. எ-று. ❀ இன்பச்செயல்களுக்கு அறச்செயல் பொருட்செயல்களை முன்னே ஒழிந்தார்க்கு தலைமை அவளிடத்திருத்தலால் பின் அச்செயல்களும் இல்லையென்பது தோன்ற - அவைகளைப்பிரித்துச் சொல்லினார். [இவைமூன்று பாட்டாலும் அவளேவல்செய்தற்குற்றம் சொல்லப்பட்டது.]

எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கென்றும் ❀
பெண்சேர்ந்தாம் பேதைமை யில். - - ௰.

இ-ள். எண்சேர்ந்த - (கரும) வாலோசனையிலே சென்ற —நெஞ்சத்து - மனத்தையும்—இடன் -(அதனாலாகிய) செல்வத்தையும் — உடையார்க்கு — பெண்சேர்ந்தாம் - மனையாளைச் சேர்தலால் விளையும—பேதைமை | — என்றுமென்றும்- எககாலத்தும் —இல் உண்டாகாது.எ-று. ❀ இல்லாமைக்காலத்து மென்றற்கு - என்றுமென்று மென்றார். அப்பேதைமையாவது - மேற்சொல்லிய - விழைதல் அஞ்சல் ஏவல்செய்தல் என்கிற மூன்றற்கும் காரணமாகியது. [எதிர்மறை முகத்தால் அம்மூன்றும் இதனால் தொகுத்துச் சொல்லப்பட்டன.]

❀❀❀❀❀❀❀❀❀❀❀❀❀❀❀❀❀❀❀❀❀❀❀❀

## ௯௨-ஆம்.அதி—வரைவின்மகளிர்.

அஃதாவது - தந்நலம் விலைகொடுப்பவர் யாவர்க்கும் விற்பதல்லது அதற்கு ஆவார் ஆகாதார் என்கிற வரைவில்லாதமகளிரது இயல்பு. ஆதலால் தமக்குரிய மகளிரால் வருங்குற்றத்தின் பின் வைக்கப்பட்டது.

அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியார் ❀
இன்சொ லிழுக்குத் தரும். - - - க.

இ-ள். அன்பின்விழையார் - (ஒருவனை) அன்புபற்றிவிரும்பாராகி—பொருள்விழையும் - பொருள்பற்றிவிரும்பும் — ஆய்தொடியார் - மகளிர் — இன்சொல் - (அதுகைவருமளவும் அன்புபற்றி விரும்பினாராகச் சொல்லும்) இனியசொல்| — இழுக்கு - இன்னாமையை — (அவனுக்குத்)—தரும் எ-று. ❀ ஆய்தொடி - ஆராய்ந்தவளையல், — ஆய்தொடி - இன்சொல் - என்றதனால் அவர்மயக்குஞ் சாதனம் சொல்லப்பட்டது. அ

ச்சொல் அப்பொழுது இனிதுபோன்று பின் வறுமையை உண்டாக்கலால் அது கொள்ளலாகாதென்பதாம். (க)

பயன்றூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர் * நயன்றூக்கி நள்ளா விடல். - - - - உ.

இ-ள். பயன்றூக்கி-(ஒருவனுக்கு உள்ள) பொருளை அளந்தறிந்து — பண்புரைக்கும் - (அது கிடைக்குமளவும்) தமது குணமுடைமை சொல்லும் — பண்பின்மகளிர் - குணமில்லாத மகளிரது — நயன்றூக்கி - நடக்கைவழியை ஆராய்ந்தறிந்து—நள்ளா - (அவரைப்) பொருந்தாமல்— விடல் - விடக்கடவர். எ - று. ☼ பண்பு சொல்லிலல்லது அவரிடத்தில்லாமைதோன்ற - பண்பின்மகளிரென்றும், அது சாதிதருமமாதலால் நூலாலே யல்லாமல் அவர்செயலாலும் அறிந்தென்றற்கு-நயன்றூக்கி யென்றும், அவ்வாறு அவரை விடுதற்கு உபாயமென்பதுதோன்ற - நள்ளாவிடலென்றும், சொல்லினார்.

பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையி* லேதில் பிணந்தழீஇ யற்று. - - - - ௩.

இ - ள். பொருட்பெண்டிர் - (கொடுப்பாரை விரும்பாது பொருளையே விரும்பும்) பொதுமகளிரது — பொய்ம்மை-பொய்மையையுடைய—முயக்கம் - தழுவுதல்| — (பிணமெடுப்பவர்) — இருட்டறையில்—ஏதில்பிணம் - முன்னறியாதபிணத்தை—தழீஇயற்று - தழுவினாற்போலும். எ - று. ☼ பொருளுக்குத் தழுவும் பரத்தையர் - சருத்தும் செயலும் ஆராயாமல் சாதியும் பருவமும் ஒவ்வாதானைக் கூடும்போது அவர்குறிப்பு - கூலிக்குப் பிணமெடுப்பவர் காணப்படாத ஓரிடத்திலே சம்பந்தமில்லாத ஒருபிணத்தை எடுக்கும்போது இவர்குறிப்போடொக்கும் எனவே அகத்தால் அருவராநின்று பொருளை நோக்கிப் புறத்தால் தழுவுவர் அதனை ஒழியக்கடவரென்பதாம். [இவை மூன்றுபாட்டாலும் அவர்சொல்லும் செயலும் பொய்யென்பது சொல்லப்பட்டது.] (௩)

பொருட்பொருளார் புன்னலந் தோயா ரருட்பொரு* ளாயு மறிவி னவர். - - - - - - - ச.

இ-ள். பொருட்பொருளார் - (இன்பமாகிய பொருளை இகழ்ந்து) பொருளாகிய பொருளையே விரும்புமகளிரது — புன்னலம் - புல்லியநலத்தை} — அருட்பொருள் - அருளோடு

கூடியபொருளை—ஆய்ம் - ஆராய்ந்து சம்பாதிக்கும் — அறிவினவர் - அறிவையுடையவர் | —தோயார்-தீண்டார். எ-று. ※ அறமுதலாகிய நான்கும் பொருளெனப்படுதலால் - பொருட்பொருள் அருட்பொருள் எனவிசேடித்தார். — புன்மைஇழிந்தார்க்கே உரித்தாதல். — தாம் விரும்புகின்ற அறத்திற்கு அவர் மெய்ந்நலம் விரோதமாகலால் - தோயாரென்பதாம்.

**பொ**துநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின் ※
மாண்ட வறிவி னவர். - - - - - - ௫.

இ-ள். மதிநலத்தின் - (இயற்கையாகிய) மதிநன்மையால் —மாண்ட-மாட்சிமைபட்ட—அறிவினவர் - (செயற்கை) யறிவையுடையவர் | —பொதுநலத்தார் - (பொருள் கொடுப்பவர்க்கெல்லாம்) பொதுவாகிய ஆசையையுடைய மகளிரது—புன்னலம் - புல்லியநலத்தை? — தோயார் - தீண்டார். எ-று. ※ மதிநன்மை முற்பிறப்பிலே செய்த நல்வினைகளால் மனந் தெளிவுடைத்தாதல். அத்தெளிவின்றல்லாமல் கற்கல்வியறிவு மாட்சிமைப்படாமையால் - மதிநலத்தின் மாண்டவறிவினவரென்றும், அவ்வறிவுடையார்க்கு அவராசையது பொய்மையும், மெய்ந்நலம் பலருக்கும் பொதுவாயிருக்கையும், விளங்கித் தோன்றலால்-தோயாரென்றுஞ்சொல்லினார். ௫.

**த**ந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப் - ※
புன்னலம் பாரிப்பார் தோள். - - - - - ௬.

இ-ள். தகை-ஆடல்பாடல் அழகென்பவைகளாலே — செருக்கி-களித்து — புன்னலம் - (தம்) புல்லியநலத்தை—பாரிப்பார் - (விலை கொடுப்பவர்க்கெல்லாம்) பரப்பு மகளிரது— தோள் - தோளை? —தந்நலம் - (அறிவொழுக்கங்களாலாகிய) தமது புகழை — பாரிப்பார் - (உலகத்தே பரப்புதற்குரிய) உயர்ந்தோர் | — தோயார் - தீண்டார். எ - று. ※ ஆடன்முதலிய மூன்று முடைமை அவர்க்கு மேம்பாடாகலால் தகையென்றும், தோய்ந்தால் அறிவொழுக்கங்கள் அழியுமாகலால் - அவ்வறிவொழுக்கங்களாலே புகழ் பரப்புவோர் தோயாரென்றும், சொல்லினார். [இவை மூன்றுபாட்டானும் அவரை உயர்ந்தோர் தீண்டாரென்பது சொல்லப்பட்டது.] (௬)

**நி**றைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சிற் - ※
பேணிப் புணர்பவர் தோள். - - - - - எ.

இ-ள். நெஞ்சின்-நெஞ்சினால்—பிற - வேறுபொருள்களை,

—பேணி - ஆசைப்பட்டு— (அவை கொடுப்பவரை)— புணர் பவர் - (அவ்வகாரணமாக மெய்யினாலே) புணருமகளிரது — தோள் - தோள்களை } — நிறைநெஞ்சமில்லவர் - நிறக்கச்செய்த விருலே (திருந்திய) நெஞ்சமில்லாதவர் | — தோய்வர். எ-று. ※ பொருளும், அதனால் படைக்கப்படுவனவும், விரும்புகிற நெஞ்சு அவைமே விருத்தலால் புணர்வது அவருடம்புமாத் திர மென்பதறிந்து அதன்வழி ஓடாது நிற்கு நெஞ்சையுடை யார் தோயாமையால் - அஃதில்லாதார் தோய்வரென்றார். (எ)

ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப - - ✻
மாய மகளிர் முயக்கு. - - - - - அ.

இ - ள். மாயமகளிர் - (உருவுசொற்செயல்களால்) வஞ்சித் தல்வல்லமகளிரது—முயக்கு - புணர்ச்சியை }—ஆயும் - (அ வ்வஞ்சனையை) ஆராய்ந்தறியும் — அறிவினரல்லார்க்கு - அறி வுடையவரல்லாதவர்க்கு—அணங்கு - அணங்குதாக்கு — என் ப - என்று (நூலோர் | ) சொல்வர்-எ-று. ※ அணங்கு - காமவ ழியால் உயிர்கொள்ளுந் தெய்வமகளிர், — தாக்கு - தீண்டல். இவ்வுருவகத்தால் - அப்புணர்ச்சி முன்னே இனிதுபோலத் தோன்றிப் பின்பு உயிர்கொள்ளுதல்பெற்றும். இது நூலோ ர் துணிவென்பது தோன்ற அவர்மேல் வைத்துச்சொல்லினார்.

வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப் ✻
பூரியர்க ளாழு மளறு. - - - - - - கூ.

இ-ள். வரைவிலா - (உயர்ந்தோர் இழிந்தோரென்னுது வி லைகொடுப்பவர்யாவரையும்) கூடும்—மாணிழையார் - மாட்சி மைப்பட்ட ஆபரணத்தையுடையவரது —மென்றோள் - மெ ல்லியதோள்கள் | —புரையிலா - (அக்குற்றத்தை அறியும்) அறி வில்லாத—பூரியர்கள் - கீழ்மக்கள் | —ஆழும் - (புகுந்து) அழு ந்தும்—அளறு-நரகமாம். எ - று. ※ சாதியாலிழிந்தாரை நீ க்குதற்கு - புரையிலாப்பூரியர்களென்றும், அவராழ்தற்கேது உருவுமுதலாகிய மூன்றுமே யென்பதுதோன்ற - மாணிழை யார் மென்றோளென்றும். அவர்க்கு நரகத்தைத் தடையில்லா மல் தருமென்பது தோன்ற உருவகமாக்கியும், சொல்லினார்.

இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந் - - ✻
திருநீக்கப் பட்டார் தொடர்பு. - - - ௰.

இ-ள். இருமனப் பெண்டிரும் - இருவர்மனத்தையுடைய மக

விரும்|—கள்ளும்|—கவறும்-சூதும்|—திரு-திருமகளால்—நீக்கப்பட்டார்-விடப்பட்டவர்க்கு—தொடர்பு-நட்புகளாம். எ-று. ❁ இருமனம்-ஒருவனோடு கூடுதலும், கூடாமையும், ஒருகாலத்திலே புடையமனம்.—கள்ளும் சூதும் பரத்தையர்க்குச் சமானமானகுற்ற முடையவையாகலாலே உடன்சொல்லப்பட்டன. வருகின்ற அதிகாரமுறைமையும் இதனாலே அறிக.—திருநீக்கப்பட்டமை இவ்வுடையாளங்களால் அறியப்படுமென்பதாம். — [இவை நான்குபாட்டாலும் அது செய்பவர் இழிவுறுமென்பது சொல்லப்பட்டது.] (ய)

## ௯௩-ஆம், அதி—கள்ளுண்ணாமை.

அஃதாவது-இனி ஒழுக்கமும் உணர்வும் அழித்தலில் பரத்தையரோடு ஒப்பதாகிய கள்ளினை உண்ணாமையது சிறப்பு. எதிர்மறை முகத்தாலே சொல்லுகிறார்.

உட்கப்படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங் - ❁
கட்காதல் கொண்டொழுகு வார். - க.

இ-ள். கட்காதல் கொண்டு-கள்ளின்மேல் ஆசைகொண்டு—ஒழுகுவார்-நடக்குமரசர் | — எஞ்ஞான்றும் - எந்நாளும்—உட்கப்படார் - (பகைவரால்) அஞ்சப்படார். — (அதுவேயல்லாமல்) — ஒளி - (முன்பெற்றுநின்ற) ஒளியையும்—இழப்பர். எ-று. ❁ அறிவில்லாமையால் பொருள்படை முதலியவைகளால் பெரியராகிய காலத்தும் பகைவர் அஞ்சார் தம்முன்னோராலே அடைந்த ஒளியும் இகழப்படுதலால் இழப்பரென்பதாம். [இவை இரண்டாலும் அரசநீதி இனிது செல்லாதென்பது இதனாலே சொல்லப்பட்டது.] (க)

உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரா - ❁
னெண்ணப் படவேண்டா தார். - - - உ.

இ-ள். (அறிவுடையராயினோர்)|—கள்ளை - (அவ்வறிவுகெடுதற்கு ஏதுவாகிய) கள்ளினை — உண்ணற்க - உண்ணாதிருக்கக்கடவர். — உணில் - உண்ணவேண்டுவா ருண்டாயின் — சான்றோரான் - நல்லோரால் — எண்ணப்படவேண்டாதார் |—உண்க-உண்ணக்கடவர். எ-று. ❁ பெறுதற்கரிய அறிவைப்பெற்றிருந்தும் கள்ளால் அழித்துக் கொள்ளுவாரை இயல்பாக

வே அறிவில்லாத மிருகங்களுடனேயும் எண்ணு ராகலால்-சான்றோராலெண்ணப்படவேண்டாதாருண்கவென்றார். (௨)

ஈன்றாண் முகத்தேயு மின்னாதா லென்மற்றுச் - ✻
சான்றோர் முகத்துக் களி. - - - - - ௩.

இ-ள். ஈன்றாண்முகத்தேயும் - (எது செய்தாலும் மகிழு ம்) தாய்முன்பாயினும்—களி - (கள்ளுண்டு) களித்தல்|—இ ன்னாது - துன்பஞ்செய்வதாம். — (ஆதலால்) — மற்றுச்சா ன்றோர்முகத்து - பின் (குற்றம் யாதும்பொறாத) பெரியோ ர் முன்பு—(அக்களித்தல்|)—என் - (அவர்க்கு) யாதாகும். எ-று- ✻ ஆல் - அசை. மனமொழி மெய்கள் தம வசப்படாமை யால் நாணம் அழியும் அழியவே தாய்க்கும் இன்னாதானகள் - இருமையும் கெடுத்தலறிந்து தூரத்தே கடியும பெரியோர் க்கு இன்னாதாகல் சொல்லவேண்டுமோவென்பதாம். (௩)

நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும் ✻
பேணாப் பெருங்குற்றத் தார்க்கு. - - - ௪.

இ-ள். கள்ளென்னும்—பேணா- (யாவரும்) இகழும்—பெ ருங்குற்றத்தார்க்கு - மிகுந்த குற்றத்தை யுடையவர்க்கு—நா ணென்னு நல்லாள் - நாணமாகிய நல்லவள் | — (அவரைப் பார்த்தற்கு அஞ்சி) — புறங்கொடுக்கும் - எதிர் முகமாகா ள். எ-று. ✻ காணுதற்கும் அஞ்சி)—உலகத்தார் தூரத்தே நீங் குவர் ஆதலால் பேணாவென்றும், பின்னொருவழியிலும் நீக்க ப்படாமையால் - பெருங்குற்றமென்றும் இழிந்தோரிடத் து நில்லாமையால் - நல்லாளென்றும், சொல்லினார். [இவைமூ ன்றுபாட்டாலும் ஒளியிழத்தற்காரணம் சொல்லப்பட்டது.]

கையறியா மையுடைத்தே பொருள் கொடுத்து ✻
மெய்யறி யாமை கொளல். - - - - ௫.

இ-ள். (ஒருவன்) — பொருள்கொடுத்து - விலைப்பொரு ளைக்கொடுத்து— மெய்யறியாமை - (கள்ளாலேதனக்கு) மெ ய்மறதியை — கொளல் - கொள்ளுதல் | — கையறியாமை- (அவன் பழவினைப்பயனாகிய) செய்வ தறியாமையை — உ டைத்து -(தனக்குக் காரணமாக) உடைத்து. எ-று. ✻ தன் னையறியாமை சொல்லவே மற்றவை யாவையும் அறியாமை சொல்ல வேண்டாவாயிற்று. அறிவார் விலைகொடுத்து ஒன் றைக்கொள்ளுங்கால் தீயதைக் கொள்ளாமையால் - மெய்யறி

பாமைகொளல் முன்னையறியாமையால் வந்ததென்பதாம். ரு

துஞ்சினார் செத்தாரின் வேறல்ல ரெஞ்ஞான்று ❋
நஞ்சுண்பார் கள்ளுண் பவர். - - - - சா.

இ-ள். துஞ்சினார் - உறங்கினவர் — செத்தாரின் — வேறல்லர் - (வேறாயினும் அக்காலத்தே அறிவில்லாமையால்) வேறெனப்படார். — (அப்படியே) — கள்ளுண்பவர் | — எஞ்ஞான்றும் - எக்காலத்தும் — நஞ்சுண்பார் — (அறிவில்லாமையால்) — நஞ்சுண்பவரோயாவர் (அவரின் வேறாயினும் வேறெனப்படார்) . எ - று. ❋ உறங்கினவர்க்கும், கள்ளுண்பவர்க்கும், வேற்றுமை மூச்சுநிற்றல். [இவை இரண்டுபாட்டாலும் அவர் அறிவிழத்தலின் குற்றம் சொல்லப்பட்டது.] (சா)

உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவ ரெஞ்ஞான்றுங் ❋
கள்ளொற்றிக் கண்சாய் பவர். - - - எ.

இ-ள். கள்ளொற்றி - கள்ளைமறைந்து (குடித்து)—கண்சாய்பவர் - (அக்களிப்பால்) அறிவுசோர்பவர்}—உள்ளூர் - உள்ளூர்வாழ்பவரால்|—உள்ளொற்றி - உள்ளே நடக்கிற காரியத்தை ஆலோசித்து அறிந்து—எஞ்ஞான்றும் - எந்நாளும்—நகப்படுவர் - சிரிக்கப்படுவார். எ-று. ❋ உய்த்துணர்தல் - சோர்வினாலே களிப்பினை அறிந்து அதனால்கள்ளுண்டதை அறிதல்.

களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத் - ❋
தொளித்ததூஉ மாங்கே மிகும். - - - அ.

இ-ள். களித்தறியேனென்பது - (மறைந்துண்டு) கள்ளுண்டறியேனென்று (உண்ணுதபொழுது தம்து ஆசாரஞ்) சொல்லுதலை}—கைவிடுக -. விடக்கடவர். — (அவ்வுண்டபொழுதே) நெஞ்சத்தொளித்ததூஉம்-(முன் பிறர்அறிந்தால் இழுக்காமென்று) மனத்தில் ஒளித்த குற்றமும்|—ஆங்கே மிகும் முன்னையளவின் மிகுந்துவெளிப்படும்(ஆதலால்). எ-று. ❋ [இவை இரண்டு பாட்டாலும் அது மறைக்கப்படாதென்பது சொல்லப்பட்டது.] (அ)

களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க் - - ❋
குளித்தானைத் தீத்துரீஇ யற்று. - - - கூ.

இ-ள். களித்தானை - (கள்ளுண்டு) களித்த ஒருவனை—காரு

ணங்காட்டுதல்-(இதுஆகாதென்று மற்றொருவன்) காரணங்கா ட்டித்தெளிவித்தல் |—நீர்நீர்க்குளித்தானை - நீருள்ளே மூழ் கிய ஒருவனை—தீ- விளக்கினால்—துரீஇயற்று - (மற்றொருவ ன்) தேடுதலையொக்கும். எ-று. ❋ நீருள் விளக்குச்செல்லா மைபோல் அவன்மனத்துள் காரணம் செல்லா தென்பதாம் [இதனாலவனைத்தெளிவித்தல் முடியாமைசொல்லப்பட்டது.]

கள்ளுண்ணாப் போழ்திற் களித்தானைக் காணுங்கா ❋
லுள்ளான்கொ லுண்டதன் சோர்வு. - - - ௰.

இ-ள். (கள்ளுண்பவனொருவன்) — கள்ளுண்ணாப்போழ் தில்-கள்ளையுண்ணாமல் தெளிந்திருந்தபொழுதில் — களித்தா னை - (கள்ளுண்டு) களித்த பிறனை—காணுங்கால் — உண்டத ன்சோர்வு-(தான்) உண்டபொழுது உண்டாந்தன்சோர்வை — உள்ளான்கொல்-(அவன்சோர்வால் அதுவும் இப்படிப்ப ட்டதென்று) நினையான்போலும். எ-று. ❋ சோர்வு மன மொழிமெய்கள் தன் வசப்படாமை. [கருத்தளவையால் - அதனிழுக்கத்தை ஆலோசித்து அறிந்தால் ஒழியுமென இத னால் அது ஒழிதற்காரணம் சொல்லப்பட்டது.] (௰)

-❋-❋-❋-❋-❋-❋-❋-❋-❋-❋-❋-❋-❋-❋-❋-❋-❋-

௯௪-ஆம், அதி—(

அஃதாவது - இனி அக்கள்ளுண்டல்போல் அறம் பொ ருளின்பங்களுக்குத் தடையாகிய சூதாடலும் பிணிய னுபவித்தலும் சொல்லத்தொடங்கி முதலிலே சூதின து இயல்பு சொல்லுகின்றார்.

வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந் ❋
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று. - க.

இ-ள். வென்றிடினும்-(தான்) வெல்லும்வலிமை யுடைய னாயினும்—சூதினை - சூதாடுதலை—வேண்டற்க- விரும்பாதி ருக்கக்கடவன். — (வென்றுபொருள் பெறுவார் உண்டென் றால்)—வென்றதூஉம் - அவ்வென்றபொருளும் |— தூண்டி ற்பொன் -(இரையால்மறைந்த) தூண்டிலிரும்பை — மீன்வி ழுங்கியற்று - மீன்விழுங்கியதுபோலும். எ - று. ❋ வெல்லு தல் நிச்சயமல்லாமையால் - வென்றிடினுமென்றும், கருமங் கள் பலவுங்கெடுதலால் - வேண்டற்கவென்றும், சொல்லினார்.

எய்துவதாய பொருள், சூதாடுவார் நீங்காமைக் கிட்டதனை யென்ப தூம், அதனாலே பின் துயருழத்தலும், உவமையாற் பெற்றாம்.

ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்கொ ✻
னன்றெய்தி வாழ்வதோ ராறு. - - - - உ.

இ-ள். ஒன்றெய்தி - (அத்தூண்டி லிரும்புபோன்ற) ஒன்ற னைமுன்பெற்று — (இன்னம் பெறுவோமென்னுங் கருத்தா ல்)— நூறிழக்கும் - நூற்றினை இழந்துவறியராகும் — சூதர்க் குமு — நன்றெய்தி - (அப்பொருளால்) அறமுமின்பமும் பெ ற்று — வாழ்வதோராறு - வாழ்வதொருவழி — உண்டாங்கொ ல்-உண்டாமோ. எ-று. அவ்வழியால் பொருளிழந்தே வருத லால் அதனாலேபெறும்பயனும் அவர்க்கு இல்லையென்பதாம்.

உருளாய மோவாது கூறிற் பொருளாயம் • ✻
போஒய்ப் புறமே படும். - - - - - ௩.

இ-ள். உருளாயம்-உருளுங் (கவற்றில் அகப்பட்ட) ஆதாய த்தை — ஓவாது - இடைவிடாமல் — கூறின்-சொல்லிச் (சூதாடு) மாயின் — பொருள் - (அரசன் சம்பாதித்த) பொருளும் | — ஆ யம்-(அவன்) பொருள்வருவழியும் | — போய் - (அவனைவிட்டு ப்)போய் — புறமேபடும் - பகைவரிடத்தேதங்கும். எ-று. ✻ கவற்றினுருட்சியை அதனாலாகிய ஆயத்தின்மேல் ஏற்றியும், சூதாடுதலை அதுசொல்லலாகிய காரணத்தின்மேலிட்டும், சொ ல்லினார்.—காத்தலினும், செய்தலினும், கருத்திலனாகலால் அ வை இரண்டும் பகைவரிடத்தே செல்லுமென்பதாம். (௩)

சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின் - - ✻
வறுமை தருவதொன் றில். - - - - - ௪.

இ-ள். சிறுமைபல-(முன்னில்லாத) — துன்பங்கள்பலவும் — செய்து - (தன்னைவிரும்பினவர்க்குச்) செய்து — சீர்-(உள் ள)புகழையும் — அழிக்கும் — சூதின் - சூதுபோல் — வறுமை- வறுமையை — தருவது - கொடுக்கவல்லது — ஒன்று - வேறொ ன்று | — இல் - இல்லை. எ-று. ✻ அத்துன்பங்கள் பின்னே சொல்லப்படும் — நல்வினைகளையும், நல்லினத்தினையும், நீக் கி - தீவினைகளையும், தீயினத்தினையும், கூட்டுதலால்-சீரழிக்கு மென்றார். சூதாடுவோர் வறுமைக்கு எல்லையாவரென்பதாம்.

கவறுங் கழகமுங் கையுந் தருக்கி - - - - ✻
யிவறியா ரில்லாகி யார். - - - - - - ரு.

இ-ள். இல்லாகியார் - (முற்காலத்திலே தாம் இருந்தும்) இல்லாதவராயொழுகினவர் | — கவறும் - சூதினையும் — கழகமும் - அதையாடுமிடத்தினையும் — கையும் - (அவ்வாடுதற்கு வேண்டுங்) கைத்தொழிலினையும் — தருக்கியிவறியார் - மேற்கொண்டு கைவிடாதவேந்தர். எ-று. ❋ கைத்தொழில் - வெல்லும்படி பிடித்தெறிதல். மேற்கொள்ளுதலாலே பாண்டவர் தம்மரசிழந்து காட்டிலே போய் அங்கே மறைந்தொழுகினோன அனுபவங்காட்டியபடி. [இவை ஐந்துபாட்டானும் அதனது வறுமையுண்டாக்கற் குற்றம் சொல்லப்பட்டது.]

அகடாரா ரல்ல லுழப்பர்சூ தென்னு - - - ✻
முகடியான் மூடப் பட்டார். - - - - சா.

இ-ள். சூதென்னும் - (தனது பெயர்சொல்லல் மங்கலமல்லாமையால்) சூதென்று வேறுபெயர் சொல்லப்படுகிற — முகடியால் - மூதேவியால் — மூடப்பட்டார் - விழுங்கப்பட்டவர் | — அகடாரார் - (இம்மையிலே) வயிறு நிறையப்பெறார். — அல்லலுழப்பர் - (மறுமையிலே) நரகத்துன்பமனுபவிப்பர். எ-று. ❋ செல்வங்கெடுத்து வறுமைகொடுத்தற்றொழில் வேறுபடாமையால் - சூதென்னு முகடியென்றும், வெற்றி தோற்பு நோக்கி ஒருபொழுதும் விடாராகலால், இங்கே அகடாராரென்றும், பொய் களவுமுதலாகிய பாவங்கள் சம்பாதித்தலால் - அங்கே அல்லலுழப்பரென்றும், சொல்லினார். — வயிறாராமை சொல்லவே மற்றை ஆடையணிமுதலாகிய புலன்களை அனுபவிக்கப்பெறாமைசொல்ல வேண்டாவாயிற்று. (சா)

பழகிய செல்வமும் பண்புங் கெடுக்குங் - - ✻
கழகத்துக் காலை புகின். - - - - - எ.

இ-ள். காலை - (அறம்பொருளின்பங்களுக்கு விதித்த) காலம் — கழகத்து - சூதாடுமிடத்து — புகின் (அரசனுக்குக்) கழியுமாயின் — (அக்கழிவு|) — பழகிய - நெடுநாளாய்வந்த — செல்வமும் - (அவன்) செல்வத்தையும்} — பண்பும் - நற்குணங்களையும்} — கெடுக்கும். எ-று. ❋ தான் செய்துகொள்ளும் அறமுதலானவை மாத்திரமல்லாமல் முன்னோரைத்தொடங்கி வருகின்ற செல்வமும், முன்செய்த நல்வினையினாலாகிய நற்குணங்களும் இல்லாமற்போமென்பதாம். (எ)

**பொ**ருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ யருள்கெடுத் ❋
தல்லல் லுழப்பிக்குஞ் சூது. - - - - ௮.

இ-ள். சூது—பொருள்கெடுத்து - (தன்னைப்பழகினவனது) பொருளைக்கெடுத்து—பொய் - பொய்யை—மேற்கொளீஇ - மேற்கொளப்பண்ணி — அருள்கெடுத்து - (மனதில் எழுகிற) அருளைக்கெடுத்து—(இவ்வழியால்) — அல்லலுழப்பிக்கும் - (அவனை இருமையிலும்) துன்பமுறுவிக்கும். எ-று. ❋ பொருள் கெடுத்தல்முதலாகிய மூன்றும் சூதினுடைய தொழில்களாகவும், அவைகளுக்கு - தோற்பு வெற்றி கோபம் என்பன முறையே சாதனங்களாகவும், கொள்க.—முன்னையதால் இம்மையிலும், பின்னவைகளால் மறுமையிலும் ஆம். (௮)

**உ**டைசெல்வ மூணொளி கல்வியென் றைந்தும் ❋
மடையாவா மாயங் கொளின். - - - ௯.

இ-ள். (அரசன்)—ஆயம் - சூதினை—கொளின் - (தனக்கு விளையாட்டுத்தொழிலாக) விரும்புவானாயின் — ஒளி - ஒளியும்—கல்வி - கல்வியும்—செல்வம் - செல்வமும்—ஊண் - ஊணும் — உடை - உடையும்— என்றைந்தும் - என்றிவ்வைந்தும்—அடையாவாம் - (அவனைச்) சேராவாம். எ-று. ❋ ஆயம் சூதுக்கு ஆகுபெயர். இம்முறை செய்யுளுக் கியையப்பிறழ்ந்தது. செல்வம்-அறுவகை உறுப்புக்கள். ஊணுடையென்பவைகளால் அனுபவிக்கப் படுவனவெல்லாம் கொள்ளப்படும்.—காலமும், கருத்தும், பெறுமையால் இவை உண்டாகாவென்பதாம். [இவை நான்குபாட்டாலும் சிறுமை பலசெய்து அவைகளால் இருமையுங் கெடுத்தல் சொல்லப்பட்டது.]

**இ**ழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்ப ❋
முழத்தொறூஉங் காதற் றுயிர். - - - ௰.

இ-ள். இழத்தொறூஉம்-(சூதாடலால்இருமைப்பயன்களையும்) இழக்குந்தோறும்—காதலிக்கும்- (அதன்மேலே) ஆசை செய்யும் — சூதேபோல் - சூதனேபோல்—உயிர் — துன்பமுழத்தொறூஉம் - (உடம்பால்) மூவகைத்துன்பங்களையும் — அனுபவிக்குந்தோறும் — காதற்று - (அதன்மேலே) ஆசையையுடைத்து. எ-று. ❋ சூது ஆகுபெயர். உயிரினது அறியாமை சொல்லுவார்போன்று சூதனது அறியாமை சொல்லுதல் கருத்தாகலின் அதனை உறுதிப்படுத்தற் பொருட்டு

உவமானமாக்கினார். [இதனெதிர் மறைமுகத்தால் கூறைத வெறுத்து நடப்பவனையொக்கும் உடம்பினை வெறுத்து நடக்கின்ற உயிரெனவுங்கொள்க. [இதனால் அதைவிடுதற் கருமையும் விட்டவரது பெருமையும் சொல்லப்பட்டன.] (௰)

****************************

## ௯௫-ஆம், அதி—மருந்து.

பழவினையாலும் காரணங்களாலும் மனிதர்க்கு வாதமுதலாகிய பிணிகள்வரும் அவைகளுள் பழவினையால்வருவன அவ்வினைகழியும் போதல்லாமல் தீராமையால் அவையொழித்து மற்றைக்காரணங்களால் வருமவைகளைத் தீர்க்கு மருந்தின்றிறம் சொல்லுகின்றார். காரணங்களாவன - உணவு தொழில்களது ஒவ்வாமை யாதலால் பிணிகளும் காரணங்களால் வருவனவாயின.

மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர் - *
வளிமுதலா வெண்ணிய மூன்று. - - - - க.

இ-ள். (உணவும்செயல்களும் ஒருவன் சரீர சுபாவத்துக்கு ஒத்தவள்வினவன்றி) —மிகினும் - (அதனின்) மிகுமாயினும்-குறையினும் - குறையுமாயினும் — நூலோர் - ஆயுள் வேதமுடையோரால் — வளிமுதலா - வாதமுதலாக— எண்ணிய - எண்ணப்பட்ட—மூன்று - மூன்றுநோயும்|—நோய் - துன்பத்தை}—செய்யும் - (அவனுக்குச்) செய்யும். எ-று. ❋ நூலோரெண்ணியவெனவே அவர் அவைகளால் வகுத்த - வாதப்பகுதி - பித்தப்பகுதி - சிலேஷ்மப்பகுதி - என்கிற பகுதிப்பாடும்பெற்றாம். அவைகளுக்கு உணவு ஒத்தலாவது - சுவைவீரியங்களாலும் அளவாலும் பொருந்துதல். செயல்கள் ஒத்தலாவது - மனமொழிமெய்களாலே செய்யுந் தொழில்களை அவை வருந்துவதற்கு முன்னேயொழிதல். இவ்விரண்டும் இப்படியல்லாமல் மிகினுங்குறையினும் அவை தன்றன்னிலையிலே நில்லாமல் வருத்துமென்பதாம். [இதனால் உடம்புகளுக்கு இயல்பாகியநோய் - மூவகையென்பதும், அவைதுன்பஞ்செய்தற்காரணம் - இருவகையென்பதும், சொல்லப்பட்டன.] இன்பஞ் செய்தற்காரணம் பின்னேசொல்லுவர். (க)

மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய - *
தற்றது போற்றி யுணின். - - - - - உ.

இ-ள். (ஒருவன்)—அருந்தியது-(முன்)னுணப்பட்டது—

அய்யது - சீரணித்தபடியை—போற்றி - (குறிகளாலே) தெளி யவறிந்து—உணின் - (பின்னே)உண்பாருயின் — யாக்கைக் கு - (அவ)னுடம்புக்கு—மருந்தெனை—வேணடாவாம் - வேறு வேண்டுவதில்லை. எ-று. ❋ குறிகளாவன-வுடம்பு இறுகியிரு த்தல் - நோக்கம் பரிசுத்தமாயிருத்தல் - கரசரணாதி கரணங் கள் தொழிற்குரியவாதல் - பசிமிகுதல் - எனவிவை முதலாயி ன. பிணிகள் உடலுக்கே ஆகுதலால் - யாக்கைக்கென்றார். உணினென்பது அதனருமைதோன்ற நின்றது. (௨)

அற்றா லளவறிந்துண்க வஃதுடம்பு - - ❋
பெற்றா னெடிதுய்க்கு மாறு. - - - ௩.

இ-ள். அற்றால் - (முன்னுணப்பட்டது) அற்றால்—(பின் னுணப்படுவதனை) — அளவறிந்து - (அற) மளவறிந்து — உண்க - (அவ்வளவினதாக) உண்ணக்கடவன். — உடம்பு - (பெறுதற்கரியவிம்மனித) உடம்பை — பெற்றான் — நெடி து - நெடுங்காலம்—உய்க்குமாறு - (அதனைக்) கொண்டுசெலு த்தும்வழி—அஃது - அதுவாம். (ஆகலால்) - எ-று. ❋ இம் மை மறுமை வீடுபேறுகளை அடைதற்குரியது இம்மனிதவு டம்பொன்றுமேயாகலால் - உடம்புபெற்றானென்றும், அது நெடுங்காலம்நின்றவிடத்து அவை பெருகச்செய்துகொள்ள லாமாகலால் - நெடிதுய்க்குமாமென்றும், சொல்லினார்.(௩)

அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல - ❋
துய்க்க துவரப் பசித்து. - - ௪.

இ-ள். அற்றதறிந்து - (முன்னுணப்பட்டது)அற்றபடியை அறிந்து—துவரப்பசித்து - (பின்னே)மிகப்பசித்து — (உண் ணும்போது) — மாறல்ல-மாறுகொள்ளாத உணவுகளை} — கடைப்பிடித்து - குறிக்கொண்டு— துய்க்க - உண்ணக்கடவன். எ-று. ❋ அற்றதறிந்தெனப் பின்னுஞ்சொல்லியது அதனை உறுதிப்படுத்தற்பொருட்டு. — உண்டது அற்றாலும் அதன் பயனாகிய இரதம் அறாதாகலால் அதுவும் அறல்வேண்டுமெ ன்றற்கு - மிகப்பசித்தென்றார். மாறுகொள்ளாமையாவது - உண்பவன் சரீரசுபாவத்தோடு மாறுகொள்ளாமையும், கால வியல்போடு மாறுகொள்ளாமையும், சுவை வீரியங்களால்த ம்முள்ளேமாறுகொள்ளாமையும், ஆம். அவையாவன முறை யே உணவு - வாதபித்த சிலேஷ்மங்களாலாகிய சரீரசுபாவங்க

ணுக்கு அடைபடாதவைகளைச் செய்வனவாதலும், * பெரும்பொழுது ✝ சிறுபொழுது என்கிறகாலவேறுபாடுகளுள் ஒன்றற்கு ஆவன பிறிதொன்றற்கு ஆகாமையும், தேனும் நெய்யும் தம்முள் ஒத்து நஞ்சாதல் போல்வனவும்-ஆம். அவைகளைக் குறிக் கொள்ளாதுமனம் பட்டவழியால் உண்டால் அதனால் நோயும் மரணமும் வருதலால் - கடைப்பிடித்தென்றார். (௪)

மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணி - - *
னூறுபா டில்லை யுயிர்க்கு. - - - - ௫.

இ-ள். மாறுபாடில்லாத - அம்மூவகை மாறுகோளும் இல்லாத—உண்டி - உணவை—மறுத்து - (தன்னுள்ளம் வேண்டியபயளவை) மறுத்து (பிணிவாராதவளவில்) —உண்ணின் - (ஒருவன்) உண்டால்—உயிர்க்கு - (அவ) னுயிர்க்கு —ஊறுபாடு - (பிணிகளாலே) துன்பம்விளைதல்|—இல்லை - உண்டாகாது எ-று. ❋ துன்பமுறுவது உயிரேயாதலால் - அதன்மேல்வைத்துச்சொல்லினார். மாறுபாடில்லாதவிடத்தும் குறைதல் நன்றென்பதாம். [இவை நான்குபாட்டாலும் உணப்படுவனவும், அவைகளினளவும், காலமும, பயனும், சொல்லப்பட்டன.]

இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்கும் *
கழிபே ரிரையான்க ணோய். - - - - ௬.

இ-ள். இழிவறிந்து - அக்குறைதலை (நல்லதென்று) அறிந்து—உண்பான்கண் - (அவ்வாறே) உண்பவனிடத்து—இன்பம்போல்—கழிபேரிரையான்கண் - மிகப்பெரிய இரையை விழுங்குவோனிடத்து—நோய் | — நிற்கும் - நீங்காதிருக்கும். எ-று. ❋ அவ்வாறேயுண்டல் - உண்ணலாமளவிற் சிறிது குறையவுண்டல். இன்பமாவது - வாதமுதலாகிய மூன்றும் தன்றன்னிலையில் வேறுபடாமையால் - மனமொழி மெய்கள் அவன் வசப்படலும், அதனால் அறமுதலாகிய நான்கும் அடைதலும், ஆம். இரையை அருந்துமளவன்றி எடுத்துஅதனால் வருந்தும் மிருகத்தோடொத்தலால் - இரையானென்றார்.

தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணி - - *
னோயள வின்றிப் படும். - - - - - ௭.

இ-ள். தெரியான் - (தன்சரீரசுபாவமும் அதற்கேற்ற வுணவும் காலமும்) ஆராயானாகி — (வேண்டியஉணவை வேண்டி

* பெரும்பொழுது,கார், கூதிர்,முன்பனி,பின்பனி, இளவேனில்,முதுவேனில். ✝ சிறுபொழுது, மாலை, யாமம்,வைகறை, காலை,நண்பகல்,எற்பாடு.

யகாலத்து)—தீயளவன்றி-(வயிற்றுத்) தீயளவல்லாமல்—பெ
ரிதுண்ணின்-(ஒருவன்) மிகவுண்ணுமாயின் — நோய்—அள
வின்றி-அளவில்லாமல்—படும்-(அவனிடத்தே) வளரும். எ-
று. ❊ [இவை இரண்டுபாட்டாலும் அப்படி உண்ணாத விட
த்தே படும் இழுக்குச் சொல்லப்பட்டது.] (எ)

நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும் *
வாய்நாடி வாய்ப்பச் செயல். - - அ.

இ-ள். (மருத்துவன்|)—நோய் - நோயாளியிடத்து (நிக
ழ்கின்ற) நோயை—நாடி - (அதன் குறிகளால் இன்னதென்
று) துணிந்து—நோய்முதல் - (பின்பு) அந்நோய்வருதற்கார
ணத்தை—நாடி - ஆராய்ந்து—அது தணிக்கும்வாய் - (பின்)
அது தீர்க்கும் உபாயத்தினை—நாடி - அறிந்து — வாய்ப்பச்
செயல்-(அதனைப்) பிழைபடாமற் செய்யக்கடவன். எ-று. ❊
காரணம்-உணவுசெயலென முன்சொல்லப்பட்டவை. அவ்வி
ரண்டையும் நாடுதற்குப் பயன்-நோயையும் உபாயத்தையும்
ஐயமறத் துணிதல்.—மருந்துசெய்தல் - உதிரங்களைதல் - அறு
த்தல்-சுடுதல் - முதலாகிய செயல்களெல்லாம் அடங்குதற்கு
அதுதணிக்கும் வாயென்றார். பிழைபடாமை - பழையமருத்
துவர் செய்துவருகின்ற முறையிலே தப்பாமை. (அ)

உற்றா னளவும் பிணியளவுங் காலமுங் - - *
கற்றான் கருதிச் செயல். - - - - - கூ.

இ-ள். கற்றான்-(ஆயுள்வேதத்தைக்) கற்றமருத்துவன்|—
(அவ்வுபாயத்தைச் செய்யுங்கால்) — உற்றானளவும் - நோயா
ளி யளவையும் — பிணியளவும் - (அவனிடத்து நிகழ்கின்ற)
நோயினளவையும்—காலமும் - (தன்செயற்கேற்ற) காலத்தி
னையும—கருதி-(அந்நூல்வழியால்) நோக்கி—செயல் - (அ
வைகளோடுபொருந்தச்) செய்யக்கடவன். எ - று. ❊ நோ
யாளியளவு - சரீரசுபாவம் பருவம் வேதனைகளினளவு.—பிணி
யளவு- † சாத்தியம்-அசாத்தியம் - யாப்பியம்-என்கிற-சாதி
வேறுபாடும், தொடக்க நடுவீறென்னும் அதன் பருவவேறு
பாடும், வன்மைமென்மைகளும், முதலாயின.—காலம்-முன்
சொல்லியது. — இம்மூன்றும் தப்பாமல் நூல்வழியாலும்,
அறிவுமிகுதியாலும், ஆராய்ந்து செய்கவென்பதற்கு - கற்றா
ன் கருதிச் செயலென்றார். [இவை இரண்டுபாட்டாலும் அவ்
விழுக்கம் வந்தவிடத்துத் தீர்க்கும்வழி சொல்லப்பட்டது.]

† சாத்தியம், தீர்க்கத்தக்கது. அசாத்தியம், தீர்க்கத்தகாதது, யாப்பி
யம், ஓட்டத்தக்கது,

உற்றவன் றீர்ப்பான் மருந்துழைச் செல்வானென் ⁂
றப்பானாற் கூற்றே மருந்து. - - - - ௰.

இ-ள். மருந்து - (பிணிக்கு) மருந்தாவது | — உற்றவன் -
(அதனை)யுற்றவன் — தீர்ப்பான் - (அதனைத்) தீர்க்குமருத்துவ
ன் — மருந்து - (அவனுக்குச்சாதனமாகிய) மருந்து — உழை
ச்செல்வான் - (அதனைத்தப்பாமல்) செய்பவன் — என்று - என்
றுசொல்லப்பட்ட — அப்பால் - அந்நான்கு பகுதியையுடைய
— நாற்கூற்றே - நான்குதிறத்தது. எ-று. ❊ அவைகளுள் -
உற்றவன்வகை நான்காவன, பொருளுடைமை - மருத்துவன்
வழிநிற்றல் - நோய்நிலையுரைத்தல்வன்மை - மருந்துத்துன்ப
ம்பொறுத்தல் - எனவிவை — தீர்ப்பான்வகை நான்காவன,
நோய்பார்த்தற்கஞ்சாமை - ஆசிரியனை வழிபட்டு அடைந்த க
ல்வி நுண்ணறிவுடைமை - பலகாலுந் தீர்த்துவருதல் - மன
மொழிமெய்கள் பரிசுத்தமாதல் - எனவிவை. — மருந்தின் வ
கை நான்காவன, பலபிணிகளுக்கும் ஏற்றல் - சுவைவீரியம்வி
பாகவாற்றல்களால் மேம்படுதல் - எளிதிலே பெறப்படுதல் -
சரீரசுபாவத்தோடு பொருந்தல் - எனவிவை. — இயற்றுவான்
வகைநான்காவன, நோயாளியிடத்தே அன்புடைமை - மன
மொழிமெய்கள் பரிசுத்தமாதல் - சொல்லியபடியே செய்த
ல் வல்லமை - அறிவுடைமை - எனவிவை. — இவையெல்லாம்
கூடியவிடத்தல்லது பிணிதீராமையால் இக்கூட்டத்தை மரு
ந்தென்றார். [இதனால் அவன்றீர்த்தற்கு வேண்டுவனவெல்லா
ம் தொகுத்துச் சொல்லப்பட்டன.] அங்கவியல் முற்றிற்று.

இனி அவ்வரசியன் முதலானவைகளிலே அடங்காதொ
ழிந்தவைகளி னியல்பைப் பதின்மூன்றதிகாரத்தினாலே
சொல்லத்தொடங்கி முதலிலே குடிமை சொல்லுகின்றார்.

# ஒ ழி பி ய ல்.

## ௯௬-ஆம், அதி — குடிமை.

அஃதாவது - உயர்ந்த குடியினிடத்துப் பிறந்தவரது
ண்மை. உயர்குடிப்பிறப்பு நால்வகை வருணத்தார்க்
ம் அவசியம் வேண்டுவதாகலால் அச்சிறப்புப்பற்றி
வைக்கப்பட்டது.

இற்பிறந்தா கண்ணல்ல தில்லை இயல்பாகச் - ❋
செப்பமு நாணு மொருங்கு. - - ௧.

இ-ள். செப்பமும் - செம்மையும் — நாணும் — ஒருங்கு - ஒருசேர — இற்பிறந்தார்கண்ணல்லது - உயர்ந்தகுடியிலே பிறந்தவரிடத்தல்லாமல் (பிறரிடத்தே)—இயல்பாக - சுபாவமாக—இல்லை - உண்டாகா. எ-று. ❁ செம்மை - கருத்தும் சொல்லும் செயலும் - தம்முள்ளே மாறுபடாமை. நாண் - பழிபாவங்களின் மடங்குதல். இவைஇற்பிறந்தார்க்கானுல் ஒருவர்கற்பிக்க வேண்டாமல் தாமே உண்டாகும்.பிறர்க்கானுல் கற்பித்தவிடத்தும் நெடிது நில்லாவென்பதாம்.(௧)

ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூன்று - ❋
மிழுக்கார் குடிப்பிறந் தார். - - ௨.

இ-ள். குடிப்பிறந்தார் - உயர்ந்தகுடியிலேபிறந்தவர் — (தமக்குரிய)—ஒழுக்கமும் — வாய்மையும் - மெய்ம்மையும் — நாணும் - நாணமும் ஆகிய—இம்மூன்றும் - இம்மூன்றிடத்தும் —இழுக்கார் - (நூலறிவாலல்லாமல்தாமாகவே) வழுவார். எ-று. ❁ ஒழுக்கமுதலாகிய மூன்றும் மெய்மொழிமனங்களுக்கு உரியவையாதலால் - அம்முறைவைக்கப்பட்டன. இழுக்கல் - தாமறியாதுவருதலால் - இழுக்காரென்றார். (௨)

நகையீகை யின்சொ லிகழாமை நான்கும் ❋
வகையென்ப வாய்மைக் குடிக்கு. - ௩.

இ-ள். வாய்மை - (எக்காலத்தும்) வேறுபடாத—குடிக்கு - குடியிற்பிறந்தவர்க்கு— (வறியவர்சென்றவிடத்து) —நகை - முகமலர்ச்சியும்—ஈகை - (உள்ளவை)கொடுத்தலும் — இன்சொல் - இன்சொற் (சொல்லுதலும்) — இகழாமை - இகழாமையும் ஆகிய—நான்கும்|—வகை-(உரிய) வகையாகும் — என்ப என்று (நூலோர்) சொல்லுவர். எ-று ❁ பொய்மை வேறுபடுத லுடைமையால் வேறுபடாமையை வாய்மையென்றும், இல்லாரை எல்லாரும் இகழ்வராகலால் - இகழாமையை அவர்கூறுக்கியும், சொல்லினர். குடி - ஆகுபெயர். [இவைமூன்றுபாட்டாலும்குடிப்பிறந்தாரியல்புசொல்லப்பட்டது.]

அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார் - ❋
குன்றுவ செய்த லிலர். - - - ௪.

இ-ள் அடுக்கிய - (பலவாக) அடுக்கிய — கோடி - கோடிபள

வினதாகியபொருளை—பெறினும் — குடிப்பிறந்தார் - உயர்ந்தகுடியிலே பிறந்தவர் |—குன்றுவ - (தம்மொழுக்கங்) குன்றுந்தொழில்களை }—செய்தலிலர். எ - று. ❊ கோடியென்பது இங்கே எண்ணப்படும் பொருண்மேல் நின்றது. குன்றுந்தொழில்கள் - குன்றுதற்கு எதுவாகிய தொழில்கள். (௪)

வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி ❊
பண்பிற் றலைப்பிரித லின்று. - - - - ௫.

இ-ள். பழங்குடி - பழமைதொட்டுவருகிற குடியிலே பிறந்தவர் |—வழங்குவது - (தாம்) கொடுக்கும்பொருள்—உள்வீழ்ந்தக்கண்ணும் - முன்னையளவிலே சுருங்கியவிடத்தும்—பண்பின்-(தமது) குணமுடைமையில்—தலைப்பிரிதலின்று - நீங்கார். எ-று. ❊ பழமைதொட்டுவருதல் - சேர சோழ பாண்டிய ரென்பதும்போல் ஆதிகாலந்தொடங்கி மேம்பட்டுவருதல். அவர்க்கு வறுமையாவது - தாம்கொடுக்கும் பொருள் முன்னையளவிலேசுருங்குவ தாகலால் அதனையே சொல்லினார். (௫)

சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற - - ❊
குலம்பற்றி வாழ்துமென் பார். - - - ௬.

இ-ள். மாசற்ற-வசையற்றுவருகின்ற—குலம்பற்றி - (நமது) குடிமரபினேடொத்து — வாழ்துமென்பார் - வாழக்கடவோமென்று நினைத்து அப்படியே வாழ்வோர் | — (வறுமையுற்றவிடத்தும்) — சலம்பற்றி - வஞ்சனையைப்பொருந்தி — சால்பில - அமைவில்லாத தொழில்களை }— செய்யார். எ-று. ❊ அமைவில்லாமை-தங்குடிமரபினுக்குத் தகாமையாம். [இவை மூன்றுபாட்டாலும் அவர் வறுமையுற்றவிடத்தும் அவ்வியல்பின் வேறுபடாரென்பது சொல்லப்பட்டது.] (௬)

குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின் ❊
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து. - - - ௭.

இ-ள். குடிப்பிறந்தார்கண் - உயர்ந்தகுடியிற் பிறந்தவரிடத்தே (உண்டாகிற) — குற்றம் |—(தான்சிறிதேயாயினும்)—விசும்பின் - ஆகாசத்தின்—மதிக்கண் - சந்திரனிடத்து—மறுப்போல் - களங்கம்போல் — உயர்ந்து - ஓங்கி—விளங்கும் - தோன்றும். எ-று. ❊ உயர்ந்தகுடிக்கு - விசும்பும், அதிற்பிறந்தோருக்கு - மதியும், அவர்குற்றத்துக்கு - களங்கமும், உவமானங்கள். குடியினது உயர்ச்சியினலும், சந்திரன்போன்

று அவர் நற்குணங்களோடு மாறுகலாலும், அக்குற்றமான து உலகெங்கும் பரந்து வெளிப்படு மென்பதாம். (எ)

நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக் - *
குலத்தின்க ணையப் படும். - - - - அ.

இ-ள். நலத்தின்கண்- (குல) நலமுடையானுப் வருகின்றவ னிடத்தே—நாரின்மை-அன்பில்லாமை—தோன்றின் - உண் டாமாயின்—(உலகம்|)—அவனை—குலத்தின்கண் - அக்குல ப்பிறப்பிடத்தே—ஐயப்படும். எ-று. ❊ நலமும், குலமும், ஆகுபெயர். அன்பில்லாமையால் - கொடாமை கடுஞ்சொல் முதலானவை சொல்லப்பட்டன. தோன்றினென்பது - தோ ன்றுமை விளக்கிநின்றது. நலனுடையனுய் வருதலி னடுவே இவை தோன்றலால் உள்ளது ஐயமாயிற்று. [இவை இரண்டு பாட்டாலும் வேறுபட்டவழிப்படுமிழுக்கம்சொல்லப்பட்டது

நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங் - *
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல். - - - கூ.

இ-ள். நிலத்திற்கிடந்தமை - நிலத்தினியல்பை} — கால்- (அதனிடத்தேமுளைத்த) முளையானது |— காட்டும்.—(அது போல்)—குலத்திற்பிறந்தார்வாய்ச்சொல் | — காட்டும் - (அ க்குலத்தினியல்பைக்}) காட்டும். எ-று. ❊ கிடந்தமை-உள்ள குணம்— முளைமாத்திரத்தால் நன்மையும் தீமையும் தெரித லால் இவைமுதலானவை காட்டுமெனச் சொல்லாராயினர். ஆ கவே குலத்திற்பிறந்தார்க்கும் செயல் முதலானவைவேண்டா வாயின. குலத்தியல்பறிதற்குச் சாதனம் சொல்லுவார்போன் று இன்சொல் சொல்லவேண்டு மென்றபடியாயிற்று. (கூ)

நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்வேண்டின்
வேண்டுக யார்க்கும் பணிவு. - - - - - ம.

இ-ள். (ஒருவன்)—நலம்வேண்டின்-(தனக்கு) நலமுடை மைவேண்டுவானுகில் — நாணுடைமை - நாணமுடையவனு தலை} — வேண்டும் - வேண்டக்கடவன்.— குலம்வேண்டின் - குலமுடைமையை வேண்டுவானுயின் — யார்க்கும் - (வண ங்கத்தக்க)யாவரிடத்தும்— பணிவு - வணங்குதலை} —வேண் டுக-வேண்டக்கடவன். எ-று. ❊ நலம்-புகழ் புண்ணியங் கள். அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம்முன்னோர் தந்தை தாய் இவரெல்லாம் அடங்க-யார்க்குமென்றார். பணி

வு - இருக்கையெழல் எதிர்செலல் முதலாயின. [இவ்வதிகாரத்தான் பொட்டாலும் குடிமைக்கு வேண்டுவன சொல்லப்பட்டன.]

-***********-************-

## கஎ-ஆம், அதி—மானம்.

இனிக் குடிப்பிறந்தவர்க்கு உரியகுணங்கள் சொல்லத் தொடங்கி முதலில் மானம் சொல்லுகின்றார்.

அஃதாவது - எந்நாளும் தன்னிலையிலே தாழாமையும் ஊழால் தாழ்வு வந்தவிடத்து உயிர்வாழாமையுமாம். இது அக்குடிப் பிறப்பை அழியாமல் நிறுத்துதலா லே அச்சிறப்புப்பற்றி முன்வைக்கப்பட்டது.

இன்றி யமையாச் சிறப்பின வாயினுங் - - *
குன்ற வருப விடல். - - - - - - ௧.

இ-ள். இன்றியமையா - செய்யாதவிடத்தே தாம் அமை யாத—சிறப்பினவாயினும் - சிறப்புடையவை யாயினும்— குன்ற - (தங்குடிப்பிறப்பானது) தாழ—வருப - வருஞ்செய ல்களை — விடல் விடக்கடவன். எ - று. அமையாமை - இறத்தல். குடிப்பிறப்பென்பது அதிகாரமுறைமையால் வந் தது. தாம் இறக்கவருமிடத்தே இழிதொழில்களைச் செய்தா யினும் பிழையென்னும் வடநூலின் முறைமையை மறுத்து உடம்பினது நிலையில்லாமைப்பும், மானத்தினது நிலையுடைமை யும், ஆராய்ந்து அவை செய்யலாகா தென்றபடி. (௧)

சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு . - - *
பேராண்மை வேண்டு பவர். - - - - ௨.

இ-ள். சீரொடு-புகழுடனே — பேராண்மை - மானத்தை நிறுத்துதலை—வேண்டுபவர்—சீரினும் - புகழ் சம்பாதிக்கு மிடத்தும்—சீரல்ல - (தங்குடிக்கு) ஒவ்வாத இழிதொழில்க ளை—செய்யார் எ - று. எவ்விடத்தும் நிலைகுலையாத தி டத்தால் உண்டாதல்பற்றி-பேராண்மை யெனப்பட்டது. நி லையுடைய புகழின் பொருட்டாகவும் செய்யா ரென்பதாம்.

பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய - - *
சுருக்கத்து வேண்டு முயர்வு. - - - ௩.

இ-ள். (குடிப்பிறந்தவர்க்கு) — பெருக்கத்து - நிறைந்த

செல்வம் உண்டானவிடத்து — பணிதல் - (யாவரிடத்தும்) பணிவு —வேண்டும். — சிறிய-குறைந்த—சுருக்கத்து - வறுமையுண்டானவிடத்து — உயர்வு - பணியாமை| — வேண்டும். எ-று. ❊ பணியாமை - தாழ்வு வாராமல் பண்டையவுயர்ச்சியிலே நிற்றல். செல்வமுடையபோது அது உயர்ச்சி செய்தலினாலே தாம் தாழ்தலும், வறுமையுடையபோது அது தாழ்வுசெய்தலினாலே தாம் உயர்தலும். வேண்டுமென்பதாம். [இவைமூன்றுபாட்டாலும் தாம்தாழ்தற்கு ஏதுவானவைகளைச் செய்யாமையின் சிறப்புச் சொல்லப்பட்டது.] (௩)

தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர் - - ❊
நிலையி னிழிந்தக் கடை. - - - ௪.

இ-ள். மாந்தர்- (குடிப்பிறந்த) மனிதர்|—நிலையின்-(தம் முயர்ந்த) நிலையிலிருந்து— இழிந்தக்கடை - தாழ்ந்த விடத்து—தலையினிழிந்த - தலையிலிருந்து வீழ்ந்த—மயிரனையர்-மயிர்போல்வர். எ-று. ❊ அந்நிலையைவிடாது நின்ற விடத்தே விரும்பி மரியாதை செயப்படுதலும், விட்டுத்தாழ்ந்த விடத்தேஇழிவுசெயப்படுதலும், உவமானத்தாற்பெற்றாம். (௪)

குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ - ❊
குன்றி யனைய செயின். - - - ௫.

இ-ள் குன்றினனையாரும்-(குடிப்பிறப்பால்) மலைபோலுயர்ந்தவரும்| — குன்றுவ-தாழ்தற்கு ஏதுவாகியசெயல்களை — குன்றியனைய-ஒருகுன்றியளவாயினும்—செயின் — குன்றுவர்-தாழ்வார். எ-று. ❊ குன்றியனையவும் என்கிறஇழிவுசிறப்பும்மைவிகாரத்தால் தொக்கது. —தாழ்தற்கு ஏதுவாகிய செயல்களாவன - பழிக்கப்படுஞ் செயல்கள். (௫)

புகழின்றாற் புத்தேணாட்டுய்யாதா லென்மற் - ❊
றிகழ்வார்பின் சென்று நிலை. - - ௬.

இ-ள். இகழ்வார்பின் - (தம்மை) அவமதிப்பவர்பின்னே —சென்றுநிலை-(ஒருவன்மானம்விட்டுச்) சென்றுநிற்கின்ற நிலை| —புகழின்று - (இவ்வுலகத்துப்) புகழுண்டாக்காது—புத்தேணாட்டு - மற்றைத்தெய்வலோகத்திலே — உய்யாது - செலுத்தாது.—மற்று - இனி—என் - (அவனுக்குச் செய்வது|) யாது. எ-று. ❊ ஆலிரண்டும் - அசைகள். புகழுண்டாக்குவப்புகழென்றார். பயனாகியஇவ்விரண்டும் இல்லாமல் வீணாகடா

னங்கெடுகின்றது என்னவென்பதாம். [இவை மூன்றுபாட்டா லும் அவை செய்தற்குற்றம் சொல்லப்பட்டது.] (௬)

ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்நிலையே *
கெட்டா னெனப்படுத னன்று. - - - எ.

இ-ள். ஒட்டார்பின் - (தன்னை) இகழ்வார்பின்னே—சென் று-போய்—(பொருள்பெற்று)— ஒருவன்வாழ்தலின் - (அத னால்) ஒருவன் உயிர்வாழ்தலைக்காட்டிலும் — அந்நிலையே-மு ன்னை நிலையிலேநின்று — கெட்டானெனப்படுதல் - இறந்தா னென்று சொல்லப்படுதல்| — நன்று - (அவனுக்கு) நன்று. எ-று. ※ புகழும் வானுலகமும் உண்டாக்காதேனும் பொரு ள்பெற்று உயிர்வாழ்வ தென்பாரை நோக்கிச் சொல்லியது.

மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து - - - - - அ.

இ-ள். பெருந்தகைமை - உயர்குடிப்பிறப்பானது — பீ டு(தன்) வலியாகிய மானம்—அழியவந்தவிடத்து— ஊனோ ம்பும்- (இறந்துபோகாமல் பயனில்லாத) வுடம்பைக் காப்பா ற்றும்—வாழ்க்கை-வாழ்வானது|—மற்றுமருந்தோ (பின்னு மிறவாமைக்கு)மருந்தாமோ. எ-று. ※ அக்குடிப்பிறப்பு-ந ற்குணங்களுக்கெல்லாம் இடனாதற் சிறப்புப்பற்றி - பெருந்த கைமையென்றும், அக்குணம்பலவினும் மானமானது அக்கு டிப்பிறப்புக்கு வலியாதற்சிறப்புப்பற்றி - பீடென்றும், அம் மானம் அழிந்தால் நின்றவெற்றுடம்பு இழிக்கப்படுதலால்-அ தனை ஊனென்றும்,பின்னுமிறத்தல்நிச்சயமென்றற்கு-மருந் தோவென்றும், சொல்லினார். (அ)

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா - - - *
ருயிர்நீப்பர் மானம் வரின். - - - - - க௯.

இ-ள். மயிர்நீப்பின் - (தன்மயிர்த்திரளில்) ஒருமயிர் நீங்கி னும்—வாழா-உயிர்வாழாத— கவரிமாவன்னார் - கவரிமாவை யொப்பவர்|—மானம்வரின் - (உயிர்நீக்குதற்கான) மானம் பெறுமளவுவரின்—உயிர் - அவ்வுயிரை} — நீப்பர் - விடுவர். எ-று. ※ நீப்பினுமென்னுமும்மை - தொக்குநின்றது உயி ருமானமும் உடனில்லாதவிடத்துப் பின்னும் போவதாகிய வுயிரைநீக்கி எந்நாளு நிற்பதாகிய மானமடைவ ரென்பதாம். உவமானம் அவர்க்கு அதுஇயல்பென்பதுவிளக்கியது. (௯)

இளிவரின் வாழாத மானமுடையா *
ரொளிதொழு தேத்து முலகு. - - - ம.

இ-ள். இளிவரின்-(தமக்கு)ஓரவமானம்வந்தவிடத்து—வா ழாத-(பொறுமல்) உயிர்விட்ட — மானமுடையார் - மானமு டையவரது—ஒளி - புகழ்வடிவை — உலகு - உலகத்தார் | — தொழுதேத்தும் - (எந்நாளுந்) தொழுது துதியாநிற்பர். எ-று. ❊ புலவர்பாடும் புகழுடையோர் விசும்பின்வலவனே வா வானவூர்தி யெய்துவராதலால் - சுவர்க்கம் பெறுதல் சொல்ல வேண்டாவாயிற்று. [இவை நான்குபாட்டாலும் மானப்பொரு ட்டாகிய இறப்பின் சிறப்புச் சொல்லப்பட்டது.] (ம)

கஅ-ஆம், அதி—பெருமை.

அஃதாவது - செய்தற்கரியசெய்தல் - செருக்கில்லாமை பிறர்குற்றஞ்சொல்லாமை - என்றிவைமுதலாகிய நற்கு ணங்களாலே பெரியராயினோரது தன்மையாம். நிலை யிலிருந்து மேலுமேலும் உயர்த்துவதாகிய இக்குணங் கள் உண்டாவது நிலையிலிருந்துதாழாமை உள்ள விட த்தேயாகலால் இது மானத்தின் பின்வைக்கப்பட்டது.

ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொருவற் *
கஃதிறந்து வாழ்து மெனல். - - - க.

இ-ள். ஒருவற்கு - ஒருவனுக்கு — ஒளி - ஒளியாவது | — உள்ளவெறுக்கை - (பிறராலே செய்தற் கரியவைகளைச் செய் வோமென்று நினைக்கிற) மனவெழுச்சியின்மிகுதி.—ஒருவற்கு ஒருவனுக்கு—இளி-மாசாவது | — அஃதிறந்து - அச்செயலை யொழிந்து — வாழ்துமெனல் - உயிர்வாழக்கடவோமென்று நினைத்தல். எ - று. ❊ ஒளி - தான் உளனாயகாலத்து மிகுந் துதோன்றுதலுடைமை. — முன்னும் செயற்கரிய செய்வார் பெரியரென்றாராயினும் இங்கே அவை அளவிறந்த உபகார ம் ஈகைமுதலானவையாம். — அவைகளினாலாகிய பெருமை யை அதன் காரணத்தின் மேலிட்டு - உள்ளவெறுக்கையென் றும், அதனையே அதன்காரியமாகிய ஒளியாக்கியும் சொல் லினார். [இதனாற் பெருமையின் சிறப்புச்சொல்லப்பட்டது.]

பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா *
செய்தொழில் வேற்றுமை யான். - - - உ.

இ-ள். எல்லாவுயிர்க்கும் - எல்லாமக்களுயிர்க்கும் — பிறப்

பு - (பொதுவாகிய) பிறப்பியல்பு—ஒக்கும். (ஆயினும்)—சிறப்பு - (பெருமைசிறுமையெனப்பட்ட) சிறப்பியல்புகள் | —ஒவ்வா - ஒத்திடாவாம். — செய்தொழில் - செய்யுந் தொழில்களது — வேற்றுமையான் - வேறுபாட்டால். எ-று. ※ வேறுபாடு - நல்லனவையும், தீயவையும், இரண்டுமானவையும், இரண்டுமல்லாதவையும், ஆகிய பலபிரிவுகள். — வினைவசத்தால் பஞ்சபூத காரியமாகிய உடம்பைப் பொருந்திநின்று அதன் பயனனுபவித்தல் எல்லாருக்கும் ஒத்திருத்தலால் பிறப்பொக்குமென்றும், பெருமை சிறுமைகளுக்குக் கட்டளைக்கல்லாகிய தொழிற்பிரிவுகள் உடம்புதோறும் வேறுபடுதலால் - சிறப்பொவ்வாவென்றும். சொல்லினர் (உ)

மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங் ※
கீழல்லார் கீழல் லவர். - - - - - - ௩.

இ-ள். மேலல்லார் - (செய்தற் கரியவைகளைச் செய்யமாட்டாமல்) சிறியராயினோர் | — மேலிருந்தும் - உயர்ந்த ஆதனங்களில் இருந்தாராயினும் — மேலல்லர் - பெரியராகார். — கீழல்லவர் - (அவைசெய்து) பெரியராயினோர் | — கீழிருந்தும் - தாழ்ந்தவெறுநிலத்தில் இருந்தாராயினும் — கீழல்லார் - சிறியராகார். எ-று. ※ மேலிருத்தல் கீழிருத்தல்களாலே - செல்வவறுமைகளும், மேல் கீழ்களாலே - பெருமை சிறுமைகளும், கருதப்பட்டன. [இவை இரண்டுபாட்டாலும் முறையே குடிப்பிறப்புமாத்திரத்தாலும், சொல்வமாத்திரத்தாலும், பெருமை உண்டாகாமை சொல்லப்பட்டது.] (௩)

ஒருமை மகளிரே போலப் பெருமையுந் - - ※
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு. - ௪.

இ-ள். ஒருமை - பிளவுபடாத மனத்தையுடைய் — மகளிரேபோல — பெருமையும் - பெருமைக்குணமும் | — தன்னைத்தான் — காத்தொழுகின் - (ஒருவன் நிறையின் வழுவாமல்) காத்துக்கொண்டு நடக்கவல்லனாயின் — உண்டு - (அவனிடத்து) உண்டாம். எ-று. ※ ஒழுகுதல் - மனமொழிமெய்களை அடக்கி உபகாரமுதலானவை செய்துவருதல். [இதனால் பெருமை உண்டாமாறு சொல்லப்பட்டது.] (௪)

பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி - - - ※
னருமை யுடைய செயல். - - - - - ௫.

இ-ள். பெருமையுடையவர் - (அவ்வழியாலே) பெருமையு

டையவராயினர் | — (தாம்வறியராகியவழியும்) — அருமை யுடைய - (பிறராலே செய்தற்கு) அருமை யுடையவையாகிய —செயல் - (தங்) செயல்களை ? — ஆற்றின் - (அவை செய்யும்) வழியால் — ஆற்றுவார் - (முடிவுபெறச்) செய்யவல்லவராவர். எ-று. ❁ அரியசெயல்களை முன்செய்து வந்தமைதோன்ற- பெருமை யுடையவரொன்றதனாலும், ஆற்றுவா ரொன்றதனாலும், வறியராகிய வழியுமென்பது பெற்றாம். [இதனால் அதனை யுடையார் செய்தி சொல்லப்பட்டது. (ரு)

சிறியா ருணர்ச்சியு ளில்லைப் பெரியாரைப் - - ❁
பேணிக்கொள் வேமென்னு நோக்கு. - - சா.

இ-ள். பெரியாரை - (அப்படிப்பட்ட) பெரியாரை—பேணி- வழிபட்டு—கோள்வேமென்னும் - (அவரியல்பைக்) கொள்வேமென்னும் — நோக்கு - கருத்து |—சிறியார் - மற்றைச்சிறியராயினோரது — உணர்ச்சியுள் - மனத்தினிடத்து — இல்லை - உண்டாகாது. எ-று. ❁ குடிமை செல்வம் கல்வியென்றிவை யுடையவராயிருக்கைமாத்திரத்தால் தம்மை வியந்திருப்பார்க்கு அவை நமக்கியல்பென்று அடங்கியிருப்பாரை வழிபட்டு அவ்வியல்புடையராதல் கூடாதென்பதாம். (சா)

இறப்பே புரிந்த தொழிற்றாஞ் சிறப்புந்தான் ❁
சீரல் லவர்கட் படின். - - - - - எ.

இ-ள். சிறப்பும் - (தனக்குத்தகும் பெரியாரிடத்து அடங்கியிருத்தலைச் செய்வதாகிய) சிறப்பும் |—தான்—சீரல்லவர்கட்படின் -(தனக்குத்தகாத)சிறியவரிடத்து உண்டாமாயின் — இறப்பேபுரிந்த - (அடங்கியிருத்தலொழிந்து செருக்கினிடத்திலே) மிகுந்த — தொழிற்றாம் - செயலையுடைத்தாம். எ-று. ❁ செருக்கினைமிகச் செய்யுமென்பதாயிற்று. சிறப்பு - குடிமை செல்வங் கல்விகளினாலாகியமிகுதி. [இவை இரண்டுபாட்டாலும் அஃதில்லாதார்செய்தி சொல்லப்பட்டது.] (எ)

பணியுமா மென்றும் பெருமை சிறுமை - - ❁
யணியுமாந் தன்னை வியந்து. - - - - அ.

இ-ள். பெருமை-பெருமையுடையவர் |—என்றும் - சிறப்புண்டாகியநாளிலும் — பணியும் - அடங்கிநடப்பார்.—சிறுமை-(மற்றைச்) சிறுமையுடையவர் —(என்றும்) - அது -இல்

ல் வேண்டியது செய்வாரென்பது சொல்லப்பட்டது.] (ங)

அகப்பட்டி யாவாரைக் காணி னவரின் - - ✻
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ். - - - ச.

இ-ள். கீழ்-கீழாயினேன் — அகப்பட்டியாவாரை - (தன்னிற்) குறைந்தபட்டியாய் நடப்பவரை — காணின் — (அவன் அந்நடக்கையிலே) — அவரின் - அவரைக்காட்டிலும் — மிகப்பட்டு - (தான்மேம்பட்டு) — செம்மாக்கும் - (அதனால் தன்மிகுதிகாட்டி) இறுமாப்பான். எ - று. ✻ அகமாகிய மனம்பட்டி போன்று வேண்டியபடி நடத்தலால் அகப்பட்டியென்றார் [இதனால் அவர் மேம்படும்விதம் சொல்லப்பட்டது.] (ச)

அச்சமே கீழ்கள தாசார மெச்ச - - - ✻
மவாவுண்டே லுண்டாஞ் சிறிது. - - - ரு.

இ-ள். கீழ்களதாசாரம் - கீழோரது ஆசாரம் — (கண்டது உண்டாயின் அதற்குக்காரணம்) — அச்சமே - (அரசனாலே துன்பம் வருமென்று அஞ்சும்) அச்சமே. — எச்சம் - (அது) ஒழிந்தால் — அவா - அவாவப்படும்பொருள் — உண்டேல் - (அதனால்) உண்டாமாகில் — சிறிது — உண்டாம். எ - று. ✻ ஆசாரத்தின் காரணத்தை ஆசாரமென்றும், அவாவப்படுமதனை அவாவென்றும், சொல்லினார். — கீழ்மக்களுக்கு ஆசாரம் பெரும்பான்மை அச்சத்தாலும் சிறுபான்மை பொருட்பேற்றாலுமல்லாமல் இயல்பாக உண்டாகாதென்பதாம். [வேண்டியபடி செய்தலே யியல்பு. ஆசாரஞ்செய்த லியல்பன்றென்பது இதனாற்சொல்லப்பட்டது.] (ரு)

அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட - - ✻
மறைபிறர்க் குய்த்துரைக்க லான். - - - சா.

இ-ள். தாங்கேட்ட — மறை - இரகசியங்களை — உய்த்து - (இடந்தோறுந்) தாங்கிக் கொண்டுபோய் — பிறர்க்கு — உரைக்கலான் - சொல்லுதலால் — கயவர் - கீழ்மக்கள் — அறைபறையன்னர் - அறையப்படும்பறைபோல்வர். எ - று. ✻ மறையாவது - வெளிப்பட்டால் குற்றம் விளையுமென்று பிறரை மறைத்து ஒருவன் சொல்லியசொல். — பிறர் - எவருக்கு மறைக்கவேண்டுமோ அவர். — உய்த்தென்றார் - அவர்க்கு அது பெரும்பாரமாதல் நோக்கி. — பறை ஒருவன்கையால் தன்னையறிவித்த

தொன்றனை இடந்தோறுங் கொண்டுசென்று அறியாதவர் யாவரையும் அறிவிக்குமாதலால் இது தொழிலுவமம். [இதனால் அவரது செறிவில்லாமை சொல்லப்பட்டது.] (௬)

ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங் - - ✻
கூன்கைய ரல்லா தவர்க்கு. - - - - - ௭.

இ-ள். கயவர்-கீழ்மக்கள்—கொடிறுடைக்கும் - (தங்) கதுப்பினை நெரிப்பதாக—கூன் - வளைந்த—கையரல்லாதவர்க்கு-கையினையுடையரல்லாதவர்க்கு — ஈர்ங்கை - (தாம்) உண்டுபூசியகையை — (தெறிக்கவேண்டுமென்று இரந்தாலும்) —விதிரார் - தெறியார். எ-று. ✻ வளைந்தகை - முறுக்கியகை. கீழோர் - இரப்பவர்க்கு ஒன்றுங்கொடார் தம்மை வருத்தப்படுத்துவோர்க்கு எல்லாங் கொடுப்பரென்பதாம். (௭)

சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற் ✻
கொல்லப் பயன்படுங் கீழ். - - - - அ.

இ-ள். சான்றோர் - மேலாயினோர்|—சொல்ல - (மெலியவர்போய்த்தங்குறையைச்) சொல்லியவளவிலே — பயன்படுவர் - (இரங்கிப்) பிரயோசனப்படுவர்.—கீழ் - மற்றைக்கீழாயினோர்|—கரும்புபோல்—கொல்ல - (வலியவர் நையநருக்கியவிடத்தே—பயன்படும்-பிரயோசனப்படுவர். எ-று. ✻ பயன்படுதல்- உள்ளது கொடுத்தல். கீழாயினோரது இழிவுதோன்ற-மேலாயினோரையும் உடன்சொல்லினர். [இவை இரண்டுபாட்டாலும் அவர்கொடுக்கும்விதம் சொல்லப்பட்டது.] (அ)

உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல் ✻
வடுக்காண வற்றாகுங் கீழ். - - - - - கூ.

இ-ள். கீழ் - கீழாயினோன்—உடுப்பதூஉம் - (பட்டுந்துகிலும்) உடுத்தலையும்—உண்பதூஉம் - (பாலுஞ்சோறும்) உண்ணுதலையும்—காணின் - கண்டால்—(அவைபொறாமல்)—பிறர்மேல்—(குற்றமில்லையாகவும்)—வடுக்காண - குற்றமுண்டாக்க—வற்றாகும்-வல்லவனாவன். எ-று. ✻ உடுப்பதுஉண்பது என்பவை - அவ்வத்தொழிலின்மேல் நின்றன.—அவைகளால்-பூணுதல் வாகனமேறல் முதலாகிய பிறதொழில்களும் கொள்ளப்படும்.— அவைகளைக் கண்டமாத்திரத்தே பொறாமைப்படுதலாலே காணினென்றும், கேட்டவர் இக்குற்றம் அ

வரிடத் திருக்கலாமென்று உடன்படச்செய்தல் அரிதாகலா ல்-வற்றாகுமென்றும், சொல்லினார். [இதனால் பிறர்செல்வ ம்பொறாமை சொல்லப்பட்டது.] (௯)

எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால் - - - *
விற்றற் குரியர் விரைந்து. - - - - - ௰.

இ-ள். கயவர் - கீழோர் — ஒன்று - ஒருதுன்பம் — உற்றக்கா ல்-(தம்மை) அடைந்தவிடத்து— (அதுவேசார்பாக)—விரை ந்து—விற்றற்குரியர் - (தம்மைப்பிறர்க்கு) விலைசெய்தற்கு உ ரியவராவர்.—(அதுவல்லாமல்)—எற்றிற்குரியர் - (வேறே) எ த்தொழிலுக்கு உரியராவர். எ-று. * உணவில்லாமையாகவா வது வேறொன்றாகவாவது ஒருதுன்பம்வந்து உற்றமாத்திரத் தென்பதுதோன்ற. ஒன்றுற்றக்காலென்றும், கொள்கின்றார் த ங் கீழ்மையை அறிந்து வேண்டாவென்றற்குமுன்னே விற்று நிற்றலால் - விரைந்தென்றும் சொல்லினார். ஒருதொழிலுக்கு ம் உரியரல்லரென்பது குறிப்பெச்சம். [இதனால் தாமும் பிற ர்க்கு அடிமையாய் நிற்பரென்பது சொல்லப்பட்டது.] (௰)

பொருட்பால் - முற்றிற்று.

---

இனி அப்பொருளைத் துணைக்காரணமாக வுடைத்தாய் இம்மையே பயப்பதாகிய இன்பத்தைச் சொல்லும்படி எடுத்துக்கொண்டார்.

***** *** **** ****************

# காமத்துப்பால்.

இவ்விடத்தே காமமென்றது - ஒரோகாலத்திலே ஒருபொருளால்-சுவை ஒளிஊறு ஓசை நாற்றமென்கிற ஐம்புலன்களையும் அனுபவித்தற் சிறப்புடைத்தாகிய காமவின்பத்தினை.—இது புணர்ச்சி பிரிவு எனவிருவகைப்படும்.மற்றை இருத்தல் இரங்கல் ஊடல் என்பனவோ வென்றால் இவர் பொருட்பாகுபாட்டினை அறம்பொருளின்பமென வடநூல் வழக்குப்பற்றிச் சொல்லுதலால் அப்படியே அவைகளைப் பிரிவினிடத்து அடக்கினரென்றறிக.— இனி அவைகளையே தமிழ்நூல்களோடும் பொருந்த - புணர்ச்சியைக்களவென்றும், பிரிவைக் கற்பென்றும், பெரும்பான்மைபற்றி வகுத்து அவைகளைச் சுவைமிகுதி உண்டாக்க உலகநடையோடு ஒத்தலும் ஒவ்வாமையுமுடையனவாக்கிச் சொல்லுகின்றார். — அக்கைகோ ளிரண்டனுள்ளும் - களவாவது பிணிமூப்பிறப்புகளில்லாமல் எந்நாளும் ஒருதன்மையராய் - உருவும், திருவும், பருவமும், குலமும், குணமும், அன்பும், முதலானவைகளாலே தம்முள் ஒப்புமையுடையராகிய தலைவனும் தலைவியும் பிறர் கொடுப்பவும் அடுப்பவும் இல்லாமல் ஊழ்வகையால் தாமே எதிர்ப்பட்டுப் புணர்ந்து வருவது. — அதனை ஏழதிகாரத்தாலே சொல்லத்தொடங்கி முதலில் தகையணங் குறுத்தல் சொல்லுகின்றார்.

## களவியல்.

## ௱௯-ஆம், அதி- தகையணங்குறுத்தல்.

அஃதாவது - பொழில்விளையாட்டு விருப்பால் மகளிர் கூட்டம் நீங்க அதனிடத்துத் தனித்து நின்றவளை வேட்டைவிருப்பால் இளையர் நீங்கத் தனித்து வந்து கண்டதலைவன் அவளழகு தனக்கு வருத்த முண்டாக்குதலைச் சொல்லுதல். இதுகண்டபொழுதே தோன்றுவதாகலால் முதலிலே சொல்லப்பட்டது.

அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை *
மாதர்கொல் மாலுமென் னெஞ்சு. - - க.

[தலைவி யுருவுமுதலானவை முன் கண்டறிந்தவையல்லாமல்

சிறந்திருக்கையால் அவளைத் தலைவன் ஐயுற்றது] — இ - ள். கன ங்குழை - இக்கனம் பொருந்திய குழையையுடையவள் | — அணங்குகொல் - (இச்சோலையி லிருப்பவளாகிய) ஒருதெய்வ ப்பெண்ணோ. — (அல்லாமல்) — ஆய்மயில்கொல் - ஒருமயில் விசேஷமோ — (அல்லாமல்) — மாதர்கொல் - ஒருமானுடமா தரோ — என்னெஞ்சு | — மாலும் - (இவளை இன்னளென்றறு தியிடமாட்டாமல்) மயங்குகின்றது. எ-று. ❋ ஓ - அசை. — ஆய்மயில் - கடவுள் விசேஷமாக ஆராய்ந்துபடைத்த மயில். கனங்குழை - ஆகுபெயர். — தெய்வப்பெண்போல் எழுதலா காதவுருவம் தன்னைவருத்தலும்பற்றி - அணங்குகொலென்று ம், மயில்போல் சாயலும் பொழிலிடத்து நிற்றலும்பற்றி - ஆய் மயில் கொலென்றும், தன்னெஞ்சுசென்றமையும் அவள்எதிர் நோக்கியவிதமும்பற்றி - மாதர்கொலென்றும் சொல்லினான்.

நோக்கினா ணோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு ❋
தானைக்கொண் டன்ன துடைத்து. - ௨.

[மானுடமாதராதல் தெளிந்த தலைவன் அவள் பார்வையாலா கிய வருத்தஞ்சொல்லியது.] — இ - ள். நோக்கினாள் - (இப்படி ப்பட்ட) அழகினையுடையவள் — நோக்கெதிர் - (என்) பார்வை க்கெதிர் — நோக்குதல் | — தாக்கணங்கு - (தானே) தாக்கிவ ருத்துகிற ஒரு தெய்வப்பெண் — தானைக்கொண்டன்னது - (தாக்குதற்குச்) சேனையையுங் கொண்டுவந்ததுபோலுந் தன் மையை | — உடைத்து. எ - று. ❋ முன்பாட்டில் அணங்கு கொலாய் மயில்கொலென்றமையால் இகரச்சுட்டு வருவிக்கப் பட்டது. — எதிர்நோக்குதலென்றமையால் இது குறிப்பு நோக்காயிற்று. — தன்னை அழகால் வருத்துதலோடு பின்னு ம் குறிப்புப்பார்வையால் வருத்துதல் சொல்லியபடி. (௨)

பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன் ❋
பெண்டகையாற் பேரமர்க் கட்டு. - ௩.

[இதுவுமது.] — இ - ள். கூற்றென்பதனை - கூற்றுவனென் று (நூலோர்) சொல்லுவதை — பண்டறியேன் - முன் (கேட்ட றிந்ததல்லது) கண்டறிந்திலேன். — இனியறிந்தேன் - இப்பொ ழுது கண்டறிந்தேன். — (அது) — பெண்டகையால் - பெ ண்குணங்களுடனே — பேரமர் - பெரியவையாய்ப் போர்செ ய்கின்ற — கட்டு - கண்களையுடைத்து. எ - று. ❋ பெண்டகை - நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு - என்கிற குணங்கள். அவை

அந்நோக்குறிகளால் அறியப்பட்டன. அப்பெண்மைக்குண ங்களால் இன்பந்தருதலும் உண்டாயினும் அதிகத்துன்பந் தருதல்பற்றிக் கூற்றுவனுக்கிச்சொல்லினார். (௩)

கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப் ❋
பேதைக் கமர்த்தன கண். - - - - - ௪.

[இதுவுமது.] — இ-ள். பெண்டகை - பெண்குணங்களு டைய—பேதைக்கு - இப்பேதைக்கு — கண் - கண்கள் |— கண்டார் - (தம்மைக்) கண்டவரது — உயிருண்ணுந்தோற்றத் தால் - உயிரையுண்ணுந் தோற்றத்துடனேகூடி — அமர்த்த ன - மாறுபட்டிருந்தன. எ-று. ❋ கண்கள் - குணங்களுக்கும் பேதைமைக்கும் தகாமற்கொடியவா யிருந்தனவென்பதாம்.

கூற்றமோ கண்ணோ பிணையோ மடவர ❋
னோக்கமிம் மூன்று முடைத்து. - - - ௫.

[இதுவுமது.] — இ-ள். கூற்றமோ - (என்னைவருத்துதலா லே) கூற்றமோ — கண்ணோ - (என்மேலோடுதலாலே) கண் ணோ — பிணையோ - (இயல்பாக அஞ்சுதலாலே) பெண்மானோ (அறிகின்றிலேன்.) — மடவரனோக்கம் - இம்மாது (கண்களி ன்) பார்வையானது |— இம்மூன்றும் - இம்மூன்றனுடையத ன்மைகளையும் — உடைத்து - உடைத்தாயிருக்கின்றது. எ- று. ❋ இன்பமும் துன்பமும் ஒருசேரச்செய்யாநின்றதென் பதாம். (வருத்தலாதித்தொழில் பற்றிவந்த ஐயநிலையுவமம்.) (௫)

கொடும்புருவங் கோடா மறைப்பி னடுங்கஞர் ❋
செய்யல மன்னிவள் கண். - - - - ௬.

[இதுவுமது.] — இ-ள். கொடும்புருவம் - (பிரியாநட்பாகி ய) கொடியபுருவங்கள் — கோடாமறைப்பின் - (தாம்) செவ் வையாயிருந்துவிலக்கினால் — (அவைகளைக்கடந்து) — இவ ள்கண் - இவளதுகண்கள் |— நடுங்கஞர் - நடுங்குதற்கு ஏதுவாகி யதுயரை |— செய்யல - (எனக்குச்)செய்யமாட்டா. எ-று. ❋ நட்பினனைக் கண்டித்துப் புத்திசொல்வோர் தாம் செம்மை யுடையரா யிருக்கவேண்டுதலால் - கோடாவென்றும், துயர் செய்கின்ற அவைகளுக்கும் உறுகின்றதனக்கும் நடுநின்றுவி லக்கும்போதும் சிறிது சந்து கிடைக்கப்பெற்றால் அதுவழி யாகவந்து துன்பஞ்செய்யுமாகலால் - மறைப்பினென்றும், சொல்லினார். தாம் இயல்பாகக்கோணுதலுடைமையால் அவை

களோமிகுதிக்கண் மேற்சென்றிடிக்கமாட்டாவாயின வென்பது படநின்றமையால்-மன்னென்றது ஒழியிசையில்வந்தது. (௮)

கடாஅக் களிற்றின்மேற் கட்படா மாதர் - - ✻
படாஅ முலைமேற் றுகில். - - - - - ௭.

[அவளது முலைகளினாலாகிய வருத்தம் சொல்லியது.] — இ-ள். மாதர்-இம்மாதருடைய—படாமுலைமேற்றுகில் - சாய்தலில்லாத முலைகளின்மேலிட்டஆடையானது — (அவைகொல்லாமற்காத்தலால்)— கடாஅக்களிற்றின்மேல் - (கொல்லுவதாகிய) மதயானையின்மேலிட்ட — கட்படாம் - முகபடாத்தினையொக்கும். எ-று. ✻கண்ணைமறைத்தல்பற்றி-கட்படாமென்றார். ஆடையால்மறைத்தல் நாணுடைமகளிர்க்கு இயல்பாகலால் அவ்வாடையோடே அவைகளின் வெம்மையும் பெருமையுங்கண்டு இவ்வளவுவலிமையுடையவை இனி எந்நாளுஞ் சாயாவென்று நினைத்து-படாஅ முலையென்றார். உவமானஞ்சிறிதுமறையா வழியும் கொல்லுமென்பது தோன்ற நின்றது.

ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினு - - ✻
ணண்ணாரு முட்குமென் பீடு. - - - - அ.

[நெற்றியாலாகிய வருத்தஞ்சொல்லியது.] — இ-ள். ஞாட்பினுள் - போர்க்களத்து— நண்ணாரும் - எதிர்த்திலாதபகைவரும் — உட்கும் - (எதிர்த்தவர்வாய்ச் சொற்கேட்டு) அஞ்சுதற்கு ஏதுவாகிய — என்பீடு - என்வலி | — ஒண்ணுதற்கு - (இம்மாதருடைய) ஒளிபொருந்திய நெற்றியொன்றற்குமே—உடைந்ததே - அழிந்துவிட்டது. எ-று. ✻மாதரென்பது அதிகாரத்தால் வந்தது. ஞாட்பினுளென்பதனால்- பகைவராதல்பெற்றாம். பீடென்ற பொதுமையால் மனவலியும் காயவலியுங்கொள்க. ஒ ஒ வென்னும் வியப்பினிடத்துக் குறிப்பு அவ்வலிகளின் பெருமையும், நெற்றியின்சிறுமையும்,தோன்றநின்றது; கழிந்ததற்கிரங்கலால்-தற்புகழ்ச்சி அன்றாயிற்று.

பிணையேர் மடநோக்கு நாணு முடையாட் - ✻ -
கணியெவனோ வேதில தந்து. - - - - ௯.

[அணிகலத்தினாலாகிய வருத்தம்சொல்லியது.] — இ-ள். பிணையேர் மடநோக்கும் - புறத்திலே பெண்மான்போன்ற அஞ்சுதலுடைய பார்வையையும்—நாணும்-(அகத்தில்) நாணினையும்—உடையாட்கு - உடைய இவளுக்கு— (ஒற்றுமையு

டைய இப்பார்வையும் நாணமும் ஆகிய அணிகளை · போது மானவையாயிருக்க) —எதிலதந்து - வேற்றுமையுடைய அணிகளையுண்டாக்கி—அணி - அணிதல்|—எவன - என்னபயனுடைத்து. எ-று. ❊ ஓ-அசை. — இவ்வேற்றுமையுடைய அணிகள் - இவளுக்குப் பாரமும், எனக்குவருத்தமும், ஆமென்று என்னுமையால் அணிந்தா॥ அறிவிலாரென்பதாம. (கூ)

உண்டார்க ணல்ல தடுநறாக் காமம்போற் - ❊
கண்டார் மகிழ்செய்த லின்று. - - - ம.

[தலைவி குறிப்பறியலுற்ற தலைவன்சொல்லியது.] — இ-ள். அடுநறா - காய்ச்சப்பட்ட மதுவானது | — உண்டார்கணல்லது-(தன்னை) உண்டவரிடத்தேயல்லாமல் — காமம்போல் —கண்டார் - கண்டவரிடத்தே—மகிழ்செய்தல் - மகிழ்ச்சிசெய்தலை—இன்று-உடைத்தன்று. எ-று. ❊ காமமென்றது - அதை அனுபவிப்பதற்கு இடமாகியமகளிரை. — மகிழ்செய்தலிலே காமமானது மதுவினும் சிறந்ததேயெனினும் இவள்குறிப்பை ஆராய்ந்தறியாமையால் யான் அது பெற்றிலேனெனக்குறிப்பெசசம் வருவித்துரைக்க. (ம)

# ாம· ஆம் அதி—குறிப்பறிதல்.

அஃதாவது - தலைவன் தலைவிகுறிப்பை அறிதலும், தோழிகுறிப்பை அறிதலும, அத்தோழி அவ்விருவர் குறிப்பையும் அறிதலும், ஆம். தலைவியழகைக்கண்டு வருந்திய தலைவன் தலைவியைக கூடும்போது இது வேண்டுமாதலால் தகையணங் குறுத்தலின்பின் வைக்கப்பட்டது.

இருநோக் கிவளுண்க ணுள்ளதொருநோக்கு - - ❊
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து - - - ❊

[தலைவன் தலைவி யுள்ளத்துக் குறிப்பை அவள் பார்வையால் அறிந்தது.]— இ-ள். இவளுண்கண் - இவளுடைய(மை)யுண்டகண்களில்— உள்ளது - இருக்கின்ற பார்வையானது|— இருநோக்கு - (இப்பொழுது என்மேல்) இரண்டுபார்வையாயிற்று. — (அவற்றுள்) — ஒருநோக்கு - ஒருபார்வையானது| —நோய்நோக்கு - (என்னிடத்து) நோய்செய்யும் பார்வையாம். — ஒன்று - மற்றொருபார்வையானது| — அந்நோய்க்கு

ருந்து - அந்நோய்க்குமருந்தான பார்வையாம்- எ - று.❊நோ ய்செய்யு நோக்கு- அவளது மனத்தில் உண்டாகிய காமக்குறி ப்பினை வெளிப்படுத்துகின்ற பார்வை.— மருந்தாயநோக்கு- தன்னிடத்து உண்டாகின்ற அன்பினாலாகியபார்வை. — எனக் கு இவ்வருத்தம் திரும்வழியும் உண்டாயிற்றென்பதாம்...(௧)

கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்திற் - ❊
செம்பாக மன்று பெரிது. - - - - - ௨

[இதுவுமது] — இ-ள். கண்- (இவளது) கண்கள் — களவு கொள்ளுஞ்சிறுநோக்கம் - நான்காணுமல் என்னைப்பார்க்கின் றசிறியபார்வை| — காமத்தில் - ┼ மெய்யுறுபுணர்ச்சியில்— செம்பாகமன்று-ஒத்தபாதியளவன்று. — பெரிது- (அதனினு ம்) மிகும். எ - று. ❊ நான்பார்த்தபோது நாணித்தலை குனிந் தும் பாராவிடத்தே உற்றுப்பார்த்தும் வருதலாலே - கண்க ளவு கொள்ளுமென்றும், அது உண்டாங்காலம் சிறிதாகலா ல் - சிறுநோக்கமென்றும், அப்பார்வை உட்கருத்து உள்ளவி டத்தே உண்டாவதாகலால் இனி இவளைக்கூடுதல் நிச்சயமெ ன்றற்கு-செம்பாகமன்று பெரிதென்றும்,சொல்லினான்...(௨)

நோக்கினா ணோக்கி யிறைஞ்சினா ளஃதவள் - -❊
யாப்பினு ளட்டிய நீர் - - - - - ௩.

[தலைவன் தலைவியது குறிப்பைப் பார்வையாலும், நாணி னாலும், அறிந்தது.]— இ - ள். அவள்| — நோக்கினாள் - (நா ன் பாராதவளவிலே தான் என்னை அன்போடு) பார்த்தாள். —நோக்கி- பார்த்து — இறைஞ்சினாள் - (ஒன்றைஉட்கொண் டு நாணித்) தலைகுனிந்தாள். — அஃது-அச்செய்கைக்கு ஏது வாகிய குறிப்பானது| — யாப்பினுள் - (எம்மிருவரிடத்தும் தோன்றிய) அன்பாகியபயிருள்— அட்டியநீர் - (அதுவளரும் படி) வார்த்தநீராயிற்று. எ - று. ❊ யாப்பு-கட்டு. யாப்பினா லாகிய அன்பை-யாப்பென்றார். [ஏகதேச வுருவகவணி.] (௩)

யாநோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற் - ❊
றானோக்கி மெல்ல நகும். - - - - ௪.

[இது தலைவன் தலைவிகுறிப்பை நாணினாலும், மகிழ்ச்சியா

┼மெய்யுறுபுணர்ச்சி - மெய்பொருட்டுப்புணரும் புணர்ச்சி - உள்ளப்புணர் ச்சியைன்று வேறேயிருக்கையால் - இப்படிசொல்லப்பட்டது.

ஆம், அறிந்தது.] — இ-ள். யானோக்குங்காலை - (தன்னை) நான் பார்க்கும்போது— நிலநோக்கும் - (எதிர்பாராமல் நாணித்தலைகுனிந்து) நிலத்தைப்பாராநிற்கின்றாள்.— நோக்காக்கால் - (அதை அறிந்துநான்)பாராதபோது—தானோக்கி - தான் (என்னைப்)பார்த்து—மெல்லநகும் - (தன்னுள்ளே) மகிழாநிற்பள். எ-று. ※ மெல்ல நகுதல்-வெளிப்படாமல் மகிழ்தல். அதனாலே புணர்தற் குறிப்பு இனிது விளங்குதலறிந்தது.(ச)

குறிக்கொண்டு நோக்காமை யல்லா லொருகண் ※
சிறக்கணித்தாள் போல நகும். - - - - ரு.

[இதுவுமது.]—இ-ள்.குறிக்கொண்டு -(நேரே) குறிக்கொண்டு — நோக்காமையல்லால் - பாராமைமாத்திரமேயல்லது —ஒருகண் - ஒருகண்ணை— சிறக்கணித்தாள்போல - சுருக்கினவள்போல—நகும்- (என்னைப் பார்த்துத் தன்னுள்ளே) மகிழாநின்றாள். எ-று. ※ சிறங்கணித்தல் - சிறக்கணித்தாளென ச்செய்யுள்விகாரமாயிற்று. சிறங்கணித்தல் - சுருக்குதல். அதுவும் வெளிப்படத் தோன்றுமையால் - போலவென்றார்.— பார்த்தென்பது வருவிக்கப்படுதலால் - சொல்லெச்சம் — இனி இவளை அடைவதுநிச்சயமென்பது - குறிப்பெச்சம்.(ரு)

உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொ ※
லொல்லை யுணரப்படும். - - - - - சா.

[இது - தோழி தூரப்படுத்திய விடத்தேஅவளது குறிப்பை அறிந்ததலைவன் தன்னுள்ளே சொல்லியது.]—இ - ள். உறாதவர்போல் - (புறத்திலே) அயலார்போல் — சொலினும்- (கடுஞ்சொல்)சொல்லினும்— செறார்சொல் - (உள்ளே) பகையாதவர்சொல்— (பின்பிரயோசனப்படுதல்) — ஒல்லையுணரப்படும்- (குறையிரந்தவராலே) கடிதில் அறியப்படும். எ-று-※கடுஞ்சொல் - இவ்விடம் மிகுந்தகாவலையுடையது வராதேயுமென்று சொல்லுகை முதலானவை. — செறாவெனவே அருளுடைமை பெறப்பட்டது.—தன்குறைமுடிக்க நினைத்தே தூரப்படுத்தலைக் குறிப்பால் அறிந்து உலகியலின்மேல் வைத்துச்சொல்லியபடி. இது வருகின்றபாட்டிற்கும் ஒக்கும். (சா)

செறாஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போ னோக்கு ※
முறாஅர்போன் றுற்றார் குறிப்பு. - - - - எ.

[இதுவுமது.] — இ - ள். செறாச்சிறுசொல்லும் - பின்

இனிதாவதாய் முன்னே இன்னாதாகியசொல்லும் | — செற்றார் போனோக்கும் - (உள்ளேபகையாதிருந்தேபுறத்தே) பகைத்தவர்போன்ற கோபப்பார்வையும் | — உறாஅர்போன்றுற்றார் - அயலோர்போலிருந்து நட்பாயினவர்க்கு— குறிப்பு - ஒருகுறிப்புப்பற்றி வருவனவாம். எ - று. ※ குறிப்பு - ஆகுபெயர். இவை உள்ளே ஒருபயன் குறித்துச் செய்கின்றவை இயல்பல்லவாகலால் - இவைகளுக்கு அஞ்ச வேண்டா வென்பதாம். (எ)

அசையியற் குண்டாண்டோ ரேஎர்யா னோக்கப் - ※
பசையினள் பைய நகும். - - - - - - அ.

[இதுவுமது.] — இ - ள். யானோக்க - (என்னைநீக்குகின்ற சொல்லுக்குப்பொருமல்) நான்இரந்து நோக்கியவிடத்து—பசையினள் - (அதுதெரிந்து) இரங்கினவளாகி—பையநகும்- உள்ளேநகாநின்றாள்.—(அதனால்)— அசையியற்கு - அசைந்தசாயலையுடையவளுக்கு—ஆண்டு - அந்நகையி னிடத்து— ஓரேர் - ஒருநன்மைக்குறிப்பு | —உண்டு. எ - று. ※ ஏர் - ஆகுபெயர். அக்குறிப்பு இனிபழுதாகா தென்பதாம். - - - (அ)

ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல் - - ※
காதலார் கண்ணே யுள. - - - - - - - சு௯.

[இது - தோழிமதியுடன்பட எண்ணித் தன்னுள்ளே சொல்லியது.]—இ - ள். ஏதிலார்போல - முன்னறியாதவர் போல —பொதுநோக்கு நோக்குதல் - (ஒருவனை ஒருவர்) பொதுப்பார்வையாகப்பார்த்தல் | — காதலார்கண்ணே - ஆசையையுடைய இவ்விருவரிடத்தும்—உள - உண்டாகின்றன. எ - று. ※ பொதுநோக்கு - யாவரிடத்தும் ஒருதன்மையதாகிய பார்வை.— பார்த்தற்றொழிலொன்றே யாயினும் இருவரிடத்தும் உண்டாதலாலும், ஒருவரிடத்திலேயும் குறிப்புவேறுபட்டால் பலவாயாகலாலும், உள வெனப் பன்மையாலே சொல்லப்பட்டது. இருவரும் மதுமறைந்துண்டோர் மகிழ்ச்சிபோல உள்ளத்துள்ளேமகிழ்தலால் - அதுபற்றிக்காதலாரென்றும், அதுபுறத்து வெளிப்படாமையால் ஏதிலாரென்றும், சொல்லினான்.

கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள் ※
என்ன பயனு மில. - - - - - - - - ௰.

[இதுவுமது.]—இ-ள். (காமத்திற்குரியவிருவருள்)— கண்ணொடு - (ஒருவரது) கண்களோடு— கண்ணிணை - (ஒருவர்) கண்

கள் — நோக்கொக்கின் - பார்வையால் ஒக்குமாயின் — வாய்ச்சொற்கள் (உண்மைதோன்றச்சொல்லுகின்ற) வாய்ச்சொற்கள்| — என்னபயனும் - ஒருபயனும்— இல - உடையனவல்ல. எ - று. ※ பார்வையாலொத்தல். — ஆசைப்பார்வையுடையனவாதல். — வாய்ச்சொற்கள் - மனத்திலல்லாமல் வாயளவிலே தோன்றுகின்றசொற்கள். — இருவர்சொல்லும் கேட்டு உலகியலின்மேல் வைத்துச் சொல்லியபடி. — இருவர்சொல்லும்விதமாவன - அவள் புனங்காவலின்மேலும், அவன் வேட்டத்தின்மேலும், சொல்லுவன. — பயனில் சொற்களாகையால் இச்சொற்கள் கொள்ளப்படாவென்பதாம். (௰)

# ஈ௰க - ஆம், அதி—புணர்ச்சிமகிழ்தல்.

அஃதாவது - அப்படிக்குறிப்பறிந்து புணர்ந்ததலைவன் அப்புணர்ச்சியை மகிழ்ந்துசொல்லுதல். அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு - ※
மொண்டொடிகண்ணே யுள. - - - - - - -க.

[இதுதலைவன்※ இயற்கைப்புணர்ச்சி முடிவிலே சொல்லியது.]—இ - ள். கண்டு - (கண்ணாலே) கண்டும்—கேட்டு - (செவியாலே) கேட்டும்—உண்டு - (நாவாலே) உண்டும்— உயிர்த்து - (மூக்காலே) மோந்தும்—உற்று - (மெய்யாலே) தீண்டியும்—அறியும் - அனுபவிக்கப்படுகிற— ஐம்புலனும்| — ஒண்டொடிகண்ணே - இவ்வொளிபொருந்திய வளையையுடையவளிடத்தே—உள - உண்டாயின. எ - று. ※ உம்மை - முற்றும்மை. — தேற்றேகாரம் வேறோரிடத்தில்லாமை விளங்கநின்றது. — வேறுவேறு காலங்களிலே வேறுவேறு பொருள்களாலே அனுபவிக்கப்படுகிற புலங்களெல்லாம் ஒரேகாலத்தே இவளிடத்தே என்னாலே அனுபவிக்கப்பட்டன வென்பதாம். (க)

பிணிக்கு மருந்து பிறம னணியிழை - - - ※
தன்னோய்க்குத் தானே மருந்து. - - - உ.

[இது - தலைவன்† இடந்தலைப்பாட்டிலே சொல்லியது.]

---

※ இயற்கைப்புணர்ச்சி - ஒருராசகுமாரன் வேட்டைக்குப்போய் மலைச்சோலையிலே விளையாடவந்ததனித்து நின்றகுறக்கன்னிகையைக்கண்டு கூடியது.
† இடந்தலைப்பாடு இரண்டாந்தடவை முன்கூடியவிடத்தே தலைவன்தலைவியைக்குறித்துச்சென்றுகூடியது.

இ-ள். பிணிக்கு - (வாதமுதலாகிய) பிணிகளுக்கு— மருந்து - மருந்தாவன |—பிற - (அவைகளுக்கு நிதானமானவை யல்லாமல்) விரோதமாகிய குணத்தையுடையவையாம். — அப்படி யல்லாமல்) — அணியிழை - இவ்வணியிழையுடையவள் |—தன் னோய்க்கு - தன்னாலாகியபிணிக்கு— தானேமருந்து - தானே மருந்துமாயினாள். எ - று. ❊ இயற்கைப்புணர்ச்சியை நினைத்து முன்வருந்தினதனால் - தன்னோயென்றும், அவ்வருத்தம் தணித்துவந்து நின்ற அவளை முன்கூடியவிடத்தே சென்று எதிர்ப்பட்டுத்தீர்ந்ததனால் - தானேமருந்தென்றும், சொல்லினன் - இப்பிணியும் எளியவைகளால் தீரப்பெறாதெனப் படநின்றமையால் - மன்னுழியிசையிலே - வந்தது. (உ)

**தா**ம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொ - ❊
றாமரைக் கண்ணானுலகு. - - - - - - - ௩.

[ பேரின்பத்திற்குரியநீ இச்சிற்றின்பத்துக்கு இப்படிப்பட்டவனாகுதல் தகாதென்ற பாங்கனுக்குத் தலைவன்சொல்லியது.]—இ-ள். (ஐம்புலன்களையும் அனுபவிப்பவர்க்கு)— தாம்வீழ்வார் - தாம்விரும்புமகளிரது — மென்றோள் - மெல்லிய தோள்களிடத்துத்துயிலும் — துயிலின் - துயில்போல்—தாமரைக்கண்ணானுலகு - (அவைகளைத் துறந்தயோகிகளால் அடையப்படுவதாகிய) கமலக்கண்ணனது உலகம் |—இனிதுகொல் - வருந்தாமலடையக்கூடுவதோ. எ-று. ❊ அனுபவிப்பவர்க்கென்பது - வருவிக்கப்பட்டது. இப்படிப்பட்டது யிலை விட்டுத் தவம்யாகங்களால் வருந்தவேண்டுதலாலே - எம்போல்வார்க்கு ஆகாதென்னுங்கருத்தால் இனிதுகொலென்றான். (௩)

**நீ**ங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந் - ❊
தீயாண்டுப் பெற்றா ளிவள். - - - - - ௪.

[தலைவன் †பாங்கற்கூட்டமுடிவிலேசொல்லியது.]—இ- ள். நீங்கின் - (தன்னை) நீங்கியபோது — தெறூஉம் - சுடாநிற்கும். — குறுகுங்கால் நெருங்கும்போது—தண்ணென்னும் - குளிராநிற்கும். — தீ-(இப்படிப்பட்ட)தீயை{— (எனக்குத்தருவதற்கு)—யாண்டு - எவ்வுலகத்திலே—இவள் | — பெற்றாள். எ - று ❊ சுடாமுன் துன்பமடைதலால் - நீங்கிற்றெறூஉமென்றும், கூடியபின் இன்பமடைதலால் - குறுகுங் காறண்ணென்னு

† பாங்கற் கூட்டம் - மூன்றாந்தடவை தலைவன்தனது தோழனைத்துணையாகக்கொண்டு தலைவியைக்கூடியது.

பென்றும், இப்படிப்பட்டதி உலகிலில்லாமையால் - யாண்டு ப் பெற்றுளென்றும், சொலலினன். தன்காமத்தினையே அவ ள்தந்ததாகச்சொல்லினன் - அவளால் அது வெளிப்படுதலால்.

வேட்ட பொழுதி னவையவை போலுமே - *
தோட்டார் கதுப்பினா டோள். - - - ரு

[இது - தலைவன் †பாங்கியிற் கூட்டமுடிவிலே சொல்லியது.] —இ-ள். (எப்பொழுது பெற்றுக்கூடினும்) — தோட்டார்க துப்பினாள் - மலரானிறைந்த கூந்தலையுடையவளது — தோ ள்-தோள்கள் | — வேட்டபொழுதின் - (மிகவுமஇனிய பொ ருள்களைப்பெற) விரும்பியபொழுது — அவையவைபோலு மே - அவ்வப்பொருள்கள் போலவந்து இன்பஞ்செய்யும்.எ-று. * தோடு-இதழ். அதுபூவுக்கு ஆகுதலால் ஆகுபெயர். இயற்கைப்புணர்ச்சி - இடந்தலைப்பாடு - பாங்கற்கூட்டம் இ வைகளிலே முன்னமே அத்தோள்கள் அனுபவிக்கப்பட்டிரு ந்தும் பின்னும் புதியவைபோலிருந்து நெஞ்சம்பிணித்தலா ல் அவ்வாராமை பற்றி இப்படிசொல்லினன். (ரு)

உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக் - *
கமிழ்தி னியன்றன தோள். - - - - - சா.

[இதுவுமது.] — இ-ள். உயிர் - (தன்னைப்பெறாதுவாடிய என்) னுயிர் | — உறுதோறு - (பெற்று) உறுந்தோறும் — த ளிர்ப்ப தளிர்க்கும்படி — தீண்டலால் — பேதைக்கு - இம்ம ங்கைக்கு—தோள் - தோள்கள் | — அமிழ்தினியன்றன - (தீண் டப்பட்ட) அமிழ்தினாலே செய்யப்பட்டன.எ-று. * எதுவா கலால் தீண்டல் அமிழ்திற்கும்பொருந்தியது. — வாடிய உயி ரைதளிர்ப்பித்தல்பற்றி - அத்தோள்களை அமிழ்தினியன்றன வென்றான், தளிர்தல்-இன்பத்தாலே தழைத்தல். (சா)

தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றா - - - *
லம்மா வரிவை முயக்கு, - - - - - எ.

[இது - நீஇவளைக்கல்யாணஞ் செய்துகொண்டு உலகோர்தம் மில்லி லிருந்துதமதுபங்கை உண்கிறதில்லை றத்தோடுபொருந் தல்வேண்டுமென்ற தோழிக்குத் தலைவன்சொல்லியது.] — இ-ள். அம்மாவரிவை முயக்கு - அழகியமாமை நிறத்தையுடைய மாதின்புணர்ச்சியானது | — (இன்பந்தருதலில்) — தம்மிலிரு

†பாங்கிற்கூட்டம் - நாசநந்தடவைதோழிபைத்துணைபாகக்கொண்டுகூடியது.

ந்து - தமக்குரியமனையிலிருந்து—தமது - (உலகோர்)தம்மு யற்சியால் வந்த பொருளை—பாத்து - (தென்புலத்தார் முத லாகிய ஐவர்க்கும்)பகுந்துகொடுத்து—உண்டற்று - (தமதுப ங்கை) உண்பதுபோல் இன்பஞ்செய்கின்றது.எ - று. ❋ தொ ழிலுவமம். இல்லறஞ்செய்தாரடையும் சுவர்க்க வின்பத்தை எனக்கு இப்புணர்ச்சி யேதருமென்று கல்யாணத்திற்கு உட ன்படாதவன் சொல்லியபடியாயிற்று.மாமை - பொன்னிறம்.

வீழு மிருவர்க் கினிதே வளியிடை - - - ❋
போழப் படாஅ முயக்கு. - - - - அ.

[இது-ஒத்த அன்புடைய உமக்கு ஒருபோதும் விடாத பு ணர்ச்சியே இனிதாகலால் விவாகஞ் செய்துகொள்ளென்ற தோழிக்குச்சொல்லியது.] — இ-ள். (நீசொல்லுகின்றது ஒ க்கும்) — வளியிடை போழப்படா - ஒருபொழுதும் நெகி ழாமையால்)காற்றால் இடையறுக்கப்படாத — முயக்கு-புண ர்ச்சியானது| — வீழுமிருவர்க்கு- (ஒருவரைஒருவர்) விரும்பு கிற இருவர்க்கும்—இனிதே. எ- று ❋ முற்றும்மைவிகாரத் தாற்றொக்கது - ஏகாரம் - தேற்றம்.—இங்கேஇருவரில்லாமை யால் அது ஒவ்வாதென்பதுகருத்து. — களவுப்புணர்ச்சியை மகிழ்ந்துவிவாகத்துக்கு உடன்படாதவன் சொல்லியபடி.(அ)

ஊடலுணர்தல் புணர்த லிவைகாமங் - - - ❋
கூடியார் பெற்ற பயன். - - - - - கூ.

[இது-மறைக்கவேண்டாமையால் நடுநீங்கலில்லாத புணர் ச்சியே இன்பப்பயனுடைய தாகலால் விவாகஞ்செய்து கொள் ளென்றதொழிக்குச்சொல்லியது.]— இ - ள். ஊடல் - (புணர் ச்சி இனிதாதற்பொருட்டுவேண்டு) ஊடலும் — உணர்தல் (அ தனை அளவறிந்து) நீங்குதலும்— புணர்தல் - (அதன்பின்உண் டாகின்ற) அப்புணர்ச்சியும்என்கிற—இவை - இவையல்லவா— காமங்கூடியார் — ( விவாகஞ்செய்துகொண்டு ) காமத்தை இ டைவிடாதடைந்தவர்|— பெற்றபயன் - பெற்றபயன்கள். எ- று ❋ ஆடவர்க்குப் பிரிவென்பதொன்று உண்டாவதல்லாமல், அதுதான் பரத்தையரிடத்தாதலும், அதனை அறிந்துமகளிர் ஊடிநிற்றலும், அவ்வூடலைத்தவறுசெய்த அவர்தாமே தந்தவ றில்லாமை சொல்லிநீக்கலும், பின்னும் அவ்விருவரும் ஒத்தவ ன்பினராய்க் கூடலும், அல்லவா. முன்விவாகஞ் செய்துகொ

ண்டு அடைந்தவர்பெற்றபயன். அப்பயன் இருதலைப் புள்ளி னோருயிராகிய மாறு வன்புடைய எமக்குவேண்டாவென அ வ்விவாகஞ்செய்து அடைதலை இகழ்ந்துசொல்லியபடி. (௯)

அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ் - - - ※
செறிதோறுஞ் சேயிழை மாட்டு. - - - - ௰.

[இது - தலைவியைப்புணர்ந்து உடன்கொண்டு போகின்றதலைவன் தன்னுள்ளே சொல்லியது.] —இ - ள். செறிதோறும்- புணரப்புணர— சேயிழைமாட்டு - செய்ய ஆபரணத்தையுடைய இவளிடத்து—காமம் - காதல்—| அறிதோறு - (நூல்களாலும், நுட்பவறிவாலும், பொருள்களை) அறியவறிய— அறியாமை - (முன்னை)யறியாமை | — கண்டற்று - காணப்படுதல்போலே காணப்படுகின்றது. எ - று. ※களவிலே பலவிடையீடுகளால் தன்கருத்தின்படி அனுபவிக்கப்பெறாமல் வருத்தமுற்றவன் உடன்கொண்டுபோம்போது அதுதீர்தலால் - செறிதோறுமென்றான். அறிவிற்கு எல்லையில்லாமையால் மேலு மேலும் அறியவறிய முன்னையறிவு அறியாமையாய் முடியுதல்போல் புணர்தற்கு எல்லையில்லாமல் மேலுமேலும் புணரப்புணர முன்னைப்புணர்வு புணராமையாய் முடிகின்றதெனத் தன்றோராமைசொல்லியபடி. — இப்புணர்ச்சிமகிழ்தல் தலைவியிடத்துக் குறிப்பாலல்லது சொல்லால்நிகழாது.ஆல் - அசை.

## ௱௯௫, அதி- நலம்புனைந்துரைத்தல்.

அஃதாவது - தலைவன் தலைவிநலத்தினைவருணித்துச்சொல்லியது. இதுபுணர்ச்சியின் மகிழ்ந்தவிடத்துநிகழ்வதாகலால் அதன்பின்வைக்கப்பட்டது.

நன்னீரை வாழி யனிச்சமே நின்னினு - - - ※
மென்னீரள் யாம்வீழ் பவள். - - - - - க.

[இது- தலைவன் இயற்கைப்புணர்ச்சி முடிவிலே சொல்லியது.]—இ-ள். அனிச்சமே- அனிச்சப்பூவே — வாழி - வாழ்வாயாக.—நன்னீரை - (மென்மையாலே நீ எல்லாப்பூவினும்) நல்ல குணமுடையை. — (அப்படியிருந்தாலும்) — யாம்வீழ்பவள் - எம்மால் விரும்பப்பட்டவள் | — நின்னினுமென்னீரள் - உன்னினுமெல்லியகுணத்தையுடை யாள் - எ

சம் - ஆகுபெயர். — வாழியென்பது உடன்பாட்டுக்குறிப்பு. இனிநானே மெல்லியகுணமுடையேனென்னுஞ் செருக்கை ஒழிவாயாகவென்பதாம். — அப்பொழுது பரிசித்து அறிந்தாளுதலால் - பரிசத்தினினிமையையே பாராட்டினான். - (௧)

மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண் - - ✻
பலர்காணும் பூவொக்கு மென்று. - - - - ௨.

[இது - தலைவன் இடந்தலைப்பாட்டிலே சொல்லியது.] — இ - ள். நெஞ்சே—இவள்கண் - (யானேகாணப்பெற்ற) இவள் கண்களை— பலர்காணும் - பலராலும்காணப்படுகிற— பூவொக்குமென்று - மலர்கள் ஒக்குமென்று நினைத்து — மலர்காணின் - (தாமரைகுவளை நீலமுதலாகிய) மலர்களைக் கண்டால்— மையாத்தி - மயங்காநின்றாய். [உனக்கு அறிவிருந்தவிதம் என்ன].எ - று. ✻ மையாத்தல்-இங்கே ஒப்பாகாதவைகளை ஒக்குமென்றுகொள்ளுதல். — இயற்கைப்புணர்ச்சியி னீங்கியது முதலாகத் தலைவி கண்களைக் காணப் பெறுமையால் அவைகளோடு சிறிதொத்திருக்கிற மலர்களைக் கண்டவிடத்தெல்லாம் அவைகளிடத்து ஆசைசெய்து வந்ததலைவன் இப்பொழுது அக்கண்களினலமுழுதும் தானே தனியாளை இடத்தெதிர்ப்பட்டு அனுபவித்தானாகலால் அம்மலர்கள் ஒப்பாகாமைகண்டு ஒப்புமைகருதிய நெஞ்சை இகழ்ந்து சொல்லியபடி. - (௨)

முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம் - - ✻
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு. - - - ௩.

[இது - கூட்டுதலுற்றபாங்கனுக்குத் தலைவன்தலைவியினியல்பு சொல்லியது.]— இ - ள். வேய்த்தோளவட்கு - மூங்கில் போலுந் தோள்களையுடையவளுக்கு— மேனி - திறம்|—முறி - தளிர்நிறமாயிருக்கும்.—முறுவல் - பல்லானது|—முத்தம் - முத்தாயிருக்கும். — நாற்றம் - இயற்கைவாசனையானது | — வெறி - நல்லவாசனையாயிருக்கும்.—உண்கண் - (மை) யுண்டகண்கள்|—வேல் - வேல்களாயிருக்கும்.எ - று. ✻ முறி முறுவல் - ஆகுபெயர். — உருவகவகையாலேசொல்லினமையால் - புனைந்துரையாயிற்று. — உன்னாலே நினைக்கப்பட்டவளை அறியேனென்றுதூரப்படுத்திய தோழிக்குத் தலைவன் சொல்லியதுமாம்.

காணிற்குவளை கவிழ்ந்து நிலனோக்கு - ✻
மாணிழை கண்ணொவ்வே மென்று. - - - ௪.

[இது - பாங்கற்கூட்டத்திலே சென்றுசார்தலுறுந்தலைவன்

சொல்லியது.] — இ-ள். குவளை - குவளைமலர்கள் | — காணின் - பார்க்கிறதொழிலை உடையவையாயிருந்தால் — மாணிழை கண் - மாட்சிமைப்பட்ட ஆபரணங்களையுடையவளது கண்களை — ஒவ்வேமென்று - நிகரோமென்றுநினைத்து — கவிழ்ந்து - (அந்நாணத்தினாலே) தலைகுனிந்து — நிலன் - நிலத்தை} — நோக்கும் - பார்க்கும். எ-று. ❊ நிறத்தாலேயன்றி - தொழிலாலும் ஒவ்வாதென்றற்கு - காணினென்றும், கண்டால் அவ்வொவ்வாமையால் நாணுடையவாமென்பது தோன்ற - கவிழ்ந்தென்றும், சொல்லினான். — காணலும் நாணலும் இல்லாமையால் இறுமாந்து ஆகாசத்தைநோக்கின வென்பதாம். (௪)

அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தா ணுசுப்பிற்கு*
நல்ல படாஅபறை. - - - - - - ௫.

[இது-தலைவன் + பகற்குறியிலே பூவணிகண்டு சொல்லியது.] — இ-ள். (இவள்|தன்மென்மை நினையாமல்) — அனிச்சப்பூ - அனிச்சமலரை — கால்களையாள் - தாள்களையாளாகி — பெய்தாள் - சூடினாள். — நுசுப்பிற்கு - (இனியிவ) ளிடைக்கு — நல்ல - நல்லவையாகிய — பறை - பறைகள்| — படா - ஒலியா. எ-று. ❊ இம்மலர்த்தாளின் பாரம்பொறுமையால் இடைமுரியும் முறிந்தால் அதற்குச் செத்தவர்க்கு உரியநெய்தற்பறையே ஒலிக்குமென்பதாம். — மனிதர்க்கு உரியசாவும், பறையொலித்தலும், குறிப்பால்இடையின்மேல் ஏற்றப்பட்டன. (௫)

மதியு மடந்தை முகனு மறியா - - - *
பதியிற் கலங்கிய மீன். - - - - - - ௬.

[இது- * இரவுக்குறியிலே தலைவன்சந்திரனைக்கண்டுசொல்லியது.] — இ-ள். மீன் - தாரகைகள் | — (வேறுபாடுபெரிதாயிருக்கவும்) — மதியும் - (தமது) சந்திரனையும் — மடந்தைமுகனும் - (எமது) மாதுமுகத்தையும் — அறியா - (இதுசந்திரன் இதுமுகமென்று) அறியமாட்டாமல் — பதியின் - (தன்) நிலையினின்றும் — கலங்கிய - கலங்கித்திரியாநின்றன. எ-று. ❊ ஓரிடத்து நில்லாமல் எப்போதும் உலாவுதல் பற்றி - பதியிற்கலங்கியவென்றான். — வேறுபாடுபின்பாட்டிற் சொல்லப்படும். (௬)

அறுவாய் நிறைந்த வவிர்மதிக்குப் போல - *
மறுவுண்டோ மாதர் முகத்து. - - ௭.

[இதுவுமது.] — இ-ள். (அத்தாரகைகள் அப்படி கலங்குத

+ பகற்குறி, பகலிலே ஓரிடத்திற்குறிவைத்து வந்துகூடல்.
* இரவுக்குறி, இரவிலே தலைவி[illegible]

ற்குக்காரணம்|யா் து.] —அறுவாய்நிறைந்த - முன்குறைந்தவி டம் வந்துநிறைந்த—அவிர் - விளங்குகிற — மதிக்குப்போல - சந்திரனிடத்துப்போல — மாதர்முகத்து - இம்மாதர்முகத்தி னிடத்து— மறு - களங்கமானது|—உண்டோ. எ-று. ❊ தே யந்தேய்தலும் வளர்தலும், களங்கமும், இல்லாமைபற்றி - வேறுபாடு அறியலாயிருக்க அறிந்திலவென்று இகழ்ந்து சொல்லியபடி.

**மா**தர் முகம்போ லொளிவிடவல்லையேற் - - ❊
காதலை வாழி மதி. - - - - ௮.

[இதுவுமது.]— இ-ள். மதி - சந்திரனே — வாழி - வாழ்வா யாக.—மாதர்முகம்போல் — ஒளிவிடவல்லையேல் - (நான்மகிழு ம்படி) ஒளிவீசவல்லாயாகில் — காதலை - (நீயும்என்னால்) இச் சிக்கப்படுதலையுடையையாவாய்.எ-று. ❊ மறு - உன்னிடத் திருத்தலால் அதுமாட்டாய்மாட்டாமையால் என்னால் இச்சி க்கவும் படாயென்பதாம். — வாழி - இகழ்ச்சிக்குறிப்பு (அ)

**ம**லரன்ன கண்ணாண் முகமொத்தி யாயிற் - - ❊
பலர்காணத் தோன்றன் மதி. - - ௯.

[இதுவுமது.]— இ-ள். மதி - சந்திரனே — மலரன்னகண் ணாள் - இம்மலர் போலுங்கண்களையுடையவளது — முகம் - முக த்தை— ஒத்தியாயின் - ஒக்கவேண்டுவையாகில் — (இதுபோல் யான்காணத் தோன்று. (—பலர்காணத்தோன்றல் - பலர்காண த் தோன்றாதே. எ-று. ❊ தானே முகத்தினலமுழுதும் கண் டு அநுபவித்தானாகலால் இங்கேயும் பலர்காணத்தோன்றலை இழிவுபடுத்திச் சொல்லினான். — பலர்காணத்தோன்றில் உன க்கு அம்முகத்தோடொப்பு உண்டாகாதென்பதாம். (௯)

**அ**னிச்சமு மன்னத்தின் றூவியு மாத - - - ❊
ரடிக்கு நெருஞ்சிப் பழம். - - ௰.

[இது - †உடன்போக்குச் சொன்னதோழிக்குத்தலைவன் அ தனருமையைச் சொல்லி மறுத்தது.] — இ-ள். (உலகத்தாரா ல் மென்மைக்கு எடுக்கப்பட்ட) — அனிச்சமும் - அனிச்சமல ரும்| — அன்னத்தின்றூவியும் - அன்னப்பறவையினிறகும் |— மாதரடிக்கு —நெருஞ்சிப்பழம் - நெருஞ்சிப்பழம் போல் வ ருத்தஞ்செய்யும். எ-று. ❊ முள்வயிதாதலால் - பழமென்றார். இப்படிப்பட்ட அடிகள் கூர்ங்கல்லும், வெப்பமுமுள்ளபா லை வழியை எப்படிகடப்பாளென்பது குறிப்பாலே பெறப்

† [illegible] செல்வதல்.

பட்டது. — செம்பொருளே யன்றிக் குறிப்புப் பொருளும் அடிநலனழியாமையாகலின் இதுவும் இவ்வதிகாரத்ததாயது.

## ௱௰௩-ஆம்,அதிகாதற்சிறப்புரைத்தல்.

அஃதாவது - தலைவன் தன்னாசைமிகுதியைச் சொல்லலும்,தலைவி தன்னாசைமிகுதியைச் சொல்லலும், ஆம். இது புணர்ச்சியும் நலனும்பற்றி நிகழ்கின்றதாகலால் அவற்றினதிகாரங்களின் பின்வைக்கப்பட்டது.

பாலொடு தேன்கலன் தற்றே பணிமொழி - - *
வாலெயி றூறிய நீர். - - - ௧.

[இது - தலைவன் யியற்கைப்புணர்ச்சி முடிவிலே தன்னயப்பை அறிவித்தது.] — இ-ள். பணிமொழி - இம்மெல்லிய சொல்லையுடையவளது — வாலெயிறூறியநீர் - வெண்பல்லூறியநீரானது| — பாலொடு தேன்கலந்தற்றே - பாலுடனேதேனைக்கலந்தகலவைபோலும், எ-று. ※ பாலொடு தேனென்றதனால் - அதன்சுவைபோலுஞ் சுவையுடைத்தென்ப தாயிற்று. வேறுவேறறியப்பட்ட சுவையையுடைய பாலும் தேனும் கலந்தவிடத்து அக்கலவை இன்னதென்று அறியக்கூடாத இனிய சுவையுடையதாமாகலால் - அச்சுவை நீர்க்கும் அடைவிக்க. (௧)

உடம்போடுயிரிடை யென்ன மற்றன்ன - - - *
மடந்தையோ டெம்மிடை நட்பு. - - (௨)

[இது - தலைவன்பிரிவிலுண்டாகிய அச்சத்தைச் சொல்லியது.]— இ-ள். மடந்தையோடெம்மிடை - இம்மாதோடு எம்மிடத்து உண்டாகிய — நட்பு - நட்புகள்| — உடம்போடுயிரிடை - உடம்போடுவுயிரிடத்து — என்ன - எப்படிப்பட்டவை| — அன்ன - அப்படிப்பட்டவையாகும்,எ-று. ※ எப்படிப்பட்டவையெனப்பன்மையாற் சொல்லியது - இருவகைநட்புகளும் ஆதிதொடங்கி வேறுபாடில்லாமல் கலந்துவருதல் இன்பத்துன்பங்களை ஒக்க அனுபவித்தல், அவசியம் வேண்டுதல் என்றிவைகளைநோக்கி. — ஊழினாலே கூட்டப்பட்ட புணர்ச்சியாகலால் அப்பொழுது உணர்ச்சியில்லா திருந்தவள் பின்னேஉடையளாமன்றே ஆகிய விடத்தே இவன் எவனோவென்றும், என்னிடத்தே அன்புடையனோவென்றும், பின்னும் இவனைக்கலத்தல் கூடுமோவென்றும், அவளுள்ளத்தே தோன்று

ம் அவைகுறிப்பால் அறிந்து அவை தீரச்சொல்லியபடி. (௨)

**க**ருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழுந் - - ✻
திருநுதற் கில்லை யிடம். - - - ௩.

[இது - இடந்தலைப்பாட்டிலே தலைவிநீங்கும்போது தலைவன் சொல்லியது.] — இ-ள். கருமணியிற்பாவாய் - (என்கண்ணிற்) கருமணியிலிருக்கின்றபாவையே—நீ|— போதாய் - (அவ்விடம் விட்டுப்) போவாயாக. — (போகாதிருப்பாயாகில்) — யாம்வீழும் - எம்மால்விரும்பப்படுகின்ற—திருநுதற்கு - அழகிய நெற்றியையுடையவளுக்கு — இடம்| — இல்லை. எ-று. ❊ நான் காணாமல் இருக்கமாட்டாமையால் இவள் புறத்துப் போந்தன்மையளல்லாமல் என்கண்ணுள் இருக்குந்தன்மையள் இருக்கும்போது. உன்னோடுகூடியிருக்க இடம்போதாமையால் உன்னிலுஞ் சிறந்த இவளுக்கு அவ்விடத்தைக் கொடுத்து நீபோய் விடுவாயாகவென்பதாம். (௩)

**வா**ழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாத - - ✻
லதற்கன்ன ணீங்கு மிடத்து. - - ௪.

[இது - பகற்குறியிலே புணர்ந்து நீங்குந்தலைவன் சொல்லியது.]—இ-ள். (எனக்கு)— ஆயிழை - ஆராய்ந்துகொள்ளப்பட்டஆபரணத்தையுடையவள்| — (புணருமிடத்து) — உயிர்க்கு— வாழ்தலன்னள் - (உடம்போடுகூடி) வாழ்தல்போலாகின்றாள்.—நீங்குமிடத்து-பிரியுமிடத்து — அதற்கு—அவ்வுயிர்க்கு — சாதலன்னள் - அவ்வுடம்பி னீங்கிப்போதல் போலாகின்றாள். எ-று. ❊ எனக்கென்பதும், புணருமிடத்தென்பதும். அவாய்நிலையால் வந்தன- வாழுங்காலத்துவேறுபாடில்லாமல் வழிநிற்றலாலும், சாங்காலத்து வருத்தஞ்செய்தலாலும், அவைகளை அவள்புணர் வுபிரிவுகளுக்கு உவமையாக்கினான். ௪.

**உ**ள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியே - ✻
னொள்ளமர்க் கண்ணாள் குணம். - - - - ௫.

[இது- † ஒருவழித்தணந்துவந்தபோது எம்மை நினைத்து மறிவீரோவென்ற தோழிக்குத் தலைவன் சொல்லியது.] — இ-ள். யான்|—ஒள்ளமர்க் கண்ணாள்குணம் - ஒளியினவாகிப் போர்செய்கிற கண்களையுடையவளது குணங்களை —, மறப்பின் - மறந்தேனாயின்—உள்ளுவன் - நினைப்பேன்.—மறப்பறியேன் - (ஒருபோதும்) மறத்தலறியேன். [ஆகலால் நினைத்

† ஒருவழித்தணத்தல், தலைவன்யாதேனுமொருகாரியங் குறித்தகப்பிரிதல்.

தலுமறியேன்.] எ - று. ※ நினைத்தலுமறியே னென்னும்பொ
ருள் கொள்ள நிற்கையால் - மன் ஒழியிசையில் வந்தது. குண
ங்கள் - நாணம்-மடம் - அச்சம் - பயிர்ப்பு - முதலானவை. இது
வரைக்கும் தலைவன்சொல்லியது பின்தலைவி சொல்வது. (௫)

கண்ணுள்ளிற் போகா ரிமைப்பிற் பருவரார் ※
நுண்ணியரெங் காத லவர். ௬.

[இது ஒருவழித் தணத்தலில் தலைவனைத்தோழி இயற்பழி
ப்பாளென்று அஞ்சி அவள் கேட்கத் தலைவிதன்னுள்ளேசொ
ல்லியது.]—இ-ள். (தாம்காணாமைபற்றித் தூரத்திலேபோயி
னரென்று நினைப்பவர் நினைக்கக்கடவர்.)— எங்காதலவர் | —
கண்ணுள்ளில் - (எமது கண்ணுள்ளே நின்றும்—போகார்.—
இமைப்பின் - (அறியாமல்) இமைத்தேமாயின் — பருவரார் -
(அதனால்) வருந்துவதுஞ் செய்யார். — (ஆதலாலே)—நுண்
ணியர் - (காணப்படாத) நுண்ணியர். எ - று. ※ இடைவிடா
த நினைவின் முதிர்ச்சியால் எப்போதும் முன்னேதோன்ற
லால் - கண்ணுள்ளிற் போகாரென்றும், இமைத்தபோதும் அ
து நிற்றலால் - இமைப்பிற் பருவராரென்றும், சொல்லினாள்.

கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணு ※
மெழுதேங் கரப்பாக் கறிந்து. ௭.

[இதுவுமது] — இ - ள். காதலவர் | — கண்ணுள்ளாராக -
(எங்) கண்ணுள் இருக்கின்றாராகலால் — கண்ணுமெழுதேம் -
கண்ணினை (மையினால்) எழுதுவதுஞ்செய்யேம் — கரப்பாக்
கறிந்து -(அவ்வளவுகாலமும் அவர்) மறைதலை அறிந்து. எ - று.
※ எம்மால் இடைவிடாமற் காணப்படுகின்றவரைப் பிரிந்தா
ரென்று நினைக்கும் விதம் என்னவென்பது குறிப்பெச்சம்.

நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்ட ※
லஞ்சுதும் வேபாக் கறிந்து. ௮.

[இதுவுமது]—இ-ள். காதலவர் — நெஞ்சத்தாராக - நெ
ஞ்சுளிருக்கின்றாராதலால் — (உண்ணும்போது) — வெய்து
ண்டல் - சூடுள்ளதாக உண்ணுதற்கு—அஞ்சுதும் - அஞ்சாநின்
றேம்.—வேபாக்கறிந்து - (அவர் அதனாலே) சூடுறுதலை அறிந்
து. எ - று. ※ எப்பொழுதும் என்னெஞ்சி லிருக்கிறவரைப்பிரி
ந்தாரென்று நினைக்கும்விதம் என்னென்பது குறிப்பெச்சம்.

இமைப்பிற் கரப்பாக் கறிவ லனைத்திற்கே - - *
யேதில ரென்னு மிவ்வூர். - - - - - - ௯.

[இது - † வரைவிடைவைத்துப் பொருள்வயிற்கப்பிரிந்த விடத்துத்தலைவி பொறுத்திருத்தற்பொருட்டுத் தோழிதலைவனை இயற்பழித்தவிடத்தே அவள் இயற்படச் சொல்லியது.] —இ-ள். இமைப்பின் - (என்கண்) இமைக்குமாயின்— கரப்பாக்கறிவல் - (உள்ளிருக்கிறகாதலர்) மறைதலறிந்து இமையேன்—அனைத்திற்கே - அவ்வளவுக்கே—இவ்வூர் |— ஏதிலரென்னும் - (தூங்காதநோய்செய்தார்) அன்பிலரென்னும். எ-று. ❊ தன்கருத்தறியாமைபற்றிக் கோபித்துச்சொல்லலால்தோழியை வேறுபடுத்தி ஊடினாள். ஒருபோதும் பிரியாதவரைப் பிரிந்தாரென்று பழிக்குந்தன்மையை யல்லையென்பதாம். (௯)

உவந்துறைவ ருள்ளத்து ளென்று மிகந்துறைவ - *
ரேதில ரென்னு மிவ்வூர். - - - - - - ௰.

[இதுவுமது.]—இ - ள். (காதலர் |) உள்ளத்துள் — என்றும்-எப்போதும்—உவந்து - மகிழ்ந்து—உறைவர்- வாசஞ்செய்யாநிற்பர்.—(அதனையறியாமல்) — இவ்வூர் | — இகந்துறைவர் - பிரிந்திராநின்றார்.— ஏதிலரென்னும் - அன்பிலரென்று (அவ்வாசு) சொல்லுகின்றது. எ - று. ❊ உவந்துறைவரென்றதனால் அன்புடைமைகூறினாள். பிரியாமையும் அன்பும் உடையவரை இலரென்றுபழிக்குந் தன்மையையல்லையென்பதாம். ௰.

## ௱௰௪-அதி-நாணுத்துறவுரைத்தல்.

அஃதாவது - தூரப்படுத்தப்பட்டுப் பொறுதவனாகிய தலைவனும், * அறத்தொடு நிற்பிக்கத்தொடங்கிய தலைவியும், தமது நாணமிழத்தலைச் சொல்லுதலாம். இதுகாதல் மிகுந்தவிடத்து நிகழ்வதாகலால் - காதற்சிறப்புரைத்தலின் பின்வைக்கப்பட்டது.

காம முழந்து வருந்தினார்க் கேம - - - *
மடலல்ல தில்லை வலி. - - - - - - ௧.

[தூரப் படுத்தப்பட்டுப் பொறுதவனாகிய தலைவன்சொல்லியது.]—இ-ள். காமமுழந்து-(அரியமகளிரோடு) காமத்தை

---

† வரைவிடைவைத்துப்பொருள்வயிற்பிரிதல், கல்யாணத்துக்குப் பொருள்சம்பாதிக்கப்பிரிதல்.

* அறத்தொடுநிற்பித்தல், இங்கே தலைவி தன்காமத்தைப் பாங்கிமுதலினவரால் வெளிப்படுத்தல்.

அனுபவித்து — (பின் அதுபெறாமல்) — வருந்தினார்க்கு - து
ன்பமடைந்தஆடவர்க்கு — ஏமமடலல்லது - (முன்னும்) காப்
பாய்வருகின்ற—மடன்மாவல்லது — வலி - வலியது | — இல்லை -
(இனி எனக்கு) இல்லை. எ-று ❊ ஏமமாதல் - அத்துன்பநீங்
கும்வகை அவ்வனுபவத்தைக் கொடுத்தல். வலி - ஆகுபெயர்.
— முன்னும் ஆடவராயினார் இன்பமடைந்துவருகிறவழியிருக்
கவும் உன்னை அதற்குத் துணையென்று நினைத்து விளைக முய
ன்றநான் இப்போது துணையல்லாமை அறிந்தேனாகலால் இனி
யாயினும் அவ்வழியால் அதனை அடைவேனென்பதுகருத்து

நோனா வுடம்பு முயிரு மடலேறு - - - - ❊
நாணினை நீக்கி நிறுத்து. - - - - உ.

[இது - நாணமுடைய உமக்கு மடன்மாவேறுகை முடியா
தென்று அதனைவிலக்க லுற்றதோழிக்குத்தலைவன் சொல்லிய
து.]—இ-ள். நோனா - (அவ்வருத்தத்தைப்) பொறாத — உட
ம்புமுயிரும் | — மடலேறும் - (அதற்குக்காப்பாகியமடன்மா
வை) ஏறநினையாநின்றன. — நாணினை - (அதனை விலக்குவதாகி
ய) நாணத்தை — நீக்கி நிறுத்து - ஒழித்துவிட்டு. எ-று. ❊ அ
றிவுமுதலானவை முன்னே நீங்கவும் நாண் நீங்காது நின்றது
அதுவும் இப்பொழுது நீங்கிற்றென்றற்கு - உடம்புமுயிரு
மென்றான். அவைதாம தம்முள் நீங்காமைப்பொருட்டு மட
லேறுமென்றது - அவள் தன்பொறாமை யறிந்து கடிதிலே
உடன்படுதல் குறித்து. (உ)

நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடையேன் ❊
காமுற்றா ரேறு மடல். - - - - - - ௩.

[இது - நாணமேயன்றி நல்லாண்மையும் உடைமையால் ம
டலேறுகை முடியாதென்ற தோழிக்குச் சொல்லியது.] —
இ-ள். நாணொடுநல்லாண்மை - நாணத்தையும் மிகுந்த ஆண்
மையையும் | — பண்டு - முன்னே — உடையேன். — (அவை
காமத்தால் நீங்குதலால்) — காமுற்றாரேறுமடல் - காமமிகுந்த
வரேறுமடலை | — இன்று - இப்போது — உடையேன். எ-று.
❊ நாண் - இழிவானவைசெய்யுமிடத்து விலக்குவது. — ஆண்
மை - ஒன்றுக்குந் தளராது நிற்றல். அவைமுன்னுள்ளன. இன்
றுள்ளது இதுவேயாகலால் - கடிதிலே முடியுமென்றபடி. (௩)

---

மடன்மா, பனைமடலாலேசெய்யப்பட்டகுதிரை,

காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு - - ✻
நல்லாண்மை யென்னும் புணை. - - - ச.

[இது - நாணமும் நல்லாண்மையும் காமவெள்ளத்திற்குப் புணையாதலால் அதனால் அவைநீங்குவன வல்லவென்றதோழிக் குத்தலைவன் சொல்லியது.] — இ-ள். (நான் தன்னைக் கடத் தற்குக்கொண்ட) — நாணொடுநல்லாண்மை யென்னும்புணை - நாணமும் நல்லாண்மையும் ஆகியபுணைகளை} — காமக்கடும்பு னல்-காமமாகிய கடியவெள்ளமானது| — உய்க்குமே - (என் னிற்பிரித்துக்) கொண்டுபோகின்றது. எ-று ✻ அவைசெய் யமாட்டாதமற்றைநீரி னீக்குதற்கு-கடும் புனலென்றான். இந் நீர்க்கு அவைபுணையாகா அதனால் அவை நீங்குமென்பதாம்.

தொடலைக் குறுந்தொடி தந்தாண் மடலொடு - ✻
மாலை யுழக்குந் துயர். - - - - ரு.

[இது - இப்பொறுக்கமாட்டாமையும், மடலும், உமக்கு எப்படிவந்தன வென்ற தோழிக்குத்தலைவன் சொல்லியது.] — இ-ள். மாலையுழக்குந்துயர் - மாலைக்காலத்து அநுபவிக்குந் துன்பத்தையும் — மடலொடு - (அதற்கு மருந்தாகிய) மடன் மாவையும்} — (முன் அறியேன்) — தொடலைக்குறுந்தொடி - மாலைபோல தொடர்ந்த சிறியவளையலையுடையவள்| — தந்தா ள்-(இப்பொழுது எனக்குத்)தந்தாள். எ-று. ✻ காமம்-மற் றைப் பொழுதுகளினும் உண்டாயினும் மாலையிலே மலர்த லால் மாலையுழக்குந் துயரொன்றும், மடலும் அது பற்றிவந் ததாகலால் அவ்விரண்டும் அவளாலே தரப்பட்டவென்றும், அ வள்தான்நீ சொல்லியதே சொல்லுகிற இளமையளென்பது தோன்ற - தொடலைக்குறுந் தொடியென்றும், சொன்னான். இ வை அவர்தந்தவையாகலால் உன்னால் நீங்குமென்பதுகருத்து

மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் மன்ற - - ✻
படலொல்லா பேதைக்கென் கண். - - - சா.

[இது-மடலூரும் பொழுது இன்றைக்கும் கழிந்ததென்ற தோழிக்குத் தலைவன் சொல்லியது.] — இ-ள். பேதைக்கு - (உன்மாது காரணமாக) — என்கண்-எனது கண்கள்| — பட லொல்லா - (ஒருபோதும்) தூங்குதல்பொருந்தாவாம். — (அ தனால்)—யாமத்தும்-(எல்லாரும் தூங்குகிற) பாதியிரவிலும் — மன்றமடலூர்தல் - மடன்மாவேறலையே} — உள்ளுவேன் -

நினைப்பேன். எ-று. ❊ பேதையென்றது-மடமைபற்றி. — இனிக்குறை முடிப்பது நாளையெனல் வேண்டா வென்பதாம்.

கடலன்ன காம முழந்து மடலேறாப் - - - ❊
பெண்ணிற் பெருந்தக்க தில். - - - - எ.

[இது - முன்பாட்டிலே பேதையென்றதுபற்றி அறிவில்லாத மகளிரினும் அறிவுடைய ஆடவரன்றே பொறுக்கத்தக்கவரென்ற தோழிக்குத் தலைவன் சொல்லியது.]— இ-ள். கடலன்னகாமமுழந்தும் - கடல் போற்கரையற்றகாமநோயை அனுபவித்தும்—மடலேறா - மடன்மாவேறாமல் (பொறுத்திருக்கிற)—பெண்ணின் - பெண் (பிறப்புப்) போல் — பெருந்தக்கது-மிகுந்ததகுதியுடையபிறப்பு|— இல் - (உலகத்தில்) இல்லை. எ-று. ❊ பிறப்புவிசேடத்தால் அவ்வடக்கம் எனக்கு இல்லையாகின்றது. நீ அதை அறிகின்றிலை யென்பதாம். — இதுவரைக்குந்தலைவன்சொல்லியது. பின்னேதலைவிசொல்வது. (எ)

நிறையரியர் மன்னளிய ரென்னாது காம - - ❊
மறையிறந்து மன்று படும். - - - - அ.

[இது - காப்புச்சிறை அதிகப்பட்டுக் காமம் பெருகியபோது தலைவிசொல்லியது]—இ-ள். (இவர்)—நிறையரிய (ரென்னாது)-நிறையால் (நாம்மேற்கொள்ளுதற்கு) அரியரென்று அஞ்சாமலும்—மன்னளியரென்னாது - மிகவும் அளிக்கத்தக்கவரென்று இரங்காமலும்—காமம் - (மகளிரது) காமமும்|—மறையிறந்து - (அவர்) மறைத்தலைக் கடந்து — மன்றுபடும் - சபையிடத்து வெளிப்படுவதாயிருந்தது. எ-று. ❊ என்னுதென்பது மூன்னுங்கூட்டி - மகளிரென்பது வருவிக்கப்பட்டது. —இங்கேமன்றென்றது - தந்தைமுதலாகிய தன் குடும்பத்தார் கூட்டத்தை. உலகத்துப்பெண்களது காமத்தியல்பு சொல்லுவாள்போல் தன்காமம் பெருகியபடிசொல்லி இனி அறத்தொடுநிற்றல் வேண்டுமென்பது குறிப்பித்தபடியாயிற்று. (அ)

அறிகிலா ரெல்லாரு மென்றேயென் காம - - ❊
மறுகின் மறுகு மருண்டு. - - - - - ❊

[இதுவுமது.]—இ-ள். (நான்முன் அடங்கியிருக்கையால்) —எல்லாரும்—அறிகிலாரென்று - (என்னை) அறிந்திலர் (இனி அப்படி அடங்கியிராமல் நானேவெளிப்பட்டு அறிவிப்பே)னென்று நினைத்து—என்காமம்|—மறுகில் - (இவ்வூர்) வீதியி

ல்—மருண்டு - மயங்கி—மறுகும் - சுழல்கின்றது. எ-று. ※ மயங்குதல்-+ அம்பலாதல். மறுகுதல். ※ அலராதல். இவ்விரண்டுமொழியிற்று இனி. அறத்தொடுநிற்றல்வேண்டுமென்பதாம். (௯)

யாங்கண்ணிற் காண நகுப வறிவில்லார் - - ※
யாம்பட்ட தாம்படா வாறு. - - - - ௰.

[இது- + செவிலிக்கு அறத்தொடு நின்றுவைத்து நான் நிற்கும்விதம் 'என்னென்று நகைசெய்த தோழியோடு புலந்து தலைவிதன்னுள்ளேசொல்லியது.] — இ - ள். யாம் — கண்ணிற்காண - (கேட்கும்படியுமன்றிக்) கண்ணாற்காணும்படி — அறிவில்லார்|—நகுப- (எம்மைச்) சிரிக்கின்றார். — (அவர் அப்படி செய்கின்றது)—யாம்பட்ட - யாம் அடைந்த நோய்களை— தாம்படாவாறு - தாம் அடையாமையால். எ-று. ※கண்ணினென்றது - முன் கண்டறியாமை புணர நின்றது. — அறத்தொடு நின்றமையறியாமல் மணஞ்செய்யு மாட்சிமைப்படுகின்றிலனென்று பிணங்குகின்றாளாகலால் - அயலாளாக்கிச் சொல்லினாள்.

## ௱௰௫ - ஆம், அதி - அலரறிவுறுத்தல்.

அஃதாவது - களவொழுக்கம் வேண்டியதலைவன் பிறர் சொல்லுகின்ற அலர்தனக்கு ஆகின்ற விதத்தைத் தோழிக்கு அறிவித்தலும், மணமாக உடன்போக்காக ஒன்று வேண்டியதலைவியும் தோழியும் அவ்வலரை அவனுக்கு அறிவுறுத்தலும், ஆம். இது நாணுத்துறந்த வழி நிகழ்வதாகலால், அதன் பின்வைக்கப்பட்டது.

அலரெழ வாருயிர் நிற்கு மதனைப் - - - ※
பலரறியார் பாக்கியத் தால். - - - - ௧.

[இது - இரவுக் குறிதப்பிப்போய் மறுநாள்வந்த தலைவனை அலர்கூறி மணம்விலக்கியவிடத்துத் தோழிக்குத் தலைவன்சொல்லியது.]—இ - ள். அலரெழ - (உன்மாதுக்கும் எமக்கும் உண்டாகிய நட்பு)—அலரெழ - (இவ்வூரில்) அலராயெழுதலால் —ஆருயிர் - (அவளைப்பெறாதுவருந்துகிற என்) னரியவுயிரானது|— நிற்கும் - (அவளைப் பெற்றதுபோல்) நிலைபெறும்.— அதனை - அந்நிலைபேற்றை — பாக்கியத்தால் - நல்லூழால்—

+ அம்பல்-சிலரறிந்துதம்மிற்பேசல். ※ அலர்-பலரறிந்துதூற்றல்.
அறத்தொடுநிற்றல்-காமத்தைவெளிப்படுத்தல். + செவிலி-வளர்த்ததாய்.

நானேஅறிவதல்லது)—பலர் - (தூற்றுகின்ற) பலரும்|—அறியார். எ-று. ❋ இரவுக்குறிதப்பித் தலைவியை அடையப்பெருத வருத்தமெல்லாம் தோன்ற - ஆருயிரொன்றும், அப்படி அரியவளை எளியவளாக்கி எடுக்கின்றமையால் அது அவ்வாருயிர்க்குப்பற்றுக்கோடாய் நிற்கின்றதென்றற்கு - அலரொழவாருயிர் நிற்குமென்றும், பற்றுக்கோடாதலை அவ்வயலார்அறிந்தால் தூற்றுதொழிவர் ஒழியவே ஆருயிர்போமாகலால் அவரறியா திருக்கிறது - பாக்கியத்தாலென்றும், சொல்லினுன்-பலருமென்கிற முற்றும்மைவிகாரத்தால்தொக்கது. (௧)

மலரன்ன கண்ணா ளருமை யறியா - - - ❋
தலரெமக் கீந்ததிவ் வூர் - - - - - ௨.

[இதுவுமது] — இ - ள். மலரன்னகண்ணாள் - மலர்போலுங்கண்களையுடையவளது—அருமை - (அடைதற்) கருமையை—அறியாது —இவ்வூர்|— | (அவளைஎளியவளாக்கி) —அலர்-(அவளோடு) அலர்கூறலை}—எமக்கு — ஈந்தது - உபகரித்தது. எ-று ❋ அருமை - குறிபிழைத்தலாலும்,இடையீடுகளாலும், ஆகியது.—ஈந்ததென்றுன் - அதற்குச் சார்பாகலால். அலர்தூற்றுவாரை அவர் செய்தவுதவிபற்றி இவ்வூரொன்றுன்.

உறாஅதோவூரறிந்த கௌவையதனைப் - - ❋
பெறாஅது பெற்றன்ன நீர்த்து. - - - ❋

[இதுவுமது.]—இ - ள். ஊரறிந்தகௌவை - (எங்களுக்குப்புணர்ச்சி உண்டாயிருக்கையை) இவ்வூர் அறிதலால் விளைந்த அலரானது| — உறாதோ - (எனக்கு) உறுவதொன்றன்றோ.—(அதுகேட்ட என்மனமானது|) — பெறாது - (புணர்ச்சியைப்) பெறாதிருந்தே—பெற்றன்னநீர்த்து - பெற்றதுபோலுங் குணமுடைத்து. (ஆகலால்) - எ-று. ❋ பெற்றன்னநீர்மை-பெற்றவழி உண்டாகிற இன்பம்போலு மின்பமுடைமை.—நீர்த்தென்பதற்கு ஏற்க மனம்வருவிக்கப்பட்டது. (௩)

கௌவையாற் கௌவியது காம மதுவின்றேற் ❋
றவ்வென்னுந் தன்மை யிழந்து. - - ❋

[இதுவுமது]—இ-ள்.காமம்-(என்) காமம் | — கௌவையால்-(இவ்வூர்) எடுக்கின்ற அலரால்—கௌவியது-அலர்தலையுடைத்தாயிற்று.—அதுவின்றேல் - அவ்வலர் இல்லையாயின்—தன்மையிழந்து—தவ்வென்னும் - சுருங்கிப்போகும். எ-று.

※ அலர்தல் - மேன்மேலுமிகுதல். — தன்மை - இன்பந்தருதல். — தவ்வென்னுமென்றது குறிப்புமொழி. (௪)

களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம் *
வெளிப்படுந் தோறு மினிது. - - - - ௫.

[இதுவுமது]—இ - ள். (கள்ளுண்பார்க்கு)— களித்தொறும் - களிக்குந்தோறும்—கள்ளுண்டல்— வேட்டற்று - இனிதாம்விதம்போல்—(எனக்கு)—காமம் | — வெளிப்படுந்தோறும் - அலராந்தோறும் — இனிது - இனிதாகாநின்றது. எ-று. ※ வேட்கப்பட்டதற்றாலென்பது - வேட்டற்றாலென நின்றது. வேட்கைமிகுதியால் அலரும் இன்பஞ்செய்கிறதென்பதாம்.

கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுந் - - *
திங்களைப் பாம்புகொண் டற்று. - - - ௬.

[இது - இடையீடுகளாலும் இரவுக்குறிதப்பலாலுந்தலைவனைக் கூடப்பெறாததலைவி அவன் † சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய் அலரை அறிவித்து மணஞ்செயல்விரைவியது.]—இ-ள். கண்டது - (தலைவனை நான்) காணப்பெற்றது | —ஒருநாள் - ஒருநாளேயாகும். —அலர் - (அதனாலுண்டாகிய) அலரானது | — (அவ்வளவினதன்றி) — திங்களைப்பாம்புகொண்டற்று - சந்திரனைப் பாம்புகொண்ட அலர்போல் உலகெங்கும்பரந்தது. எ-று. ※ அலராகிய காரியத்தைக் காரணமாக உபசரித்து - பாம்புகொண்டற்றென்றாள். — பூமிநிழல்பாம்பெனப்பட்டது. இராகுவென்பதும் வடநூல்வழக்குப்பற்றி, அதுசந்திரனைமறைத்தல் - கணிதசித்தாந்தங்களிலே காண்க.—இருவழியும் மன்னும் உம்மும் அசைநிலைகள்.—காட்சியின்றியும் அலர்பரக்கின்ற இவ்வொழுக்கம் இனியாகாது மணஞ்செய்துகொள்ளுதல் வேண்டுமென்பதாம். (௬)

ஊரவர் கௌவை யெருவாக வன்னைசொன் - *
னீராக நீளுமிந் நோய். - - - - ௭-

[இது-மணஞ்செயல் நீளப்பொறாத தலைவியைத் தலைவன் சிறைப்புறத்தானாதலறிந்ததோழி ஊரவரலரையும் தாய்சொல்லையும் நோக்கி நீபொறுத்தல் வேண்டுமெனச் சொல்லெழுப்பியவிடத்து அவள் சொல்லியது.]— இ - ள். இந்நோய் - (காமநோயாகிய பயிர் | )— ஊரவர்கௌவை - இவ்வூரிலுள்

† சிறைப்புறம், தலைவியைக்காவல்செய்தவிடத்தின்புறம்.

௱௰௫-ஆம், அதி—அலரறிவுறுத்தல்.

ணம்களிர் எடுக்கின்ற அலரானது—எருவாக — அன்னைசொல்-. (அதுகேட்டுக் கோபித்துத்) தாய்சொல்லுகின்ற கடுஞ்சொல்லானது—நீராக - நீளும - வளராநின்றது. எ-று. ❋ ஊரவரொண்பது - தொழிலால் ஆணெழித்துநின்றது. [ஏகதேசவுருவகம்.] சுருங்குதற்கு ஏதுவாகின்றவைதாமே விரிதற்கு ஏதுவாகின்றனவென்பதாம். மணஞ்செய்வோனுதல்பயன். (எ)

நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றாற் கௌவையாற் ❋
காம நுதுப்பே மெனல். - - - - - அ.

[இதுவுமது.]—இ - ள். கௌவையால் - (அயலவர் எடுக்கின்ற) அலரானுண்டாகின்ற—காமம் - காமத்தை—நுதுப்பேமெனல் - அவிப்பேமென்றுநினைத்தல் | — நெய்யால் —எரி- நெருப்பை — நுதுப்பேமென்றற்று - அவிப்பேமென்று நினைத்தலோடொக்கும். எ-று. ❋ காமம் வளர்தற்குக் காரணமாகிய அலரால் அதைஅவித்தல் கூடாதென்பதாம். (அ)

அலர்நாண வொல்வதோ வஞ்சலோம் பென்றார் ❋
பலர்நாண நீத்தக் கடை. - - - - - கூ.

[இது - மணஞ்செயற்குப் பொருள்சம்பாதிக்கத் தலைவன்பிரிந்தபோது பொறாதவளாகிய தலைவி அவன்வந்து சிறைப்புறத்தானாதலறிந்து அலரஞ்சிப் பொறுத்தல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.] — இ - ள். (தம்மைக்கண்டநாளில்) — அஞ்சலோம்பென்றார் - (உன்னைவிட்டுநீங்கேன்) அஞ்சுதலொழியென்றவரே — பலர்நாண - (இன்றுகண்டவர்) பலரும் நாணும்வகை— நீத்தக்கடை - (நம்மைவிட்டு) நீங்கியபின்—அலர் - (அயலவர்தூற்றுகிற) அலருக்கு — நாணவொல்வதோ-(நாம்) நாணக்கூடுமோ. எ-று. ❋ கண்டார் நாணுகிறநிலைமையேமாகிய நாம் நாணுதல் எவ்விடத்ததென்பதாம். (கூ)

தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டுங் ❋
கௌவை யெடுக்கு மிவ்வூர். - - - - ய.

[இது - தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைவிக்குச் சொல்வாளாய் அலரறிவித்து அவனுடன்போதற்கு ஆசைகொள்ளச்சொல்லியது.] — இ - ள். யாம் — வேண்டுங்கௌவை - (உடன்போதற்குக் காரணமாதல்பற்றி முன்னமே) இச்சிப்பதாகிய அலரை—இவ்வூர் | — எடுக்கும் - (தானே) எடுக்கின்றது.—காதலர் - (இனித்) தலைவர் | —வேண்டின் - (நாம்)

வேண்டினால்—தாம் - தாமும் — நல்குவர் - அதற்கு உடன்படுவர்.—(ஆதலால் இவ்வலர் நமக்கு நன்றாய்வந்தது). எ-று. ❊ உம்மை - வருவிக்கப்பட்டது.— நம்மிடத்து ஆசை யுடைமையால் மறுமொன்பதுதோன்ற-காதலொன்றாள். (ய)

களவியல்-முற்றிற்று.

## கற்பியல்.

இனிக்கற்புப் பதினெட் டதிகாரத்தாலே சொல்லத்தொடங்கி முதலிலே பிரிவாற்றாமை சொல்லுகின்றார்.

## ருயசு-ஆம், அதி- பிரிவாற்றாமை.

அஃதாவது - மணஞ்செய்துகொண்டபின் தலைவன் அறம் பொரு ளின்பங்களின்பொருட்டுத் தலைவியைப் பிரிந்து தூரத்திலும், அவ்விடத்திலும் செல்லுநாளில் அப்பிரிவை அவள் பொறுக்கமாட்டாதவளாந் தன்மையாம். அது இங்கேபிரிவை அறிவித்த தலைவனுக்குத்தோழி சொல்லலும், தோழிக்குத் தலைவி அவன்குறிப்பால் அறிந்துசொல்லலும், பிரிவை அறிவித்தவிடத்துச் சொல்லலும், பிரிந்தவிடத்து ஆற்றுவிக்குமிடத்துத் தோழிக்குச்சொல்லலும், எனநாலவகையாலே சொல்லப்படும்.

செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுநின் ❊
வல்வரவு வாழ்வார்க் குரை. - - - - க.

[இது-பிரிந்துகடிதில் வருவேனென்ற தலைவனுக்குத் தோழி சொல்லியது]—இ - ள். செல்லாமையுண்டேல் - (நீ எம்மைப்) பிரியாமைஉண்டாயின்—எனக்கு—உரை - (அதனைச்) சொல்லு.—மற்று - அதுநீங்க—நின்வல்வரவு - (பிரிந்துபோய்) நின் விரைந்துவருதலை — வாழ்வார்க்கு - (அப்பொழுது) உயிர்வாழ்வார்க்கு — உரை - சொல்லு. எ-று. ❊ தலைவியையொழித்து எனக்கென்றாள் தான் அவள் என்கிற வேற்றுமையில்லாமையால்.— நீ பிரிந்திருக்குங் காலமெல்லாம் பொறுத்திருந்து அவ்வரவுகாணும் வலிமையுடையளல்லள் பிரிந்தபொழுதே இறந்துபடுவளென்பதாம். — அழுங்குவித்தல்-பயன். (க)

இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும் - - ❊
புன்க ணுடைத்தாற் புணர்வு. - - - - உ.

[இது- தலைவனது பிரிவைக் குறிப்பால் அறிந்ததலைவிதோ

றிக்ருச்சொல்லியது.] — இ-ள். (தழையுமாலையுங்கொண்டுபி ன்னின்ற நாளில்) — அவர்பார்வல் - அவரதுபார்வைமாத்திர மும் | —(புணர்ச்சிகுறித்தலையால்) — இன்கணுடைத்து - (ந டக்க) இன்பமுடைத்தாயிருந்தது. — (இன்று அப்புணர்ச்சி தான்நடந்துகொண்டிருக்கவும்) — புணர்வு - அப்புணர்ச்சி | —பிரிவஞ்சும் பிரிவொன்றஞ்சுகிற—புன்கண் - அச்சத்தினை} — உடைத்து - உடைத்தாயிற்று. (அவரன்பினிலைமையிது). எ-று. ※ ஆல் - அசை. — பார்வலென்றவதனாலே - புணர்ச்சி பெறாமல்தலைவன் பின்னின்றகாலம்பெறப்பட்டது. — புன்க ண் - துன்பம். அது காரணத்தின்மேலாயிற்று. — அவ்வச்சத் தினையுடைத்தாதலாவது - புணரும்போது தன்னைமிகப்புகழ் தலாலும், அணிதிருத்தலாலும், தலைவன் பிரிதற்குறிப்புக்கா ட்டி அச்சஞ்செய்தலுடைமை. அழுங்குவித்தல்பயன். (உ)

அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும் - ※
பிரிவோ ரிடத்துண்மை யான். - - - ௩.

[இதுவுமது.]— இ-ள். அறிவுடையார்கண்ணும் - (பிரியே னென்ற தஞ்சொல்லையும், நம்பிரிவுபொறாமையையும்,) அறி தலுடையவராகிய காதலரிடத்தும் — ஓரிடத்து - ஒரோவழி — பிரிவு | —உண்மையான் - உண்டாதலால்—தேற்றம் - (அவ ர் சொல்லும் தலையளியும்பற்றி நம்மேல் அன்புடையரென் றுதெளியுந்) தெளிவு | —அரிது - அரிதாயிருந்தது. எ-று.※ அரோ - அசைநிலை. உம்மை - உயர்வுசிறப்பு. (௩)

அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற் - ※
றேறியார்க் குண்டோ தவறு. - - - - ௪.

[இதுவுமது.] — இ-ள். அளித்து - (எதிர்ப்பட்டநாளே) தலையளிசெய்து — அஞ்சலென்றவர் - (உன்னைவிட்டுப்பிரியே ன்) அஞ்சாதிருவென்றவர்தாமே— நீப்பின் - (பின்னே)பிரிவா ராயின் — (அவர்க்கல்லாமல்) — தெளித்தசொல் - (அவரால்) தெளிவிக்கப்பட்டசொல்லை — தேறியார்க்கு - (மெய்யென்று) தெளிந்தவர்க்கு — தவறு - குற்றம் | — உண்டோ. எ-று. ※ தேறியாரென்றது - தன்னைப் பிறர்போற் சொல்லியது. — சொல்லும் செயலும் ஒத்திராமைக்குற்றம் அவர்க்கு உண் டாம் அது உண்டாகாதபடி அழுங்கச்செய்யென்பது கருத்து.

ஓம்பி னமைந்தார் பிரிவோம்பன் மற்றவர் - ✻
நீங்கி னரிதாற் புணர்வு. - - - - - ௫.

[இதுவுமது]— இ-ள். ஓம்பின் - (என்னுயிரைச்செல்லாமற்) காப்பாற்றுவையாயின் — அமைந்தார் - (அதனை ஆறுதற்கு) அமைந்தவரது — பிரிவு-செலவை} — ஓம்பல - அழுங்குவிப்பாயாக. — மற்று - அழுங்குவிப்பாரில்லாமல — அவர் — நீங்கின் - செல்வாராயின் — (அவரால் ஆளப்பட்ட உயிரும செல்லுமாதலால்) — புணர்வு - (பின்பு அவரைக்) கூடுதல் | — அரிது - (எனக்கு) அரிதாம. எ-று ✻ ஆல் - அசை. — ஆறுதற்கமைதல்-தலைவராதற்கு ஊழால் ஏற்புடையராதல். (௫)

பிரிவுரைக்கும் வன்கண்ண ராயி னரிதவர் - ✻
நல்குவ ரென்னு நசை. - - - - - - ௬.

[இது - தலைவன் பிரிவை அறிவித்தவாறு வந்துசொல்லிய தோழிக்குத்தலைவிசொல்லியது.] — இ-ள். அவர் - (நமதுபிரிவுபொறாமையறிந்த) அத்தலைவர்தாமே — (நம்முன்னின்றும) — பிரிவுரைக்கும் - (தம)பிரிவை அறிவிக்கும் — வன்கண்ணராயின் - அருளில்லாமையையுடையராயின் — (அத்தன்மையரானபின்பு) — நல்குவரென்னுநசை - நம்பொறுமையையறிந்துவந்து) தலையளிசெய்வாரென்னுமாசை | — அரிது - விடப்படும். எ-று. ✻ அருமை - பயன்படுதலில்லாமை. — கூடியிருந்தே அன்பில்லாமற்பிரிவெண்ணுதலும், அறிவித்தலும்; வல்லாரயினார்-பிரிந்துபோய் அன்புடையராகி நம்மை நினைந்துவந்து அளித்தல் எவ்விடத்ததென்பதாம். அழுங்குவித்தல்பயன். (௬)

துறைவன் றுறந்தமை தூற்றுகொ ன் முன்கை - ✻
யிறையிறவா நின்ற வளை. - - - - - ௭.

[இதுவுமது.] — இ-ள். துறைவன் — துறந்தமை - (என்னைப்) பிரியலுற்றமையை} — (அவன் அறிவிக்காமல் தாமே அறிந்து) — முன்கையிறை - (என்) முன்கையிறையினின்றும் — இறவாநின்றவளை - கழலாநின்றவளையல்கள் | — தூற்றுகொல் - (எனக்கு) அறிவியாவோ. [அவன் அறிவிக்க அறிந்துவந்து நீ அறிவித்தல்வேண்டுமோ.] எ-று. ✻ முன்னே நிகழ்ந்தமையால் - துறந்தமையென்றும், கேட்டவளவில் மெலிந்து பொறாமையால் - இறவாநின்றவென்றும், சொல்லினாள். அழுங்குவித்து அதுவந்து சொல்லுந்தன்மையை யல்லாதநீயும் இவ்

வினை செய்தனவே செய்தாயென்று பிணங்கிச்சொல்லியபடி.

இன்னா தினனில்லூர் வாழ்த லதனினு - - - *
மின்னா தினியார்ப் பிரிவு. - - - - அ.

[இ-துவும-அது.] — இ-ள். இனனில்லூர் - (மகளிர்க்குத்தங்குறிப்பறிகிற) தோழியரில்லாதவேற்றாரிடத்து — வாழ்தல் | — இன்னாது - துன்பஞ்செய்வதாகும். — (அதனின்மேலும) — இனியார்ப்பிரிவு - (தம) காதலரைப்பிரிதல் | — அதனினும் - அவ்வாழ்தலைக்காட்டிலும் — இன்னாது - துன்பஞ்செய்வதாகும். எ-று. ※ தலைவன்சொல்லுதலை அழுங்குவித்து. வாராது உடம்பட்டு வந்தமைபற்றிப் பிணங்குகின்றாளாகலாம் - இனனில்லூரென்றாள். — உலகநடை சொல்லுகின்றாள்போல் தனக்கு அவ்வாழ்வும் பிரிவும உண்டாயிருக்கை சொல்லியபடி. (அ)

தொடிற் சுடினல்லது காமநோய் போல - *
விடிற்சுடலாற்றுமோ தீ. - - - ௯.

[இது-காமம் தீயேபோல் நின்றவிடத்தைச் சுடுமாகலான் நீ பொறுத்தல் வேண்டுமென்ற தோழிக்குத்தலைவி சொல்லியது.] — இ-ள். தீ | — தொடின் - (தன்னைத்) தொட்டால் — சுடிற்(சுட)லல்லது - சுட்டாற் சுடலல்லது — காமநோய்போல — விடின் - (தன்னை) விட்டுநீங்கினல் — சுடலாற்றுமோ - (அப்படிச்) சுடல்வல்லதோ. எ-று ※ சுடினென்றது - மந்திரமருந்துகளாலே தம்பிக்கப்படாதாயினென்றபடி. — காமத்திற்கு அதுவும் இல்லையென்றற்கு - சுடுமாசுடலென்றாள். நீங்கல் - [illegible]வியாமை. — சுடல் - முன்னுமசுட்டப்பட்டது. — தீயிற் கொடியதனைநான் பொறுக்குமவிதம் எங்ஙனமென்பதாம்.

அரிதாற்றி யல்லனோய் நீக்கிப் பிரிவாற்றிப் - *
பின்னிருந்து வாழ்வார் பலர். - - - ௰.

[இது-தலைவியர்பலரும் பிரிவைப் பொறுத்திருப்பர் நீ அது செய்கின்றிலையென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.] — இ-ள். (நீசொல்லுகின்றது ஒக்கும்.) — அரிதாற்றி - பிரிவை அறிவித்தவிடத்து அதற்கு உடம்பட்டு — அல்லனோய் - (பிரியும்போதுஉண்டாகிற) துன்பநோயையும் — நீக்கி — பிரிவாற்றி - (பிரிந்தால்) அப்பிரிவையுமபொறுத்து — பின்னிருந்து - பின்னும் இருந்து — வாழ்வார்-உயிர்வாழுமகளிர் | — பலர் - (உலகத்திற்) பலர். எ-று. ※ முன்னினுஞ்சிறக்கத் தலையளிசெ

று இன்பத்தை அனுபவிக்கிறசமயத்தில் அதனை இழந்து து ன்பத்தை அனுபவித்தற்கு உடம்படுதல் அரியதொன்றாகலா ல் அரிதாற்றியென்றும், செல்லுந்தேசத்திலே அவருக்கு யா து சம்பவிக்குமோவென்றும் அவர்வருமளவும்நாம்பொறுத் திருக்கும் விதம் எங்ஙனென்றும் அவர்வரவுதான் மறுபடி என் றைக் கவந்துகிடைக்குமோவென்றும் இவ்விதங்களாலே தோ ன்றுகிறகவலை மனத்தைவிட்டு நீங்காததலால் - அல்லநோய் நீக்கியென்றும், பிரிந்தால் வருமளவும் உள்ளே தோன்றுகிற காமவேதனையும் புறத்தில் வீணையிசை சந்திரன் தென்றல் இ வைமுதலாய்வந்து அதனைவளர்ப்பவையும் பொறுத்தல் அரு மையாகலால் - பிரிவாற்றியென்றும், தாம் காதலரைவிட்டிருக் கமாட்டாத மகளிருள் இவையெல்லாம பொறுத்துப் பின்னு ம் இருந்து உயிர்வாழவல்லவர் ஒருவரும் இல்லையென்பது கு றிப்பினாலே தோன்ற - பின்னிருந்து வாழ்வார் பலரென்றும், சொல்லினாள். — பிரிவிலே நிகழ்பவைகளைப் பிரிவென்றாள். ஆற்றிருந்த ஆற்றி என்பவை ஓசைவகையால் அவைகளினரு மைபுணர நின்றன.—பிரிவையு மென்னுமும்மை விகாரத்தா ற்றொக்கது-யானும் இறந்துபடுவேனென்பது கருத்து. (௰)

# ௱௰௭-ஆம், அதி-படர்மெலிந்திரங்கல்.

அஃதாவது - பிரிவு பொறுக்கமாட்டாதவளாகிய தலைவி தான் உறுகின்ற துன்பத்தை எப்போதும் நினைத்தலி ன் அந்நினைவால் மெலிந்து இரங்கலாம். அதிகாரமுறை மையும் இதனாலே விளங்கும்.

மறைப்பேன்மன் யானிஃதோ நோயையிறைப்பவர்க்*
கூற்றுநீர் போல மிகும். - - - - - - க.

[இது - காமநோயை வெளிப்படுத்துதல் உன்னுணத்திற்கு த் தகாதெ ற மேதாழிக்குச் சொல்லியது.] — இ-ள். யான் | —நோயை இந்நோயை — மறைப்பேன் - (பிறரறிதற்குநா ணி) மறையாநின்றேன்- — (நிற்கவும்) — இஃதோ-இந்நோ யோ— |இறைப்பவர்க்கு - (நீர்வேண்டுமென்று) இறைப்போ ர்க்கு — ஊற்றுநீர்போல—மிகும். எ-று. * அம்மறைத்த லாலே பயன் யாதென்பதுபட நிற்கையால்-மன் ஒழியிசை. )னி அதற்கு அடுத்தது செயல்வேண்டுமென்பதாம், (க)

ம் உம்பிரண்டும் அசைநிலைகள். — தூதுவிட்டு இதற்கு புணை யாதற்குரிய நீயும் ஆகுயில்லையென்பதுகருத்து. (௪)

துப்பின் எவனாவர் மற்கொ றுயர்வரவு - - ✻
நட்பினு ளாற்று பவர். - - - - - ௫

[இது - தூதுவிடாமை நோக்கித் தோழியோடு தலைவி பிணங்கிச் சொல்லியது.] — இ - ள். நட்பினுள் - (இன்பஞ் செய்தற்கு உரிய) நட்பினிடத்து — துயர்வரவு - துன்பத்தின் வரவினை — ஆற்றுபவர் - செய்யவல்லவர் | — துப்பின் - (துன்ப ஞ்செய்தற்கு உரிய) பகைமைபிடத்து — எவனாவர்கொல் - என் னசெய்வரோ. எ - று. ✻ அப்பகை இங்கேகாணாமையால் அவ ரிசெய்வதும் அறியப்பெற்றிலேனென்பது படநிற்கையால் - மன் ஒழியிசை. — துயர்வருதலை விலக்கலாயிருக்க அதுசெய் கின்றிலையென்று பிணங்குகின்றமையால் - தோழியைத் துயர் வரவு செய்தவளாக்கியும் பிறளாக்கியும் சொல்லினாள் (௫)

இன்பங் கடன்மற்றுக் காம மஃதடுங்காற் - ✻
றுன்ப மதனிற் பெரிது. - - - - - - ௬.

இது - காமத்தினால் இன்பமடைந்தவர்க்கு அதனினாகிய து ன்பமும் வருமெனற தோழிக்குச்சொல்லியது.] — இ - ள். கா மம் — (புணர்ச்சியால் இன்பஞ்செய்யுமபோது) — இன்பம் - அவ்வின்பம் | — கடல் - கடல்போற் (பெரிதாம்.) — மற்றஃது - இனி அக்காமந்தானே — அடுங்கால் - (பிரிவினுமே) துன்பஞ் செய்யும்போது — துன்பம் - அத்துன்பம் | — அதனிற்பெரி து - அக்கடலினும்பெரிதாம். எ - று. ✻ அடுங்காலெனவந்தமை யால் அதற்கு எதிரான இன்பஞ்செய்யுமபோது என்கிறசொ ல்வருவிக்கப்பட்டது. பெற்றவின்பத்தோடு ஒத்துவரிற்பொ றுக்கக்கூடும் இதுஅப்படிப்பட்டதல்லவென்பதுகருத்து. (௬)

காமக்கடும்புன னீந்திக் கரைகாணேன் - - ✻
யாமத்து மியானே யுளேன். - - - - ௭.

[இது - காமக்கடலை நிறைபுணையாக நீந்தலாமென்றதோ ழிக்குத் தலைவிசொல்லியது.] — இ - ள். காமக்கடும்புனல் - கா மமாகியகடலை — நீந்தியும் — கரைகாணேன் - (அதற்குக்) கரைகாண்கின்றிலேன் . — (அக்காணாமைக் காலந்தான் எல் லாரும் நித்திரைசெய்யும் பாதியிரவாயிற்று.) — யாமத்தும் - அப்பாதியிரவிலும் — யானே - (அதற்கு ஒருதுணையில்லாம

ன்) யானேயாயினேன்—(ஆகியும்)—உளேன் - இறவாதிருக்கி
றேன். (ஈதொரு தீவினைப்பயன் இருந்தவிதம் என்) எ-று. ❊
உம்மை மூன்றுங் கூட்டப்பட்டது.—யானேயாயினே னெ
ன்றது - நீ துணையாயிரு யில்லையென்றுங் குறிப்பிற்று. (௭)

மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா ❊
வென்னல்ல தில்லை துணை. - - - - - - ௮.

[இது - தலைவி இரவின் கொடுமைசொல்லி இரங்கியது.]—
இ-ள். இரா - இவ்விரவு|—அளித்து - அன்புடைத்தாயிருந்
து.—மன்னுயிரெல்லாம் - (உலகத்தி) னிலைபெற்ற உயிர்களை
யெல்லாம்—துயிற்றி - (தானே) தூங்கச்செய்தலால்—என்னை
ல்லது-என்னையல்லது—துணை - (வேறு) துணையை—இல்லை -
(உடைத்தாயிற்) றில்லை. எ - று. ❊ துணையோடு ஒன்றுகின்ற
உயிர்களையெல்லாம் விட்டு இறந்துபடுஞ் சமயமுடையேனாகி
ய என்னையே துணையாகக் கொள்ளுதலால் அறிவுடைத்தன்
றென்பதுபற்றி - அளித்தென்றாள். இகழ்ச்சிக்குறிப்பு. (௮)

கொடியார் கொடுமையிற் றாங்கொடிய விந்நா ❊
ணெடிய கழியு மிரா. - - - - ௯.

[இதுவுமது]—இ-ள். (காதலரோடு நாம் இன்புற்றநாள்
களிலே குறியவையாயிருந்து)—இந்நாள் - (அவர்பிரிவைப்
பொறுக்கமாட்டாத) இந்நாள்களிலே—நெடிய - நெடியவை
யாய்—கழியும் - செல்கின்ற—இரா - இரவுகள்|—கொடியா
ர் - அக்கொடியவரது—கொடுமையின் - கொடுமைக்குமேலே
—தாம்—கொடிய-கொடுமைசெய்யாநின்றன. எ-று. ❊ தன்
பொறுமை நினையாதுபிரிதலால் - கொடியாரென்றாள்.—கொ
டுமை - கடிதில்வாராமல் நீட்டித்தல். அவர்பிரிவாலும், நீட்
டிப்பாலும், உண்டாகிய பொறுமைக்கு முகங்கொடாமையின்
றி முன்னையினெடியவாய்க் கொடியவாகாநின்றனவென்பதாம்.

உள்ளம்போன் றுள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர் ❊
நீந்தல மன்னோவென் கண். - - - - - ௰.

[இது- நின்கண்களின்பேரழகு அழிதலால் அழாதிருவென்
றதோழிக்குத் தலைவிசொல்லியது.]—இ - ள். உள்ளம்போன்
று-மனம்போன்று—உள்வழி - (காதலர்) இருக்கிறநாட்டிற்கு
—செல்கிற்பின் - (கடிதிலே) செல்லவல்லனவாயின்—என் கண்-
எனதுகண்கள்|—வெள்ளநீர் - வெள்ளமாகிய (தந்) நீரை—நீ

ந்தல் - நீந்தா. எ - று. ❋ அதுமாட்டாமையால் இனி அவைகளுக் கு நீந்துதலே உள்ளதென்பது படநின்றமையால் - மன் - ஒழி பிசை.—ஓ - அசை. மனத்திற்குச்செலவு - நினைவேயாகலால் - உள்ளம்போன்றென்றும், மெய்க்குநடந்து செல்லவேண்டு தலால் - கண்கள் அதனோடுபோய்க் காதலனைக்காணல் கூடா தென்னுங் கருத்தால் - செல்கிற்பியென்றும், சொல்லினாள். இ தனால்வருகிற அதிகாரமுந் தோற்றுவாய்செயப்பட்டது. (௰)

## ௱௰அ - ஆம், அதி - கண்விதுப்பழிதல்.

அஃதாவது - கண்கள் தலைவனைக்காணுதற்கு விரைதலா லே வருந்துதல். இதுபடராமேலே மெலிந்தவிடத்து நிக ழ்வதாகலால் அதன்பின்வைக்கப்பட்டது.

கண்டாங் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோய் ❋
தாங்காட்ட யாங்கண் டது. - - - - - - க.

[இது - நின்கண்கள் அழுது அழகை இழக்கின்றன நீபொ றுத்தல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைவிசொல்லியது.]— இ - ள். தண்டாநோய் - இத்தீராத (காம) நோயை—யாம்— கண்டது - அறிந்தது—தாம்—காட்ட - (காதலரை எமக்குக்) காட்டலாலன்றே—கண்டாம் - (அன்று அதுசெய்த) கண்கள் —கலுழ்வது - (இன்று எம்மைக்காட்டச்சொல்லி) அழுகிறது| —எவன்கொல் - யாதுநினைந்து, எ-று. ❋ காட்டவென்பதற் கேற்ற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. இன்றுந்தா மே காட்டுதலல்லது யாமகாட்டுதல எவ்விடத்ததென்பதாம். க

தெரிந்துணரா நோக்கிய வுண்கண் பரிந்துணராப் ❋
பைதல் உழப்ப தெவன். - - - - உ.

[இதுவுமது.]—இ - ள். தெரிந்துணரா - (மேல்விளைவது ணை) ஆராய்ந்தறியாமல்—நோக்கிய - (அன்று தலைவனைப்) பா ர்த்த—உண்கண் - (மை) புண்டகண்கள்|—(இன்று இது நம் மால் வந்ததாதலால் பொறுத்தல்வேண்டுமென்று)—பரிந்து ணரா - கூறுபடுத்தி அறியாமல் — பைதலுழப்பது - துன்பமு ழுபவிப்பது|—எவன் - யாதுநினைத்து. எ-று. ❋ விளைவது - பிரிந்துபோய்வாராமையால் - காணுதற் கரியராக வருந்துதல் —முன்னே வருவதை அறிந்து காவாதார்க்கு அதுவந்தவழிப் பொறுத்தலன்றே உள்ளது அதுவும் செய்யாது வருந்துதல் மிகுந்த அறியாமையாலாகிய செயலென்பதாம். (உ)

கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழு - - ✻
மிதுநகத் தக்க துடைத்து. - - - - ௩.

[இதுவுமது.] — இ-ள். (இக்கண்கள்) — கதுமெனத்தா நோக்கி - (அன்று காதலரைத்) தாமேவிரைந்துநோக்கி— தா மேகலுழும் - (இன்றும்) தாமேயிருந்து அழுகின்ற— இது - இவ்வறியாமைச்செயல் | — நகத்தக்கது - (நம்மாலே) சிரிக்கத் தகக இயல்பை}— உடைத்து. எ-று. ❋ கண்களென்பது - அதிகாரத்தால் வந்தது. — அச்செயல் - வருமுன்னே காப்பா ர்க்குநகைவிளைக்கு மாதலால் - நகத்தக்க துடைத்தென்றாள்.

பெயலாற்றா நீருலந்த வுண்க ணுயலாற்றா - ✻
வுய்விஃனோ யென்க ணிறுத்து. - - ௪.

[இதுவுமது]— இ-ள். உண்கண் - (இந்தமை) யுண்டகண் கள் | —உயலாற்றா - (நான்) பிழைக்கமாட்டாமைக்கு ஏதுவா கிய—உய்விஃனோய் - ஒழிவில்லாதநோயை — எங்கண் — நிறு த்து - நிறுத்தி—பெயலாற்றா - (தாமும்) அழமாட்டாதவண்ண ம்—நீருலந்த - நீர் வற்றிவிட்டன. எ-று. ❋ நிறுத்தல் - பிரிதலு ம் பின்கூடாமையுமுடையாரை எனக்குக்காட்டி அதனால் நோ யை நிலைபெறச்செய்தல்.—முன் எமக்குத் துன்பங்கள் செய் தலால் பின்தமக்குத்துன்பங்கள் தாமே வந்தனவென்பதாம்.

படலாற்றா பைத லுழக்குங் கடலாற்றாக் - - ✻
காமநோய் செய்தவென் கண். - - - - ௫.

[இதுவுமது.]—இ-ள். (எனக்கு) — கடலாற்றா - கடலுஞ் சிறிதாம்வண்ணம் (பெரிதாகிய) — காமநோய் - காமநோ யை — செய்த—என்கண் - எனதுகண்கள் | — (அத்தீவினையா லே) — படலாற்றா - (தாமும்) தூங்குதிலவாகி—பைதலுழக் கும் - துன்பத்தையும் அனுபவிக்கின்றன. எ-று. ❋ காமநோ ய் ✝காட்சியால் வந்ததாகலால் - அதனைக் கண்கள் செய்ததா க்கிச்சொல்லினாள், — துன்பம் - அழுதலாலாகியது. (௫)

ஒஒ வினிதே யெமக்கிந்நோய் செய்தகண் - ✻
டாஅ மிதற் பட்டது. - - - - - ௬.
[இதுவுமது.]—இ-ள். எமக்கு—இந்நோய் - இக்காமநோ

✝ காட்சி, காணுதல்.

யை — செய்த — கண் - கண்கள் — தாம் - தாமும் — இதற்பட்டது - இத்தூங்காமல் அழுதலிலேபட்டது | — ஓ இனிதே - மிகவும் இனிதாயிற்று. எ-று ❋ ஓ ஒவென்பது - மிகுதிப்பொருளில்வந்தகுறிப்புச்சொல். — தம்மால் வருத்தமடைந்த எமக்கு அவ்வருத்தம் தீர்ந்ததுபோன்றதென்பதாம். (௬)

உழந்துழந் துண்ணீ ரறுக விழைந்திழைந்து ❋
வேண்டி யவர்க்கண்ட கண். - - - ௭.

[இதுவுமது] — இ-ள். விழைந்து - விரும்பி — இழைந்து - உட்குழைந்து — வேண்டி — அவர்க்கண்டகண் - (அன்று) அத்தலைவனைப் பார்த்த கண்கள் | — உழந்துழந்து - (இன்று தூங்காமல் அழுதற்றுன்பத்தை) அனுபவித்து அனுபவித்து — உண்ணீர் - (தம்) முள்ளிருக்கிறநீர் — அறுக - அற்றுப் போகுக. எ-று. ❋ அடுக்கு-இடைவிடாமையில் வந்தது. (௭)

பேணாது பெட்டா ருளர்மன்னோ மற்றவர்க் ❋
காணா தமைவில கண். - - - - ௮.

[இது- காதலர் பிரிந்துபோகவில்லை அவர் இங்கேஇருக்கிறார் அவனைப் பார்க்குமளவும் நீபொறுத்தல் வேண்டுமென்றதோழிக்குத் தலைவிசொல்லியது.] — இ-ள். பேணாது - (மனத்தால்) விரும்பாதிருந்து — பெட்டார் - (சொல்லுமாத்திரத்தால்) விரும்பியவர் | — உளர்மன் - (இங்கே) யிருக்கின்றார். அவ்விருத்தலாலேபயன்யாது — கண் - கண்கள் | — மற்று — அவர்க்காணாது - அவனைக்காணாமல் — அமைவில - பொறுக்கின்றில. எ-று. ❋ செயலாற்பிரிந்து நின்றமையால் - பேணாதென்றும், முன்னே நலம்பாராட்டி + பிரிவச்சமும் - ※வன்புறையும் சொல்லினராதலால் - பெட்டாரென்றும், சொல்லினாள். மன் - ஒழியிசை. மற்று-வினைமாற்று. ஓ - அசைநிலை. யாம்பொறுக்கவும்கண்கள்அவனைக்காணுதற்கு விரும்புகின்றன வென்பதாம்.

வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை - ❋
யாரஞ ருற்றன கண். - - - - - ௯.

[இது - நீயும்பொறுத்து உன்கண்களும் தூங்கல்வேண்டுமென்றதோழிக்குச்சொல்லியது.] — இ-ள். வாராக்கால் - (கா

---

+ பிரிவச்சம் - பிரிதற்கு அஞ்சுதல். ※ வன்புறை, கைவிடேனென்றுவலி
யுறுதிசொல்லல்.

தலர்)வாராதநாள்களிலே—துஞ்சா - (அவர் வரவுபார்த்துத்) தூங்காவாம்.—வரின் - வந்தநாள்களிலே—துஞ்சா - (அவர்பிரிவொன்று அஞ்சித்) தூங்காவாம்.—(ஆகலால்)—ஆயிடை - அவ்விருவழியும்—என்கண் - எனதுகண்கள்|—ஆரஞர்உற்றன - பொறுத்தற்கரிய துன்பத்தையுடையனவாம். எ-று. ✻ இனி அக்கண்களுக்குத் தூக்கம் ஒருநாளும் இல்லையென்பதாம். கூ

மறைபெற லூரார்க் கரிதன்றா லெம்போ - - - ✻
லறைபறை கண்ணா ரகத்து - - - - - - ய,

[இது - காதலரை இவ்வூரார் இயற்பழியாமல் அவர்கொடுமையை மறைத்தல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]—இ-ள். எம்போல் - எம்மைப்போலும்— அறைபறை கண்ணார் - அறைபறையாகிய கண்ணையுடையவர் — அகத்து - (தமது) நெஞ்சிலடக்கிய—மறைபெறல் - இரகசியத்தை அறிதல்|—ஊரார்க்கு - இவ்வூரிலுள்ளவர்க்கு—அரிதன்று - எளிது - எ-று. ✻ ஆல்-அசை. மறையென்றது - இவ்விடத்துமறைக்கப்படுவதனை. — உள்ளே நிகழ்வதைப் புறத்திலுள்ளார்க்கு அறிவித்தலாகிய தொழிலாலே பறையோடு ஒற்றுமையுடைமையால் அறைபறையாகிய கண்ணென்றாள்.— யான்மறைக்கவும் இவை வெளிப்படுத்துகின்றனவென்பதாம். (ய)

## ளயகூ-ஆம், அதி-பசப்புறுபருவரல்.

அஃதாவது - பசப்புறுதலாலாகிய வருத்தம். பசப்பாவது - பிரிவுபொறாமையால் வருவதோர் நிறவேறுபாடு. இது தலைவனைக் காணப்பெறாத விடத்து நிகழ்வதாகலால்-கண்விதுப்பழிதலின் பின்வைக்கப்பட்டது.

நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தவென் ✻
பண்பியார்க் குரைக்கோ பிற. - - - - க.

[இது - முன்பிரிவிற்கு உடன்பட்ட தலைவி அதுபொறாமல் பசப்புநிறமடைந்தவிடத்துத் தன்னுள்ளே சொல்லியது.]— இ-ள். நயந்தவர்க்கு - (என்னை) விரும்பியதலைவர்க்கு — நல்காமை - பிரிவை—நேர்ந்தேன் (அப்போது) உடன்பட்டநான்|—பசந்த- (அதனைப்பொறாமல் இப்பொழுது) பசப்புநிறமடைந்த—என்பண்பு - என்னியல்பை—யார்க்கு—உரைக்கோ-சொல்வேன். எ-று. ✻ பிறவென்றது-அசைநிலை. தான்

உடம்படாதவிடத்துப் பிரிவொழிதல் குறித்துப் பிரிவைத்த னக்கு அறிவித்தாராகலால் - அவரன்புடையரென்னுங்கருத்தா ல்-நயந்தவரென்றும், இதுவே உடம்பாடாக மேலும் பிரிவு நிகழுமாகலால் இனி அவரைக்கூடுதல் அரிதென்னுங்கருத்தா ல் - நல்காமையென்றும், முன்னே உடம்படுதலும் பின்னே பொறாமல் பசத்தலும் பிறர்செய்தவை யல்லவென்றற்கு-பச ந்தவென்பண்பென்றும், யான்செய்துகொண்ட துன்பத்தை இனி ஒருவர்க்குச் சொல்லுதலும் பழியாமென்னுங் கருத்தா ல். யார்க்குரைக்கோவென்றும், சொல்லினாள். (க)

அவர்தந்தா ரென்னுந் தகையா லிவர்தந்தென் *
மேனிமே லூரும் பசப்பு. - - - - - உ.

[இது - பொறுவென்று கவலையுற்ற தோழிக்குத் தலைவி பொறுப்பே னென்பது தோன்றச்சொல்லியது.]—இ - ள். (நான்பொறுத்திருக்கவும்)—பசப்பு - இப்பசப்புநிறம்|—அ வர்— தந்தாரென்னுந்தகையால் - (என்னை) உண்டாக்கினாரெ ன்னுங்களிப்பு மிகுதியால்—என்மேனிமேல் — இவர்ந்து - ஏறி—ஊரும் - செலுத்தாநின்றது எ-று. ※ இது உரிமைப பற்றி ஊர்கின்றது இதற்கு நீகவலைப்படாதேயென்பதாம். (உ)

சாயலு நாணு மவர்கொண்டார் கைம்மாறு - *
நோயும் பசலையுந் தந்து. - - - - ௩.

[இது - அழகுநாணமுங் கெடாமல் நீபொறுத்தல் வேண் டுமென்ற தோழிக்குத் தலைவிசொல்லியது.]—இ - ள். (பிரிகி ன்றபொழுதே)—கைம்மாறு-(அவ்விரண்டிற்கும்) தலைமாறு க—நோயும்பசலையும் - இக்காமநோயையும் பசலையையும்— தந்து-(எனக்குத்) தந்து—சாயலுநாணும்-(என்மேனி) யழ கையும்}நாணத்தையும்}—அவர் | — கொண்டார் - கொண்டு போயினார். எ-று. ※ நோய்க்கு - நாணும், பசலைக்கு - சாய லும், ஆதலால்-எதிர்நிரனிறை. அடக்குந்தோறு மிகுதலால் நோய்-நாணுக்குத் தலைமாறாயிற்று. இனி அவர்தந்தாலல்லது அவைஉண்டாதலும், இவைஇல்வாதலும், கூடாவென்பதாம்.

உள்ளுவன் மன்யா னுரைப்ப தவர்திறமாற் - *
கள்ளம் பிறவோ பசப்பு. - - - - ௪.

[இது பிரிகின்றவர் தெளிவித்த சொற்களையும், அவர்நற்

குணங்களையும், அறிவாயாகையால் அவர் விரைந்து வருவாரெ ன்றதோழிக்குத் தலைவி சொல்லியது.]— இ - ள். யான்|— உள்ளுவன் - (அவர்சொற்களை மனத்தால்) நினைக்கின்றேன்.— உரைப்பது -(வாயால்) சொல்லப்படுவதும்—அவர்திறம் - அவ ர்நற்குணமே—(அப்படிசெய்யாநிற்கவும்)—பசப்பு - பசலை நிறம்| (வந்துநின்றது.)—கள்ளம் - (இது|) வஞ்சனையாயிருந் தது. எ - று. ❋ பிறவும், ஓவும், அசைநிலைகள்.—மெய் - மற்றுமம னவாக்குகளின் வழியுள்ளதாகலால் - அதனிடத்தும் வருந்தன் மைபதன்றாயிருக்கவந்தபடியால் இதன்செயல் கள்ளமாயிருந் ததென்று தான்பொறுக்கின்றமை சொல்லியபடியாயிற்று. ௪

உவக்காணெங் காதலர் செல்வா ரிவக்காணென் ❋
மேனி பசப்பூர் வது. - - - - - ௫.

[இது - தலைவர்பிரிந்து சமீபமாயிருக்கவும் நீபொறுக்கின் றிலையென்றதோழிக்குத் தலைவி முன்னே நிகழ்ந்ததுசொல் லியது.]—இ - ள். உவக்காண் - அக்காலத்து—எங்காதலர்— செல்வார் - (பிரிந்து) செல்வாராக—என்மேனி- எனதுவடிவ ம—பசப்பூர்வது - பசலைநிறமடைவது|—இவக்காண் - இங்கே யன்றோ. (அப்படிப்பட்டது இன்றுவேறென்றோ). எ- று, ❋ உவக்காண் இவக்காணென்பன ஒட்டிநின்றவிடைச் சொற்கள். அவர்செலவும் பசப்பினது வரவும் பகலிரவுகளி ன் செலவுவரவுகள் போல்வதை அறிந்திருந்தும் அறியாதாய் போல் நீசொல்லுகின்றது என்னையென்பதாம், (௫)

விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன் ❋
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு. - - - ௬.

[இதுவுமது.]—இ - ள். விளக்கு - விளக்கினது — அற்றம் பார்க்கும் - சோர்வுபார்த்து நெருங்கிவருகிற—இருளேபோ ல்—பசப்பு|—கொண்கன் - தலைவனது—முயக்கு - புணர்ச்சி யினது—அற்றம்பார்க்கும் - சோர்வுபார்த்துநெருங்கிவரும். எ - று. ❋ முன்பிரியாதிருக்கவும் தனக்குச் சமயம்பார்த்துவ ருகிற பசப்புப்பிரிவுபெற்றால்என்னசெய்யாதென்பதாம். (௬)

புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தே னவ்வளவி ❋
லள்ளிக்கொள் வற்றே பசப்பு. - - - - ௭.

[இதுவுமது.]—இ-ள். புல்லிக்கிடந்தேன் - (முன்னொரு நாளிலே காதலனைத்) தழுவிக்கிடந்தநான்| — புடைபெயர்ந்

தேன் - (அறியாது) சற்றுவிலங்கினேன்.— அவ்வளவில் - அவ் விலங்கியவளவிலே—பசப்பு - பசலைநிறமானது| — அள்ளிக் கொள்வற்றே - அள்ளிக்கொள்ளப்படும்பொருள் போலவந்து நிறைந்தது. எ-று. ☼ கொள்ளலென்பது - குறைந்துநின்றது. அப்புடைபெயர்ச்சி மாத்திரத்திற்கு அப்படியாகியது - இப் பிரிவிடத்து ஆகும்விதம் சொல்லவேண்டுமோ வென்பதாம்.

பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத் - - - ☼
துறந்தா ரவரென்பா ரில். - - - - - - அ.

[இது - நீ இப்படி பசப்புநிறமடைவது தகாதென்றதோழி யோடு பிணங்கிச்சொல்லியது.]— இ - ள். இவள் — பசந்தா ளென்பதல்லால் - (பொறுத்திராமல்) பசலைநிறமடைந்தாளெ ன்று (என்னைப்) பழிசொல்வதல்லது — இவளை — அவர்— துறந்தாரென்பார் - துறந்துபோயினரென்று சொல்லுவார்| —இல் - இல்லை. எ-று. ☼ என்பாரெனவேறுபடுத்திச் சொல்லி னுள் - தன்னையேநெருங்குதல்பற்றிப் பிணங்குகின்றமையால்.

பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார் - ☼
நன்னிலைய ராவ ரெனின். - - - - - - கூ.

[இதுவுமது.]—இ - ள். நயப்பித்தார் - (இப்பிரிவை யானே) உடம்படுமவகை சொல்லியவர் — நன்னிலையராவரெனி ன்-(இன்று உன்கருத்தால்) நல்லநிலையினராவராயின் — என் மேனி|—பட்டாங்(காக)·பட்டுபட—பசக்க - பசலைநிறம டையக்கடவது. எ-று.☼ நன்னிலையராதல் - நம்மிடைக்கண்ணனை நிறம்பெயுடையராதல். — பட்டாங்காகவென ஆக்கம வருவித் துச் சொல்லப்பட்டது. — முன் இப்பிரிவின் கொடுமையறி யாத என்னை இதற்கு உடம்படுத்திப் பிரிந்தவர் தவறிலராக வேவேண்டுவது என்மேனியும பசப்பும் யாது செய்யில் எ ன்னவென்பதுபட்டிற்கையால்டன் ஒழியிசையில்வந்தது. (கூ)

பசப்பெனப் பேர்பெறுத னன்றே நயப்பித்தார் ☼
நல்காமை தூற்றா ரெனின். - - - - - ௰.

[இது - தலைவிபொறுத்தற்பொருட்டுத் தோழி தலைவனை இ யற்பழித்தவிடத்து அவள் இயற்படச்சொல்லியது.] — இ-ள். நயப்பித்தார் - (அன்று)குறைநயப்பித்துக் கூடினவர்க்கு— நல்காமை - (இன்று) அருளாமையை—தூற்றாரெனின் (நட்பு ற்றோர்) தூற்றாராயின்—பசப்பென - பசப்புத்தானுயிருளெ

ன்று (ஒற்றுமையாற்றாம்) சொல் — பேர்பெறுதல் | — ந
ன்றே-(எனக்கு) நன்றாம். எ-று. ❋ நட்புற்றதொன்பது-வரு
விக்கப்பட்டது. — பாங்கிபழித்தற்குப் பொறாமற்பிணங்குகி
ன்றாளாதலால் - இகழ்ச்சிக்குறிப்பாற் சொல்லினாள். — அவ
ரை அருளிலரெனவுரைத்து இன்னும்பசலை யடைந்தாள் இவளெ
ன்பதே நான்பொறுக்கும் வழியென்பதாம். (௰)

# ௱௨௰-ஆம், அதி-தனிப்படர்மிகுதி.

அஃதாவது-தனியாகிய துன்பமிகுதியாம். அதுபசப்பு
ற்று வருந்தினவளுக்கு உரியதாகலால் - பசப்புறுபருவ
ரலின் பின்வைக்கப்பட்டது.

தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே ❋
காமத்துக் காழில் கனி. - - - - - - - க.

[இது-காதலர் உள்ளின்றும் பொருதவராய்க் கடிதிலே வ
ருவார் நீ அவர் ராய்ப்பரிவுபடுவதை அனியவிப்பாயென்றதோ
ழிக்குச சொல்லியது.]—இ-ள். தாம்வீழ்வார் - தம்மாலேவி
ரும்பப்பட்டகணவர்—தம்வீழ - தம்மைவிரும்ப— பெற்ற
வர்-பெற்றமகளிர் | — காமத்து - காமானுபவத்தினது— கா
ழில்-விதையில்லாத—கனி - பழத்தை}—பெற்றாரே - பெற்றா
ரே. எ-று. ❋ காமம் - ஆகுபெயர். காமத்தினது கனியென்ற
தில் - எனதுயிரென்பதுபோல் ஆறுவது ஒற்றுமைப்பொரு
ளில்வந்தது. — முன்னை நல்வினையில்லாதவிடத்துப் பெறக்
கூடாமையால் - பெற்றாரென்றும், அவராலே தடையில்லாமல்
அநுபவிக்கப்படுதலால் - காழில் கனியென்றும், சொல்லினா
ள். — நங்காதலர் பிரிதலேயல்லாமல் பின்வாராமையு முடை
மையால் - அக்கனிநாம் பெற்றிலே மென்பதாயிற்று. (க)

வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு ❋
வீழ்வா ரளிக்கு மளி. - - - - - - உ.

[இதுவுமது.]—இ-ள். (அறமும் பொருளும் இன்பமும்
நோக்கப்பிரிந்தால்)— வீழ்வார்க்கு - (தம்மை) விட்டிருக்க
மாட்டாதமகளிர்க்கு—வீழ்வார் - (அவரை) விட்டிருக்கமாட்
டாதகணவர்—அளிக்கும் - அளவறிந்துவந்துசெய்கிற— அளி -
தலையளி|—வாழ்வார்க்கு - (தம்மைநோக்கி) உயிர்வாழ்வா

நீக்கு—வானம் - மழை—பயந்தற்று - அளவறிந்துவந்துபெ ய்வதுபோலும். எ-று. ❋ நங்காதலர் நம்மை விரும்பாமை யால் அத்தலையளியில்லையாகலால் மழைவறந்தவிடத்து அதனு ல் வாழாதார்போல் இறத்தலே நமக்கு உள்ளதென்பதாம். உ

**வீ**ழுநர் வீழப் படுவார்க் கமையுமே ❋
வாழுந மென்னுஞ் செருக்கு. ௩.

[இதுவுமது.]—இ-ள். வீழுநர்-(தம்மால்) விரும்பப்படு கிறகணவரால்—வீழப்படுவார்க்கு - விரும்பப்படுகிற மகளிர் க்கு — (காதலர் பிரிந்தாலும் நம்மைநினைந்து கடிதில்வருவா ர்)—வாழுநமென்னும் (வந்தால் நாம் இன்புற்று) வாழ்வோ மென்றிருக்கிற—செருக்கு - தருக்கு|— அமையுமே - ஏற்பு டைத்தாம். எ-று. ❋ நாம் அவரால் விரும்பப்படாமையாக் நமக்கு அமைவு இறந்து படுதலேயென்பதாம். (௩)

**வீ**ழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார் ❋
வீழப் படாஅ ரெனின். ௪.

[இது-காதலனை இயற்பழித்தலுக்கு அஞ்சி அவரது அரு ளில்லாமையை மறைத்தால் நீ தெய்வத்தன்மைபொருந்திய கற்புடையையாகலால் கற்புடைமகளிரால் நன்குமதிக்கப்படு வாயென்றதோழிக்குத் தலைவிசொல்லியது.]—இ-ள். வீழப் படுவார்-(கற்புடைமகளிராலே) நன்குமதிக்கப்படுவாரும்|— தாம்வீழ்வார் - தம்மால்விரும்பப்படுகிறகணவரால்— வீழப் படாரெனின்-விரும்பப்படாராயின்—கெழீஇயிலர் - தீவினை யுடையரோயாவர். எ - று. ❋ உம்மை விகாரத்தால் தொக்க து. கெழீஇயின்மை - நல்வினையில்லாமை. தீவினையுடைய ளுக்கு அந்நன்குமதிப்பால் பயனில்லையென்பதாம். (௪)

**நா**ங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ ❋
தாங்காதல் கொள்ளாக் கடை. ௫.

[இது - அவர்மேலே காதலுடைமையால் அவர்கருத்தறிந் து பொறுத்தாயென்ற தோழிக்குச் சொல்லியது.]— இ-ள். நாங்காதல்கொண்டார் - நம்மாலே காதல்கொள்ளப்பட்டவர்| —நமக்கு—எவன் - என்னவின்பத்தை?—செய்ப-செய்வார்- —(அப்படியே)—தாங்காதல்கொள்ளாக்கடை - தாமும் (நம் மிடத்துக்) காதல்செய்யாதவிடத்து. எ-று. ❋ அக்காதலுடை மையால் நாம்பெற்றது துன்பமே யென்பதாம் (௫)

நசைஇயார் நல்கா ரெனினு மவர்மாட் - - ※
டிசையு மினிய செவிக்கு. - - - - - ௯.

[இதுவுமது.]—இ-ள். நசைஇயார் - (என்னால்) விரும்பப்பட்டதலைவர் — நல்காரெனினும் - (எனக்கு) அருள்செய்யாராயினும் — அவர்மாட்டு - அவரிடத்து — இசையும் - எச்சொற்களும்|—செவிக்கு - என்காதுகளுக்கு — இனிய - இன்பஞ்செய்வனவாம் எ-று. ※ இழிவுசிறப்பும்மை - அவர்வாராமையொன்றுஞ் சொல்லாயினும் இனிதாய் அமையுமென்பது படநின்றது. அச்சொல்லும் பெற்றிலேனென்பதாம், (௯)

உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச் - - ※
செறாஅஅய் வாழிய நெஞ்சு - - - - ௰.

[இ-து. தலைவனது தூதுவரப்பெறாமல் தான் தூதுவிடநினைத்தவள் நெஞ்சொடு சொல்லியது.] — இ-ள். உறாஅர்க்கு - (உள்ளேறி) உறாதவர்க்கு — உறுநோய் - (உனது) மிகுந்த நோயை — உரைப்பாய் - சொல்லலுற்ற — நெஞ்சு - நெஞ்சே — (நீபொருவாயினும் அரிதாகிய அதனைவிட்டு) — கடலை - (உனக்குத் துயரஞ்செய்கின்ற) கடலை — செறாஅய் - தூர்க்கமுயற்சிசெய். (அது|எளிது.) எ-று. ※ சொல்லலுற்றது - அளவிறந்தநோயாகலானும், கேட்போர் உறவிலராகலானும், அது முடியாது முடிந்தாலும் பயன் இல்லையென்பது கருதாமல் முயல்கின்றாய் என்கிற குறிப்பால் வாழியவென்றார். (௰)

## ௱௨௰௧-ஆம் அதி - நினைந்தவர்புலம்பல்.

அஃதாவது - முன்கூடிய காலத்தின்பத்தை நினைந்து † பாசறையிடத்துத் தலைவன் தனிமையடைதலும் தலைவி தனிமையடைதலும், ஆம். இதுபடர்மிகுதி தன்னிடத்ததாக நினைந்ததலைவிக்கும் உரித்தாகலால் இச்சம்பந்தம்பற்றித் தனிப்படர்மிகுதியின் பின்வைக்கப்பட்டது.

உள்ளினுந் தீராப் பெருமகிழ் செய்தலாற் - ※
கள்ளினுங் காம மினிது. - - - - ௧,

[இது - தூதாய்ச்செல்லும் பாங்கனுக்குத் தலைவன் சொல்

† பாசறை, பகைமேற்செல்வோருறையிடம்.

லியது.]—இ-ள். (முன் அனுபவித்தநாளையின்பத்தை) — உள்ளினும்- பிரிந்தவிடத்து) நினைத்தாலும் — (அப்பொழுது பெற்றதுபோல்) — தீராப்பெருமகிழ்ச்செய்தலால் - நீங்காப் பெருமகிழ்ச்சியைத்தருதலால்— கள்ளினும் - (உண்டபோதல்லது மகிழ்ச்சிசெய்யாத) கள்ளைப்பார்க்கிலும் — காமம் | — இனிது- இன்பந்தருதலையுடைத்து. எ - று. ☼ தனது தனிமையும், தலைவியைமறவாமையும், சொல்லியபடி. (க)

எனைத்தொன் றினிதேகாண் காமந்தாம் வீழ்வார் *
நினைப்ப வருவதொன் றில். - - - - - - உ

[இதுவுமது.]—இ-ள். தாம்வீழ்வார் - தம்மால்விரும்பப்படுவாரை — நினைப்ப - (பிரிவினிடத்து) நினைந்தால்— (அந்நினைந்தவர்க்கு) —வருவதொன்று - (அப்பிரிவால்) வருவதோர் துன்பம் | — இல் - இல்லையாம்.—(அதனால்)—காமம் | —எனைத்து - எவ்வளவாயினும் — ஒன்றினிதேகாண் - இன்பந்தருவதொன்றேகாண், எ - று. ☼ புணர்ந்தவிடத்தும், பிரிந்தவிடத்தும், சமமாக இனிதென்றற்கு- எனைத்துமின்தென்றான்.— உம்மைதொக்கது. தான்பொறுத்திருந்த வகைசொல்லியபடி.

நினைப்பவர் போன்று நினையார்கொல் தும்மல் *
சினைப்பது போன்று கெடும். - - - - - ௩

[இது - தலைவனை நினைந்து வருந்துகின்றதலைவி தோழிக்குச் சொல்லியது.]—இ-ள். (எனக்கு)— தும்மல் | — சினைப்பதுபோன்று - அரும்புதல்போலேதோன்றி— கெடும் - கெடுகின்றது.—(அதனால்)—நினைப்பவர்போன்று - (தலைவர்) என்னை நினைப்பவர்போன்று — நினையார்கொல் - நினையாராகல் வேண்டும். எ - று. ☼ தூரத்துள்ளாராகிய உறவினர் நினைந்தவிடத்து நினைக்கப்பட்டவர்க்குத் தும்மல் தோன்றுமென்கிற உலகநடைபற்றித் தலைவன் எடுத்துக்கொண்ட தொழில் முடிவதுபோன்று முடியாமையறிந்தவள் சொல்லியதாயிற்று. (௩)

யாமு முளேங்கொ லவர்நெஞ்சத் தெந்நெஞ்சத் *
தோஒ வுளரோ வவர் - - - - - - - ௪.

[இதுவுமது.]—இ-ள். எந்நெஞ்சத்து - எமதுநெஞ்சத்தில்—அவர் | — ஓஒ உளரோ - (எப்பொழுதும்) உள்ளவராயேயிருக்கின்றார்.—(அப்படியே) — அவர்நெஞ்சத்து - அவரதுநெ

ஞ்சிலும் — யாமும் | — உளேங்கொல் - உள்ளேமாகின்றே
மோ (ஆகேமோ). எ-று. ※ ஓகாரம் - இங்கே இடைவிடா
மையை உணர்த்திநின்றது. — யாம் இருந்தும தொழில்முடி
யாமையால் வரவில்லையோ அதுமுடிந்தும் யாம் இல்லாமை
யால் வரவில்லையோ வென்பது கருத்து (௪)

தந்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணார்கொ ※
லெந்நெஞ்சத் தோவா வரல் - - - - - ௫.

[இதுவுமது.]—இ-ள். தந்நெஞ்சத்து - தமது நெஞ்சிடத்
து—(யாம்செல்லாமல்)—எம்மை — கடிகொண்டார் - காவல்
கொண்டதலைவர் | — எந்நெஞ்சத்து - எமது நெஞ்சினிடத்து
—ஓவாவரல் ஒழியாமல (தாம) வருதலுக்கு —நாணார்கொல் -
நாணாரோ. எ-று. ※ ஒருவரைத் தமயிடத்துவர ஒருகாலும்
உடம்படாமல் தாம் அவரிடத்துப் பலகாலும் செல்லுதல் நா
ணுடையார் செயலல்லாமையால்-நாணார்கொலென்றாள். (௫)

மற்றியா னென்னுளேன் மன்னோ வவரொடியா - ※
னுற்றநா ளுள்ள வுளேன். - - - - - - ௬.

[இது - அவரோடு கூடியநாளையின்பத்தை நினைந்துவருந்
துகின்றாய் அதுமறத்தல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைவி
சொல்லியது.]—இ-ள். யான் | — அவரோடு—உற்றநாள் - பு
ணர்ந்தநாளையின்பத்தை — உள்ள - நினைத்தலால் — உளே
ன் - (இத்துன்பவெள்ளத்தில்) உயிர்வாழ்கின்றேன் — மற்று -
அது இல்லையாயின் — யான் | —என்னுளேன் - வேறெதனால்
உயிர்வாழ்வேன். எ-று ※ நாள்- ஆகுபெயர். உயிர்வாழ்தற்கு
வேறுமுண்டு அவைபெற்றிலே னென்பது பட நின்றமையா
ல்-மன-ஒழியிசை. அவை அவனது தூதுவருதல் தனது தூது
செல்லுதல் முதலானவை. அவையாவும் இல்லாமையால் அது
வல்லாமல் எனக்குப்பற்றுக்கோடு இல்லையென்பதுகருத்து.

மறப்பி னெவனாவன் மற்கொன் மறப்பறியே - ※
னுள்ளினு முள்ளஞ் சுடும். - - - - - - ௭.

[இதுவுமது.]—இ-ள். மறப்பறியேன் - (அவ்வின்பத்தை)
மறத்தலறியேனாகி — உள்ளினும் - இன்று நினையாநிற்கவும் —
{பிரிவானது | )—உள்ளம்-(என்)னுள்ளத்தை} —சுடும் - சுடுகி
ன்றது.—(அப்படிபிரிவுபொறுதநான்) — மறப்பின் — எவ

றுவன் - எத்தால் இறவாதிருப்பேன். எ - று. ※ மன்னென்பு து-இங்கேயும் அவ்வொழியிசை. கொல - ஆசை. (எ)

**எ**னைத்து நினைப்பினுங் காயா ரனைத்தன்றோ ※
காதலர் செய்யுஞ் சிறப்பு. - - - - - அ.

[இது - இத்துன்பமறிந்துவந்து தலைவர் உனக்கு இன்பஞ் செய்வாரென்ற தோழிக்குச் சொல்லியது.]—இ - ள். காதல ர்|—எனைத்து நினைப்பினும் - (நான் தம்மை) எவ்வளவுமிக நி னைத்தாலும்—காயார் - (அதற்குக்கோபியார் . — செய்யுஞ்சி றப்பு - (அவர் எனக்குச்) செய்யுமின்பமானது|— அனைத்தன் றோ - அவ்வளவன்றோ.எ - று. ※ கோபியாமை - அந் நினைத்த ற்கு உடம்பட்டுநெஞ்சினிற்றல் . — தனக்கு அவ்வின்பத்திலு ம் சிறந்தது இல்லாமையால் - அதனைச் சிறப்பென்றாள். தோ ழிசொல்லியவதனைக்குறிப்பால்இகழ்ந்துசெல்லியபடி. (அ)

**வி**ளியுமென் னின்னுயிர் வேறல்லே மென்பா ※
ரளியின்மை யாற்ற நினைந்து. - - - க௰.

[இது - தலைவன் தூதுவரக்காணாது வருந்துகின்றவள் திடஞ் சொல்லுகிற தோழிக்குச் சொல்லியது.]—இ - ள். வேறல்ல மென்பார் - (முன்னெல்லாம் நாமிருவரும) வேறல்லேமென் றுசொல்லுவாரது—அளியினமை - அருளில்லாமைய— ஆற் றநினைந்து - மிகவும் நினைந்து—என்னின்னுயிர் - எனது இனிதா கியவுயிர்|—விளியும் - கழிகின்றது. எ - று. ※ அளியின்மை- பின் வருவாராதலு ரயப் பிரிதலும், பிரிந்து வாராமையும்- அங்கேநின்றவிடத்துத் தூதுவிடாமையும், முதலாயின . — பிரிவு பொறுத்தல் வேண்டுமென்று திடஞ் சொன்னவளுக்கு என்னுயிர் பிரிவைக்குறித்தல்ல அவரன்பில்லாமையைக் குறி த்துக் கழிகின்றதென்று எதிரழிந்து சொல்லியபடி. (க௰)

**வி**டாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப் ※
படாஅதி வாழி மதி. - - - - - ப.

[இது - அத்திடஞ் சொல்லியவளுக்கு எதிரழிந்தவள் காம மிகக அதிகதுக்கத்தினாலே சொல்லியது.]—இ-ள். மதி - சந்தி ரனே— விடாது - (என்னை்றகை) விடாதிருந்தே—சென்று ரை - (விட்டுப்) போயினாரை — கண்ணினால் - கண்ணளவாலா யினும— காண - எதிர்ப்படும்வகை—படாதி - (நீ) மறையாதிரு

நனவினா னல்கா தவரைக் கனவினாற் - - - *
காண்டலி னுண்டென் னுயிர். - - - - ௩.

[இ-ள் - பொறுக்கமாட்டாளென்று கவலையுற்ற தோழிக்குப் பொறுப்பேனென்பது தோன்றத் தலைவி சொல்லியது.]—இ-ள். நனவினான்-நனவில்வந்து— நல்காதவரை - அருள்செய்யாததலைவரை —கனவினான் - கனவிடத்து—காண்டலின் - காணுதலால்—என்னுயிர் |—உண்டு. எ-று. ❊ ஆனுருபுகள்-கண்ணுருபுப் பொருளில்வந்தன . — அக்காணுதலாலே பொறுத்திருக்கின்றேனுகிறேன் நீ கவலவேண்டாவென்பதாம். (௩)

கனவினா னுண்டாகுங் காம நனவினா - - - *
னல்காரை நாடித் தரற்கு. - - - - - ௪.

[இதுவுமது]—இ-ள். நனவினான் - நனவில்வந்து — நல்காரை - அருள்செய்யாதவரை—நாடித்தரற்கு - (அவர்போனவிடத்) தேடிக்கொண்டுவந்து தருதலால்—கனவினான் - அக்கனவில்—காமம்- இன்பமானது |—உண்டாகும் - (எனக்கு) உண்டாகின்றது. எ-று. ❊ காமம் - ஆகுபெயர். இயல்பாக அருள்செய்யாரை அவர்போனதேயம் அறிந்துபோய்க் கொண்டுவந்து அருள்செய்வித்தகனவால் பொறுப்பனென்பதாம்.

நனவினாற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான் - *
கண்ட பொழுதே யினிது. - - - - ௫.

[இதுவுமது.]—இ-ள். நனவினான்-(முன்னே) நனவினிடத்து—கண்டதூஉம் - (தலைவரைக்) கண்டு அனுபவித்தவின்பமும் |—ஆங்கே-அக்கண்டபொழுதே— (இனிது) - இனிதாயிற்று.—கனவுந்தான் - (இன்று) கனவினிடத்துக் (கண்டு அனுபவித்தவின்பமும் |)--கண்டபொழுதே - இக்கண்டபொழுதே —இனிது - இனிதாயிற்று. (அதனால் எனக்கு இரண்டும் ஒத்தன.) எ-று. ❊ இனிதென்பது மூன்றும்கூட்டப்பட்டது·—கனவு - ஆகுபெயர் . — முன்னும் யான்பெற்றது இவ்வளவே இன்னும் அதுகொண்டு பொறுப்பேனென்பதாம். (௫)

நனவென வொன்றில்லை யாயிற் கனவினாற் - - *
காதலர் நீங்கலர் மன். - - - - - - - ௬.

[இதுவுமது.]—இ-ள். நனவெனவொன்று - நனவென்று சொல்லப்படுகின்ற ஒருபாவி—இல்லையாயின் — கனவினான்-

கனவினிடத்துவந்துகூடிய—காதலர்|—நீங்கலர் - (எம்மைப்) பிரியார். எ - று. ❋ ஒன்றென்பது-அதன்கொடுமை விளக்கிநின்றது. — அதுநடுவே புகுந்து கனவைப்போக்கி அவரைப் பிரிவித்ததென்பது படநின்றமையால் - மன் - ஒழியிசை.— கனவிலே பெற்றுப் பொறுக்கின்றமை சொல்லியபடி. (௬)

**ந**னவினா னல்காக் கொடியார் கனவினா ❋
லென்னெம்மைப் பீழிப் பது. ௭.

[இது - விழித்துத் தலைவனைக்காணாத தலைவி கனவிற் புணர்ச்சி நினைந்துபொருமற் சொல்லியது.] — இ - ள். நனவினான்-(ஒருதினமாயினும்) நனவில்வந்து — நல்கா - அருள்செய்யாத—கொடியார்|—கனவினான் - (தினந்தோறும்) கனவில் வந்து—எம்மை—பீழிப்பது - வருத்துவது|—என் - எந்தச்சம்பந்தம்பற்றி. எ - று. ❋ தம்மைத் தனியேவிட்டுப்பிரிதலும், பின்னினைந்து வாராமையும். நோக்கி - கொடியாரென்றும், கனவிலே தோளின்மேலராய் விழித்தபோது மறைதலால் அதனாலும் துன்பமாகின்றதென்றற்கு - பீழிப்பதென்றும், சொல்லினாள்.—உலகத்தார் - நனவிலே இல்லாதது கனவிலும் இல்லையென்பாராம் அதுகண்டிலமென்பதாம். (௭)

**து**ஞ்சுங்காற் றோள்மேல ராகி விழிக்குங்கா ❋
னெஞ்சத்த ராவர் விரைந்து. ௮.

[இது - தான்பொறுத்தற்பொருட்டுத் தலைவனை இயற்பழித்த தோழிக்குத் தலைவி இயற்படச் சொல்லியது.] — இ - ள். (என்னெஞ்சுவிடாமல் உறைகின்றகாதலர்|) — துஞ்சுங்கால் - (யான்) தூங்கும்போது — தோண்மேலராகி — விழிக்குங்கால் - (பின்)விழிக்கும்போது—விரைந்து — நெஞ்சத்தராவர் - (பழைய) நெஞ்சினுள்ளவராவர். எ - று. ❋ புணர்ச்சிவிட்டுமறைகிறகொடுமைபற்றி விரைந்தென்றாள். — ஒருகாலும் என்னைவிட்டு நீங்கியறியாதவரை நீநோவது தகாதென்பதாம். (௮)

**ந**னவினா னல்காரை நோவர் கனவினாற் ❋
காதலர்க் காணா தவர் ௯.

[இதுவுமது.] — இ-ள். (தமக்கு ஒருகாதலர் இல்லாமையாலே)—கனவினான்-கனவிலே—காதலர்க்காணாதவர். அக்காதலரைக்காணலறியாதமகளிர்|—நனவினால்-(தாம் அறிய) நனவில்வந்து—நல்காரை - அருள்செய்யாத (எனது) காதலரை|—

நோவர்-(அன்பிலரென்று) நோவாநிற்பவர். எ-று. ❀ இயற்ப ழித்தது பொருது பிணங்குகின்றாளாகலால் - பன்மைதோன் றச்சொல்லினாள். — தமக்குந் தலைவருளராக அவரைக் கனவி லே கண்டு அறிவாராயின் நமதுதலைவர் கனவினிடத்து நாம் அறியவந்து அருள்செய்தலறிந்து நோகாரென்பதாம். (௯)

நனவினா னந்நீத்தா ரென்பர் கனவினாற் - - ❀
காணார்கொ லிவ்வூ ரவர். - - - - - ௰.

[இதுவுமது] — இ-ள். இவ்வூரவர் - இவ்வூரின்மகளிர்— நனவினால் - நனவினிடத்து—நந்நீத்தாரென்பர் - நம்மைவிட்டு நீங்கினாரென்று (தலைவர்மேலேகொடுமை) சொல்லாநிற்பர். — கனவினால் - கனவினிடத்து —காணார்கொல் - (அவர் நீங்காது வருதலைக்) கண்டறியாரோ. எ-று. ❀ எனக்குநனவுக்கும் வேற்றுமையில்லையாயின்யான்கண்டது தானும் கனாநிலைமை வள்ளதுகாணுது அவர்மேலே கொடுமை சொல்லுகின்றமை யால்-அடலார்ளோடாமென்றுங்கருத்தால் - இவ்வூரவரென்றாள்.

## ௱௨௩-அதி- பொழுதுகண்டிரங்கல்.

அஃதாவது - மாலைப்பொழுது வருதலிடத்து அதனைக்க ண்டு தலைவி இரங்குதல். கனவுமுந்துறுதலினையிலையெ ன்பது பற்றிப் பகற்பொழுது பொறுத்திருந்த தலைவிக் கு உரியதாகலால் இது கனவுநிலை யுரைத்தலின்பின்வைக் கப்பட்டது.

மாலையோ வல்லை மணந்தா ருயிருண்ணும் - - ❀
வேலைநீ வாழி பொழுது. - - - - - - க.

[இது - பொழுதொடு பிணங்கிச் சொல்லியது.] —இ-ள். பொழுது - பொழுதே—நீ—மாலையோவல்லை - (முன்னாள்க ளின்வந்த) மாலையோவல்லை. — மணந்தார் - (அந்நாள்களிலே காதலரைக்கூடிய) மகளிரது—உயிருண்ணும் - உயிரையுண் ணுகிற—வேலை-முடிவுகாலமாயிருந்தாய். எ - று. ❀ முன்னா ள்-கூடியிருந்தநாள். அந்நாள் மணந்தாரெனவே பின் பிரிந் தாராதல் பெறப்பட்டது. வாழியென்பது - குறிப்புச்சொல்.

புன்கண்ணை வாழி மருண்மாலை யெங்கேள்போல் ❀
வன்கண்ண தோநின் றுணை. - - - - - உ.

[இது-தலைவி தன்னுள்ளுபயத்தை மாலைப்பொழுதின்மே

விட்டுச்சொல்லியது.]—இ-ள். மருண்மாலை - மயங்கியமாலை யே—(நீயும்)—புன்கண்ணை - (எம்போல்) ஒளியிழப்பையு டையையாயிருந்தாய். — நின்றுணை - உனது துணையும்—எங் கேள்போல் - எமது துணைபோல — வன்கண்ணதோ - இரக்க மில்லாமையுடையதோ. (சொல்லு.) எ-று. ❋ மயங்குதல் - ப கலும், இரவும், தம்முள் கலத்தல். — ஒளியிழத்தல்பற்றித் துணையும் உண்டாக்கிச் சொல்லினாள். — துணையுமென்றவும்ம மை எச்சவிகாரத்தால் தொக்கது. — எமக்குத் துன்பஞ்செய்தா ய் நீயும் இன்பமுற்றிலையென்னுங் குறிப்பால் வாழியென்றாள்.

**ப**னியரும்பிப் பைதல்கொண் மாலை துனியரும்பித் ❋
துன்பம் வளர வரும். - - - - - - ௩.

[இது - பொறுத்தல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.]—இ-ள். (தலைவர் கூடியநாளெல்லாம்)— ப னியரும்பி - (என்முன்னே) நடுக்கமடைந்து—பைதல்கொண் மாலை பசந்துவந்தமாலையானது—துனியரும்பி - (எனக்கு) உயிர்வாழ்தலில் வெறுப்புண்டாகி—துன்பம் - (அதற்கு உண் டாகிற) துன்பம்—வளர - (ஒருகாலைக்கொருகால்) மிக—வரு ம்-வருகின்றது. எ-று. ❋ குளிர்ச்சிதோன்ற மயங்கவருமா லையென்றுஞ் செய்பொருள் - குறிப்பால் அறிய நின்றது.— யான்பொறுக்குமவழி என்னென்பது குறிப்பெச்சம். (௩)

**கா**தலரில்வழி மாலை கொலைக்களத் - - - ❋
தேதிலர் போல வரும். - - - - - ௪.

[இதுவுமது] — மாலை - (தலைவர் உள்ளபொழுதெல்லாம் என்னுயிர் தளிர்க்கவந்த) மாலை — காதலரில்வழி-தலைவரில் லாத இப்பொழுது—கொலைக்களத்து - கொலைசெய்கிற கள த்து—ஏதிலர்போல- கொலைஞர்போல—வரும் - (அவ்வுயிரைக் கொள்ளுதற்கு) வருகின்றது. எ-று. ❋ ஏதிலர் - அருள்யா துமிலார். — முன்னெல்லாம எனக்கு நட்பாயின்பஞ்செய்து வந்தபொழுதும் இன்று என்மேல் பகையாய்த் துன்பஞ்செய் து வருகின்றது யான்பொறுக்கும்வழி என்னென்பதாம். (௪)

**கா**லைக்குச்செய்தநன் றென்கொ லெவன்கொல்யான் ❋
மாலைக்குச் செய்த பகை. - - - - - - ௫.

[இதுவுமது] — (காலையும், மாலையும், அவர் கூடியநாள் போலல்லாமல் இன்று வேறுபட்டுவருகின்றன. அவைகளுள்)

—காலைக்கு—செய்த - (என்றாலே) செயப்பட்ட — நன்று - உபகாரம் | —என் - யாது.—மாலைக்கு—செய்த - செயப்பட்ட —பகை - அபகாரம் | —எவன்—யாது. எ - று. ❊ கொல்லிரண்டும் - அசைகள். — கூடியநாளிலே பிரிவாரொன்று அஞ்சப்பண்ணியகாலை அதுநீங்கி இந்நாளிலே கங்குல் வெள்ளத்திற்குக் கரையாய் வருகின்றதென்னுங் கருத்தால் - நன்றென்கொலென்றும், கூடியநாளிலே இன்பஞ்செய்தமாலை அதுநீங்கி இந்நாளிலே அளவில்லாத துன்பஞ் செய்யாநின்றதென்னுங் கருத்தால் - பகையென்கொலென்றும், சொல்லினாள். — பகை - ஆகுபெயர். — தன்னோடு ஒத்தகாலைபோலிராமல் மாலை - தன்கொடுமையால் துன்பஞ்செய்கின்றதென்பதாம். (௫)

மாலைநோய் செய்தன் மணந்தா ரகலாத - - ❊
காலை யறிந்த திலேன். - - - - - ௬.

[இது - இன்றுஇப்படிப்பட்டவளாகின்ற நீ அன்று அவர்பிரிவிற்கு எப்படி உடம்பட்டாயென்ற தோழிக்குத் தலைவிசொல்லியது.]—இ - ள். மாலை - (முன்பெல்லாம எனக்கு நட்பாய் இன்பஞ்செய்துவந்த) மாலை—நோய்செய்தல் - (இன்றுபகையாய்த்) துன்பஞ்செய்தலை—மணந்தார் - தலைவர்—அகலாதகாலை - பிரிதற்குமுன்னே — அறிந்திலேன் - அறியப்பெற்றிலேன். எ - று. ❊ இப்படி வேறுபடுதல் அறிந்திலேன் அறிந்தேனாயின் அவர்பிரிவிற்கு உடம்படேனென்பதாம் (௬)

காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி - - ❊
மாலை மலருமிந் நோய். - - - - - ௭.

[இது - மாலைப்பொழுதில் இப்படிப்பட்டவ ளாகுதற்குக் காரணம் யாதென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.] — இ-ள். இந்நோய் - இக்காமநோயாகிய(பூ) | — காலையரும்பி-காலைப்பொழுதில் அரும்பி—பகலெல்லாம்போதாகி - பகற்பொழுதெல்லாம் பெரிய அரும்பாய்முதிர்ந்து —மாலைமலரும-மாலைப்பொழுதில் மலர்கின்றது. எ - று. ❊ தூங்கியெழுந்தபொழுதாகலால் - கனவிலேபுணர்ந்ததை நினைந்து பொறுத்தல்பற்றி - காலையரும்பியென்றும், பின் பொழுது செல்லச்செல்ல அதுமறந்து பிரிவுநினைத்துப் பொருளாதல்பற்றி - பகலெல்லாம் போதாகியென்றும், தத்தந்துணைகளை நினைத்துவந்து சேரும் விலங்குகளையும், மக்களையும், கண்டு தான்

அக்காலத்து அனுபவித்த இன்பத்தை நினைந்து பொருமை மிகுதல்பற்றி-மாலைமலருமென்றும், சொல்லினாள். (எ)

அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன் - - *
குழல்போலுங் கொல்லும் படை. - - ௮.

[இ-துவுமது.]—இ-ள். ஆயன்குழல் - (முன்னெல்லாம் இன்பஞ்செய்த) இடையனது வேணுநாதம் | — அழல்போலும்-(இப்போது) நெருப்புப்போலே சுடுவதாகி — மாலைக்குத்தூதாகி — (அம்மாலைவந்து என்னைக்கொல்லுமிடத்து)— கொல்லும்படை - கொலைசெய்யும் படையுமாயிற்று. எ-று. ※ பின்வந்தபோலுமென்பது - உரையசை.— முன்னே வரவை அறிவித்தலால் தூதாயிற்று.— கொல்லுதற்கருவியாதலால் - படையாயிற்று.—தானே சுடவல்ல மாலை இந்தத்துணையையும் பெற்றால் என்னசெய்யாதென்பதாம். (அ)

பதிமருண்டு பைத லுழக்கு மதிமருண்டு - - *
மாலை படர்தரும் போழ்து. - - - - ௯.

[இ-துவுமது.]—இ-ள். (இதற்கு முன்னெல்லாம் யானே மதிமயங்கிநோயுழந்தேன்) — மதிமருண்டு - (இனிக்கண்டாரும்) மதிமருளும்வகை— மாலை — படர்தரும்போழ்து - வரும்பொழுது—பதி - இவ்வூரெல்லாம் | —மருண்டு - மயங்கி —பைதலுழக்கும் — நோயை அனுபவிக்கும் எ-று. ※ பின் மருண்டென்பது - மருளவென்பதன் பொருளில் வந்தது. கூற்றமாகநினைத்துச் சொல்லினாளாகலால் - மாலைபடர்தரும் போழ்தென்றாள்.—யான் இறந்துபடுவனென்பதாம் (௯)

பொருண்மாலை யாளரை யுள்ளி மருண்மாலை *
மாயுமென் மாயா வுயிர். - - - - ௰.

[இ-துவுமது.] — இ - ள். என்மாயாவுயிர் - (பிரிவைப் பொறுத்து) இறவாதிருந்த என்னுயிரானது | — பொருண்மாலையாளரை - பொருளியல் பேதமக்கியல்பாக வுடையவரை — உள்ளி - நினைந்து—மருண்மாலை - இம்மயங்குமாலையிலே— மாயும் - மாய்கின்றது. எ-று. ※ வருதற்குக்குறித்த பருவம் கழியவும் பொருண்முடிவு நோக்கி வாராமையால் - சொல்வேறுபடாமையாகிய தம்மியல்பொழிந்தவர் அப்பொருளியல்பே தம்மியல்பாயினர். காலம் இதுவாயிற்று. இனிச்சொல்லுகின்ற விதத்தால்-பயன் இல்லை யென்பதாம். (௰)

# ௱உ௪ - ஆம் - அதி - உறுப்புநலனழிதல்

அஃதாவது - தலைவியினுடையகண்ணும், தோளும், நெற்றியும், முதலாகிய அவயவங்கள் தம்மழகழிதல், இஃது இரக்க மிகுந்தவிடத்து நிகழ்வதாகலால் - பொழுது கண்டிரங்கலின் பின்வைக்கப்பட்டது.

சிறுமைநமக்கொழியச் சேட்சென்றா ருள்ளி - - - *
நறுமலர் நாணின கண். - - - - - - - - ௧.

[இது - பொறுமைமிகுதியால் வேறுபட்டதலைவிக்குத்தோழி சொல்லியது.] — இ-ள். சிறுமை - இப்பொறுமை — நமக்கொழிய - நம்மிடத்துநிற்க — சேட்சென்றார் - நெடுந்தூரத்திலே சென்றதலைவரை — உள்ளி - நினைத் (தழுதலால்) — கண் - (உன்) கண்கள் | — (ஒளியிழந்து) — நறுமலர் (முன்னேதமக்குநாணின) நல்லமலர்களுக்கு — நாணின - (இன்று) நாணிவிட்டன. எ-று. ☼ உள்ளுதலென்பது - காரியத்துக்கு ஆகுதலால் ஆகுபெயர். — இவைகண்டார் அவரைக் கொடியரென்று சொல்லுவர் நீ பொறுத்தல் வேண்டுமென்பது கருத்து. (௧)

நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும் - - *
பசந்து பனிவாருங் கண். - - - - - - - உ.

[இதுவுமது.] — இ-ள். பசந்து — நிறம்வேறுபட்டு — பனிவாருங்கண் - நீர்வார்கின்றகண்கள் | — நயந்தவர் - (நம்மால்) விரும்பப்பட்டவரது — நல்காமை - அருள்செய்யாமையை — சொல்லுவபோலும் - (பிறர்க்குச்சொல்லுவ) போல்கின்றன - (இனி நீ பொறுத்தல்வேண்டும்,) எ-று. ☼ சொல்லுவபோலல் - அதனை அவர் அறிதற்கு அனுமானமாகுதல். (உ)

தணந்தமை சால வறிவிப்ப போலு - - - *
மணந்தநாள் வீங்கிய தோள். - - - - - ௩.

[இதுவுமது.] — இ-ள். மணந்தநாள் - (தலைவர்) கூடிய நாளில் — வீங்கிய - (இன்பமிகுதியால் பூரித்த) — தோள் - (நினது) தோள்கள் | — தணந்தமை - (இன்று அவர்) பிரிந்தமையை — சாலவறிவிப்பபோலும் - விளங்க அறிவிப்பவைபோல் வாடுகின்றன. (இதுதகாது), எ-று. ☼ அன்றும் அப்படி பூரித்து இன்றும் இப்படி மெலிந்தால் இரண்டுங் கண்டவர்கடிதில் அறிந்து அவரை அயோக்கியரென்பாரென்பதாம் (௩)

பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித் - *
தொல்கவின் வாடிய தோள். - - - - - - ௪.

[இதுவுமது.]—இ-ள். துணைநீங்கி - (அன்றும்) துணைவர் நீங்குதலால்—(அவராலேபெற்ற செயற்கை யழகுமாத்திரமல் லாமல்)—தொல்கவின் - பழைய இயற்கையழகும் — வாடிய தோள் - இழந்த இத்தோள்கள்|—(இன்று அதற்குமேலே)— பணைநீங்கி-(தம்)பெருமையிழந்து—பைந்தொடி - பசும்பொ ன்வளைகள்—சோரும் - கழலுகின்றன. (இவை இப்படிச்செய் யுந்தன்மையனவல்ல.) எ-று. ※ அன்றும் பிரிந்தாலொன்று அவரன்பில்லாமையுணர்த்தி இன்றும் குறித்தபருவத்தில் வந் திலரொன்று அவர்பொய்ம்மை யுணர்த்துகின்றன. இனி அவை களைச் சொல்லுகிறவர்மேல் குறையுண்டோ வென்பதாம்.

கொடியார் கொடுமை யுரைக்குந் தொடியொடு *
தொல்கவின் வாடிய தோள். - - - ௫.

[இதுவுமது]—இ-ள். கொடியார் - (தழுவுங்கை விலக்கினு ம் பொறுக்கவனுக்கு இப்படிகாலநீட்டிப்பில் எங்ஙனமென்று நினையாத) கொடியவரது — கொடுமை பொல்லாங்கை — உரைக்கும் - சொல்லுகின்றன.—தொடியொடு - வளைகளுங்க ழன்று — தொல்கவின்வாடியதோள் - பழைய இயற்கையழ கு மிழந்த இத்தோள்கள் | (இனி அதனை மறைக்குமவழியா து.) எ-று. ※ அவரோடு கலந்ததோள்களேசொன்னால் அய லார் சொல்லுதல் சொல்லவேண்டுமோ வென்பதாம். (௫)

தொடியொடு தோணெகிழ நோவ லவரைக் - *
கொடிய ரெனக்கூற னொந்து. - - - ௬.

[இது - தான் பொறுத்தற்பொருட்டுத் தலைவனை இயற்ப ழித்த தோழிக்குத் தலைவிசொல்லியது.]— இ - ள். (யான் பொறுக்கவும் என்வசப்படாமல்) — தொடியொடு - வளைகள் கழலும்படி—தோணெகிழ - தோள்கள்வாட — (அவற்றைக்க ண்டு)- அவரை—கொடியரெனக்கூறல் - (நீ) கொடியவரென் றுசொல்லலை— நொந்து - பொறாமல் — நோவல் - (என்னுள் ளே) நோகின்றேன். எ - று. ※ யான் பொறுத்தவளாகின்றது - அவர் வாராதிருத்தற்கல்ல நீ சொல்லுகின்றதற் கென்பதாம்.

பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென் - *
வாடுதோட் பூச லுரைத்து. - - - - - ௭.

[இது - அவ்வியற்பழித்தல் பொறாது தலைவி தன்னெஞ்சிற்

கூர் சொல்லியது,] — இ-ள். நெஞ்சே — கொடியார்க்கு - (இவளாலே) கொடியாரென்று சொல்லப்பட்டவர்க்கு — என்வாடுந்தோள் - என் வாடுகின்றதோளினால் விளைகிற — பூசல் - ஆரவாரத்தை — உரைத்து - சொல்லி — பாடு - ஒரு மேம்பாட்டை — பெறுதியோ - அடையவல்லையோ - (வல்லையாயின் அதனையொப்பது இல்லை.) எ-று. ❋ கொடியார்க்கென்பது - கொடியரல்லரென்பது தோன்றநின்ற குறிப்புச்சொல். — வாடுந்தோளென்பது - அவைதாமே வாடாநின்றவென்பது தோன்றநின்றது. — உன் சொல்லைக் கேட்டவுடன் அவர் வருவர் வந்தால் இவையெல்லாம் நீங்கும் நீங்கலால் அது எனக்குக் காலத்தினாற் செய்தநன்றியாம் ஆகலான் அதன் பயனெல்லாம் அடைவாயென்னுங் கருத்தால்-பாடுபெறுதியோவென்றாள். (௭)

முயங்கிய கைகளை யூக்கப் பசந்தது - - - ❋
பைந்தொடிப் பேதை நுதல். - - - ௮.

[இது - தொழிலை முடித்துத் திரும்பிவருதலுற்ற தலைவன் முன்னடந்ததை நினைத்துத் தன்னுள்ளேசொல்லியது.] — இ-ள். முயங்கியகைகளை - (தன்னை இறுகத்) தழுவிய கைகளை — (இவளுக்குநோவென்றுநினைத்து) — ஊக்க (ஒருதினம்) தளர்த்தினேனாக — (அம்மாத்திரமும் பொறாமல் — பைந்தொடிப் பேதைநுதல் - பசியவளைகளை அணிந்த பேதையது நெற்றியானது | — பசந்தது - நிறம்வேறுபட்டது. (அப்படிப்பட்ட நெற்றி இப்பிரிவிற்கு யாதுசெய்யுமோ.) எ-று. ❋ இனிக்கடிதிலே செல்லவேண்டுமென்பதுகருத்து. (௮)

முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற - ❋
பேதை பெருமழைக் கண். - - - - ௯.

[இதுவுமது.] — இ-ள். (அப்படித்தழுவியகைகளைத் தளர்த்தலால்) — முயக்கிடை - அப்புணர்ச்சிக்கு நடுவே — தண்வளி போழ-சிறுகாற்று நுழைந்ததாக — (அவ்வளவிடையீடும்பொறாமல்) — பேதைபெருமழைக்கண் - பேதையினதுபெரியகுளிர்ந்தகண்கள் | — பசப்புற்ற - பசலைநிறமடைந்தன. — (அப்படிப்பட்டகண்கள் - மலைகளும் காடுகளும் நாடுகளும் ஆகிய இவ்விடையீடுகளை யெல்லாம் எப்படி பொறுத்தன.) எ - று. ❋ தண்மை - இங்கே மென்மைமேல்நின்றது. — போழவென்றது - உடம்பிரண்டும் ஒன்றானது தோன்றநின்றது. (௯)

கண்ணின் பசப்போ பருவர லெய்தின்றே - - ✱
யொண்ணுதல் செய்தது கண்டு. - - - - ௰.

[இதுவுமது.]—இ-ள். கண்ணின்பசப்போ -(சிறுகாற்றுநுழைபவந்த) கண்களின்பசப்போ | — பருவரலெய்தின்று-துன்பமடைந்தது.—ஒண்ணுதல் - (தனக்கு அயலாகிய) ஒளிபொருந்தியநெற்றியால் — செய்தது - விளக்கப்பட்ட பசப்பை—கண்டு. எ-று. ❋ அது கைகளைத்தளர்த்தியவளவிலேபசந்தது. யான் - கைகளையும் தளர்த்தி மெய்களும் நீங்கி அக்காற்று உள்ளே நுழையுமட்டும் பசந்திலேனென்று தன்வலிமையும், அதன்மென்மையும், கருதி வெள்கிற்றெண்பதாம். ஆகவே அவளுறுப்புகள் ஒன்றிலொன்று முற்பட்டு நலனழியும் யாம் கடிதிலேசெல்லுவோமெண்பது கருத்தாயிற்று. (௰)

# ௱௨௫-அதி-நெஞ்சொடுகிளத்தல்.

அஃதாவது-பிரிவு பொறுமைமேற்படத் தனக்கு ஓர் பற்றுக்கோடுகாணாததலைவி தன்னெஞ்சொடு செய்திறன் அறியாதுசொல்லுதல். இஃது உறுப்புக்கள் தமதுநலனழிந்தவழி நிகழ்வதாகலால் அதன்பின் வைக்கப்பட்டது.

நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே யெனைத்தொன்
றெவ்வநோய் தீர்க்கு மருந்து. - - - க.

[இது - தன்பொறுமை தீருந்திறனுடியது.]—இ-ள். நெஞ்சே—எவ்வநோய் - ஒன்றாலுந் தீராதநோயை — தீர்க்குமருந்து—ஒன்று-ஒன்றை}—(நான் அறியும்படியாக) — எனைத்தொன்றும் - எப்படிப்பட்டதொன்றாயினும் நினைத்து - அறிந்து—சொல்லாயோ - (எனக்குச்) சொல்லாயோ. எ-று. ❋ உயிரினுஞ் சிறந்த நாணினை விட்டுச் செய்வது யாதொன்றாயினு மென்றற்கு-எனைத்தொன்றுமென்றாள். (க)

காதலவரில ராகநீ நோவது - - - - - ✱
பேதைமை வாழியென் னெஞ்சு. - - - உ.

[இது - தலைவி தலைவனைக் காணுதலிலே ஆசை மிகுதியால் சொல்லியது.]—இ-ள். என்னெஞ்சு - எனது நெஞ்சே—வாழி-வாழ்வாயாக.—அவர் — காதலிலராக - (நம்மேல்) ஆசையிலராகவும்—நீநோவது - நீ (அவர்வரவுபார்த்து) வருந்துதற்கு

க்காரணம் | — பேதைமை - (உன்)னறியாமையேயாம். (வே றொன்றுமில்லை.) எ-று. ※ நம்மை நினையாமையால் நம்மிட த்து ஆசையிலரென்பதறியலாம் அதையறியாமை மேலும் அவரிடத்துப் போக நினையாது அவர் வரவுபார்த்து வருந்து கின்றாய் இது நீ செய்துகொள்ளுகின்ற தென்னுங் கருத்தா ல் - பேதைமையென்றாள்.—வாழி - இகழ்ச்சிக்குறிப்பு.— யா ம் அவரிடத்துச் செல்லுதலே அறிவாவதென்பதாம். (உ)

இருந்துள்ளி யென்பரித னெஞ்சே பரிந்துள்ளல் ※
பைதனோய் செய்தார்க ணில். - - - - - ங.

[இ-துவுமது.]—இ-ள். நெஞ்சே — இருந்து - (அவரிடத் துக்கும் போகாமல் இங்கேயும் இறந்திடாமல்) இருந்து— உள்ளி-(அவர்வரவை) நினைந்து — பரிதல் - (நீ) வருந்துகின்ற து|— என் - என்னை.—பைதனோய்செய்தார்கண் - இத்துன்ப நோய்செய்தவரிடத்து—பரிந்து - (நமக்கு) இரங்கி—உள்ள ல்-(வர)நினைத்தல்|—இல் - உண்டாகாது. எ-று. ※ நம்மிட த்து அருளுடையவரல்லாமையால் தாமாகவாரார் நாம் அவ ரிடத்துக்குச் செல்லுதலே இனித்தகுவ தென்பதாம் (ங)

கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையென்னைத் ※
தின்னு மவர்க்காண லுற்று. - - - - ச.

[இ-துவுமது.]—இ-ள். நெஞ்சே — (நீ அவரிடத்துச் செ ல்லுகின்றாயாயின்) — கண்ணுங்கொளச்சேறி - இக்கண்களை யும் உடன்கொண்டு செல்லு . — (அல்லாமல் நீமாத்திரம் செல்வாயானால்)—இவை - இக்கண்கள் | — அவர்க்காணலுற் று - அவரைக்காணல்வேண்டி—என்னை}—தின்னும் - (நீகாட் டென்று) தின்பவைபோல் வருத்தும். எ - று. ※ கொளவெ ன்பது கொண்டென் பொருளில்வந்தது . — அந்தவிவு தீர்க் கவேண்டுமென்பதாம். என்றது தான்செல்லக்குறித்து. (ச)

செற்றா ரெனக்கை விடலுண்டோ நெஞ்சேயா ※
முற்றா லுறாஅ தவர். - - - - - - ரு

[இ-துவுமது-]—இ-ள். நெஞ்சே—யாம் — உற்றால் - (ந ம்மை)விரும்ப — உறாதவர் - (நம்மை) விரும்பாத தலைவரை —செற்றாரென - வெறுத்தாரென்று நினைந்து — கைவிடல் - (பிணங்கிக்) கைவிட்டிருக்கும்வழி|—உண்டோ - (நமக்கு) உண்டோ. (இல்லை.) எ-று. ※ அவ்வலியில்லாமையால் - அவ ரிடத்துக்குச் செல்வதே நமக்குத் தகுவதென்பதாம். (ரு)

